# மஹரிஷிகள் சரித்திரம்.

(இரண்டாம் பாகம்)

இஃது

பெரியகுளம் ரிடையர்ட் வக்கில்

எம். ஆர். ஸ்ரீநிவாஸய்யரவர்களால்

இயற்றப்பட்டது.

T. V. C. PRESS, MADRAS.

## பொருளடக்கம்.

# பிழை திருத்தம்

| வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|
| 27 | அருகனல்லாதலால் | அருகனல்லவாதலால் |
| 26 | வைவஸ்தவர் | வைவஸ்வதர் |
| 20 | கிழக்கேயும் போகிற | கிழக்கேயும் மேறகேயும் |
| 28 | உன் | உமது [போகிற |
| 3 | திவோதச | திவோதாச |
| 15 | வீணல்லவா | வீணல்லவா |
| 26 | குரூரமாய | குரூரமாய் |
| 18 | வேதவிதி | வேதவதி |
| 22 | வானுலகில் | வானுலகில் |
| 12 | துவேஷித்தானும் | துவேஷத்தானும் |
| 2 | அகல்யை | அஹல்யை |
| 18 | தரிகிக்கிறேன் | தரிசிக்கிறேன் |
| 24 | புருஷகளுக்கு | புருஷர்களுக்கு |
| 20 | விழி | வழி |
| 23 | பிருகத்ருதன் | பிருகத்ரதன் |
| 26 | ரகுகுலோத்துமா | ரகுகுலோத்தமா |
| 3 | அழிவற்றதுமுமான | அழிவற்றதுமான |
| 2 | சரிதித்ரத்தில் | சரித்திரத்தில் |
| 18 | மனிதனுக்கும்படி | புனிதனுக்கும்படி |
| 4 | சாசியபரும் | காசியபரும் |
| 18 | பிரசாரம் | பிரகாரம் |
| 38 | பிந்தனை | பிந்தினை |
| 27 | பலாக்ஷா | பிலக்ஷம் |

# 47. காலவர்.



காலவரிஷி விச்வாமித்திருடைய சிஷ்யர். [1] ஆதிகாலத்தில் விச்வாமித்திரர் உக்கிரமான தவம் செய்து கொண்டிருக்குங் காலத்தில், அவரைப் பரீக்ஷிக்கும் பொருட்டு, தர்மதேவர் வசிஷ்டர்போல் உருவங்கொண்டு, அந்த ரிஷியிடத்து வந்தார். தனக்கு மிகவும் பசியா யிருக்கிறதென்றும், தனக்கு அன்னம் கொடுக்கவேண்டும் என்றும் கௌசிகரைக் கேட்டார். உடனே விச்வாமித்திரர் பயபக்தியுடன் பால், அரிசி, சர்க்கரை இவைகளால் பாயஸம் சமைக்க ஆரம்பித்தார். அதை மிகவும் ஜாக்கிரதையாக சித்தம்பண்ண வேண்டியிருந்தபடியால், அவர் தன்னுடைய அதிதியைச் சரியானபடி கவனிக்க முடியவில்லை. இவர் அன்னம் பக்குவம்செய்து முடிப்பதற்குள் அவரிடத்து வந்த அதிதியானவர் மற்ற ரிஷிகளால் அளிக்கப்பட்ட அன்னத்தை உண்டு பசி தீர்த்துக்கொண்டார். அதற்குப் பிறகு, பக்குவமான அந்த அன்னத்தை சூடெழும்பிக்கொண்டிருக்கும் ஸ்திதியில் தம்மிடம் வந்த அதிதியிடம் உண்ணக் கொடுத்தார். அவர் அதை ஏற்றுக்கொள்ளாமல், "நான் முன்னமேயே சாப்பிட்டாய்விட்டது. இங்கே காத்திரு" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார். அதன்பேரில் விச்வாமித்திரர் ஒரே மனோதிடமாய் அந்தப் பாயஸ அன்னத்தைத் தலையில் வைத்து, கைகளால் பிடித்துக்கொண்டு தான் வாயுபக்ஷணம் செய்து கொண்டு ஒரு தூண்போல் ஒரே நிலையாக வெகுகாலம் நின்று கொண்டிருந்தார்.

இவ்வாறு அவர் நின்றுகொண்டிருக்கும்பொழுது அவருடைய சிஷ்யரான காலவரிஷி விச்வாமித்ர ரிஷியினிடத்துள்ள விசுவாசத்தினாலும், அவருக்குப் பிரியமான காரியத்தைச் செய்யவேண்டும் என்ற விருப்பத்தினாலும், பயபக்தியுடன் அவருக்குப் பணிவிடைகள் செய்துவந்தார். இவ்வாறு நூறு வருஷங்கள் சென்றபிறகு, தரும

[1] மஹாபாரதம்—உத்யோகபர்வம்.

தேவர் மறுபடியும் வசிஷ்டர்போல் வேஷம்பூண்டு, கௌசிக முனிவ ரிடம் உண்ணவிரும்பி வந்தார். மிகுந்த ஞானவானாகிய விச்வாமித்ர ரிஷி, அந்த அன்னத்தைத் தலையில் வைத்துக்கொண்டு, தான் மாத் திரம் காற்றைப் புஜித்துக்கொண்டு இருப்பதைக் கண்டு, முன்போல் புதிதாயும் உஷ்ணத்தோடும் கூடியிருந்த, அந்த அன்னத்தை விச்வா மித்ர ரிஷியிடமிருந்து பெற்றுக்கொண்டார். அந்த அன்னத்தைச் சாப்பிட்டுவிட்டு அவர் விச்வாமித்ரரை நோக்கி, "ஓ! உத்தமமான ரிஷியே! நான் உம்மிடத்தில் மிகவும் திருப்தியடைந்தேன்," என்று சொல்லிவிட்டு மறைந்து போயினர். தருமதேவருடைய அந்த வார்த்தைகளினால் அவர் க்ஷத்திரிய பதவியினின்றும் மாறி, பிராமண னுக்குரிய மேலான பதவியை யடைந்து, மிகுந்த சந்தோஷங்கொண் டார். தன்னுடைய சிஷ்யரான காலவரிஷியின் பணிவிடைகளுக் கும் பக்திக்கும் அவரை மெச்சி, விச்வாமித்ரர் அவரை நோக்கி, "ஓ! காலவரே! உம்முடைய இஷ்டமான இடத்திற்கு நீர் செல்லலாம். அப்படிச் செய்ய நான் அனுமதிகொடுக்கிறேன்" என்று சொன்னார். இவ்வாறு குருவால் கட்டளையிடப்பட்ட காலவர், மிகவும் களிப் புற்று, மெதுவான குரலுடன் விச்வாமித்ரரிஷியை நோக்கி, "தாங்கள் ஆசாரியராயிருந்து எனக்குச் செய்திருக்கிற உபகாரங் களுக்கு நான் கடைசியாகத் தங்களுக்குக் கொடுக்கவேண்டிய குரு தக்ஷிணை இன்னதென்று சொல்லியருளவேண்டும். ஒரு யாகத்தி னுடைய அந்தியத்தில் கொடுக்கப்படும் தக்ஷிணையால்தான், அந்த யாகமானது பிரயோஜனத்தை யடைகிறது. அவ்வாறு தானம் செய் பவர்கள் மோக்ஷத்தை யடைகிறார்கள். அத்தானங்கள்தான், ஒருவன் ஸ்வர்க்கத்திலடையும் பலன்களுக்குக் காரணமாய் இருக்கின்றன. அந்தப் பலன்கள் மனத்தெளிவும், மனச்சாந்தியும் உருவெடுத்து வந்ததுபோல் விளங்குகின்றன. ஆதலால், தங்களுக்கு நான் கொண்டுவந்து சமர்ப்பிக்கவேண்டியது யாது? அதைச் சொல்லி யருளவேண்டும்," என்று சொன்னார். உத்தமமான விச்வாமித்ரரிஷி, தனக்குக் காலவர் செய்திருக்கிற சிறந்த பணிவிடைகளால், தான் அவருக்குக் கட்டுப்பட்டிருப்பதை உணர்ந்து, "ஒன்றும் வேண்டுவ தில்லை. நீர் போகலாம், நீர் போகலாம்," என்று அடிக்கடி சொல்லி, அவரை அனுப்பப் பார்த்தார். ஆனால் காலவர் அதற்கு இணங்கா தவராய், "நான் என்ன செய்யவேண்டும்" என்று அடுத்தடுத்து

வினவினார். காலவருடைய பிடிவாதத்தைக் கண்ட விச்வாமித்ரர் கொஞ்சம் சினமடைந்து அவரை நோக்கி, "ஓ! காலவரே! எனக்கு நீர் எண்ணூறு குதிரைகள் கொடுக்கவேண்டும்; அவைகளில் ஒவ்வொரு குதிரையும் சந்திரகிரணங்களைப் போல் வெளுப்பாயிருத்தல் வேண்டும்; ஒவ்வொரு குதிரையும் ஒரு காது கரியநிற முடையதா யிருக்கவேண்டும்; தாமசமன்னியில் நீர் போகலாம்," என்று சொன்னார்.

இவ்வாறு விச்வாமித்ரரால் சொல்லப்பட்ட காலவர், மிகுந்த விசாரத்தை யடைந்தார். அவருக்கு உட்காரவும் தோன்றவில்லை; படுக்கவும் தோன்றவில்லை; அன்னம் சாப்பிடவும் பிடிக்கவில்லை; அவர் துக்கத்தாலும், விசாரத்தாலும் பீடிக்கப்பட்டு அடிக்கடி புலம்பிக்கொண்டும், பச்சாத்தாபத்தினால் மனம்நொந்து, தேகமெல்லாம் வெளுத்து, உடம்பு மிகவும் இளைத்து ஒரு துரும்புபோல் ஆனார். அவர் சோகத்தில்ஆழ்ந்து பின்வருமாறுபிரலாபித்தார்:-"செல்வவான்களான சினேகிதர்கள் எனக்கு எவ்வாறு கிடைப்பார்கள்? எனக்குத் தனம் எங்கிருந்து வரும்? நான் கையில் பணம் சேர்த்து வைத்திருக்கிறேனா? சந்திரன்போன்ற வெண்ணிறக் குதிரைகள் எண்ணூறு எனக்கு எப்படிக் கிடைக்கப்போகின்றன? எனக்கோ, சாப்பாடு விஷமாயிருக்கின்றது; உலகத்திலுள்ள சுகங்களெல்லாம் மிகவும் வெறுப்பாயிருக்கின்றன. என் பிராணன் கூட எனக்குப் பிரியமில்லாமல் போய்விட்டது. நான் உயிரோடிருந்து என்ன பிரயோஜனம்? நான் சமுத்திரத்தின் அக்கரைக்குச் சென்று, அல்லது பூமியினுடைய கடைசி எல்லையை அடைந்து, என் ஜீவனை விடுவேன். எனக்கு இந்த ஜீவனிருந்து பயனென்ன? ஏழையாயும் உலகத்திலுள்ள நல்ல வஸ்துக்கள் யாதொன்றும் இல்லாதவனாயும், கடன்களால் நொந்து போனவனாயும் உள்ள ஒருவன், ஒரு முயற்சியும் செய்ய அருகனல்லாதலால், அவனுக்குச் சந்தோஷம் எப்படிக் கிடைக்கும்? தன் சினேகிதர்களுடைய பொருள்களை யனுபவித்துவிட்டு, அவர்களுக்குப் பிரதி உபகாரம் செய்யச் சக்திபற்ற ஒருவன், உயிருடன் இருப்பதை விட இறத்தலே மேல். ஒரு விஷயத்தைச் செய்வதாக ஒப்புக்கொண்டு, அதைச் செய்யத்தவறி, அதனால் பொய்யன் என்ற நிந்தைக்கு உள்ளானவனாகி, ஒருவன் செய்யும் வைதிககர்மங்களெல்

லாம் யாதொரு பயனுமன்றி வீணாய்முடியும். பொய்யாகிய மாசுடன் கூடிய ஒருவனுக்குக் குழந்தைகள் இருக்காது. அழகு அவனை விட்டகன்றுபோம். சக்தியும் செல்வாக்கும் அற்றவனாய் அலைவான். அவ்விதமான ஒருவன் எவ்வாறு பாக்கிய தசையை யடைவான். நன்றிகுன்றியவனுக்குக் கீர்த்தி எவ்வாறு கிடைக்கும்? அவனுக்கு நல்லகதி ஏது? சுகம் ஏது? நன்றி கெட்டவனை ஒருவரும் மதியார்கள். ஒருவரும் நேசியார்கள். நற்கதியையும் அடையமாட்டான். பணமில்லாதவன் மிகவும் துர்பாக்கியன். பிராணனை வைத்துக்கொண்டிருக்க அருகனல்லாதவன். அந்தப் பாபி தன்னுடைய பந்துக்களையும் சினேகிதர்களையும் காப்பாற்றுவதெப்படி? தான் நன்மைகளைப் பெற்றுக்கொண்டு அவைகளுக்குப் பிரதி ஒன்றும் செய்யச் சக்தியற்ற ஒருவன் நிச்சயமாய் நாசத்தை யடைகிறான். நன்றி கெட்டு யாதொரு வகையுமின்றி, பொய்யால் பீடிக்கப்பட்டு துன்புறும் அந்த நிர்பாக்கியன் நானே! ஏனென்றால் குருவினிடத்து எனக்கு வேண்டிய சாதகங்களைப் பெற்றுக்கொண்டு, அவருடைய கருத்தை நிறைவேற்ற அசக்தனாயிருக்கிறேன். என்னால் கூடிய மட்டும் விடாமுயற்சிசெய்து அப்பால் காரியம் கைகூடாவிடில், என் பிராணனை இழப்பேன். இதுவரை நான் தேவர்களைக்கூட ஒரு விஷயத்தைப்பற்றிக் கெஞ்சிக் கேட்டதில்லை. இதை உத்தேசித்து யாகஸ்தலங்களில் தேவர்கள் என்னை நன்கு மதித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆதலால் மூன்று உலகங்களுக்கும் நாதனாயும், மகாவிஷ்ணுவாயும், சரணம்புகுகின்றவர்களையெல்லாம் அபயம் கொடுத்து ரக்ஷிப்பவராயுமுள்ள கிருஷ்ணபகவானை நான் தஞ்சம் அடைவேன். யோகிகளுக்கெல்லாம், யோகியாயிருப்பவரும், ஆதியந்தமில்லாமல் நித்யராயும், பிரபஞ்சத்தில் மனுஷர்களும் தேவர்களும் பாத்தியமாயடைந்து அனுபவித்துவருகிற ஸகல வஸ்துக்களுக்கும், போகங்களுக்கும், மூலகாரணமாயிருப்பவருமாகிய கிருஷ்ணபரமாத்மாவைப் போய் தரிசித்து வணங்குவேன். இவ்வாறு காலவர் பிரலாபித்துக்கொண்டிருக்கையில் விநதையின் புத்ரனும் காலவரிஷிக்குச் சினேகிதனுமான கருடன் அந்த ரிஷிமுன் தோன்றினன். கருடன் அந்த ரிஷிக்கு உபகாரம் செய்யவேண்டும் என்றெண்ணி, சந்தோஷமாய் அவரை நோக்கி, "நீர் என்னுடைய பிரியசினேகிதரல்லவா? க்ஷேமத்திலிருக்கிற ஒருவன், கஷ்டத்திலிருக்கிற மற்றொரு சினேகிதனுடைய நன்

மையைத் தேடக் கடமைப்பட்டிருக்கிறான். நான் அடைந்திருக்கிற க்ஷேமத்துக்குக் காரணம் உபேந்திரனாகிய விஷ்ணுபகவானே. முன்னமேயே உம்மைப்பற்றி நான் அவரிடத்துப் பிரஸ்தாபித்திருக்கிறேன். அவர் என்னுடைய விருப்பத்துக்கிணங்கியிருக்கிறார். வாரும், நாம் இருவரும் போவோம். சமுத்திரத்தின் அக்கரையோ, அல்லது பூமியினுடைய கடைசி எல்லையோ, எங்கேயானாலும் நான் உம்மைத் தூக்கிக்கொண்டு செல்கிறேன். யோசியாமல் என்கூட வாரும். ஞானத்துக்கெல்லாம் காரணராயிருக்கிற பகவான் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். நீர் போய்ப் பார்ப்பதற்கு எந்தத் திசையை நோக்கி நான் உம்மை எடுத்துக்கொண்டு போகட்டும்? எந்தத் திசையிலிருந்து சூர்யபகவான் உதிக்கிறாரோ, எந்த இடத்தில் ஸாத்யர்கள் சாயங்காலத்தில் தவவிரதங்களை அனுஷ்டிக்கிறார்களோ, உலகத்தையெல்லாம் வியாபித்திருக்கிற அறிவானது எங்கே முதலில் உற்பவித்ததோ, எங்கே தர்மதேவர் தம்முடைய இரண்டு கண்களுடன் விளங்கிக்கொண்டு நிற்கிறாரோ, எங்கே ஆதியில் நடத்தப்பட்ட யாகத்தில் முதல்முதல் ஆஹுதிசெய்யப்பட்ட நெய்யானது சுற்றிலும் ஓடிப் பெருகிற்றோ அந்தத் திசையே பகலும் காலமும் ஆரம்பிக்கிற நிலைக் கதவுவழிபோல் விளங்குகின்றது. அங்கே ஆதிகாலத்தில் தக்ஷருடைய குமாரத்திகள் தங்களுடைய குழந்தைகளை ஈன்றார்கள். அங்கே தான் காசியபருடைய புத்திரர்களும் வளர்ந்து விருத்தியானார்கள். அந்தத் திக்கே தேவர்களுடைய க்ஷேமத்துக்கெல்லாம் காரணமாயிருக்கிறது. ஏனென்றால், அங்கேதான் தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன் அவர்களுக்கு அதிபதியாக மகுடாபிஷேகம் செய்யப்பட்டான். அங்கேதான் இந்திரன் முதலிய தேவர்கள் அரிய தவத்தைச் செய்தார்கள். அக்காரணத்தினால்தான் அத் திசைக்கு பூர்வம் அல்லது முதல் திசையென்று பெயர் விளங்குகிறது. ஆதிகாலத்தில் இந்தத் திசையானது சுரர்களால் முதலில் வியாபிக்கப்பட்டிருந்தபடியால், அதற்குப் பூர்வதிக்கென்று பெயருண்டாயிற்று. தேவர்கள் தங்களுடைய க்ஷேமங்களைக் கோரி, இவ்விடத்தில்தான் அவர்கள் யாக முதலிய வைதிககருமங்களைச் செய்தார்கள். இவ்விடத்தில்தான் பிரபஞ்சங்களையெல்லாம் படைத்த பிரமாவானவர் முதல்முதல் வேதங்களை ஓதினார். இவ்விடத்தில்தான், காயத்ரீ என்ற விசேஷமந்திரம் சூர்யபகவானால், அதை நித்யகர்மமாக ஜபம்

செய்து வருபவர்களுக்கு உபதேசிக்கப்பட்டது. இவ்விடத்தில் தான், ஓ! பிராமணோத்தமரே! யஜுர்வேதமானது சூர்யபகவானால் யாக்ஞவல்கிய மகாரிஷிக்கு அனுக்கிரகிக்கப்பட்டது. இவ்விடத்தில் தான் யாகங்களில் அங்கீகரிக்கப்பட்ட சோமரசபானம் தேவர்களால் முதலில் செய்யப்பட்டது. இவ்விடத்தில்தான் ஹோமாக்னியில் மந்திரங்களால் திருப்திசெய்யப்பட்டு அக்னிபகவான் ஆஹுதிசெய்யப்பட்ட நெய்முதலிய பதார்த்தங்களைச் சாப்பிட்டார். இவ்விடத்திலிருந்துதான் வருணபகவான் பாதாள லோகத்துக்குச் சென்று, தம்முடைய பெரிய க்ஷேமமான பதவியை அடைந்தார். வஸிஷ்டருடைய பிறப்பு, வளர்ப்பு, இறப்பு ஆகிய இவைகளெல்லாம் நிகழ்ந்தது இவ்விடத்தில்தான். இவ்விடத்தில்தான் ஓங்காரத்தினுடைய நூறுவித அங்கங்களும் விரிந்தன. இவ்விடத்தில்தான் ஹோமப்புகையை அருந்தும் முனிவர்கள் யாகாக்னிகளின் புகைகளை முதல்முதல் உண்டார்கள். இவ்விடத்தில்தான் பன்றி முதலிய அனேக மிருகங்களை இந்திரன் கொன்று, அவைகளை யாகங்களில் அவிர்ப்பாகமாக தேவர்களுக்குக் கொடுத்தான். இவ்விடத்தில்தான் ஆயிரம் கிரணங்களையுடைய சூர்யன் உதயமாகி கோபத்தினால் மனிதர்களிலும் அசுரர்களிலும் துஷ்டர்களாயும் விசுவாசகாதகர்களாயும் இருப்பவர்களை எரித்து அழித்துக்கொண்டிருக்கிறார். மூன்று உலகங்களுக்கும் இதுவே தலைவாசல். இதுவே ஸ்வர்க்கத்தையும் ஆனந்தத்தையும் அடைவதற்கு ஏற்ற மார்க்கம். இதைத் தான் பூர்வ அல்லது கிழக்குத் திசை யென்று சொல்வார்கள். உமக்குப் பிரியம் இருந்தால் இந்தத் திசையை நோக்கிச் செல்வோம். அல்லது வேறு திசைக்குப் போக வேண்டுமென்றாலும் போவோம். மற்றொரு திக்கைப்பற்றி நான் சொல்லுகிறேன் கேளும்.

ஆதிகாலத்தில் வைவஸ்தவர் ஒரு யாகத்தைச் செய்து இந்தத் திசையைத் தம்முடைய புரோஹிதருக்குத் தக்ஷிணையாகக்கொடுத்தார். இதனால்தான் இந்தத் திசை 'தக்ஷிணம்' அல்லது தெற்கு திசை யென்று சொல்லப்படுகிறது. இவ்விடத்தில்தான், மூன்று உலகங்களின் பித்ருக்கள் வாசம் செய்கிறார்கள். புகையினால் மட்டும் ஜீவித்துக்கொண்டிருக்கிற சில தேவவகுப்பினர் இவ்விடத்தில்தான் சஞ்சரிக்கிறார்கள். விசுவதேவர்களும் பித்ருக்களுடன் இவ்விடத்தில்

தான் வசிக்கிறார்கள். அவர்களும், யாகாதிகளிலெல்லாம் வணங்கப் பட்டு பித்ருக்களைப்போல் அவிர்ப்பாகங்கள் பெற்றுவருகிறார்கள். இத்திக்குக்குத் தர்மதேவதையினுடைய இரண்டாவது முகத்துவாரம் என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. இவ்விடத்தில்தான் மனிதர்களுக்கு நியமிக்கப்பட்ட ஆயுள் பிரமாணமானது, த்ருடி, லவம் ஆகிய இந்த அளவுகளால் நிர்ணயிக்கப்படுகின்றது. இத்திசையில் தேவரிஷிகளும், பித்ர்லோகரிஷிகளும், ராஜரிஷிகளும் மிகுந்த சந்தோஷத்துடன் எப்பொழுதும் வசிக்கிறார்கள். தருமமும், சத்தியமும் இவ்விடத்திலிருக்கின்றன. இவ்விடத்தில்தான் மனிதர்கள் தங்கள் கர்ம பலன்களை அனுபவித்து வருகிறார்கள். இறந்துபோனவர்கள் தங்களுடைய கருமங்களின் பயனால் வந்துசேரும் இடம் இதுவே. இவ்விடத்தைத்தான், யாவரும் முடிவில்வந்து அடையவேண்டும். தருமத்தினின்றும் தவறினவர்களே மிகுதியாக இங்கு வந்துசேருவார்கள். ஆகையால் அவர்கள் இங்கு வெகுவாய் நரகவேதனையை அனுபவிக்கிறார்கள். இத் திசையில் பாபிகள் கண்டு மனங்கலங்கும்பொருட்டு, அநேக துராத்மாக்களான ராக்ஷஸர்கள் இருக்கிறார்கள். இங்கே மந்தரபர்வதத்தின் பூஞ்சோலைகளிலும், ரிஷிகளின் வாசஸ்தானங்களிலும் கந்தர்வர்கள், புத்தியையும், மனதையும் கொள்ளைகொள்ளும்படியான இன்பமான கானவரிசைகளைப் பொழிகிறார்கள். இவ்விடத்தில்தான் ரைவதன் என்ற அசுரன், இன்பமான குரலுடன் பாடப்பட்ட ஸாமகானத்தைக் கேட்டு மனைவிகள், பந்துக்கள், சிநேகிதர்கள், ராஜ்யம் முதலிய ஸகல சுகங்களையும் விட்டு கானகத்தை அடைந்தான். இவ்விடத்தில்தான் மனுவும், யவக்ருதருடைய குமாரனும், சூர்யபகவான் இதற்குமேல் தாண்டிச் செல்லக்கூடா தென்ற ஓர் வரம்பை ஏற்படுத்தினார்கள். இவ்விடத்தில்தான் புலஸ்தியமகாரிஷியின் பேரனும், இராக்ஷஸர்களுக்கு அரசனுமான இராவணன், மிகவும் கடுமையான தபஸ்ஸுகள்செய்து, தேவர்களிடத்து தனக்கு மரணம் சம்பவிக்காமலிருக்கவேண்டும் என்ற வரத்தை யடைந்தான். விருத்திராசுரனும் தன்னுடைய தீயநடத்தையினால் இந்திரனுக்கு விரோதியாக ஏற்பட்டது இவ்விடத்தில்தான். பலரூபங்களுள்ள ஜீவர்கள் எல்லாம் வந்துசேர்வதும், அப்பால் பஞ்சபூதங்களாகப் பிரத்யேகமாவதும் இவ்விடத்தில்தான். இவ்விடத்தில்தான், பாபம் செய்தவர்கள் நரகத்தில் வீழ்ந்து சகிக்கமுடியாத வேதனைகளை அனுப

விக்கிறார்கள். இவ்விடத்தில்தான் நரகதண்டனைக் குள்பட்டவர்களுடைய சரீரங்கள் நிறைந்ததாய், 'வைதரணி' என்ற நதியானது ஓடிக்கொண்டிருக்கிறது. இத்திசையையடைந்தவர்கள் மிக்க சந்தோஷத்தையும், மிக்கதுக்கத்தையும் அடைகிறார்கள். சூரியபகவான் இத்திசையை யடைந்து இனிமையான ஜலவர்ஷம் செய்கிறார். அப்பால் வெஷிஷ்டர்பேரால் ஏற்பட்ட திக்கை நோக்கிச் சென்று, அங்கே சூர்யன் மறுபடியும் பனிவர்ஷம் செய்கிறார். இவ்விடத்தில்தான் ஒரு பருத்த ரூபமுள்ள ஆமையுடன் போர் புரிந்துகொண்டிருந்த ஒரு பெரிய யானையை நான் ஆகாரமாக அடைந்தேன். இவ்விடத்தில்தான் சக்ரசனு என்ற முனிவர் சூர்யனிடத்திலிருந்து ஜனித்தார். அவருக்குப் பின்னால் 'கபிலர்' என்று பெயருண்டாயிற்று. அவரால் தான் ஸகரராஜனுடைய அறுபதினாயிரம் புத்ரர்களும் தஹிக்கப்பட்டார்கள். இவ்விடத்தில்தான் பிராம்மணர்களில் ஒருவகுப்பினர் வேதங்களை முற்றிலும் கற்றுத் தபோமஹிமையை யடைந்தார்கள். வேதங்களையெல்லாம் நன்றாய் அறிந்து அவர்கள் முடிவில் மோக்ஷத்தை யடைந்தார்கள். இந்தத் திசையில்தான் 'போகவதி' என்ற ஒரு நகரம் இருக்கிறது. அது வாசுகி, தக்ஷகன், ஐராவதன் ஆகிய மூன்று நாகர்களால் அரசாளப்பட்டு வருகிறது. இறந்தபிறகு இவ்விடத்தை அடைகிறவர்கள், ஒரு நெருங்கிய இருட்டில் அகப்பட்டுக்கொள்கிறார்கள். அக்னியாலும் சூர்யனாலும் கூடப் பிரவேசிக்கமுடியாத அந்த இருளின் வழியாகத் தபோசக்திநிறைந்த நீரும்போகவேண்டியவராயிருக்கிறீர். இந்தத் திசைவழியாகப் போகிறதற்கு உமக்கு விருப்பமா? சொல்லும். இல்லாவிடில் மேற்குதிசையைப் பற்றி விவரம் சொல்லுகிறேன்.

சமுத்திரத்துக்கு ராஜனாகிய வருணபகவானுக்கு மிகவும் பிரியமானது இந்த மேற்கு திக்கு. அவர் உற்பத்தியானதும் இங்கே தான். அரசுபுரிவதும் இங்கே தான். பகல் முடிவானவுடன் சூர்யன் தன் கிரணங்களை ஒழிக்கிறபடியால், இத் திசைக்கு 'பச்சிம' அதாவது மேற்கு திசையென்று பேர் வழங்குகின்றது. நீரில் வாழும் ஜந்துக்களை ஆளுவதற்கும், ஜலங்களைப் பாதுகாப்பதற்கும் வருணனை இந்தத் திக்குக்கு அரசனாக உத்தமரான காசியபர் முடி சூட்டுவித்தார். வருணபகவானுடைய ஆறு ரசங்களையும் அருந்தி, சந்திரன் சுக்லபக்ஷ ஆரம்பத்தில் மறுபடியும் இளமைப் பருவம்

உள்ளவனுய்ப் பிரகாசிக்கின்ருன். இவ்விடத்தில் தான் தைத்யர்கள் துரத்தப்பட்டு, வாயுபகவானுல் உறுதியாய்க் கட்டப்பட்டார்கள். ஒரு பெரிய புசல்கூற்றினுல் துன்புற்றவர்களாய், பெருமூச்சு விட்டுக் கொண்டு, மறுபடியும் எப்பொழுதும் எழுந்திராத நிலையான நித்திரையில் அமர்ந்தார்கள். இங்கே தான் அஸ்தகிரி இருக்கின்றது. அது தான் சாயங்கால வெளிச்சத்துக்குக் காரணம். தன்னை நோக்கி வருகிற சூர்யனை ஒவ்வொரு நாளும் அன்புடன் ஏற்றுக்கொள்ளுகிறது. இவ்விடத்திலிருந்துதான் பகல் முடியும் சமயத்தில் இரவும், நித்திரையும் வெளிப்பட்டு, ஜீவர்களுடைய வாழ்நாட்களில் பாதியைக் கொள்ளைகொள்ள வந்ததுபோல், பிரபஞ்சத்தை யழிக்கின்றன. இவ்விடத்தில் தான் சக்ரன், தன்னுடைய மாற்ருந்தாயாகிய திதிதேவி கர்ப்பவதியாய் உறங்கிக்கொண்டிருக்கும்போது, அவளுடைய கர்ப்பத்திலிருந்த சிசுவை நாற்பத்தொன்பது துண்டுகளாக வெட்ட, அந்த நாற்பத்தொன்பது துண்டுகளும், நாற்பத்தொன்பது மருத்துக்களாக ஆயின. இத்திசையை நோக்கித்தான் ஹிமயபர்வதத்தினுடைய அடிவேர்கள் சென்று, சமுத்திரத்தில் ஆழ்ந்திருக்கிற சாசுவதமான மந்தரகிரிவரை தொடர்ந்து போகின்றன. ஒருவன் ஆயிரம் வருஷங்கள் பிரயாணம் செய்தாலும் கூட அவ்வேர்களின் முடிவைக் காண முடியாது. இவ்விடத்தில் தான் பசுக்களுக்கெல்லாம் மாதாவாகிய சுரபிதேவி, தங்கத்தாமரைகளால் பிரகாசிக்கும் தடாகக்கரையை அடைந்து, தன்னுடைய பாலைச் சொரிகின்ருள். இங்கே சமுத்திரத்தின் மத்தியில் சூர்யசந்திரர்களை விழுங்குவதிலேயே எப்பொழுதும் எண்ணமாயிருக்கும் கீர்த்திமானுன சுவர்பானு என்ற ராகுவின் தலையில்லாத முண்டம் இருக்கிறது. ஒருவராலும் ஜயிக்கப்படாதவரும் அளவிறந்த சக்தியை யுடையவரும் பச்சைநிறமான மயிரையுடையவருமான 'சுவர்ணசிரஸ்' என்ற ரிஷி வேதகானம் செய்யும் ஓசை இங்கேதான் கேட்கப்படுகிறது. இவ்விடத்தில்தான் ஹரிமேதஸ் என்ற ரிஷியினுடைய புத்திரி, சூர்யபகவானுடைய "நில், நில்" என்று சொன்ன ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டவளாய், ஆகாசத்தில் மேலும் கீழும் போகாமல், அசைவற்று நின்ருள். இவ்விடத்தில் காற்று, அக்னி, பூமி, ஜலம் இவைகளெல்லாம், ஹிம்ஸிக்கும் குணங்கள் யாதொன்றுமில்லாமல், அல்லும் பகலும் சுத்தமாய் விளங்குகின்றன. இந்த திசையிலிருந்துதான், சூர்யபகவான் நேராகச் செல்லும் தன்னுடைய மார்க்கத்தை மாற்றுகிருர்.

இத்திசையில்தான் பிரகாசரூபிகள் ஆகிய ராசிகள் சூரியமண்டலத்தை அடைகின்றன. இருபத்தெட்டுநாள்வரை சூர்யனைத் தொடர்ந்து சென்று, அப்பால் அதைவிட்டுச் சந்திரனைப் பின்பற்றிச் செல்வதற்காக வெளியே வருகின்றன. சமுத்திரத்தை அடைகின்ற நதிகளெல்லாம் இத்திசையில்தான் உற்பத்தியாகின்றன. இங்கே வருணனுடைய இருப்பிடத்தில்தான் மூன்று உலகங்களினுடைய ஜலங்களும் சேர்ந்து இருக்கின்றன. இங்கேதான் நாகங்களுக்கெல்லாம் ராஜாவாகிய அனந்தனுடைய வாசஸ்தானம். ஆதியும் அந்தமுமில்லாத ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய ஒப்பற்ற வாசஸ்தலமும் இவ்விடத்தில்தான் இருக்கிறது. மரீசியினுடைய புத்திரராகிய காசியப மகாரிஷியினுடைய வாசஸ்தலமும் இங்கேதான் இருக்கிறது. நான்குதிசைகளையும்பற்றி உமக்குச் சொல்லிவருவதில் மேற்குதிசையைப் பற்றி மேல்கண்டபடி உமக்கு நான் சொன்னேன். ஓ! காலவரிஷியே! எந்தத் திசையை நோக்கி நாம் செல்லலாம்? சொல்லும்.

ஓ! பிராமணரே! இந்தத் திசையானது ஜீவர்களைப் பாபத்தினின்றும் காப்பாற்றுகிறபடியாலும், இங்கேயே ஒருவன் மோக்ஷத்தையடைதலாலும், இவ்வாறு உத்தாரணம் செய்விக்கிற சக்தியை உத்தேசித்து இதற்கு 'உத்தர' அதாவது வடக்கு திக்கு என்று பெயருண்டாயிருக்கிறது. ஓ! ரிஷியே! இங்கே வடக்கேயுள்ள திக்குவிலயல்களுக்கிருப்பிடமானது கிழக்கேயும் போகிற நேர்மார்க்கத்திற்குச் சரியான மத்தியிலிருப்பதால், இந்த வடக்கு திக்குக்கு மத்தியமப்ரதேசம் என்று பெயர். எல்லாதிக்குக்களுக்கும் மேலானதாயுள்ள இந்தத் திக்கில் நற்குணமில்லாதவனும், ஆசையை யடக்கச் சக்தியற்றவனும், பாபம் செய்பவனும் ஆகிய இவர்கள் வசித்தல் முடியாது. இங்கேதான் பதரி என்ற ஆச்ரமம் இருக்கிறது. அங்கே நாராயணமூர்த்தியாகிய கிருஷ்ணபகவானும், புருஷர்களுக்கெல்லாம் சிரேஷ்டராகிய ஜிஷ்ணுவும், பிரமதேவரும் வாசம் செய்கிறார்கள். இங்கே ஹிமயபர்வதத்தின் பிரதேசத்தில் யுகாந்தகாலத்தில் கொழுந்துவிட்டெரியும் அக்னியைப்போல் பிரகாசிக்கின்ற மகேசுவரர் வாசம் செய்கிறார். புருஷராகிய அவர் லோகமாதாவாகிய பிரகிருதியோடு திருவிளையாடல் செய்துகொண்டிருக்கிறார். நரநாராயணர்கள் தவிர, மற்ற பலவித முனிவர்களும், இந்திரன் முதலாகிய தேவர்களும், கந்தர்வர்களும், யக்ஷர்களும், ஸித்தர்களும் அவரைக் காணமுடியாது.

ஆயிரம் தலைகளும், ஆயிரம் கால்களும் உடைய மகாவிஷ்ணு ஒருவர் தான், பரமசிவன் மாயையோடு கூடியிருப்பினும் அவரைக் காண வல்லவர். இங்கேதான் சந்திரன் விப்ரர்களுக்கெல்லாம் ராஜனாக மகுடாபிஷேகம் பெற்றது. இந்தப் பிரதேசத்தில்தான் ஓ! ப்ரம்மஞ்ஞானமுள்ளவர்களில் சிறந்தவரே! மகாதேவர் ஆகாசத்திலிருந்து கங்கா நதியைத் தம்முடைய தலையில் தாங்கி, அப்பால் பூலோகத்தில் செல்லும்படி செய்தார். இவ்விடத்தில்தான் உமாதேவி மகேசுவரனைத் தனக்குப் பர்த்தாவாக அடையவேண்டுமென்று உக்ரமான தவஞ்செய்தாள். இவ்விடத்தில்தான் காமனும், சிவனுடைய கோபமும், ஹிமய பர்வதமும், உமாதேவியும் இவர்களெல்லோரும் ஏகோபித்திருந்து தேஜஸ்ஸுடன் விளங்குகிறார்கள். இங்குதான் குபேரன் கைலாச மலையின் பிரதேசத்தில் இராக்ஷஸர்கள், யக்ஷர்கள், கந்தர்வர்கள் இவர்களுக்கு அரசனாக முடிசூட்டப்பட்டான். இந்தப்ரதேசங்களில்தான் 'சைத்ரரதம்' என்ற குபேரனுடைய சிங்காரத்தோட்டமும், வைகானஸர்கள் என்ற முனிவர்களுடைய ஆச்ரமங்களும் இருக்கின்றன. இவ்விடத்தில்தான் ஆகாசநதியாகிய 'மந்தாகினியும்', 'மந்தர' பர்வதமும் காணப்படுகின்றன. சௌகந்திகவனம் ராக்ஷஸர்களால் காக்கப்பட்டு இங்கேதான் இருக்கின்றது. இங்கே பசுமையான புற்கள் நிறைந்த அநேக மைதானவெளிகளும், வாழைத்தோட்டங்களும், 'ஸந்தானங்கள்' என்ற தேவலோக விருக்ஷங்களும் இருக்கின்றன. இவ்விடத்தில்தான் எப்பொழுதும் இந்திரியநிக்ரஹம் உள்ளவர்களும், தங்கள் இஷ்டம்போல் சதா லீலாவிநோதங்கள் செய்துகொண்டிருப்பவர்களுமான சித்தர்கள் தங்களுடைய போகத்துக்கு வேண்டிய சகல வஸ்துக்களையுமுடைய தக்க வாசஸ்தலங்களில் வசிக்கிறார்கள். இவ்விடத்தில்தான் ஸப்தரிஷிகளையும், அருந்ததியையும் பார்க்கலாம். 'சுவாதி' என்ற நக்ஷத்திரம் இவ்விடத்தில்தான் காணப்படுகிறது. அது இங்கேதான் முதல்முதல் கண்ணுக்குப் புலப்படுகிறது. இங்கேதான் பிரம்மாவாகிய பிதாமகர், யக்ஞபுருஷனை அடுத்து வாசஞ்செய்கிறார். இத் திசையில்தான் சூரியன், சந்திரன் முதலிய பிரகாசரூபிகள், கிரமப்பிரகாரம் சுழன்றுகொண்டு வருகின்றார்கள். "தாமா" என்ற பெயரையுடைய உத்தமர்களும், சத்தியவான்களுமாகிய முனிவர்கள் கங்காநதியின் உற்பத்திஸ்தானத்தைக் காத்துக்கொண்டிருக்கிறார்கள். இத் திசையில்தான் இந்த ரிஷிகளுடைய உற்பத்தி. இந்த முனிவர்களுடைய தேகநிலைமைகளையும், தபோமகிமைகளையும்

எல்லாரும் அறியமாட்டார்கள். அதிதி முதலிய விருந்தினர்களை உபசரிப்பதற்காக அவர்கள் உபயோகிக்கும் ஆயிரக்கணக்கான பாத்திரங்களும், அவர்களுடைய இஷ்டம்போல் நினைத்தமாத்திரத்தில் அவர்களால் சிருஷ்டிக்கப்படும் பலவிதமான உண்டிகளும் இவைகளெல்லாம் ஒருவரும் அறியமுடியாத ரகஸ்யமாயிருக்கின்றன. இந்த முனிவர்களால் காக்கப்படும் இடத்தைத் தாண்டிச் செல்லும் மனிதன் நாசமடைவான் என்பது நிச்சயம். அவர்களால் காக்கப்பட்டு வருகிற இடத்தை நாராயணமூர்த்தியும், 'ஜிஷ்ணு'வென்று சொல்லப்படுகிற அழிவில்லாத நரனும் ஆகிய இவர்கள் தவிர வேறு ஒருவரும் அவ்விடத்தைத் தாண்டிச் சென்றவர்களில்லை. இந்தத் திக்கில்தான் கைலாசபர்வதமும், குபேரனுடைய இருப்பிடமும் இருக்கின்றன. இவ்விடத்திற்றான் 'வித்யுத்ப்ரபைகள்' என்ற பத்து அப்ஸரஸ்திரீகளும் உண்டானார்கள். அசுரராஜனாகிய பலிசக்ரவர்த்தி செய்த யாகத்தில் மூன்று உலகங்களையும் தன் காலாலளந்த விஷ்ணு பகவான் இந்தத் திசையை அடைந்தார்; ஆகலால் இத்திசைக்கு "விஷ்ணுபதம்" என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது. இங்கே ஸ்வர்ண தடாகத்தை அடுத்து "உசீரபீஜம்" என்ற இடத்தில் மருத்வராஜன் ஒரு யாகம் செய்தான். இவ்விடத்தில்தான் ஹிமயபர்வதத்தினுடைய பிரகாசம் பொருந்திய தங்கச்சுரங்கங்கள், உத்தமரும் தபோநிதியுமான 'ஜீமூதர்' என்ற ரிஷியின் முன் தோன்றின. அந்தத் தனங்களையெல்லாம் ஜீமூதர் பிராமணர்களுக்குத் தானமாகக் கொடுத்தார். அவ்வாறு கொடுத்துவிட்டு, அவைகளைத் தன் பேரால் சொல்லவேண்டும் என்று அவர்களை வேண்டிக்கொண்டார். ஆதலால், அந்தத் திரவியத்துக்கு "ஜைமூதம்" என்று பேர் ஏற்பட்டிருக்கிறது. இந்தத்திக்கில் லோகபாலகர்கள் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் அவரவர்களுடைய ஜோலியை எப்படிச் செய்கிறதென்று கூடிப் பேசிக்கொள்வார்கள். இவைகள் போன்ற காரணங்களினால் இது மற்றத் திசைகளிலும் சிறந்ததாயிருக்கிறது. இவ்வாறு விஸ்தாரமாக நான்கு திக்குக்களும் ஒன்றன்பின் ஒன்றாக சவிஸ்தாரமாக உமக்கு எடுத்து உரைக்கப்பட்டன. இப்பொழுது எந்தத் திசையை நோக்கி உமக்குப் போகவிருப்பமிருக்கிறது. உலகத்தில் எல்லாத் திசைகளையும் உமக்குக் காண்பிக்க நான் சன்னத்தனாயிருக்கிறேன். ஆதலால் என்மீது ஏறும்" என்று சொன்னார்.

இவ்வாறு சொன்ன கருடனை நோக்கிக் காலவர், ‘ஓ! அழகிய இறக்கைகளை உடையவரே! தர்மதேவதையினுடைய இரண்டு கண்களும் திறக்கின்ற கிழக்கு திசையை நோக்கி என்னைக்கொண்டு போவீராக. நீர் முதலில் சொன்ன கிழக்கு திசைக்கு என்னைத் தூக்கிக்கொண்டுபோம். தேவர்களெல்லாம் அங்கேயே இருக்கிறதாகவும், ஸத்யமும், தைரியமும் நிலைத்திருப்பதாகவும் சொன்னீரல்லவா! நான் தேவர்களையெல்லாம் பார்க்க விரும்புகிறேன். ஆகலால், ஓ! அருணனுடைய தம்பியே! என்னை அங்கே கொண்டு போம்.'' என்று சொன்னார். அவ்வாறே கருடன் காலவரிஷியை நோக்கி, “என் முதுகில் ஏறிக்கொள்ளும்'' என்று சொல்ல, அவ்வாறே காலவர் ஏறிக்கொண்டார். காலவர் கருடனை நோக்கி, ‘‘ஓ! பாம்புகளை இரையாக உடையவரே! நீர் பறந்து போகும்பொழுது உம்முடைய அழகானது காலையில் உதிக்கும் ஆயிரங் கிரணங்களையுடைய பால சூர்யனைப்போல் பிரகாசித்து விளங்குகின்றது. நீர் போகும் வேகத்தினாலுண்டாகும் சுழல்காற்றினால் முறிந்து விழும் ஏராளமான விருக்ஷங்களெல்லாம் உம்மையே பின்பற்றி வருவதுபோல் தோற்றுகின்றன. உம்முடைய சிறகுகளினால் ஏற்படுகிற அசாத்தியமான வாயுவேகத்தினால் இந்தப் பூலோகத்தை அதிலுள்ள சமுத்திரங்கள், பர்வதங்கள், காடுவனாந்திரங்கள் ஆகிய இவைகள் சகிதம் இழுத்துக்கொண்டு போவதுபோல், என் கண்களுக்குத் தோன்றுகிறது. உம்முடைய சிறகுகளின் வேகங்களினால் ஏற்படும் காற்றுக்கள் சமுத்திரத்திலுள்ள ஜலங்களையும், மீன்களையும், நாகங்களையும், முதலைகளையும் ஆகாசத்தின் மத்தியில் தொடர்ந்து ஏறிக்கொண்டே வருவதுபோல தோன்றுகின்றது. உம்முடைய சிறகுகளினால் விளையும் வாயுவேகத்தைத் தாங்க முடியாமல் ஏராளமான மீன்களும், திமிங்கிலங்களும், மனுஷர்களின் முகத்தையுடைய நாகங்களும் ஆகிய இவைகளெல்லாம் நசுங்கிச் சின்னாபின்னப்படுவதை நான் காண்கிறேன். சமுத்திரத்தின் பேரொலியால் காதுகள் செவிடுபடுகின்றன. என்னுடைய புத்தி மிகவும் தடுமாறியிருக்கிறது. நான் ஒன்றையும் பார்க்கவும் முடியவில்லை; கேட்கவும் முடியவில்லை. இன்ன விஷயத்தை உத்தேசித்து நான் வருகிறேன் என்பதைப் பற்றிக் கூட என் ஞாபகம் தடுமாறுகிறது. பிராமணனுடைய உயிருக்கு அபாயம் வரும் என்பதை யோசித்து உம்முடைய வேகத்தைத் தாழ்த்தும். ஓ! ஸ்வாமி! சூரியனும் திக்குத்திசைகளும் வானமுங்கூட

என் கண்களுக்குப் புலப்படவில்லை. என்னைச் சுற்றிலும் நெருங்கிய அந்தகாரந்தான் எனக்குத் தெரிகிறது. உம்முடைய தேகமே எனக்குத் தோன்றவில்லை. ஜொலிக்கின்ற உம்முடைய இரண்டு கண்களைத்தான் நான் காண்கிறேன். உம்முடைய தேகத்தையும், என்னுடைய தேகத்தையும்நான் காண்கிலேன். உம்முடைய தேகத்திலிருந்து வெளியே வருகிற அக்னிப் பொறிகளை ஒவ்வொரு நிமிஷமும் நான் பார்க்கிறேன். அந்த அக்னிப் பொறிகளை நிறுத்தும். உம்முடைய கண்களிலிருந்து உண்டாகும் கூசச்செய்கின்ற உக்ரமான ஒளியை அகற்றும். விநதையின் புத்ரனே! உம்முடைய ஒப்பற்ற வேகத்தைக் குறைப்பீராக; உம்மோடு வரவேண்டிய ஜோலி எனக்கு யாதொன்றுமில்லை. போவதை நிறுத்தும். உம்முடைய வேகத்தை நான் சகிக்க வல்லவனல்லன். நான் ஒவ்வொரு காதும் கறுப்பு நிறமுள்ளதான எண்ணூறு பிரகாசமான வெள்ளைக் குதிரைகளை என் குருவுக்குக் கொடுப்பதாக வாக்களித்திருக்கிறேன். அந்த வாக்கை நிறைவேற்ற ஒரு மார்க்கத்தையும் காணேன். ஆனால் ஒரே உபாயம் ஒன்று தோன்றுகிறது. அது என் பிராணனை விடுவதுதான். எனக்கு எவ்விதப் பொருளுமில்லை. தனவானான சிநேகிதனும் எனக்கில்லை. ஏராளமான செல்வம் எனக்கிருந்தாலும் என்னுடைய மனோபீஷ்டத்தை நிறைவேற்ற முடியாது" என்றார். இவ்வாறு மிகவும் துக்கமும் ஏழ்மையுமான வார்த்தைகளைச் சொன்ன காலவரிஷியை நோக்கி, விநதையின் குமாரனான கருட பகவான், தான் செல்கின்ற வேகத்தைக் குறைக்காமல், சிரித்துக்கொண்டு பின்வருமாறு உரைத்தார்:—"ஓ! ரிஷியே! நீர் உம்முடைய உயிரையே மாய்த்துக் கொள்ளவேண்டும் என்று விரும்புகிறபடியால், நீர் புத்தியற்றவரென்று எனக்குத் தோன்றுகிறது. ஒருவன் எப்பொழுதும் தானாகவே தன் உயிரைத் துறத்தல் கூடாது; நீர் ஏன் உம்முடைய மனோபீஷ்டத்தைப் பற்றி எனக்கு முன்னடித் தெரிவிக்கவில்லை. உம்முடைய உத்தேசங்களை நிறைவேற்றச் சிறந்த உபாயங்கள் இருக்கின்றன. இதோ! கடற்கரையை யடுத்து ரிஷிபபர்வத மிருக்கிறது. நாம் இங்கே சற்று நேரம் தங்கி, அன்னபானாதிகள் உண்டு, களைப்பு நீங்கினபிறகு, மறுபடியும் புறப்படுவோம். அப்பிரகாரமே அவ்விருவரும் அந்தப் பர்வதத்திலிறங்கி கடுமையான தபஸ் செய்துகொண்டிருந்த 'சாண்டிலி' என்று பெயருடைய ஒரு பிராமண ஸ்திரீயைக் கண்டார்கள். அவர்கள்

அவளை மரியாதையுடன் வணங்கித் துதித்தார்கள். அம்மாது, அவர்களுடைய யோகக்ஷேமங்களைப் பற்றி விசாரித்து, அவர்களுக்கு ஆசனங்கள் அளித்தாள். அவளால் படைக்கப்பட்ட ஆகாராதிகளை மந்திரபூர்வமாக தேவதைகளுக்கு நைவேத்யம் செய்தபிறகு, அவர்கள் இருவரும் அவைகளை யுண்டார்கள். அப்பால் அவர்கள் அங்கே படுத்து நித்திரை செய்தார்கள். கருடன் நித்திரையினின்றும் விழித்து, அவ்விடத்தைவிட்டுப் புறப்படவேண்டுமென்று எத்தனிக்கையில் சிறகுகள் அற்றிருப்பதைக் கண்டார். தலையும் கால்களுமுள்ள சதையாலாக்கப்பட்ட ஒரு பந்துபோல் தோன்றினார். கருடன் அடைந்த நிலைமையைக் கண்டு, காலவரிஷி, விசனமுற்றவராய் அவரை நோக்கி, "இவ்விடத்தில் தங்கியது மூலமாக உமக்கு நேர்ந்த கதிக்குக் காரணம் யாது? ஐயோ! எவ்வளவு காலம் நாம் இங்கு வசிக்கவேண்டுமோ? அறிகிலேன்! உம்முடைய மனதில் ஏதாவது கெடுதியும், பாபமுமான எண்ணங்களை நினைத்தீரோ? நீர் ஏதோ அல்ப குற்றம் செய்திருப்பதாக எனக்குத் தோன்றவில்லை," என்றார். அதற்குக் கருடன் காலவரை நோக்கி, "ஓ! பிராமணோத்தமரே! தபோமகிமை பெற்ற இந்த அம்மணியை இவ்விடத்திலிருந்து எங்கே பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் ஆகிய இவர்களும், ரூபங்கள் பெற்று விளங்கும் தர்மமும் எஞ்ஞமும் சேர்ந்து வாசம் செய்கிறார்களோ, அவ்விடத்துக்குத் தூக்கிக்கொண்டு போகலாம் என்ற கருத்தை என்மனதில் எண்ணினேன். ஆனால் இப்பொழுது என்னுடைய க்ஷேமத்தை உத்தேசித்து இந்தப் புண்ணியவதியின் முன்பாக நான் சாஷ்டாங்கமாய் விழுந்து நமஸ்கரித்து, "ஓ! தாயே! தங்களிடத்து எனக்கு உண்டான இரக்கமான எண்ணத்தினால் அவ்வாறு நினைத்தேனே ஒழிய வேறில்லை. சரியாயினும், பிசகாயினும் தங்களுடைய இஷ்டத்துக்கு விரோதமாக, தங்களிடத்துள்ள மரியாதையினால் நான் அவ்வாறு எண்ணினேன். ஆதலால் தாங்கள் என் பேரில் மிகவும் கிருபைகூர்ந்து என் குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமாய்க் கோருகிறேன்," என்று வேண்டிக்கொண்டார். அப்படியே அச்சீமாட்டியும், அவர்களிடத்துச் சந்தோஷம் கொண்டவளாய்க் கருடனை நோக்கிப் பின்வருமாறு சொல்லலானாள்:-அழகிய சிறகுகளையுடைய ஓ' பக்ஷியே! நீ பயப்படவேண்டாம். உன்னுடைய சிறகுகள் மறுபடியும் முளைத்து பயமற்று இருக்கக்கடவாய். நீ என்னை அலக்ஷியம் செய்தாய்; ஆனால், இசழ்ச்சியாகிய குற்றத்தை

நான் பண்ணியேன் என்று அறி; என்னை இழிவாக எவன் நினைக்கிறனோ அந்த பாபாத்மா, ஆனந்தமான உயர்ந்த பதவிகளை இழந்து கீழே தள்ளப்படுகிறன். அமங்களமான லக்ஷணங்களில் கொஞ்சமேனும் சம்மந்தமில்லாதவளாயும், எவ்வித குற்றமுமற்றவளாயுமிருக்கிற நான், என்னுடைய பரிசுத்தமான நடத்தையினுல் மிகுந்த தபோமகிமையை யடைந்திருக்கிறேன். பரிசுத்தமான நடத்தையானது தருமமாகிய பலனை யடைவதற்குக் காரணமாயிருக்கிறது. செல்வத்தை யடைவதற்கும் அதுவே காரணமாயிருக்கிறது. எல்லாவித க்ஷேமங்களை யடைவதற்கும் இதுவே காரணம். சுத்தமான நடத்தையானது அசுபமான லக்ஷணங்களையெல்லாம் அகற்றுகின்றது. ஓ! பக்ஷிகளுக்கு அரசனே! ஓ! பாக்யவானே! உனக்கு இஷ்டமான இடத்துக்குச் செல்லலாம். இனிமேல் என்னை இகழ்ச்சியாக நினையாதே. உண்மையில் ஒரு ஸ்திரீ குற்றமுள்ளவளாய் இருப்பினும் அவளை அவமதிக்காதே. முன்போல் பலமும், பராக்கிரமும் பொருந்தியவனாய் விளங்கக்கடவாய்,'' இவ்வாறு அவ்வம்மணி சொன்னதும், கருடனுடைய சிறகுகள் வளர்ந்து, முன்னிலும் மிகுந்த பலத்தை யடைந்தன. அப்பொழுது சாண்டிலியிடம் அனுமதிபெற்று, கருடன் காலவரிஷியை முதுகில் ஏற்றிக்கொண்டு, அவ்விடம் விட்டுப் புறப்பட்டான். அவர்கள் எவ்வளவோ அலைந்தும், அவர்கள் தேடும் குதிரைவகைகளைக் காணமுடியவில்லை. விசுவாமித்ரர் தற்செயலாய் வழியில் காலவரிஷியைச் சந்தித்தார். அப்பொழுது பேசுந்திறமையுள்ளவர்களில் முதல்வரான விசுவாமித்ரரிஷி, கருடன் முன்பாக காலவரிஷியைப் பார்த்துப் பின்வருமாறு சொன்னார்:-"ஓ! உத்தமரே! நீரே எனக்குக் கொடுப்பதாக வாக்களித்த பொருளை எனக்குக் கொடுக்க வேண்டியகாலமானது முன்னமேயே வந்துவிட்டது. நீர் என்ன செய்வீரோ அது எனக்குத் தெரியாது. நான் இவ்வளவு காலம் காத்திருந்தேன். இன்னும் சிலகாலமும் நான் காத்திருக்கிறேன். உன் வாக்குத்தத்தத்தை நிறைவேற்றவேண்டிய மார்க்கத்தைத் தேடும்,'' என்று இவ்வாறு அவர் சொல்லிப்போனர். இந்த வார்த்தைகளைக்கேட்டு, துக்கக்கடலிலாழ்ந்திருந்த காலவரை நோக்கி, கருடன் சொன்னதாவது:-''விசுவாமித்ரர் முன்னமேயே உம்மிடம் சொன்னதை, மறுபடியும் என்முன்பாகவும் கூறியிருக்கிறார். ஆதலால் பிராமண உத்தமரே! வாரும். அது விஷயத்தைப் பற்றி யோஜிப்போம். உம்முடைய குருவுக்கு நீர் வாக்களித்த முழுதிரவியத்தையும்,

அவருக்குக் கொடாமல் நீர் உட்காரவும் கூடாது. பூமியின் அடிப்ரதேசமத்தியில் அக்நினியால் சிருஷ்டிக்கப்பட்டு வாயுவினால் விருத்தியடைந்து இருப்பதினாலும் செல்வத்துக்கு "ஹிரண்யம்" என்றும், பூமிக்கு 'ஹிரண்மயா' என்றும் பேர்கள் ஏற்பட்டிருக்கின்றன. செல்வமானது உலகத்துக்கு ஆகாரமாகி, ஜீவனை ரக்ஷிக்கிறபடியால், அதற்குத் தனம் என்று பேர். மேற்சொன்ன விஷயங்களுக்கு உதவுவதற்காகவே இம் மூன்றுலகங்களிலும், ஆதிகால முதல், தனம் இருந்துகொண்டு வருகிறது. 'பூர்வாபாத்ரம்' அல்லது 'உத்தராபாத்ரம்' உச்சமாயிருக்கிற சுக்கிரவாரதினத்தில் அக்னி பகவான் தம்முடைய இச்சாசக்தியால் தனத்தைச்சிருஷ்டித்துக் குபேரனுடைய நிதி விருத்தியடையும் பொருட்டு, மனுஷஜாதியார்களுக்கு அந்தத் தனத்தைக் கொடுக்கிறார். பூமிக்குள் இருக்கும் தனம், மேல் சொன்ன நக்ஷத்திரத்துக்கு முறையே அதிஷ்டான தெய்வமான அஜைகபாத், அஹிர்புத்னியன், குபேரன் ஆகிய இந்த தேவதைகளால் காக்கப்பட்டு வருகிறது. அந்தத் தனம் கிடைப்பது மிகவும் கடினமானதுபற்றி, சாதாரணமாக அடையமுடியாமலிருக்கிறது. பொருளில்லாமல் நீ வாக்குத்தத்தம் செய்த குதிரைகளைச் சம்பாதிக்க வகையில்லை. ஆதலால் ராஜரிஷிவம்சத்தில் ஜெனித்தவனும், தன் குடிகளை வருத்தாமல் நம்முடைய மனோபீஷ்டத்தை நிறைவேற்ற வல்லவனுமுள்ள ஒரு அரசனைப் போய் அடைந்து பொருளுக்காக யாசியும். சந்திரவம்சத்திலுதித்த அரசன் ஒருவன் எனக்குச் சிநேகம். நாம் அவனிடத்தில் செல்வோம். ஏனென்றால், உலகத்திலுள்ள எவரிலும் அவன் மிக்கதனவான். அந்த அரசன் பெயர் யயாதி. அவன் நகுஷமகாராஜாவின் புத்ரன். அவன் ஒருவராலும் ஜெயிக்கமுடியாத பராக்கிரமத்தை யுடையவன். அவன் குபேரனைப்போல் தனம் மிகுந்திருப்பவனாதலால், நீரும் நேரில் போய் யாசித்து, என்னாலும் ஏவப்பட்டவனாய் நமக்குத் தேவையான பொருளை அவன் கொடுப்பான். இவ்வாறு, ஒரு தானத்தைப் பெறுவது மூலமாய், உமது குருவுக்குச் செலுத்தவேண்டிய கடனைத் தீர்ப்பீராக" இவ்வாறு பேசிக்கொண்டும், எவ்வாறு செய்தல் சிலாக்கியம் என்று ஆலோசித்துக்கொண்டும், 'பிரதிஷ்டானம்' என்ற தன் ப்ரதான நகரத்தில் வசித்துக்கொண்டிருந்த யயாதி மகாராஜனிடத்தில் அவர்களிருவரும் சென்றார்கள். அரசன் அவர்களை வெகு மரியாதையுடன் அழைத்து, அர்க்யபாத்தியாதிகளால் உபசரித்து, அவர்கள் வந்த விஷயங்கள்

என்னுடைய குமாரத்தியை நீர் ஏற்றுக்கொள்ளும். என்னுடைய விருப்பமெல்லாம் அவளிடத்திலிருந்து உதிக்கக்கூடிய ஒரு தௌஹித்ரன் வேண்டும் என்பதுதான்'' என்று சொன்னார்.

அந்தப் பெண்ணைக் காலவர் பெற்றுக்கொண்டு, யயாதி மகாராஜனை மறுபடி வந்து பார்ப்பதாகச் சொல்லி, அவரிடம் விடைபெற்றுக் கொண்டு, அவரும் கருடபகவானும், அந்தப் பெண்ணையும் கூட்டிக்கொண்டு, அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டார்கள். கருடன், காலவரை நோக்கி, "இந்தக் குதிரைகளை யடையும்படியான வழி உமக்குக் கிடைத்துவிட்டது" என்று சொல்லிக் காலவரிடம் அநுமதிபெற்றுக்கொண்டு, தன்னுடைய இருப்பிடத்துக்குச் சென்றார். காலவர் அந்தக் கன்னிகையுடன் அப்பெண்ணுக்குச் சரியான பரிசம் கொடுக்கக்கூடிய எந்த அரசனிடத்துக்குப் போகலாம் என்று ஆலோசித்துக் கொண்டிருந்தார். அவர் முதலில் அயோத்திதேசத்து ராஜனாகிய 'ஹரியசுவன்' என்ற அரசனிடத்துக்குப் போகலாமென்று நினைத்தார். அவ்வரசன் மிகுந்த பராக்கிரமமுள்ளவன். நால்வகைச் சேனைகளையும் ஏராளமாயுடையவன். மிகவும் தனம் நிறைந்த பொக்கிஷமும், ஏராளமான தான்யங்களும் உடையவன். அவனுடைய பிரஜைகளால் பிரியமாய் மதிக்கப்பட்டு வந்தான். பிராமணர்களிடத்து விசுவாஸமுள்ளவன். சந்ததி உண்டாக வேண்டும் என்ற விருப்பத்தினால் அவன் ராஜ்யவிவகாரங்களினின்றும் விலகி, அருமையான தவஞ் செய்துகொண்டிருந்தான். காலவரிஷி அந்த அரசனிடத்துச் சென்று, "ஓ! அரசனே! இந்தக் கன்னிகை சந்ததியை உண்டுபண்ணுவதினால் தன் புருஷனுடைய வம்சத்தை விருத்தி செய்வாள். நான் கோரும் பரிசத்தை எனக்கு அளித்துவிட்டு, இவளை உமக்குப் பாரியையாகப்பெற்றுக்கொள்ளும். எனக்கு நீர் கொடுக்கவேண்டிய பரிசம் இன்னதென்று நான் சொல்லுகிறேன் கேளும். அதைக் கேட்டு இன்னது செய்கிறதென்று நீர் தீர்மானிக்கக்கடவீர்,'' என்று சொன்னார். ஹரியசுவன் என்ற ராஜசிரேஷ்டன், வெகு நேரம் யோஜித்து, தனக்குப் புத்திரன் வேண்டிய விஷயத்தைப் பற்றி நினைத்துப் பெருமூச்சுவிட்டு, காலவரை நோக்கிப் பின்வருமாறு சொல்லலானான்:—"இக் கன்னிகையினிடத்து உயர்ந்திருக்கவேண்டிய ஆறு அவயவங்களும் அவ்வாறே இருக்கின்றன. மெல்லியதாயிருக்கவேண்டிய ஏழு அவயவங்களும்

இம்மாதினிடத்து அப்படியே இருக்கின்றன. ஆழ்ந்திருக்க வேண்டிய மூன்று அங்கங்களும் இவளிடத் தவ்விதமாகவே இருக்கின்றன. சிவப்பாயிருக்கவேண்டிய ஐந்தவயவங்களும் இவளிடத்துச் சிவப்பாகவே இருக்கின்றன. கலைகளிலும், சாஸ்திரங்களிலும் தேர்ந்தவளாயுள்ள இவள், தேவர்களாலும், அசுரர்களாலும் விரும்பி நோக்கத்தக்க யோக்கியதை யுள்ளவளாயிருக்கிறாள். எல்லாவித மங்களலக்ஷணங்களை யுடைய இவள் நிச்சயமாய் அனேக குழந்தைகளைப் பெறுவாள். சக்கிரவர்த்தியாகக் கூடிய ஒரு புத்திரனையும் இவள் பெறுவதற்குரியவள். ஓ! பிராமணோத்தமரே! என்னுடைய செல்வத்தின் நிலைமையை யுத்தேசித்து இவளுக்காக நான் உடக்குக் கொடுக்க வேண்டிய பரிசு யாது?" என்றான். அதற்குக் காலவர், "ஓ! அரசனே! நல்ல தேசத்தில் ஜனித்ததும், சந்திரன்போன்ற வெண்ணிறத்தை யுடையதும், ஒவ்வொரு காது கருப்புநிறமுள்ளதுமான எண்ணூறு உயர்ந்த ஜாதிக்குதிரைகளை எனக்குக் கொடுப்பீராக. அப்படிச் செய்தால், இந்தச் சுபலக்ஷணங்களும் விசாலமான கண்களையுமுடைய இப் பெண்மணி, அக்னிக்கோலானது எவ்வாறு அக்னியை உண்டாக்குகிறதோ, அதுபோல் உன்னுடைய புத்திரர்களுக்குத் தாயாவாள்," என்று சொன்னார். இவ்வார்த்தைகளைக் கேட்டு, ஹரியசுவன், துக்கம் ஒரு பக்கமும், அப்பெண்ணை யடையவேண்டும் என்ற ஆசை யொருபக்கமு முள்ளவனாய், காலவரை நோக்கி, அடியில் கண்டபடி சொன்னான். "ஓ! ரிஷிபுங்கவரே! உம்மால் வேண்டப்பட்ட குதிரைகளில் இருநூறு குதிரைகள் தான் என்னிடம் இருக்கின்றன. ஆனால், யாகத்துக்கு அருகமான வேறு விதமான குதிரைகள் என்னிடம் ஏராளமாயிருக்கின்றன. ஓ! காலவரே! இந்தப் பெண்ணிடத்து ஒரே மகனையடைய விரும்புகின்றேன். தயவுபுரிந்து இந்த என் வேண்டுகோளை நிறைவேற்றும்." அரசனுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு, அக் கன்னிகை காலவரை நோக்கி, "ஒரு பிரம்மஞானி ஒவ்வொரு ப்ரசவத்துக்குப் பிறகும் நான் கன்னிகையாக இருப்பேனென்று எனக்கு வரம் அளித்திருக்கிறார். ஆதலால் இவ் வரசனுடைய சிறந்த குதிரைகளைப் பெற்றுக்கொண்டு என்னை இந்த அரசருக்குக் கொடும். இவ்விதமாக ஒவ்வொன்றாய் நாலு அரசர்களிடமிருந்து எண்ணூறு குதிரைகளையும் நீர் அடையமாட்டீர். நானும் நான்கு புத்ரர்களை அடைவேன். இவ்விதமாக உம்முடைய குருவுக்கு நீர் உத்தேசித்த செல்வத்தை

சேகரிப்பீராக. இது என்னுடைய அபிப்ராயம். ஆகிலும், ஓ! பிராமணரே! உமக்கு எப்படி யுக்தமோ, அவ்வாறு செய்வீராக," என்று சொன்னாள். அவ் வார்த்தையைக் கேட்ட காலவர், ஹரிய சுவராஜனை நோக்கி, "ஓ! ஹரியசுவனே! நாம் திகைத்துக்கொண்ட பரிசத்தில் நாலில் ஒருபாகத்திற்காக இந்தப் பெண்ணை ஏற்றுக் கொண்டு, அவளிடத்து ஒரே புத்திரனைமட்டும் பெறுவீராக," என்றார். அப்படியே அரசன் அக் கன்னிகையைப் பெற்றுக் கொண்டு, காலவரிஷியை வணங்கி, அவள் மூலமாகக் காலக்கிரமத்தில் ஒரு புத்திரனை யடைந்தான். அந்தப் புத்திரனுக்கு 'வசுமனஸ்' என்று பெயரிடப்பட்டது. அவன் அரசர்கள் எல்லோரினும் செல்வ மிக்கவனாய், அஷ்டவசுக்களில் ஒருவர்போல் விளங்கி, ஒரு பெரிய அரசனாகி, ஏராளமான திரவியத்தைத் தானம் கொடுத்தான். சில காலத்திற்குப்பிறகு, புத்திமானான காலவரிஷி, ஹரியசுவராஜனிடத்து வந்து, அவனைப்பார்த்து, "ஓ! அரசனே! நீர் ஒரு புத்திரனை அடைந்துவிட்டீர். உம்முடைய இந்தக் குழந்தை சூரியனைப்போன்ற தேஜஸை உடையவனாயிருக்கிறான். நான் தானம் பெறும்பொருட்டு வேறு அரசரிடம் போகும்படியான சமயம் இப்பொழுது வந்துவிட்டது," என்றார். இவ் வார்த்தைகளைக் கேட்டு, எப்பொழுதும் சத்தியவார்த்தை யுரைப்பவனும், ஸத்கர்மங்களில் திடமான எண்ண முள்ளவனுமான ஹரியசுவராஜன், பாக்கி அறுநூறு குதிரைகளைத் தான் கொடுக்கமுடியாது என்பதை உத்தேசித்து, கிரமப்படி மாதவியை காலவரிஷியிடம் திருப்பிக்கொடுத்தான். மாதவியும், ராஜபோகங்களை யெல்லாம் விட்டு, மீண்டும் கன்னிகைப் பருவத்தை யடைந்து, காலவரிஷியைப் பின்பற்றிச் சென்றாள். காலவரும் "இருநூறு குதிரைகளும் உம்மிடமே யிருக்கட்டும்" என்றரசனிடம் சொல்லிவிட்டு, அந்தக் கன்னிகையுடன் 'திவோதாசன்' என்ற அரசனிடத்துக்குச் சென்றார். காலவர் மாதவியைப் பார்த்து, "காசிதேசத்து அரசன், 'திவோதாசன்' என்று பேர் பெற்ற உத்தமன். அவன் பீமசேனனுடைய குமாரன். புஜபலபராக்ரமமுள்ளவன். ஓ! புண்ணியவதியே! நாம் இப்பொழுது அவனிடத்துச் செல்கிறோம். மெதுவாக என் பின்னால் வா. உனக்குத் துயரம் வேண்டாம். அந்த அரசன் தருமநெறியில் நடப்பவன். சத்தியத்தில் நிற்பவன். தன் இந்திரியங்களை யடக்கினவன்," என்றார். அந்த முனி அரசனை யடைந்ததும், அரசன் அவரை மிக மரியாதையாய்

எதிர்கொண்டு அழைத்து உபசரித்தான். காலவர், மாதவியை ஏற்றுக்கொண்டு, அவளிடத்து ஒரு குழந்தையைப் பெற்றுக்கொள்ளும்படி அரசனை வேண்டினர். அதற்குத் திவோதாசன், "இதன் விஷயம் எனக்கு முன்னமேயே தெரியும். தாங்கள் இதைப்பற்றி எனக்கு ஜாஸ்தி சொல்லவேண்டியதில்லை. நான் இந்தச் சங்கதியைக் கேட்டவுடனேயே, அதில் எனக்கும் விருப்பம் ஏற்பட்டது. தாங்கள் மற்றரசர்களையெல்லாம் விட்டு என்னை விசேஷமாக மதித்து வந்ததே, எனக்குப் பெரும் மரியாதையாக நான் மதிக்கிறேன். தங்களுடைய எண்ணம் யாதொரு குறைவுமன்றியில் நிறைவேறும். குதிரைகள் விஷயத்தில் ஹரியசுவராஜனிடத்தில் போல் என்னிடத்திலும் 200 குதிரைகள்தான் இருக்கின்றன. ஆதலால், இக்கன்னிகையிடத்து ஒரே அரசகுமாரனை நான் அடைகிறேன்," என்றான். இவ்வார்த்தைகளைக் கேட்ட பிராமண சிரேஷ்டர், அந்த அரசனுக்கு அக் கன்னிகையைக் கொடுத்தார். அரசன் அவளை விதிப்படி மணந்து, சூரியனும் பிரபாவதியும் போலவும், அக்னியும் ஸ்வாஹா தேவியும் போலவும், வாசவனும் சசீதேவியும் போலவும், சந்திரனும் ரோஹிணியும் போலவும், எமனும் ஊர்மிளாதேவியும் போலவும், வருணனும் கௌரீதேவியும் போலவும், குபேரனும் ரதீதேவியும் போலவும், நாராயணரும் லக்ஷ்மீதேவியும் போலவும், ருத்ரரும் ருத்ராணீதேவியும் போலவும், பிரமதேவரும் ஸரஸ்வதீதேவியும் போலவும், வஸிஷ்டர் குமாரர் சக்தியும் அதிர்சயந்தியும் போலவும், வஸிஷ்டரும் அருந்ததீதேவியும் போலவும், ச்யவனரும் ஸுகன்யையும் போலவும், புலஸ்தியரும் சந்தியையும் போலவும், அகஸ்தியரும் லோபாமுத்ரையும் போலவும், ஸத்தியவானும் ஸாவித்திரியும் போலவும், ப்ருகுரிஷியும் புலோமையும் போலவும், காசியபரும் அதிதிதேவியும் போலவும், விசுவாமித்ரரும் ஹிமாவதியும் போலவும், பிருஹஸ்பதியும் தாரையும் போலவும், சுக்ராசாரியரும் சதபர்வாதேவியும் போலவும், ஜமதக்னியும் ரேணுகாதேவியும் போலவும், புரூரவஸ்ஸும் ஊர்வசியும் போலவும், ரிசீகரிஷியும் சத்யவதியும் போலவும், மனுவும் சரஸ்வதியும் போலவும், துஷ்யந்த மகாராஜனும் சகுந்தலையும் போலவும், நித்யமான தர்மதேவரும் த்ருதிதேவியும் போலவும், நளனும் தமயந்தியும் போலவும், நாரதரும் ஸத்யவதியும் போலவும், ஜரத்காருவும் ஜரத்காருவும் போலவும், புலஸ்தியரும் பிரதீச்யையும் போலவும், ஊர்ணுயஸ்ஸும் மேனகையும் போலவும், தும்புருவும்

ரம்பையும் போலவும், வாசுகியும் சதசீர்ஷையும் போலவும், ஸ்ரீ ராமரும் சீதாதேவியும் போலவும், ஜனார்த்தனரும் ருக்மணி தேவியும் போலவும், அந்தத் திவோதச அரசனும் மாதவியும், அன்புடன் கூடிக் கலந்து விளையாடி, சுகபோகங்களை அனுபவித்து வந்தார்கள். அப்பால் மாதவி, திவ்வாதாசனிடத்து 'பிரதர்த்தனன்' என்னும் ஓர் மகனைப் பெற்றாள். அப்பால் காலவர் காலக்கிரமத்தில் திவோதாசனிடத்து வந்து, "இப் பெண்மணி என்னுடன் கூட வரட்டும். எனக்குச் சேரவேண்டிய இருநூறு குதிரைகளும் உம்மிடமே இருக்கட்டும். ஏனென்றால், பரிசு பெறுவதற்காக நான் இதர இடங்களுக்குப் போகவேண்டியிருக்கிறது," என்றார். ஸத்யப்ரியனான திவோதாஸன் காலவரிஷியிடம் மாதவியைத் திருப்பி ஒப்புவித்தான். அந்தப் பெண்மணியான மாதவி தான் முனிவருக்குச் சொன்ன வாக்குப் பிரகாரம், ராஜபோகங்களைத் தள்ளிவிட்டு, மறுபடியும் கன்னிகையாகி காலவமுனிவருடன் சென்றாள். தன் காரியத்திலேயே கருத்தாயிருந்த காலவர் போஜதேசத்தரசனான 'உசீநரஸ்' என்ற அரசனிடத்துச் சென்றார். காலவர் அரசனை நோக்கி, "இக் கன்னிகை உமக்கு இரண்டு புத்திரர்களைப் பெறுவாள். சந்திர சூரியர்களைப் போல் இவள் மூலமாக நீர் இரண்டு குமாரர்களைப் பெற்று இகத்திலும் பரத்திலும் உம்முடைய மனோபீஷ்டங்களெல்லாம் நிறைவேறும்படியான பாக்கியத்தை யடைவீர். அவளுக்குப் பரிசாக ஒரு காது கருப்புள்ளதாயும் வெண்மையான நிறமுள்ளதுமான நானூறு உயர்ந்த ஜாதிக்குதிரைகளை நீ எனக் களிக்கவேண்டும். என்னுடைய குருவின் காரியமாக நான் உம்மிடத்தில் யாசிக்கிறேனே ஒழிய எனக் கவைகளாலாவதொன்று மில்லை. நான் சொல்லுகிறபடி செய்ய உமக்குச் சம்மதியிருந்தால் நீர் அவ்வாறு செய்யலாம். ஓ! அரசனே! உமக்கோ இப்பொழுது புத்திரனில்லை. இரண்டு குமாரர்களை யடையும். அவ் விரண்டு குமாரர்களையும் பெற்று தெப்பம் மூலமாகக் கரையை யடைவதுபோல் உம்மையும் உம்முடைய பிதுர்க்களையும் காப்பாற்றிக் கொள்ளக் கடவீர். புத்திரனாகிய பலனை யடைந்தனுபவிக்கிறவன், ஸ்வர்க்கபதவியினின்றும் கீழ்லோகத்துக்கு வரமாட்டான். புத்ரனில்லாதவர்களடையும் நரகவாதனையும் அவனுக்கு இல்லை," என்றார். காலவருடைய இந்த வாக்யங்களைக் கேட்டு உசீனரராஜன், "தாங்கள் சொன்னதை நான் முன்னமேயே கேட்டிருக்கிறேன். தங்களுடைய ஆக்ஞையின்படி

நடக்கவேண்டும் என்றே எனக்கும் ப்ரியமிருக்கிறது. ஆனால், எல்லாவற்றையும் விதித்து நடத்துவோராகிய பகவான் சர்வவல்லமையுள்ளவர்; தாங்கள் சொன்னவிதமான குதிரைகள் இருநூறு தான் என்னிடமிருக்கின்றன. மற்றவிதங்களிலோ என்னுடைய ராஜ்யத்தில் அனேகமாயிரம் குதிரைகள் சஞ்சரித்துத் திரிகின்றன. ஆதலால், ஹரியசுவனும், திவோதாசனும் செய்தபிரகாரம் நானும் இம்மாதினிடத்து ஒரே புத்திரனைப் பெறுவேன். அவர்களைப்போல் பரிசத்தை நான் கொடுக்கிறேன். நாடுநகரங்களில் வசிக்கும் என்னுடையபிரஜைகளுக்காகவே இந்தச் செல்வமென்னிடத்திலிருக்கிறதே யொழிய என்னுடைய சொந்த போகசுகங்களுக்காக அல்ல. பிறருக்குப் பாத்தியமான திரவியத்தைத் தன்னுடைய இந்திரிய சுகங்களுக்காக செலவழிக்குமரசன் தர்மத்தையாவது, கீர்த்தியையாவது அடையமாட்டான். ஆதலால் தேவகன்னிகையைப் போல் பிரகாசம் பொருந்தி விளங்கும் இக் கன்னிகையை எனக்குக் கொடுப்பீராக. நான் ஒரே குழந்தையைப் பெற்றுக்கொள்ளும்பொருட்டு அவளை ஏற்றுக்கொள்கிறேன்,'' என்றான். அவ்வாறே காலவர் அவ் வரசனைப் புகழ்ந்து, அப் பெண்ணை அவருக்குக் கொடுத்துவிட்டு, காட்டுக்குச் சென்றார். தன்னுடைய சத்கருமங்களால் க்ஷேமங்களையனுபவிக்கும் ஒரு புண்ணியவான் போல், 'உஸீநரன்' என்னுமரசன் அந்தக் கன்னிகையுடன் மலைச்சாரல்களிலும், அருவிகளிலும், அருவிகள் சொரியுமிடங்களிலும், மாடமாளிகைகளிலும், சிங்காரத் தோட்டங்களிலும், காடுவனாந்தரங்களிலும், இன்னும் மற்ற ரமணீயமான இடங்களிலும், அவளுடன் கூடி விளையாடி, சகல சுகங்களையும் அனுபவித்தான். அப்பால் காலக்கிரமத்தில் பாலசூரியனைப் போல் பிரகாசமுள்ளவனும், 'சிபி' என்று பேர்பெற்று இப்பால் அரசாண்டுவந்த கீர்த்திமானுமான குமாரன் அவனுக்குப் பிறந்தான். பிறகு காலவர் உஸீநரன் என்ற அரசனிடத்து வந்து அந்தக் கன்னியைக் கூட்டிக்கொண்டு வினதையினுடைய குமாரரான கருடபகவானிடம் சென்றார். அவர் காலவரை நோக்கி, ''உம்முடைய காரியம் அனுகூலமானதற்கு உம்முடைய நல்லதிர்ஷ்டமே காரணம்'' என்றார். அதற்குக் காலவர், ''காரியம் மூன்றிலும் இன்னும் சித்தியாகவில்லை. நாலிலொரு பாகம் பாக்கியிருக்கிறது'' என்றார். கருடன், என்றாலும், பாக்கி இருநூறு குதிரைகளையடைவதற்குப் பிரயத்

கவலைப்படவேண்டாம்; ஏனெனில் அது வீணாய் முடியும்; ஆதிகாலத்தில் ரிசீகமுனிவர் காதியின் மகள் ஸத்யவதியை மனைவியா யடைவதற்குக் கன்னியாகுப்ஜம் என்னும் இடத்துக்குச் சென்றார். அதன் பேரில் காதி, அந்த ரிஷியை நோக்கி, 'ஓ! புண்ணியசீலரே! ஒவ்வொரு காது கருப்புள்ளதும், சந்திரன் போன்ற வெண்மையுமான ஆயிரம் குதிரைகளை நீரெனக்குக் கொடும்' என்று கேட்க, ரிசீகர் அப்படியே சம்மதித்தார். பிறகு, வருணபகவானுடைய இருப்பிடம் சென்று, அங்கே குதிரைகள் நிறைந்துள்ள 'அசுவதீர்த்தம்' என்ற இடத்துக்குச் சென்று, தான் தேடிப்போன ஆயிரம் குதிரைகளையு மடைந்து அரசனுக்குக் கொடுத்தார். காதிராஜன், 'புண்டரீகம்' என்னும் ஒரு யாகஞ் செய்து, அக் குதிரைகளைப் பிராமணர்களுக்குத் தானமாக கொடுத்தான். நீ கேட்ட குதிரைகளை அடைந்திருக்கிற மூன்று அரசர்களும் பிராமணர்களிடத்து அக் குதிரைகளை வாங்கினார்கள். பாக்கி நானூறு குதிரைகள் விதஸ்தாநதியைக் கடந்து வருங்காலத்தில் அந் நதியால் கொண்டுபோகப்பட்டன; அப்படியிருக்க, காலவரே! உலகத்திலேயே இல்லாத பொருள் உமக்கு எவ்வாறு கிடைக்கும்? ஆதலால விசுவாமித்ரரிடம் போய், இந்த அறுநூறு குதிரைகளையும், பாக்கி இருநூறு குதிரைகளுக்குப் பதிலாக இந்தக் கன்னிகையையும் அவருக்கு நீர் கொடுப்பீராக; நீர் பிறகு துக்கம் நீங்கி க்ஷேமத்தை யடைவீர்" என்றார். காலவர் அப்படியே கருடபகவானையும் கூட்டிக்கொண்டு, குதிரைகள் கன்னிகை சகிதம் விசுவாமித்ரரிஷியிடம் சென்றார். அவர் விசுவாமித்ரரை நோக்கிச் சொன்னதாவது, "தாங்கள் கேட்டவிதமான குதிரைகள் 600 இதோ இருக்கின்றன. பாக்கி இருநூறு குதிரைகளுக்குப் பதிலாக இக் கன்னிகையைத் தங்களுக்குக் கொடுக்கிறேன். தாங்கள் இவைகளை அங்கீகரிக்கவேண்டும். இக் கன்னிகையிடத்து மூன்று ராஜரிஷிகள் மூன்று ஸத்புத்ரர்களை யடைந்திருக்கிறார்கள். ஆதலால் தாங்கள் அவளிடத்து நாலாவது புத்ரனைப் பெறக்கடவீர். இவ்விதமாகக் குதிரைகள் எண்ணூறும் முற்றிலும் தங்களுக்கு இனும் கொடுத்ததாக ஏற்படட்டும். நானும் தங்களுக்குச் செலுத்தவேண்டிய கடனின்றும் விலகி, என் இஷ்டம் போல் தவஞ்செய்யப் போகிறேன். அவ்விதம் தாங்க ளனுக்ரஹிக்கவேண்டும்," என்றார். விசுவாமித்ரர், காலவரிஷியுடன் கருடனும் அழகிய அக் கன்னிகையு மிருக்கக்

கண்டு, காலவரை நோக்கி, "ஓ! காலவரே! இக் கன்னிகையை நீர் ஏன் முதலிலேயே கொடுக்கவில்லை? என் வம்சத்தைப் பரிசுத்தம் செய்யக்கூடிய நாலுபுத்ரர்களும் என்னுடைய குமாரர்களாகப் பிறந்திருப்பார்களே! நான் இவளிடத்து ஒரு குழந்தை பெறுவதற்கு இக் கன்னிகையை ஏற்றுக்கொள்ளுகிறேன். இக் குதிரைகள் என்னுடைய ஆசிரமத்துக்கருகில் மேய்ந்துகொண்டிருக்கட்டும்," என்றார். இவ்வாறு சொல்லிவிட்டு விசுவாமித்ரர் மாதவியுடன் சந்தோஷமாய்க் காலங்கழித்தார். மாதவி அவருக்கு 'அஷ்டகர்' என்னும் புத்ரனை பெற்றாள். அப் புத்ரன் பிறந்தவுடன், விசுவாமித்ரர் அவனுக்கு, தர்மார்த்தங்களை உபதேசித்து, அறுநூறு குதிரைகளையும் கொடுத்தார். அஷ்டகன் ஸோமனுடைய நகரம்போல் பிரகாசமான ஒரு நகரத்தைப் போய் அடைந்தான். விசுவாமித்ரர் அந்தப் பெண்ணைத் தம்முடைய சிஷ்யரான காலவரிடம் விட்டுவிட்டுக் கானகத்துக்குப் போய்விட்டார். காலவரும், தன்னுடைய நண்பனான கருடனுடன், தம்முடைய காரியங்கள் அனுகூலம் பெற்றவராய், சந்தோஷத்துடன் அக் கன்னிகைக்குப் பின்வருமாறு சொன்னார். "தானம் செய்பவனாகிய ஒரு புத்திரனையும், மிகவும் தைரியவானாகிய மற்றொரு புத்ரனையும், ஸத்யத்திலும் தருமத்திலும் பதிந்த மனதையுடைய மூன்றாவது புத்திரனையும், பெரிய யாகங்களைச் செய்பவனாகிய நாலாவது புத்ரனையும் நீ அடைந்திருக்கிறாய். ஆதலால், ஓ! ஸௌந்தர்யவதியே! நீ உன்னுடைய புத்ரர்களால் உன்னுடைய பிதாவையும் நான்கு அரசர்களையும் என்னையும் காப்பாற்றினாய். நுண்ணிய இடையை உடையவளே! நீ இப்போது போகலாம்." இந்த வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு, காலவர், தம்முடைய சிநேகிதரான கருடபகவானை யனுப்பிவிட்டு, அக் கன்னிகையை அவளுடைய தகப்பனிடத்து ஒப்புவித்துவிட்டுத் தவஞ் செய்வதற்காகக் காட்டுக்குச் சென்றார். காலவரிஷியானவர், ஸ்ரீ பிரம்மசாரியாயிருந்து விசுவாமித்ரரிஷியிடம் குருகுலவாசம் செய்து வித்யாப்யாஸம் பெற்று, முடிவில் அவரிடம் அனுமதிபெற்றுக்கொண்டு, தம்முடைய பெற்றோர்களைப் பார்க்கவேணுமென்று வீட்டுக்குத் திரும்பிவந்தார். வீட்டையடைந்தபொழுது, அப்பொழுது தான் வைதவ்யத்தை

---

ஸ்ரீ மகாபாரதம்—அனுசாஸன பர்வம்.

யடைந்த அவருடைய தாயானவள், மிகவும் துக்கத்தை யடைந்தவளாய், பிரலாபித்துத் தன் மகனை நோக்கிப் பின்வருமாறு சொல்லலானாள்:-"ஓ! மகனே! தன் குருவினிடம் வேதசாஸ்திரங்கள் பயின்று, அவரால் வீட்டுக்குப் போகும்படி உத்திரவுகொடுக்கப்பட்டு வந்திருப்பவனும், வாலிபனுக்குரிய எல்லா லக்ஷணங்களும் பொருந்தியவனும், அடக்கமுள்ளவனுமான உத்தம குமாரனை உன்னுடைய தகப்பனார் எப்பொழுது காணப்போகிறார்?" இவ் வார்த்தையைக் கேட்ட காலவர், தன் தகப்பனை இனி எவ்வாறு காணப்போகிறோம் என்கிற விஷயத்தைப் பற்றி மிகுந்த விசனமடைந்தவராய், ஒன்றும் தோன்றாமல் தியங்கினார். அப்பால் அவர் மகேசுவரனைக் குறித்து மிகுந்த பயபக்தியுடன் வெகுவாய் ஸ்தோத்தரித்து ஆராதித்து வந்தார். பகவான் அவருடைய தபசுக்கு மகிழ்ந்து, அவர்முன் பிரத்யக்ஷமாகி, அவரை நோக்கி, "நீ, உன் தாய், தகப்பன் ஆகிய நீங்கள் மூவரும் இறத்தல் என்ற துன்பத்தினின்றும் நீங்கக் கடவீர்கள். நீ சீக்கிரமாய் உன்னுடைய வீட்டுக்குச் செல்லலாம். அங்கே உன் தகப்பனாரைக் காண்பாய்," என்றார். அப்படியே மகேசுவரனிட மனுமதி பெற்றுக்கொண்டு, காலவர் தன் வீட்டுக்குச் சென்று, தன் தகப்பனார் அவருடைய நித்யகருமானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வருவதைக் கண்டார். அப்பொழுது அவருடைய கைகளில் கொஞ்சம் சமித்துக்களும், தர்ப்பைப் புற்களும், கீழே விழுந்து பொருக்கின சில பழவர்க்கங்களும் இருந்தன. காலவர் தன் தகப்பனாரைக் கண்டதும் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார். அப்பொழுது அவர் தன் கைகளிலிருந்த வஸ்துக்களைக் கீழே போட்டுவிட்டு, தன் மகனைத் தூக்கி யெடுத்துக் கட்டியணைத்து உச்சிமுகர்ந்து, "ஓ! குமாரனே! அதிர்ஷ்டவசத்தால் நான் உன்னைப் பார்க்கக் கிடைத்தது. உன்னுடைய குருவிடமிருந்து வித்தைகளைக் கற்று நீ திரும்பிவந்திருக்கிறாய்," என்றார். இவ்விதம் தம்முடைய பக்தியினாலும் தவத்தினாலும், காலவரிஷியானவர் இறந்துபோன தன் தகப்பனாரை மறுபடியும் உயிருடன் காணப்பெற்றார்.

ஒரு காலத்தில் காலவரிஷி [1] கந்தமாதன பர்வதத்திலுள்ள தமது ஆச்ரமத்தில் தவம் செய்துகொண்டிருந்தார். அவருக்குக்

[1] சேது மகாத்மியம்.

காந்திமதி என்ற அழகும் யௌவனமுமுள்ள குமாரத்தி யிருந்தாள். அவள், தன் பிதாவின் பூஜைக்கு, புஷ்பங்கள் கொண்டுவருதல், வேதிகை சுத்தப்படுத்தல், சமித்துக் கொண்டுவருதல் முதலிய பணிவிடைகளைச் சிரத்தையோடு செய்துவந்தாள். அவள் ஒரு நாள் புஷ்பம் கொண்டுவருவதற்காகக் காட்டில் நெடுந்தூரம் சென்று, தன் குடலை நிறைய, புஷ்பங்களை எடுத்துக்கொண்டு ஆச்ரமத்தை நோக்கித்திரும்பி வந்து கொண்டிருந்தாள். அப்பொழுது ஆகாயத்தில் விமானத்தில் சென்றுகொண்டிருந்த 'சுதர்சனன்', 'சுகர்ணன்' என்ற இரண்டு வித்யாதரச் சிறுவர்கள் அவளைக் கண்டார்கள். மூத்தவனாகிய சுதர்சனன் இப் பெண்ணினது பூர்ணசந்திரன் போன்ற முகத்தைக் கண்டு, மிகுந்த மையல் கொண்டு, அவளை அடிக்கடி பார்த்து, அவளைச் சேரவிரும்பி, விமானத்திலிருந்து கீழிறங்கி, அவளை யணுகி, "ஓ! மகா ரூபவதியான பெண்ணே! நீ யார்? உன்பிதாவின் பேரென்ன? ரதிக்கு ஒப்பான உனது சௌந்தரியத்தால் நான் மயங்கி மன்மத பாணங்களால் தவிக்கின்றேன். 'சுகண்டன்' என்னும் வித்யாதர சக்கிரவர்த்தியினுடைய குமாரன் நான். என் பேர் சுதர்சனன். நீ என்மீது கிருபை செய்து என்னை மணந்து கொள்ளவேண்டும். நீ அவ்வாறு செய்தால் சகல சுகங்களையும் அடைவாய்," என்றான். அவ் வார்த்தைகளைக்கேட்ட காந்திமதி, "ஐயா! நான் காலவமகரிஷியின் புத்திரி. நான் கன்னிகை; என் பிதாவின் பூஜைக்குப் புஷ்பங்கள் எடுப்பதற்காக இக் காட்டிற்கு வந்தேன்; நான் சீக்கிரம் போக வேண்டும்; தாமதித்தால் என் தந்தை கோபிப்பார்; என் பிதாவினுடைய சம்மதியன்னியில் நான் சுதந்திரமாய் ஒன்றும் செய்யக் கூடாது, என்பது உமக்குத் தெரியாதா? நீர் என்னை மணம் புரிய விரும்பினால் என் பிதாவை வந்து கேளும்," என்று சொல்லி, ஆச்ரமத்தை நோக்கி வேகமாய்ச் செல்ல எத்தனித்தாள். அப்பொழுது, சுதர்சனன் காமத்தால் மதிமயங்கி, அப் பெண்ணின் கூந்தலைப் பிடித்து இழுத்தான். அப்பொழுது அப் பெண், "ஐயய்யோ! இந்தப் பாவி பலாத்காரமாய்ப் பிடித்திழுக்கிறானே!" என்று கதறி அழுதாள். இச் சத்தத்தைக் கேட்டு, காலவர் முதலிய மற்றெல்லா ரிஷிகளும் அவ்விடத்திற்கு வந்து, அப் பெண்ணின் நிலைமையைப் பார்த்தார்கள். காலவ மகரிஷி கோபமடைந்து, சுதர்சனனைப் பார்த்து, "ஏ! வித்யாதரப் பதரே! வேதாளமும், ராக்ஷஸரும் பெண்களைப்

பலாத்காரமாய்ப் பிடித்திழுக்குந் தொழிலையுடையவர்கள். நீயும் அம்மாதிரி நடந்தபடியால், நீ தாக்கம் நிறைந்த மனித ஜன்மத்தையெடுத்து, அந்த ஜன்மத்திலேயே வேதாள ரூபத்தையுமடைந்து, ரத்தம், மாம்சம் முதலியவைகளைப் புசித்து, உலகத்தில் வெகுகாலம் அலைந்து திரியக்கடவாய். உன் செய்கைக்கு உடன்பட்டிருந்த உன் தம்பியாகிய சுகர்ணனும் மனிதயோனியிற் பிறப்பான். ஆனால், அவனுக்கு வேதாள ஜன்மம் வராது. 'விஞ்ஞப்திகௌதுகன்' என்னும் வித்யாதராதிபதியை அவன் பார்க்கும்போது சாபம் நீங்கும்,'' என்று அவ்விருவரையும் சபித்துவிட்டு, காலவமகரிஷியானவர் தமது புத்ரியை அழைத்துக்கொண்டு, ரிஷிகளோடும் தமது ஆச்ரமம் போய்ச் சேர்ந்தார். பிறகு, அவ்விரு சகோதரர்களும், யமுனாதீரத்தில் உத்தமனாகிய கோவிந்தஸ்வாமி என்ற பிராமணனுக்குப் புத்திரர்களாகப் பிறந்தார்கள். சுதர்சனன் 'விஜயதத்தன்' என்ற பெயரோடும், சுகர்ணன் 'அசோகதத்தன்' என்ற பெயரோடும் பிறந்து வளர்ந்து வந்தார்கள். பிறகு, அவர்களிருவரும் யௌவன தசையையடைந்தார்கள். அப்பொழுது அந்தத் தேசத்தில் க்ஷாமமுண்டாகியபடியால் கோவிந்தஸ்வாமியானவர் தன் குடும்பசமேதராய்க் காசியை நோக்கிப் போகையில், வழியில் ஒரு பாழுங்கோவிலில் தங்கி, எல்லோரும் இரவில் நித்திரை செய்துகொண்டிருந்தார்கள். விஜயதத்தன் வழி நடந்த வருத்தத்தினால் குளிர்ச்சுரம் காணப்பெற்று, குளிர் தாங்கமுடியாமல், குளிர்காயும்பொருட்டு நெருப்புக் கொண்டுவரும்படி தன் பிதாவை வேண்டினான். அதற்கு அவர், எங்கும் தேடிப்பார்த்து நெருப்புக் கிடைக்காததால், "அப்பா! ஜனங்கள் யாவரும் கதவடைத்துக்கொண்டு தூங்குகிறார்கள். நெருப்புக் கிடைக்கவில்லை" என்று சொன்னார். அதற்கு விஜயன், சுற்றிப் பார்த்து, "இதோ! ஆகாயத்தை அளாவி எரிகின்ற நெருப்பைப் பாரும் அதைப் போய்க் கொண்டுவாரும். என்னால் குளிர் தாங்கமுடியவில்லை" என்றான். அதற்கு அவர் "அப்பா! இது பிணம் வேகிறநெருப்பு, அசுபமானது அதன் வாடைபட்டாலும், ஆயுள் க்ஷீணித்துப்போகும்" என்று சொன்னார். அதற்கு விஜயன் "அது எவ்வித அக்னியாயிருந்தாலும் கொண்டுவராவிட்டால் நான் குளிரால் இறந்துவிடுவேன்," என்றான். தனது புத்திரன் பரிதாபமாய்ச் சொல்லியதைக் கேட்ட கோவிந்தஸ்வாமி புத்திரனிடத்துள்ள வாஞ்சையால் அம்மயான அக்னியைக்

கொண்டுவரும்படி போனார். விஜயனும் பின்தொடர்ந்து போனான். அங்கேபோய் குளிர் தீர்ந்தவுடன் வேகின்ற பிணத்தின் கபாலத்தைப் பார்த்து, "செந்தாமரைமலர்போல் இருக்கின்ற இது என்ன" என்று கேட்டான். தந்தை, "அப்பா! இது கபாலம். நெருப்பு ஜ்வாலை வட்டமாய் எரிவதாலும் ஊனின் மாமிசம் ரத்தம் இவைகள் நிறைந்திருப்பதினாலும் இது உனக்கு செந்தாமரைமலர் போல் தோன்றுகின்றது" என்றார். விஜயதத்தன் ஒரு கட்டையினால் அக் கபாலத்தில் அடிக்க, அதிலிருந்து ரத்தம் அவன் முகத்தில் தெறித்தது; அவன் அதை நாவால் நக்கினவுடனே, கோரமும் பயங்கரமுமான ஒரு பெரிய வேதாளரூபத்தை அடைந்து, அடங்காத அட்டஹாஸம் செய்தான். பிறகு, அவன் தந்தையைப் பிடித்திழுத்துக் கொல்லப் போகையில், "அப்பா! இந்த அநியாயம் செய்யாதே" என்ற ஒரு அசரீரிவாக்கு உண்டானதைக் கேட்டு, வேதாளம் தன் தகப்பனை விட்டுவிட்டு, ஆகாசமார்க்கமாய் வெகுதூரம் சென்று, மற்ற வேதாளங்களுடன் கூடினது. கபாலத்தை உடைத்து, வேதாள ரூபமடைந்த இப் புது வேதாளத்துக்கு "கபாலஸ்போடன்" என்று வேதாளங்கள் பெயரிட்டு, அவனைத் தங்களரசனாகிய "நராஸ்திபூஷணன்" என்பவனிடம் கொண்டுபோய் விட்டார்கள். அந்த வேதாள ராஜனும் இவனைச் சேனா நாயகனாக்கிக் கொண்டான். பின்பு ஒரு காலத்தில் நராஸ்திபூஷணன், 'சித்ரசேனன்" என்ற கந்தர்வராஜனால் யுத்தத்தில் கொல்லப்பட்டான். அதன் பிறகு 'கபாலஸ்போடனே' வேதாளங்களுக்கு ராஜனானான். இவன் கதை இவ்வாறிருக்க, கோவிந்தஸ்வாமியானவர் புத்திரசோகத்தினால் வருந்தி தன் மனைவி, இளையபுத்திரனான அசோகதத்தன் இவர்களுடன் காசிதேசத்தை யடைந்து, அங்கே தனிகனான ஒரு வியாபாரியால் சம்ரக்ஷணை செய்யப்பட்டு வந்தார். 'அசோகதத்தன்' என்பவன், அஸ்திரசாஸ்திர வித்தைகளிலும் சாஸ்திரங்களிலும் தேர்ச்சி யடைந்தவனாய் தனக்கு ஒருவரும் நிகரில்லாமல், அந்தக் காசிப்பட்டணத்தில் கீர்த்திபெற்று வாழ்ந்துவந்தான். அப்பொழுது தக்ஷிணத்திலிருந்து காசிநகருக்கு ஒரு மல்லன் வந்தான். காசிராஜனாகிய "பிரதாப மகுடன்" என்பவன் அசோகதத்தனுடைய வல்லமையைக் கேள்வியுற்று, அவனை வரவழைத்து "நீ, இந்த தக்ஷிணதேசத்து மல்லனை உனது பராக்கிரமத்தினால் ஜயித்தால், உனது மனோவிருப்பங்களையெல்லாம் நிறை

வேற்றுவேன்'' என்றான். அப்படியே, அசோகதத்தனும் அம் மல்லனை ஜயித்துக் கொன்றான். அரசன் அசோகதத்தன் மீது மிக ப்ரியம் வைத்து, அவனுக்கு மிகுந்த திரவியமும், அனேக கிராமங் களும் கொடுத்துத் தன் சமீபத்திலேயே வைத்துக் கொண்டான். ஒரு நாள் காசிராஜனும், அசோகதத்தனும் குதிரைகளின் பேரில் ஏறிக்கொண்டு ஜனசஞ்சாரமில்லாத ஒரு இடத்தில் போய்க்கொண் டிருந்தார்கள். அப்பொழுது சாயங்காலவேளை. ''ஓ! மகாராஜனே! நான் ஒரு குற்றமும் செய்திலன். என் சத்துருவின் ஏவுதலால், நியாயாதிபதி என்னைக் கழுவில் போடும்படி உத்திரவுசெய்தார்; நாலு நாளாய் கழுமரத்திலிருக்கின்றேன், தாகத்தால் நான் மிகவும் வருந்து கின்றேன்,'' என்ற பரிதாபமான சத்தம் உண்டாயிற்று. அதை அரசன் கேட்டு அசோகதத்தனைப் பார்த்து ''அப்பா! யாரோ குற்ற மற்றவனைக் கழுவில் ஏற்றப்பட்டுத் தாகத்தால் துன்பப்படுகிறான் என்று தோன்றுகிறது. அவனுக்கு எப்படியாவது தண்ணீர் கொண்டு போய்க் கொடுக்கவேண்டும்'' என்று சொன்னான். அசோகதத்தன் குடத்தில் தண்ணீர் எடுத்துக்கொண்டு, சத்தம் வந்த இடமாகிய பூதங் களும், வேதாளங்களும் நிறைந்த மயானத்திற்குச் சென்றபொழுது, கழுமரத்தின் கீழே ரதிதேவியைப்போல் அழகுவாய்ந்த ஒரு யௌ வனஸ்திரீயைக் கண்டு, தைரியத்தைக் கைவிடாமல், ''ஓ! அழகிய பெண்ணே! நிர்மானுஷ்யமான இம் மயானத்துக்கு நீ வந்த காரணம் என்ன? ஏன் இந்தக் கழுமரத்தின் கீழே இருக்கின்றாய்?'' என்று கேட்டான். அதற்கு அவள், ''ஐயா! எனது நாயகனை ராஜன் கழுவி லேற்றிவிட்டான். லோபி எவ்வாறு பணத்தைக் கைவிடாது இருப் பானோ, அதுபோல் இருவரும் கொஞ்சத்தில் பிராணனை விடுவதா யில்லை; இவருடன் அனுமரணம் செய்யக் காத்திருக்கின்றேன்; இவர் தாகத்தின் கொடுமையால் தவிப்பதைக் கேட்க, எனக்கு வருத்தமா யிருக்கிறது; கழுமரம் உயரமாயிருப்பதால் என்னால் நீர் கொடுக்க முடியவில்லை,'' என்றாள். தயாளுவாகிய அசோகதத்தன் அவ் வார்த்தைகளைக் கேட்டு, ''அம்மா! என் தோளின்மீது ஏறி இவனுக் குத் தண்ணீர் கொடு'' என்று சொல்ல, அப் பெண்ணும் அதற்கு இணங்கி, குனிந்து நிற்கும் அசோகதத்தனுடைய தோளின் மீது ஏறிக்கொண்டாள். உடனே புதிதான ரத்தம் சொட்டிற்று. அதைக் கண்ட அசோகதத்தன் இதை என்னவென்று அண்ணாந்து பார்க்க,

அவள் அந்தப் பிணத்தைத் தின்கிறதைக் கண்டு, அவளுடைய சிலம் பணிந்த ஒரு காலைப் பிடித்துக் கொண்டான். அவள் விலையுயர்ந்த பல ரத்னங்கள் பதித்த அச் சிலம்பை விட்டுவிட்டு அதிவேகமாக ஆகாசமார்க்கத்தில் சென்றாள். அசோகதத்தன் அந்த ஆபரணத் தை எடுத்துக்கொண்டு அரசனிடம் போய் நடந்த விருத்தாந் தங்களைச் சொல்லி, அச் சிலம்பையும் அரசனிடம் கொடுத்தான். அரசன் இதைக்கண்டு அசோகதத்தனுடைய அருமையான செய்கை க்கு மிகவும் வியந்து, அவனிடத்து சந்தோஷமுடையவனாய் தன் குமாரத்தியான மதனலேகையை அவனுக்கு விவாகம் செய்து கொடுத்தான். பிறகு ஒரு நாள் அரசன் அழகான அச் சிலம்பைப் பார்த்து, இதற்கு ஜோடியான மற்றொரு சிலம்பை எவ்வாறு அடை வதென்று சிந்தித்துக்கொண்டிருந்தான். அதை அசோகதத்தன் கண்டு, தானாய்ப் பின்வருமாறு வெகுவாய்ச் சிந்திக்கலானான்:- "இந் நகையோ எனக்கு மயானத்தில் கிடைத்தது; மற்றொன்று சம்பாதிப்பதென்றால், அவளை இனி காண்பதெப்படி? நான் மயானத்துக்குப் போய், நரமாமிசம் விற்பனை செய்கின்றேன்; பூதப்ரேதபிசாசங்களை மந்திரத்தினால் அழைக்கின்றேன். அப்பொ ழுது அந்த ராக்ஷஸியும் வருவாள். அவளைப் பிடித்துக்கொண்டு மற் றொரு சிலம்பையும் பிடுங்கிக்கொள்ளலாம்; அவளுக்கு உதவியாய் அனேகமாயிரம் பூதங்கள், வேதாளங்கள், இராக்ஷஸர்கள் வந்தெதிர்த் தாலும் எனது புஜபலத்தால் அவர்களை ஜயித்துவிடுவேன்". இவ் வாறு தீர்மானஞ் செய்துகொண்டு, அவன் மயானம் போய் மாமிசங் களை வைத்துக்கொண்டு, மந்திரசக்தியினால் பூதப்ரேதபிசாசங்களை யழைத்து, "நான் இங்கே மாம்சவிற்பனை செய்கிறேன்" என்று அன்று இரவு கூவிக் கொண்டிருந்தான். அப்பொழுது பூதங்கள், வேதாளங்கள், பிசாசங்கள், இராக்ஷஸர்கள் இவர்களெல்லாம் நமக்கு இஷ்டமான மாம்சத்தைச் சாப்பிடலாம் என்று கூட்டம் கூட்டமாய் அங்கே சந்தோஷத்துடன் வந்தார்கள். அந்த ராக்ஷஸப் பெண்ணும் மற்ற இராக்ஷஸிகள் தன்னைச் சூழ்ந்து வர, மாம்சம் தின்பதற்கு அங்கு வந்தாள். அசோகதத்தன் அவளைக்கண்டு, 'நாம் முன்பு பார் த்தது இவளே என்று அறிந்து, அவளைப் பார்த்து "அம்மா' மற்றொரு சிலம்பையும் எனக்குத் தரவேண்டும்" என்று கேட்டான். 'வித்யுத் கேசி' என்ற அந்த ராக்ஷஸியும் மனமகிழ்ந்து "ஓ! சூரா! முன்னமே யே நீ என் சிலம்பைக் கவர்ந்தவனாகையால், மற்றொரு சிலம்பையும்

பெற்றுக்கொள் என்று சிலம்பையும் கொடுத்ததுமல்லாமல், 'வித்யுத்ப்ரபை' என்ற தன் மகளை அவனுக்கு மனைவியாகக் கொடுத்து, ஒரு ஸ்வர்ணத் தாமரைமலரையும் அவனுக்கு அளித்தாள். அசோகதத்தனும் தன் மாமியாரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு, அப் பெண் சகிதம் ராஜனிடம் வந்து சங்கதிகளையெல்லாம் தெரிவித்தான். அரசன் அவனுடைய தைரிய பராக்கிரமத்தைக் கண்டு, அவனை வெகுவாய் மெச்சிக்கொண்டான். பிறகு அசோகதத்தன் மதனலேகை, 'வித்யுத்ப்ரபை', என்ற இரண்டு மனைவிகளுடன் சுகமாக வாழ்ந்து வந்தான். அப்படியிருக்கையில், ஒருநாள் அவன் வித்யுத்ப்ரபையை நோக்கி, 'ஓ! பெண்ணே! உன் தாயார் இந்த ஸ்வர்ண புஷ்பம் எனக்குக் கொடுத்தாளே; அது அவளுக்கு எவ்வாறு கிடைத்தது? இம் மாதிரியான மலர்கள் எங்கே கிடைக்கும்?' என்று கேட்டான். 'அதற்கு அவள், "ஓ! என் பிராணநாயகரே! 'கபாலஸ்போடன்' என்னும் வேதாளச் சக்கரவர்த்திக்கு ஒரு நேர்த்தியான தடாகம் உண்டு. அதில் அநேக ஸ்வர்ணத்தாமரை மலர்களிருக்கின்றன. அங்கே எனது தாய் ஜலக்ரீடை செய்யப்போன காலத்தில் ஒரு மலர்கொண்டு வந்தாள், என்றாள். அசோகதத்தன் அப்படியானால், என்னையும் அத் தடாகத்துக்கு அழைத்துக் கொண்டு போ" என்று சொல்ல, அவள் அப்படியே அத்தடாகத்திற்குக் கூட்டிப் போனாள். பிறகு அசோகதத்தன் அக் குளத்திலுள்ள மலரைப் பறிக்க எத்தனித்ததில், அங்கே காவலாயிருந்த வேதாளங்கள் மறிக்க, அவன் அவைகளைக் கொன்றான். அதைக் கேட்ட கபாலஸ்போடன் தன் சேனைகளோடு சண்டைக்கு வந்தான். அசோகதத்தன், கபாலஸ்போடனையும் கொல்லப் போகிற சமயத்தில் 'விஞ்ஞப்திகௌதுகன்' என்னும் வித்யாதர சக்கரவர்த்தி விமானத்தில் வந்து தோன்றி, 'அசோகதத்தா! இந்த அநியாயமான தொழிலைச் செய்யாதே", என்று கூற, அவ் வித்யாதர ராஜனைப் பார்த்த மாத்திரத்தில், அசோகதத்தனுக்கு மனிததேகம் போய், திவ்யாபரணங்களணிந்த வித்யாதரஸ்வரூபத்தைப்பெற்று, சாபமும் நீங்கி விமானத்தில் ஏறினான். அப்பொழுது விஞ்ஞப்திகௌதுகன், அசோகதத்தனைப் பார்த்து, 'ஐயா! சுகர்ணு! உன் சகோதரன் சுதர்சனன், காலவமகரிஷியின் புத்திரியை பலாத்காரம் செய்த தோஷத்தினால், இந்த வேதாளரூபமடையும்படி சபிக்கப்பட்டான். நீயும் அச்செய்கைக்கு உடன்பட்டிருந்தபடியால், உனக்கும் நரஜன்மம் எடுக்கும்படியான சாபம் நேர்ந்தது. ஆகிலும் நீ

செய்த பாபம் அற்பம்; ஆகையால் என்னைக் காணும்பொழுது உனக்கு சாபவிமோசனமென்று காலவமகாரிஷியானவர் காலங் குறிப்பிட்டிருந்தார். உனது சகோதரன் சாபத்துக்கு அவர் முடிவு கூறவில்லை. ஆகையால் சாபம் நீங்கின நீ என்னுடன்கூட ஸ்வர்க்கத்திற்கு வா'' என்றார். சுகர்ணன், இவ்வார்த்தைகளைக் கேட்டு, 'ஐயா! என் மூத்த சகோதரனைக் கஷ்டப்பட விட்டுவிட்டு சகல சுகங்களும் நிறைந்த ஸ்வர்க்கத்துக்கு நான் எவ்வாறு செல்வேன்? அவனுடைய சாபம் நீங்கும் மார்க்கத்தை நீர் எனக்குச் சொல்லியருளவேண்டும்'' என்று கேட்க, அதற்கு வித்யாதரராஜன், நீங்குதற்கு அரிய சாபத்தை யாரால் போக்கமுடியும்? ஆகிலும் பூர்வத்தில் பிரம்மதேவர் சனகாதிகருக்குச் சொன்ன ரகஸ்யத்தைச் சொல்லுகிறேன்'' கேள். சகல புண்ய தீர்த்தங்களும் நிறைந்த தென் சமுத்திரக் கரையிலுள்ள சக்கர தீர்த்தத்தை யடுத்து, சகல பாபங்களையும் நீக்க வல்லதான மகிமையுள்ள தீர்த்தமொன்று இருக்கின்றது அதில் ஸ்நானம் செய்வதனால் உண்டாகும் புண்யபலனை அளவிட்டுச் சொல்ல முடியாது; அதில் உன் தமையன் ஸ்நானம் செய்தால் சாபம் நீங்கி சுகம் பெறுவான், என்று சொன்னதைக் கேட்ட சுகர்ணன், தன் சகோதரனைக் கூட்டிக்கொண்டு அந்தத் தீர்த்தத்தை யடைந்து, அவனைப் பார்த்து, ''ஓ அண்ணா! காலவ மகாரிஷியின் கொடிய சாபம் நீங்குவதற்காக இந்தப் புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும்'' என்றான். அச்சமயத்தில் அத் தீர்த்தத்தின் நீர்த் துளிகள் காற்றினால் வேதாளத்தின் மீது பட்டமாத்திரத்தில், அவன் வேதாள ரூபம் நீங்கி, பழைய பிராமண வடிவம் பெற்றான். பிறகு சங்கற்பம் செய்து கொண்டு தமது மானிட ஜன்மம் நீங்கவேண்டும் என்று அத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து எழுந்ததும், முன்போல் அழகான வித்யாதர சரீரம் பெற்றான். உடனே திவ்வியாபரண அலங்கிருதனாகி தேவஸ்திரீகள் தன்னைச் சூழ்ந்துவர, தன் சகோதரனோடு தேவ விமானத்திலேறி, விஞ்ஞபதிகௌதகனுடன் ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தான்.

ஒரு காலத்தில், காலவரிஷி தமது சிஷ்யர்களுடன் காலைக் கடனை முடிப்பதற்காக யமுனாநதிக்குச் சென்றார். அங்கே அவர் சூரியபகவானுக்கு அர்க்கியம் விடுவதற்காக தமது கைகளில் ஜலம் ஏந்தி இருந்தார். அச் சமயம் சித்ரசேனனென்ற கந்தர்வன்

விமானத்தின் மீதேறி, ஆகாய மார்க்கமாய் ஊர்வசியின் க்ருஹத்தை நோக்கிச் சென்றுக் கொண்டிருந்தவன், தான் தரித்திருந்த தாம்பூல உச்சிஷ்டத்தை உமிழ்ந்தான். அது அர்க்கியம் ஏந்திய அம் முனி வரின் உள்ளங்கையில் விழுந்தது. உடனே அவர் அது தாம்பூலத் தின் எச்சில் என்றறிந்து, இக் கெடுதி சித்ரசேனனால் சம்பவித்த தென்று தமது ஞானதிருஷ்டியால் கண்டார். அவர் மிகுந்த கோப மடைந்து, தமது நிஷ்டைக்குப் பங்கம் செய்த அவனைச் சபித்தால், தமது தவம் குறைவுபடும் " என்று யோசித்து, அவனை எவ்வாறு சிக்ஷிப்பதென்று சிந்தித்துக் கொண்டிருந்தார். அப்போது நாரத முனிவர் அங்கே வர, அவருடைய சூழ்ச்சியின் பிரகாரம், அவ் விராஜ்யத்துக் கதிபதியும் துவாரகா வாசியுமான கிருஷ்ண பகவானி டம் போய் முறையிடச் சென்றார். அவரும் அம் முனிவரை அர்க்ய பாத்யாதிகளால் உபசரித்து வந்த கார்யத்தைத் தெரிவிக்கும்படி வேண்ட, அம் முனிவர் தேவ தாசிகளுக்கு நட்டுவம் செய்யும் சித்திர சேனனால் தமக்கு நேர்ந்த அவமானத்தைச் சொன்னார். அப் பொழுது பகவான் ஒரு பகலுக்குள் தர்ம கார்யத்திற்கு இடையூறு செய்த அப் பாவியின் சிரத்தால் உமக்கு நேர்ந்த அபராதத்தைப் பழிவாங்குகிறேன்" என்று வாக்களித்தார். காலவரும், நாரதரும் சந்தோஷத்துடன் கிருஷ்ண பகவானிடம் விடைபெற்றுச் சென்றார் கள். இந்தச் சமாசாரத்தை நாரதரால் சித்திரசேனன் அறிந்து, மிகுந்த விசாரத்தை யடைந்தான். தன்னை எப்படியாவது காப்பாற்ற வேண்டுமென்று தவசிரேஷ்டராகிய அந்த முனிவரை வெகுவாய் வணங்கி பிரார்த்தித்தான். அவன் பத்னிகளாகிய சந்தியாவளியும், ரத்னுவளியும் கோபால கிருஷ்ணனுடைய கணையினின்றும் தங்கள் கணவனை ரக்ஷிக்கும்படி அம் முனிவரை நமஸ்கரித்து வேண்டினார் கள். அதற்கு நாரதர், அது மிகவும் அசாத்தியமான காரியம். இம் மூவுலகங்களிலும் கிருஷ்ணன் கணையைத் தடுக்க வல்லவர் யார்? இந்த சங்கடத்தினின்றும் தப்புவதற்கு எனக்கு ஒரு யுக்தி தோன்று கிறது. அதென்னவென்றால், நாம் அர்ச்சுன ராஜனை எப்படியாவது கைவசப்படுத்த வேண்டும்; அவ்வாறு செய்வதற்கு முன் சுபத்தி ரையை முதலில் வசப்படுத்த வேண்டும்; ஆதலால், நீ உன்னுடைய இரண்டு மனைவிகளுடன் பூலோகஞ் சென்று, சுபத்திரா தேவியின் நந்தவனத்துக் கருகாமையில் ஓரிடத்திலிருந்து கொண்டு, அக்னிப் பிரவேசம் செய்து மரிக்க எத்தனிப்பது போலவும், உன் பத்னிகள்

துக்கித்துக் கொண்டிருப்பது போலவும் சாலமும் செய்து கொண்டிருங்கள். நான் சுபத்திரையை அங்கே வரும்படியாகச் செய்கிறேன். அப்பொழுது "ஏ! சந்தியாவளி! நீ அவளிடம் சங்கதிகள் யாவற்றையும் கூறாமல், மாங்கல்யப்பிச்சை கேள். அவள் கொடுப்பதாக வாக்களித்த பிறகு, நிகழ்ந்தவற்றை யெல்லாம் அவளுக்குத் தெரிவிப்பாய். மற்ற ஆகவேண்டிய சங்கதிகளை நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் இப்பொழுதே புறப்படுங்கள்" என்று சொல்லிவிட்டு நாரதர் அவ்விடம்விட்டு சுபத்திரை யிருக்குமிடத்தை நாடிச் சென்றார். அச் சமயம் அர்ச்சுன ராஜன் வேட்டையாடச் சென்றவன் மூன்று தினங்களாகியும் வாராததினால், அவனுடைய பிரியபத்னியாகிய சுபத்திரை தன் கணவனுடைய பிரிவால் மிகவும் துயருற்று, தனது சிங்காரத் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தாள். நாரதர் வரக் கண்டதும், அவள் அவரைப் பக்தியுடன் நமஸ்கரித்து, அவரால் ஆசீர்வதிக்கப் பெற்று, ஒரு ஆசனத்தில் அவரை அமரச் செய்தாள். பின்பு தன் கணவன், தன்னை எப்பொழுதும் பிரியாமலிருக்கும் பொருட்டு 'கௌரீ விரதம்' செய்யும்படி அவர் சொன்னதற்கு இணங்கி, அவரைக் கொண்டே அந்த விரதத்தைச் செய்து முடித்துவிட்டு, அவர்களிருவரும் சுபத்திரையின் அரண்மனையை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். இதன் மத்தியில் நாரதர் சொல்லிய பிரகாரம், சித்ரசேனன் தன்னிரு பத்னிகளுடன் அந்தத் தோட்டத்தை யடுத்த வெளியில் ஒரு பெரிய அக்னி வளர்த்து, அதில் சித்ரசேனன் விழுக எத்தனிக்க, அவனை அவன் மனைவி சந்தியாவளி தடுத்து, "ஸ்வாமி, நீங்கள் அவசரப்பட்டு உயிரை மாய்த்துக் கொள்ளவேண்டாம். இதுகாறும் பொறுத்தவர் இன்று சற்றுப் பொறுக்கலாகாதோ? நாரத மஹா முனிவர் கூறியபடி சுபத்திரா தேவி வரும் சமயமும் நெருங்கியது. அவளை நலம் செய்து கொண்டால், நமக்கு அனுகூலம் கிடைக்கும் என்று என் மனதில் ஏதோ உறுதி ஏற்படுகிறது. இதுவும் காலையில் நாம் கண்ட நற்சகுனங்களுக்கு ஒத்திருக்கிறது. என் பிராணநாதரே! சற்று நிதானியும்" என்று சொல்லி வேண்டினாள். சித்திரசேனன் அவளை நோக்கி, "அடி சண்டாளி! நீ பெண் புத்தியால் இவ்வாறு பிதற்றுகின்றாய்! கிருஷ்ண மூர்த்தியின் கணைக்காவது நான் தப்புவதாவது? ஏன் வீணான மனோராஜ்யம் செய்கிறாய்? என்றான். சந்தியாவளி, 'பிராணநாதா! அப்படியல்ல, உமக்காகப் பரிந்து அர்ச்சு

னன் போருக்கெழுந்தால் கண்ணன் தமது அன்பிற்கு அன்பனாகிய அர்ச்சுனனோடு போர் செய்ய மனம் சகிப்பாரோ? அவனை மீறி உம்மைக் கொல்லுவாரோ? இதோ சுபத்ரா தேவியும் நாரதரும் வருகிறார்கள் போல் தோன்றுகிறது. ஏ! ரத்னவளி! நீ துக்கத்தால் மூர்ச்சையானவள் போலிருப்பாயாக. பிராணநாதரே! நீர் இந்த அக்னியில் குதிக்க எத்தனிப்பதுபோல் பாவனை செய்து கொண்டிரும்" என்று சொல்லிவிட்டு சந்தியாவளி, உரத்த குரலுடன் பிரலாபித்துக் கொண்டிருந்தாள். அச் சத்தத்தைக் கேட்டு சுபத்திரை நாரதரை நோக்கி, "ஸ்வாமி! சமீபத்தில் ஏதோ ஸ்திரீயின் அழுகுரல் கேட்கின்றது. அதைப் போய் ஒரு க்ஷணத்தில் விசாரித்து வருகிறேன்" என்று சொல்ல, நாரதர் "அதை நாமேன் விசாரிக்க வேண்டும்? அதில் என்ன சங்கடமிருக்குமோ! வேண்டாம்" என்று தடுக்க சுபத்திரை "சுவாமி! துக்கப்படுகிறவர்களிடத்தில் இரக்கமும், அவர்களுக்கு நம்மால் கூடிய உதவியும் செய்யாமலிருந்தால், அந்த ஜன்மம் வீணல்லவா! ஜீவர்களிடத்தில் தயை இல்லாமல் ஆயிரம் விரதங்கள் அனுஷ்டித்தும் பயன் யாது? நான் எப்படியும் போகவேண்டும். க்ஷணப்பொழுதில் வருகிறேன். தேவரீர் தடுக்காமல் விடை கொடுத்தருளும்" என்று வேண்டினாள். நாரதர் "அப்படியானால் உன் இஷ்டம்" என்று சொல்லவும், சுபத்திரை அங்குச் சென்று நிகழும் சங்கதிகளைக் கண்டு, சந்தியாவளியை நோக்கி, "அம்மா! நீ ஏன் அழுகின்றாய்? இதென்ன தீ வளர்த்திருக்கின்றது. இவர் யார்?" அதில் இவர் விழப் போகுங் காரணம் என்ன?" என்று கேட்டாள். சந்தியாவளி சுபத்திரையின் காலில் விழுந்து தனக்கு மாங்கல்ய பிச்சை கொடுக்கும்படி கேட்க, சுபத்திரை "நல்லது ஆகட்டும் சங்கதி என்ன" சொல்லென்று கேட்டாள். பிறகு சந்தியாவளியிடமிருந்து நிகழ்ந்தவை யாவற்றையும் தெரிந்து கொண்டு, தன் தமயனுக்கு விரோதமாய்த் தான் வாக்களித்ததைப் பற்றி சற்று கலங்கி, அப்பால் தன்னைத் தேற்றிக்கொண்டு, "எப்படியும் நான் என் வாக்கை நிறைவேற்ற வேண்டும்" என்று தன் மனதினுறுதி செய்து கொண்டு, அவர்களை நோக்கி, "நீங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். என் கணவரிடம் சொல்லி, உன் புருஷனை ரக்ஷிக்கும்படியான ஏற்பாட்டைச் செய்கிறேன்", என்று சொல்லிவிட்டுத் தனது வீட்டுக்குச் சென்றாள். வேட்டைக்குப் போன அர்ச்சுனராஜன் திரும்பி வந்து, அன்றிரவு அந்தப்புரஞ் சென்று, சப்ரமஞ்சத்

தில் தேக அசௌக்யம் போல் படுத்திருந்த சுபத்திரையை அணுகி அவளுக்கு நலஞ் சொல்லி, அவள் உடலைத் தீர்த்து அவளைச் சந்தோஷிப்பிக்கும்படி மிகவும் முயற்சி செய்தான். அவள் தன் பர்த்தாவிடம் விபரம் சொல்லாமல் பிராண பயத்தினால் தன்னைச் சரணம் புகுந்த சித்திரசேனனுடைய உயிரை ரக்ஷிக்கும்படி வேண்ட, அர்ச்சுனனும் "அப்படியே ஆகட்டும்" என்று சொன்னான். அப்பால் கிருஷ்ண பகவான், அக் கந்தர்வனைக் கொல்வதாக வாக்களித்திருப்பதையும், அதற்கு விரோதமாய்த் தான் வாக்குத் தத்தம் செய்திருப்பதையு மறிந்து, அர்ச்சுனன், என் குலதெய்வமாகிய கண்ணபிரானுடனே நான் போர் செய்வது? என்று விசாரப்பட்டு, முகம்வாடி அப்பால் தேறி "எப்படியும் என் வாக்கை நிறைவேற்றலே தகுதி" யென்று யுத்தத்திற்குச் சன்னத்தனா யிருந்தான். பிறகு கண்ணன் சித்ரசேனன் பாலம்பு தொடுக்க, அர்ச்சுனன் தனது பாணத்தினால் தடுக்க, இவ்வாறு கிருஷ்ணார்ச்சுனர்களிருவருக்கும் அன்று மாலை நேரம் வரை போர் நடந்து கொண்டிருந்தது. கடைசியில் கிருஷ்ண பகவான் நாராயணாஸ்திரத்தைச் சித்திரசேனன் பேரில் பிரயோகித்தார். அர்ச்சுனன் தான் தவஞ்செய்து பரமசிவனிடம் பெற்ற பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகம் செய்தான். இவ்வாறு இந்த இரண்டு அஸ்திரங்களும் ஒன்றோடொன்று பொருந்திக் கக்கின்ற அக்னிப்பொறிகளினாலும் ஆரவாரத்தினாலும் உலகமே யழிந்துவிடும் போல் தோன்றிற்று. அப்பொழுது சுபத்திரை யுத்தமுனையில் வந்து நின்று, அவர்களை கணைகள் தொடுக்க வொட்டாமல், குறுக்கே நின்று யுத்தத்தை நிறுத்தும்படி வெகுவாய் வேண்டினாள். அப்படியே அவ் விருவரும் அவரவர்களுடைய அஸ்திர சஸ்திரங்களை மீட்டிக் கொண்டார்கள். பிறகு காலவர் கிருஷ்ண பகவானை நோக்கி, "ஏ கிருஷ்ணா! எனக்கு நேர்ந்த அபராதத்திற்காகப் பழி வாங்குவதாக நீர் செய்த சபதத்தை வீணாக்கலாமா? இது தர்மமா?" என்று கேட்க, கிருஷ்ணமூர்த்தி, "ஓ! மஹாரிஷியே! என் வார்த்தை ஒருகாலும் பொய்க்காது. சித்திரசேனன் சிரத்தால் உமது பழியைத் தீர்ப்பதாகச் சொன்னேன் அல்லவா? இதோ அவ்வாறு செய்கிறேன். சித்திரசேனா! உனது சிரத்தால் இம் மஹாரிஷியின் பாதங்களை வணங்கி, உன்னை மன்னிக்கும்படி அவரைப் பிரார்த்திப்பாயாக என்றார். சித்ரசேனனும் அவ்வாறு செய்ய, காலவரும் அவனை ஆசிர்வதித்து வாழ்த்தினார். பிறகு எல்லோரும் சமாதானத்தையும், சந்தோஷத்தையு மடைந்து, அவரவர்களிருப்

பிடங்களுக்குச் சென்றார்கள். தபோ நிதியாகிய காலவரும், கிருஷ்ணார்ச்சுனர்களிடம் விடை பெற்றுக் கொண்டு, தவஞ் செய்யச் சென்றார்.



# 48. கிந்தம ரிஷி.





தேவ (1) சக்தியையுடைய கிந்தமரிஷி தன் மனைவியிடத்துக் காதலுற்று, அவளை அந்த சமயத்தில் மனித ரூபமாயிருந்து அநுபவிப்பதற்கு வெட்கத்தால் சரிப்படாதபடியால், அந்த ரிஷியும் அவருடைய பத்னியும் ஆணும் பெண்ணுமாக மானுருவங்களெடுத்து, போகித்துக்கொண்டிருந்தார்கள்.

ஏராளமான மான்களும் இன்னு மநேக துஷ்டமிருகங்களும் வசித்துக்கொண்டிருக்கும் அந்த காட்டிற்கு சந்திரவம்சத்தரசனும விசித்திரவீரியராஜன் புத்திரனும் அஸ்தினபுரத்தை யாண்ட திருதராஷ்டிரராஜனுடைய தம்பியுமான பாண்டு மகாராஜன் தன் மனைவிகளுடன் வந்திருந்தவன், தனியே வேட்டையாடிக்கொண்டிருந்தான். மேற்சொன்னபடி மான்கள் ரூபமாய்ப் போகித்துக்கொண்டிருந்த இருவரையும் உண்மையான மான்களென்றேயெண்ணி, ஐந்து பாணங்களைப் பிரயோகித்து அவர்களைத் துளைத்தான். இவ்வாறு பாணத்தால் துளைக்கப்பட்டு அந்த ஆண் மானானது மனிதக்குரலுடன் உரக்க சப்தித்து அழுதுகொண்டு பூமியில் விழுந்தது. அது பாண்டுவை நோக்கி, "ஓ! அரசனே! ஆசைக்கும் குரோதத்துக்கும் வசப்பட்டு அவைகளில் ஆழ்ந்திருப்பவர்கள், புத்தியேயில்லாத பாபிகள் ஆகிய இவர்கள்கூட இம்மாதிரி கொடும் தொழிலைச் செய்யத் துணியார்கள். ஒவ்வொருவனுடைய சொந்த அபிப்பிராயமானது சாஸ்திர விதிகளுக்கு முன், பயன் பெறாது. சாஸ்திரவிதிகளே மேலோங்கி நிற்கும் சாஸ்திரங்களுக்கு விரோதமான ஒன்றையும் புத்திமான்கள் அங்கீகரியார்கள். தர்மாத்மாக்கள் இருந்து விளங்கிய வம்சத்தில்

(1) மகாபாரதம்—ஆதிபர்வம்.

நீ ஜனித்திருக்கிறாய். அப்படியிருக்க, நீ ஏன் இவ்வாறு கோபத்துக்கும் குரோதத்துக்கும் வசப்பட்டு உன் புத்தியை இழந்தாய்?" என்றது. அதைக் கேட்டுப் "பாண்டுராஜன், அரசர்கள் உன் வர்க்கத்தைச் சேர்ந்த பிராணிகளைக் கொல்வதில் பகைவர்களைப்போலவே பாவித்து நடந்துகிறார்கள். ஆகலால் நீ அறியாமையினால் குற்றம் கூறுவது சரியன்று. உன் இனத்தைச் சேர்ந்த மிருகங்களை நேரிலாவது அல்லது மறைந்தாவது கொல்வது தகுதிதான். இதுவே அரசர்களுடைய வழக்கம். அப்படியிருக்க, நீ என்னை ஏன் நிந்திக்கிறாய்? ஆதிகாலத்தில் அகஸ்தியரிஷி ஒரு பெரிய யாகம் செய்துகொண்டிருக்கும் பொழுது, மான்வேட்டையாடி காட்டிலிருந்த மிருகங்களை யெல்லாம் தேவர்களுக் களித்தார். முந்தின சங்கதிகளை அனுசரித்துள்ள வழக்கப் பிரகாரம் நான் உன்னைக் கொன்றேன். அகஸ்தியர்தான் செய்த முக்கிய யாகங்களில் மான்களினுடைய கொழுப்பினால் ஹோமம் செய்தார்" என்றான். அதற்கு மான், "ஓ! அரசனே! மனிதர்கள் தங்கள் பகைவர்களிடத்துக் கூட அவர்கள் யுத்தத்திற்குச் சன்னத்தர்களாயில்லாதிருக்கும் போது பாணப்பிரயோகம் செய்யார்கள். அதைக் காலக்கிரமத்தில் செய்யவேண்டும். அதாவது, சண்டைக்கு எத்தனமாயிருக்கும் சங்கதியை முன்னாடியே தெரிவித்து, பிறகு யுத்தம் தொடங்கல் வேண்டும். அப்பொழுது கொன்றால் அது குற்றமன்று" என்றது. அதற்குப் பாண்டு, "மான்கள் கவனமாயிருக்கின்றனவா? அல்லவா? என்பதைக் கவனியாமலே மனிதர்கள் பலவித உபாயங்களால் அவைகளைக் கொல்லுகிறார்கள். அப்படியிருக்க, ஓ! மானே! நீ ஏன் என்னைக் கண்டிக்கிறாய்" என்றான்.

மான் "ஓ! அரசனே! நீ மானைக் கொன்றதற்காகவாவது, நீ எனக்குச் செய்த தீங்குக்காகவாவது நான் உன்பேரில் குற்றம் கூறவில்லை. ஆனால், அவ்வளவு குரூரமாயக் கொல்லாமல், நான் போகித்துக்கொண்டிருந்தகாலம் முடியும்வரை நீ பொறுத்திருந்திருக்கவேண்டும். புத்தியும் தர்மமும் நிறைந்த எவன் தான், அவ்விதமான தொழிலைச் செய்துகொண்டிருக்கும் காலத்தில், மானைக் கொல்ல மனம் சகிப்பான்? ஸ்திரீபோகம் செய்யும் காலமானது எல்லாப் பிராணிகளுக்கும் இன்பகரமானது. ஓ! அரசனே! இந்த என் சகியுடன் என்னுடைய இந்திரிய ஆசையைத் தீர்த்துக்கொள்ளும் செய்கையிலிருந்தேன். ஆனால் என்னுடைய அந்த எத்தனத்தை நீ

வீணுகச் செய்துவிட்டாய். ஓ! குருவம்சத்தரசனே! குற்றமற்ற தர்மாத்மாக்களான கௌரவர்கள் வம்சத்தில் ஜனித்த உனக்கு இக் காரியம் கொஞ்சமேனும் தகுதியன்று. ஆதலால் ஓ! அரசனே! நீ செய்த காரியம் மிகவும் குரூரமானது. எல்லோராலும் நிந்திக்கத்தக்கது; அபகீர்த்தியைக் கொடுக்கத் தக்கது; பாபகரமானது; உண்மையில் நிச்சயமாய் நரகத்தை யடைவாய்; நீ ஸ்திரீசம்போகத்தின் சுகங்களை அறியாதவனல்லவே; தர்மசாஸ்திரங்களையும் அவைகளை அனுஷ்டிக்கும் முறைகளையும் நீ நன்றாய் அறிந்தவன். ஒரு தேவனைப் போன்ற நீ, நரகத்துக்கு ஹேதுவான காரியத்தை செய்தது கிரமமல்ல; குரூரமாய் நடப்பவர்களையும், பாபத்தொழில்களைச் செய்கிறவர்களையும், சாஸ்திரங்களில் விதித்திருக்கிற பிரகாரம் தர்மார்த்தகாமங்களை அனுஷ்டிக்காதவர்களையும் தண்டிப்பது உன்னுடைய கடன். அப்படியிருக்க, உனக்கு ஒரு தீங்கும் செய்யாத என்னைக் கொல்வது மூலமாய் எந்த நல்ல காரியத்தைச் சாதித்துவிட்டாய்? நானோ, மான் வேஷம் பூண்டிருந்தாலும், பழங்களையும் கிழங்குகளையும் புசித்து ஜீவிக்கும் ஒரு ரிஷி, நான் காட்டில் எல்லோருடனும் சமாதானமாய்க் காலம் கழித்துக்கொண்டிருந்தேன், அப்படியிருக்க, நீ என்னைக் கொன்றாய்; அதற்காக நான் உன்னை நிச்சயமாய்ச் சபிப்பேன்; ஆண் பெண் தம்பதிகளிடத்து நீ கொஞ்சமேனும் தயவென்பதில்லாமலிருந்தபடியால், எப்பொழுது காமத்தினால் தூண்டப்பட்டுப் புணர எத்தனிப்பாயோ, அப்பொழுது நீ இறக்கக் கடவாய்! நானோ தவமகிமையுடைய கிந்தமன் என்ற பெயருடைய ஒரு முனி; நான் மனிதர்கள் மத்தியில் இவ்விதமான செய்கையைச் செய்ய நாணமுற்று, மான் வேஷம் பூண்டு, இந்திரிய சுகத்திலமர்ந்திருந்தேன்; நான் பிராமணனென்று அறியாமல் நீ என்னைக் கொன்றாய்; நான் இப்பெருங் காட்டில் மானுருவங் கொண்டு, மற்ற மான்களுடன் உலாவிக்கொண்டிருக்கிறேன். ஆதலால் உன்னைப் பிரம்மஹத்தி தோஷம் சேராது. ஆனால் ஏ மூடனே! மானுருவம் பூண்டு போகித்திருந்த சமயத்தில் நீ என்னைக் கொன்றபடியால், எனக்கு நேரிட்ட கதியே உனக்கும் சம்பவிக்கக் கடவது! ஆதலால் நீ காதல் கொண்டு, உன் மனைவியை பணுகும்பொழுது, நான் என் மனைவியைச் சேர்ந்ததுபோல் நீயும் அவளைப் புணர்வாய், அந்நிலையிலேயே நீ உன் பிராணனை யிழந்து, யமலோகத்தை யடைவாய்; உன்னால் புணரப்பட்ட அந்த மனைவியும்

உன்னிடத் தன்புள்ளவளாய், உன்னோடு உடன்கட்டை யேறுவாள்! நான் சந்தோஷமாயிருக்கும் பொழுது நீ அதைக் கெடுத்து எனக்குத் துன்பத்தை விளைத்தாய்; அதே கதியை நீயு மடைவாய்!" என்றார். இவ்வாறு சொல்லிவிட்டு மாணாகிய முனிவர் ஜீவனை விட்டார். இவ்வாறு ரிஷி சொன்னபடியே பாண்டு மகாராஜன் தன் இளைய பத்தினியாகிய மாத்திரா தேவியைப் புணர எத்தனித்ததும், அவன் பிராணனை யிழந்ததும், அவள் உடன்கட்டை யேறினதும் பாரதகதையின் விருத்தாந்தங்கள்.



# 49. குசத்வஜர்.



இவர் ✻ ப்ருஹஸ்பதி மகாரிஷியின் புத்திரர். இவர் மிகுந்த தவவலியுடைய ப்ரமஹரிஷி மிக்க தேஜஸுடன் கூடியவர். ப்ருஹஸ்பதி பகவானைப்போல் அறிவு மிகுந்தவர். அவர் தினம் வேதம் ஓதிக்கொண்டிருந்தார். அவ்வாறு அவர் வேதம் ஓதிக்கொண்டிருக்கும்பொழுது அந்த உச்சரிப்பிலிருந்து வேதவதி என்ற ஒரு கன்னிகை உண்டானாள். அவள் கண்டோர் பார்த்து மயங்கும்படியான மிகுந்த சௌந்தரியமுடையவளா யிருந்தாள். அவளுக்குத் தக்க வயது வந்த பொழுது தேவர்கள், கந்தவர்கள், யக்ஷர்கள், ராக்ஷசர்கள் பன்னகர்கள் எல்லாரும் குசத்வஜரிடம் வந்து அப்பெண்மணியை தங்களுக்கு மணம்செய்து கொடுக்கும்படி ஒவ்வொருவரும் கேட்டார்கள். ஆனால், அவர் அவளை ஒருவருக்குங் கொடுக்கவில்லை. அவர் அப்பெண்ணரசியை ஸ்ரீ மஹாவிஷ்ணுவுக்கு பத்தினியாக கொடுக்க வேணுமென்று உத்தேசித்திருந்தார். அதனால் தான், அவளை கொடுக்கும்படி கேட்டவர்களுக்கு அவர் இணங்கவில்லை. இவருடைய தீர்மானத்தைக் கேட்டு தைத்திய அரசனை சம்பு என்பவன் தனது பலத்தால் கர்வமடைந்து, அம்முனிவர் பேரில் கோபம் கொண்டு, அம்முனிவர் ஒரு நாளிரவு தூங்கிக்கொண்டிருக்கும்

✻ இராமாயணம்—உத்தரகாண்டம்.

[illegible] அவருடைய பத்னியும் அவரு
[illegible] செய்து மரித்தாள். அவருடைய புத்திரியான
[illegible] தகப்பனாருடைய எண்ணத்தை நிறைவேற்றும் பொரு
[illegible] நாராயணனையே கணவனாய் அடைவதற்காக மிகவும் கடு
[illegible] தவம் செய்துகொண்டிருந்தாள். அப்பொழுது லங்காதிபதி
[illegible] அங்கு வந்து அவளுடைய வரலாறுகளை அவளிட
மிருந்தே தெரிந்துகொண்டு, அவளுடைய அழகைக்கண்டு மயங்கி,
காம அக்னியால் பீடிக்கப்பட்டவனாய் அவளை நோக்கிப் பின் வரு
மாறு சொல்லலானான்:—"ஓ! அழகிய இடையையுடையபெண்ணே!
தவம் செய்வது வயது முதிர்ந்தவர்களுக்குரிய தொழில். எல்லாவித
அழகுகளும் இளமையும் பொருந்திய நீ தவம் செய்வது அழகல்ல.
மூன்று லோகங்களிலும் உன்னைப் போல் சௌந்தர்யமுள்ளவள்
கிடையாது. உன்னுடைய இளமையானது வீணாகக் கழிந்து போ
கின்றது. நான் லங்கைக்கு அரசன். எனக்குத் தசக்ரீவன் என்று
பெயர். நீ எனக்கு மனைவியாக வந்தால், உன்னிஷ்டப்படி சகல
சுகங்களையும் அனுபவிக்கலாம். நீ விஷ்ணு என்று சொல்லுகிறவன்
யார்? பராக்கிரமத்திலாவது, தவத்திலாவது, சுகபோகங்களிலாவது,
தேகபலத்திலாவது அவன் எனக்கு ஈடாகமாட்டான்". வேதவதி
இவ் வார்த்தைகளைக் கேட்டு "எல்லா ஜீவர்களாலும் தொழுது வணங்
கப்பட்ட விஷ்ணுவைப் பற்றி நீர் இவ்வாறு சொல்லக் கூடாது.
உம்மைத் தவிர இவ்வுலகத்தில் புத்திமானான வேறு எவன் நாராய
ணனை நிந்திப்பான்? ஓ ராக்ஷதர்களுக்கு அரசனே! நீர் போம்"
என்று சொன்னாள். அதைக் கேட்டு இராவணன் அப்பெண்மணியின்
கூந்தலைப் பிடித்து இழுத்தான். உடனே கோபம்கொண்டு வேத
வதி அவளுடைய தவமகிமையால் கத்தியாக மாறின தனது கையால்
தனதுகூந்தலை அவிழ்த்துக் கொண்டாள். பிறகு அவள் கோபத்தினால்
பொங்கினவளாய் அக்னி வளர்த்து அதில் தன்னை மாய்த்துக் கொள்வ
தற்காக யத்னம் செய்தாள். அப்பொழுது ராக்ஷதனைப் பார்த்து "ஓ
அரசனே! உன்னால் தீண்டப்பட்ட நான் உயிருடனிருக்க விரும்ப
மாட்டேன். ஓ ராக்ஷதா! ஆதலால் உன்னெதிரிலேயே இதோ அக்
னியில் பிரவேசிக்கின்றேன். துஷ்டனான உன்னால் இவ்வுலகத்தில்
நான் அவமானப் படுத்தப்பட்டபடியால் உன்னுடைய நாசத்துக்
கென்றே நான் மறுபடியும் பிறக்கப் போகிறேன். பாபத்தில் எண்ண

முள்ள ஒரு மனிதனைக் கொல்லுதல் ஒரு ஸ்திரிக்கு அடுக்காது. நான் உன்னை சபிப்பேனேயானால் எனது தவம் குறைந்துவிடும். ஆனால் நான் ஏதாவது தானம் செய்திருந்தாலும், அக்னிக்கு ஆகுதி செய்திருந்தாலும், ஒரு ஸ்திரீ யோனியில் ஜனிக்காமல் தர்மிஷ்டரான ஒருவருக்கு குமாரத்தியாக பிறப்பேன்', என்றாள். இவ்வாறு சொல்லிவிட்டு, வேதவதி அக்னியில் பிரவேசித்தாள். அப்பொழுது தேவலோகத்திலிருந்து புஷ்பவருஷம் பெய்தது. அப்படியே, அவள் ஜனகருக்கு புத்திரியாக சீதை யென்ற நாமம் பெற்று, மகா விஷ்ணுவின் அவதாரமாகிய ஸ்ரீ ராமருக்கு பத்தினியாகி ராவணனால் அபகரிக்கப்பட்டாள். ஸ்ரீ ராமர் ராவணனை அவனுடைய சேனை பரிவாரங்களுடன் கொன்று ஜனகபுத்திரியாகிய சீதையை மீட்டி, அயோத்தியாபுரிக்கு வந்து, ராஜ்யபட்டாபிஷேகம் செய்து கொண்டு, சுகமாய் இருந்தார்.

---

## 50 குசர்



இவர் (1) பிரமாவினுடைய குமாரர் ; எல்லா தர்மங்களையும் அறிந்தவர் ; இவர் தமது நோன்புகளைத் தவறாது நடத்திக் கொண்டும் பெரியோர்களை உபசரித்துப் பூசித்துக் கொண்டும், வந்தார். இவரைப் பற்றிய மற்ற விருத்தாந்தங்கள் கூளி ரிஷியின் சரித்திரத்தில் வருகின்றன.

---

## 51. குளிகார்க்கர்.



ஸரஸ்வதி தீர்த்தைத அடுத்த ஒரு புண்ணிய தீர்த்தக் கரையில், மிகுந்த தபோசக்தியும் கீர்த்தியும் பெற்றவரான குளிகார்க்கர் என்ற ஒரு ரிஷி யிருந்தார். அவர்

---

(1) இராமாயணம்—பாலகாண்டம் மஹாபாரதம் சல்ய பர்வம்.

மகா உக்ரமான தவங்களைச் செய்து, தம்முடைய மனோசக்தியால் மகாரூபவதியான ஒரு குமாரத்தியை சிருஷ்டித்தார். அவளைக் கண்டு அந்த ரிஷி மிகுந்த சந்தோஷத்தை அடைந்தார். அப்பால் அவர் தன் சரீரத்தைவிட்டு வானுலகத்தை யடைந்தார். தாமரை இதழ்கள் போன்ற கண்களை உடையவளும், குற்றமற்றவளும், குணவதியுமான அந்தப் பெண் மிகவும் கடுமையான தவம் செய்தாள். அவள் உபவாசம் இருந்து தேவர்களையும் பிதுர்க்களையும் பூஜித்து வந்தாள். இம் மாதிரி தவம் செய்துகொண்டு வெகுகாலங்கள் கழித்தாள். அவள் தகப்பன் அவளை விவாகம் செய்து கொடுக்கவேண்டுமென்று உத்தேசித்தும், அவள் மணம் செய்துகொள்வதில் விருப்பமில்லாதவளாயிருந்தாள். ஏனெனில், தனக்குச் சரியான நாயகனை அடையமுடியவில்லை. அவள் உக்ரமான தவத்தால் தன் தேகத்தை மிகவும் வாட்டி, அத்தனிமையான காட்டில் பக்தியுடன் பிதுர்க்களையும் தேவர்களையும் ஆராதித்து வந்தாள். அம்மாதிரி துன்பத்தை யடைந்தும், வயதினாலும் தவத்தினாலும் தேகம் வாடி இளைத்தும், அவள் மனதானது சந்தோஷத்தை அடைந்திருந்தது. கடைசியில் பிறருடைய உதவியன்றி நகரவும்கூட முடியாத முதிர்ந்த விருத்தாப்பியதசையை யடைந்தபொழுது, அவள் மறு உலகத்துக்குப் போவதாகத் தீர்மானித்தாள். அவள் சரீரத்தைத் துறக்க எத்தனித்ததைப் பார்த்து, நாரதமஹரிஷி அங்கு வந்து, அவளை நோக்கி, "ஓ! புண்ணியவதியே! நீ கல்யாணச் சடங்கினால் உன்னைப் பரிசுத்தமாகச் செய்துகொள்ளாததினால் உனக்கு மங்களகரமான லோகங்கள் கிடைக்கமாட்டா. உத்தமமான விரதங்களை அனுஷ்டித்தவளே! இவ்வாறு சுவர்க்கத்தில் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீ அருமையான தவத்தைச் செய்திருந்தும், உனக்குப் புண்ணியலோகங்கள்கிடையா" என்றார். நாரதருடைய அவ் வசனங்களைக் கேட்டு, அந்த விருத்தாப்பியஸ்திரீ, ரிஷிகள் கூடியிருக்கும் இடத்துக்குச் சென்று, "என்னை மணந்துகொள்பவருக்கு என்னுடைய தவத்தின் பாதிப் பலனைக் கொடுக்கிறேன்" என்றாள். அப்பொழுது அங்கிருந்த காலவரிஷியின் புத்திரரான ஸ்ரீங்கவத் என்பவர் அவளுடைய வார்த்தைக்குச் சம்மதித்து, அவளை விவாகம் செய்துகொண்டார். ஆனால், அவர் ஒரு இரவுமாத்திரம் தான் அவளோடு கூடி கணவனாயிருக்க முடியுமென்று நிபந்தனை ஏற்படுத்த அவளும் அதற்கு இணங்கி, அவரைக் கணவனாகக் கொண்டாள். காலவரிஷியின் புத்திரர் சாஸ்

திர விதிப்படி அக்கினிசாக்ஷியாக அவளைப் பாணிக்கிரகணம் செய்து கொண்டார். அன்றிரவு, அவள் மஹா சௌந்தரியம் உடைய வாலிபப் பெண்ணாகமாறி, தேவ ஆடைகளை உடுத்த தேவாபரணங்களை யெல்லாம் அணிந்து, தேவலோகத்து தைலங்களையும் வாசனைகளையும் பூசிக்கொண்டு, அப்ஸரஸ்திரீயைப் போல் விளங்கினாள். அவள் மிக்க அழகோடு ஜ்வலித்திருப்பதைப் பார்த்து ஸ்ரீங்கவத் மிகுந்த சந்தோஷத்தை அடைந்து அன்றிரவை அவளுடன் கழித்தார். காலையில் அவரை நோக்கி "ஓ பிராமண உத்தமரே! நான் தங்களோடு செய்துகொண்ட ஒப்பந்தம் நிறைவேறிற்று; தங்களுக்கு மங்களம் உண்டாகுக!; நான் தங்களை விட்டுச் செல்கின்றேன்" என்று சொல்லி அப்பால் அவருடைய அனுமதியின் பேரில் பின் வருமாறு சொல்லலானாள்:—"யார் ஒருவர் பக்தி சிரத்தையுடன் இந்த தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து தேவர்களுக்கும் பிதுர்க்களுக்கும் நீர் இறைத்து ஒரு இரவுப்பொழுதை போக்குகின்றாரோ அவர் ஐம்பத்தெட்டு வருஷங்களாக பிரமச்சரிய விரதத்தை அனுஷ்டிப்பவர் அடையும் பலனை அடையக்கடவர் என்றாள். இவ் வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அப் புண்ணியவதியானவள் மோக்ஷத்தை அடைந்தாள். அவளுடைய பர்த்தாவாகிய ரிஷி அவளுடைய அழகை நினைத்து நினைத்து மிகுந்த துக்கத்தை யடைந்தார். அவளுடன் செய்துகொண்ட சங்கேதப் பிரகாரம் அவளுடைய தவத்தில் பாதியை அவர் அடைந்தார். அவரும் அவளையே நினைந்திருந்து சரீரத்தை இழந்து வானுலகில் அவளைப் பின்பற்றிச் சென்றார்.

---

## 52. கௌசிகர்

---




சிகர் ♣ என்ற பெயரையுடைய புண்ணிய சீலரான ரிஷி ஒருவரிருந்தார். அவர் தவச்செல்வம் நிறைந்தவரும் வேதபாராயணம் செய்வதிலேயே

♣ மகா பாரதம்—வனபர்வம்.

கருத்துள்ளவருமான ஒரு பிராமணோத்தமரா யிருந்தார். அவர் வேதங்களையும் வேதாங்கங்களையும் உபநிஷத்துக்களையும் நன்றாய்க் கற்றறிந்தவர். அவர் ஒருநாள் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு வேதமோதிக் கொண்டிருந்தார். அச்சமயத்தில் அம்மரத்தின் உச்சியில் ஒரு பெண்கொக்கு உட்கார்ந்திருந்தது. அக்கொக்கு அப் பிராமணர்மேல் மலவிஸர்ஜனம் செய்தது. அக்கொக்கின் மீது அவருக்குக் கோபமுண்டாகி அதை சிக்ஷிக்கவேண்டுமென்று நினைத்தார். அக்கருத்துடன் அவர் அக்கொக்கைத் தம்முடைய கோபக் கண்களால் நோக்கினபொழுது அது இறந்து பூமியில் விழுந்தது. அவ்வாறு அது இறந்ததைக் கண்டு அப் பிராமணர் இரக்கங்கொண்டார். அப்பொழுது அவர் "ஐயோ! நான் கோபத்தாலும் துவேஷித்தாலும் ஒருகெட்ட செய்கையைச் செய்து விட்டேன்" என்று சொல்லித் துக்கித்தார். இவ்வாறு அநுக்கடிசொல்லிவிட்டு, பிறகு, அவர் பிக்ஷை வாங்குவதற்கு ஒரு கிராமத்திற்குச் சென்றார். உயர்ந்த பரம்பரையுள்ள சில வீடுகளுக்குப் போய் பிக்ஷை பெற்றுக் கொண்டு, அப்பால் அவ்வகையான தமக்கு முன்னமே தெரிந்திருந்தவர்களுள்ள மற்றொரு வீட்டிற்குச் சென்றார். அவர் அவ்வீட்டையடைந்ததும் "பிக்ஷைகொடு" என்று சொன்னார். அவ்வீட்டுக்குள்ளிருந்த ஸ்திரீ" இரும்" என்று பதிலுரைத்தாள். அவ்வீட்டுக்காரி பிக்ஷை கொடுப்பதற்குரிய பாத்திரத்தை சுத்தி செய்துகொண்டிருக்கும்பொழுது அவளுடைய கணவர் மிக்க பசியுடன் வீட்டிற்குள் வந்தார். அப் பதிவிரதையானவள் தன் கணவனைக் கண்டதும் வந்த பிராமணரை மதியாமல் தன் கணவனுக்கு கால், முகம் முதலியவை சுத்திசெய்ய ஜலம் கொடுத்து ஆஸனமுமளித்தாள். அதற்குப் பிறகு கரிய கண்களையுடைய அம்மாது தன் கணவருக்கு முன் அறு சுவையுள்ள அன்னபானாதிகளைப் படைத்து அவருக்கு வேண்டியதைக் கொடுத்து உபசரித்துவிட்டு, அவர்முன் பக்திவினயத்துடன் நின்றுகொண்டிருந்தாள். அவள் ஒவ்வொருநாளும் தன் கணவன் உண்டபிறகு மிகுந்துள்ள எச்சிலைப் புஜிப்பது வழக்கம். எப்பொழுதும், தன்கணவன் விருப்பத்தின்படியே அவ்வுத்தமி நடந்துவருவாள். அவள் தன்கணவனை எப்பொழுதும் தெய்வமாய்ப் பாவித்து வந்தாள். அவள் மனத்தினாலாவது, சொல்லினாலாவது, நடத்தையினாலாவது அதற்கு விரோதமாக இருந்ததில்லை. அவளுடைய

மனது விருப்பங்கள் யாவும் அவளுடைய கணவனிடத்தே பொருந்தியிருந்தன. ஆனதுபற்றி அவள் தன் புருஷனுக்குப் பணிவிடை செய்வதிலேயே கவனமுள்ளவளாயிருந்தாள். அவள் தருமமும் சீலமுமான ஒழுக்க முடையவள்; வீட்டிற்குரிய கருமங்களைச் செய்வதில் சாமர்த்தியமுள்ளவள். தன் பந்துக்கள் யாவரிடத்திலும் பிரியமுள்ளவள். அவள் எப்பொழுதும் தன் கணவனுக்கு எது ஹிதமோ, எது நன்மையோ அதையே செய்து வந்தாள். தவிரவும் அவள் தேவாராதனையிலும், அதிதிகள், வேலைக்காரர்கள், மாமனர், மாமியார் இவர்களுடைய சௌகரியங்களைக் கவனிப்பதிலும் மிகுந்த சிரத்தையுள்ளவளாயிருந்தாள்.

அவள் இன்னமும் தன் புருஷனுக்குப் பணிவிடை செய்வதிலேயே கருத்தாயிருந்தவள், பிக்ஷைக்குவந்த பிராமணர் காத்திருந்ததைப் பார்த்தாள். தான் அவரை காத்திருக்கும்படி சொன்னதை நினைத்து, நாணமடைந்து, உடனே கீர்த்திபெற்ற அப்புண்ணியவதி பிக்ஷைகொடுக்கத் தக்க பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு பிக்ஷை கொடுக்க வெளியே வந்தாள். அவள் தன் எதிரில் வரக் கண்டதும் அந்தப் பிராமணர் அவளை நோக்கி, "ஓ உத்தமியே! ஓ புண்ணியவதியே! உன்னுடைய நடத்தை மிகவும் ஆச்சரியமாயிருக்கிறது; என்னைக் காத்திருக்கும்படி சொன்ன நீ என்னை அனுப்பாமலேயிருந்துவிட்டாய்" என்றார். தேஜஸுடன் கூடியவரும் தன்னைக் கோபிப்பவருமான அந்தப் பிராமணரைக் கண்டதும் அப்பதிவிரதையானவள் அவரை சமாதானம் செய்து பின்வருமாறு சொன்னாள்:—

'ஓ கற்றறிந்த பெரியவரே! நீர் என்னை மன்னிக்கவேண்டும்; என் கணவனே எனக்கு மேலான தெய்வம்; அவர் பசியுடனும் களைப்புடனும் வந்தபடியால் அவருக்குரிய பணிவிடைகளைச் செய்துகொண்டிருந்தேன்." இதைக் கேட்ட பிராமணர் 'உன் கருத்தில் பிராமணர்கள் மரியாதைக்குத் தகுந்தவர்களில்லையென்று நினைக்கிறாய் போலும்; அவர்களுக்கு மேலாக உன் புருஷனைச் சிலாகித்துப் பேசுகிறாய்; கிரகஸ்தாசிரமத்தில் இருந்துகொண்டு நீ எப்படி பிராமணர்களை அலக்ஷியம் செய்யலாம்? இந்திரனே பிராமணர்களை வணங்குகிறான்; அப்படியிருக்க, பூமியிலுள்ள மனிதர்களுக்குக் கேட்பானேன்; ஓ கர்வமுள்ளபெண்ணே! நீ ஏன் இதை அறியாமலிருக்கிறாய்? பிராமணர்கள் அக்னி போன்றவர்கள்! அவர்கள் இவ்

டப்பட்டால் பூமிமுழுவதையும் எரித்துவிடுவார்கள் என்று நீ கேட்டதில்லையோ?" என்று சொன்னார். அப் பிராமணருடைய வார்த்தையைக் கேட்டு, அந்த ஸ்திரீ "ஓ பிராமணரே! நான் பெண்கொக்கு அல்ல. ஓ தவச்செல்வமுடையவரே! உமக்குண்டாயிருக்கிற இந்தக் கோபத்தை அகற்றும். உமக்குக் கோபம் வந்து உம்முடைய கோபக் கண்களால் நீர் என்னை யென்ன செய்யமுடியும்? நான் பிராமணர்களை அலக்ஷியம் செய்கிறதில்லை, ஆத்மசக்தியுள்ள அவர்கள் தேவர்களுக் கொப்பானவர்கள். ஆனால், ஓ புண்ணியரே! இந்த என் குற்றத்தை கிருபைசெய்து க்ஷமிக்கவேண்டும். புத்திமான்களான பிராமணர்களுடைய சக்தியும், மகிமையும் எனக்கு நன்றாய்த் தெரியும். பிராமணர்களுடைய கோபத்தால் தான் சமுத்திர ஜலம் உப்பாயும் குடிப்பதற்கு யோக்யமில்லாமலும் போயிற்று. இந்திரியங்களின் அடக்கமும் தேஜஸினால் பிரகாசிக்கும் தவமகிமையுள்ள முனிவர்களுடைய சக்தியை நானறிவேன். தண்டகாரண்யத்தில் முனிவர்களுடைய கோபாக்னியானது இன்னமும் அணைந்ததாயில்லை. பிராமணர்களை அவமதித்தபடியால் தான், துஷ்டனான வாதாபி என்ற பெரிய அசுரன் அகஸ்தியர் முன் எதிர்ப்பட்டு அவரால் ஜீரணிக்கப்பட்டான். பிராமணர்களுடைய சக்தி பெரிதென்று நான் கேட்டுத் தெரிந்துகொண்டிருக்கிறேன். ஆனால், அம் மஹாத்மாக்களான புண்யபுருஷர்களுக்கு வரும் கோபம் எவ்வாறு பெரிதோ, அதேபிரகாரம் மிகுந்த க்ஷமையும் அவர்களிடத்திலிருக்கின்றது. ஆதலால் ஓ ஆரியரே! இந்த என் குற்றத்தை நீர் பொறுத்தருளவேண்டும். ஓ பிராமணரே! என்னுடைய புருஷனுக்குப் பணிவிடைகள் செய்துவருவதினால் உண்டாகும் பயனை அடைய என் மனம் விரும்புகிறது. ஏனெனில், என் புருஷனையே நான் எல்லாத்தெய்வங்களிலும் மேலாய் மதித்திருக்கிறேன். ஒரு ஸ்திரீ தன் புருஷனுக்குப் பணிவிடைகள் செய்வதினால் அடையும் பயனைப் பாரும். நீர் உம்முடைய கோபத்தால் ஒரு கொக்கை எரித்திருப்பதை நானறிவேன். ஆனால் ஓ உத்தமரே! ஒருவனுக்குண்டாகிற கோபமே அவனுடைய பகைவர்களுக்கெல்லாம் பொல்லாத பகைவன். கோபம் குரோதம் இவைகளை எவன் முற்றிலும் துறந்திருக்கிறானோ அவனையே தேவர்கள் பிராமணனென்று கொள்ளுகிறார்கள். இவ்வுலகத்தில் சத்தியம் பேசுகிறனும், தன் குருவுக்கு எப்பொழுதும் வழிபட்டு நடப்பவனும், தனக்கு ஒருவர்

தீங்குசெய்தாலும் அதற்குப் பிரதியாக அவருக்குத் தீங்கு செய்யாத வனும், ஆகிய இத் தன்மைகளையுடையவர்களையே பிராமணர்களென்று தேவர்கள் மதிக்கிறார்கள்; இந்திரியங்களை யடக்கி யிருப்பவனும் தர்மமும் சீலமும் பொருந்தியவனும் வேதங்களோதுவதில் சிரத்தை யுள்ளவனும், கோபம் ஆசை இவைகளை ஜயித்தவனும் ஆகிய இம் மனிதனையே தேவர்கள் பிராமணனாக எண்ணுகிறார்கள்; தர்மவிதிகளை யறிந்தவனும் மனோதிடம் பொருந்தியவனும் மதவிஷயத்தில் சமமான புத்தியையுடையவனும் யாவரையும் தன்னைப்போல் பாவிக்கிறவனும் ஆகிய அவனையே தேவர்கள் பிராமணனென்று அறிகிறார்கள்; தானும் கற்று பிறருக்கு உபதேசிக்கிறவனும் தானும் யாகங்கள் செய்து பிறர்செய்யும் யாகங்களுக்கு தான் புரோகிதனாயிருந்து நடத்துகிறவனும் தன் சக்திக்கு இயன்றமட்டும் தானம் செய்பவனும் எவனோ அவனை பிராமணனாக தேவர்கள் அறிகிறார்கள், விசாலமான மனதையுடையவன், பிரமசரிய விரதத்தை அனுஷ்டிப்பவன், வேதங்களை பக்தியாய் ஓதிவருபவன், ஆகிய இத்தன்மைகளையுடையவனையும் தேவர்கள் பிராமணனாக அறிகிறார்கள். அவர்களுடைய மனங்கள் எப்பொழுதும் சத்தியத்திலே மகிழ்ச்சியுடையவர்களாய் அசத்தியத்தினிடத்தில் சந்தோஷப் படுகிறதில்லை, ஓ பிராமண உத்தமரே! வேதமோதுதல், ஆத்மசாந்தி, கபடமில்லாத ஒழுக்கம், இந்திரியங்களை யடக்குதல், ஆகிய இவைகள் பிராமணனுடைய நிலையான தர்மங்கள், என்று சொல்லப்படுகின்றன தர்மங்களை அறிந்தவர்கள் சத்தியம் பேசுதல் சத்திய ஒழுக்கம் ஆகிய இவைகள் உயர்ந்த தர்மங்களென்று சொல்லியிருக்கிறார்கள். சாசுவதமான தர்மத்தை இலகுவாய் அறிவது கடினம். ஆகிலும், அதற்கு சத்தியமே ஆதாரம், தர்மம் இன்னது என்பதற்கு சுருதியே ஆதாரவு என்று முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள். ஆனால் சுருதியில் விவரிக்கப்பட்டிருக்கிற தர்மமானது பலவிதங்களாகத் தோற்றுகிறது, ஆதலால் அது சரியாய் அறிய முடியாத நுட்பமுள்ளதா யிருக்கிறது, நீரோ தர்மத்தை யறிந்தவர், பரிசுத்தர், நன்றாய் வேதமோதினவர்; ஆனால் உண்மையில் நீர் தர்மம் இன்னதென்று அறியவில்லையென்று நினைக்கிறேன், நீர் உயர்ந்த தர்மம் இன்னதென்று தெரிந்து கொள்ள பிரியப்படும் பக்ஷத்தில் மிதிலாநகரம் போய் அங்கே யிருக்கும் தர்மாத்மவாகிய வேடனைக் கேட்டுத் தெரிந்துகொள்ளும், அவன் சத்தியமுஞ

ளவன், பெற்றோர்களுக்கு பக்தியாய்ப் பணிவிடைகள் செய்கிறவன், இந்திரியங்களை நன்றாய் ஜயித்தவன், அவன் தர்மவிஷயத்தைப் பற்றி உமக்கு உபதேசிப்பான். உமக்கு மங்களம் உண்டாகுக! உமக்குப் பிரியமிருந்தால் அங்கே போகலாம்; நான் சொன்னது உமக்கு இனிமையாக இராதபட்சத்தில் என்னைப் பொருத்தருளல் வேண்டும்; ஏனென்றால், தர்மத்தை யறிய விரும்புகிறவர்கள் ஒரு ஸ்திரீக்கு எவ்வித கெடுதியும் செய்யார்கள்". இவ்வாறு அந்தப் பதிவிரதை சொன்னவார்த்தைகளைக் கேட்டு, பிராமணர் "உன்னிடத்து மிகவும் சந்தோஷமாகினேன்; உனக்கு மங்களம் உண்டாகுக, என் கோபம் அடங்கிவிட்டது, நீ என்னைக் கண்டித்துச் சொன்ன வார்த்தைகளெனக்கு க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடியவைகள். ஆதலால் நான் போய் என்னுடைய நன்மைக்குக் காரணமான அந்தக் காரியத்தைச்செய்கிறேன்" என்றுமறுமொழி சொன்னார். பிறகு, கௌசிகர் அவ்விடத்தைவிட்டுதன்னைத்தானே நிந்தித்துக் கொண்டு, வீட்டுக்குத் திரும்பி வந்தார். அந்தஸ்திரீயினுடைய அற்புதமான உபதேசத்தை அடிக்கடி தியானித்து, கௌசிகர் தன்பேரில் குற்றமென்பதை யறிந்து, குற்றம் செய்தவன் போல் தோன்றினார். தர்மத்தினுடைய சூக்ஷமங்களைப் பற்றி ஆலோசித்து, அவர் தமக்குள்ளே பின்வருமாறு சொல்லிக் கொண்டார்:—"அந்த அம்மணி எனக்குச் சொன்னதை நான் மரியாதையுடன் ஏற்றுக்கொள்வதே சரி. ஆதலால், நான் மிதிலைக்குப் போகவேண்டும், நான் இன்றே தவச்செல்வம் பொருந்திய அவ்வேடனிடத்து தர்மத்தை விசாரித்து தெரிந்துகொள்ளும்பொருட்டு, போவேன்." தான் கொக்கைக் கொன்ற சங்கதியை அவள் அறிந்திருந்ததையும், அவள் சன்மார்க்கத்தைப் பற்றி செய்த ஆழ்ந்த உபதேசத்தையும் பற்றியோஜித்து, அவள் சொன்னவார்த்தை உண்மையென்று நம்பி அவர் மிதிலநகரத்துக்குச் சென்றார். அவர் அநேக நகரங்கள், வனாந்திரங்கள், கிராமங்கள் இவைகளையெல்லாம் கடந்து, கடைசியில் ஜனகராஜனால் ஆளப்பட்டுவந்த மிதிலாபுரி நகரத்தைப் போய் அடைந்தார். அந்நகரமானது யாகங்கள் முதலிய பலவித மஹோற்சவங்களால் ஆரவாரத்துடன் விளங்குவதை அவர் கண்டார். அது விசாலமும் விசித்திரமுமான மாடமாளிகைகளால் சிறப்புற்று விளங்கிக்கொண்டிருந்தது. அந்நகரம் அநேகமாயிரம் ரதங்கள், யானைகள், குதிரைகள், போர்வீரர்கள் ஆகிய இவைகளால் நிறைந்து விளங்

கிற்று, அந்நகரம் அழகாய் அமைக்கப்பட்ட அநேக வீதிகளாலும் ஆங்காங்கேயுள்ள கடைகளாலும் நிறைந்திருந்தது. அந்நகரவாசி களெல்லாம் தேகசௌக்யத்தையும் ஆனந்தத்தையும் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். எப்பொழுதும் திருவிழாக் கோலமாகவே யிருந்தார்கள். அந்தப் பிராமணர் அந்நகரத்துக்குள் பிரவேசித்து இன்னும் அநேக விநோதங்களைப் பார்த்தார். அங்கே தர்மவானென அந்தவேடனைப் பற்றி சில பிராமணர்களை விசாரித்தார். அவர்கள் மூலமாய் அவனிருக்குமிடத்தை யறிந்துகொண்டு அங்கேபோய் அவன் ஒரு இறைச்சிக் கடையில் உட்கார்ந்திருப்பதைக் கண்டார். அப்பொழுது வேடன் மான், எருமை இவைகளின் இறைச்சிகளை விற்றுக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றிலும் நின்று வியாபாரம் செய்து கொண்டிருந்தவர்கள் பெரிய கூட்டமா யிருந்தபடியால், அந்தப் பிராமணர் சற்று தூரத்தில் நின்றார். ஆனால் அவ் வேடன் பிராமணர் தன்னிடத்து வந்திருப்பதை யறிந்து, திடீரென்று எழுந் திருந்து, பிராமணர் தனித்து நின்ற இடத்தை நோக்கிச் சென்றான். அங்கேபோய் வேடன் அவரை நோக்கி, "ஓ புண்ணிய புருஷரே! நான் உம்மை நமஸ்கரிக்கிறேன். உம்முடைய வரவைப் பற்றி மிக்க சந்தோஷம், நானே அந்த பதிவிரதா சிரோமணியால் சொல்லப்பட்ட வேடன், நான் உமக்கு செய்யத் தக்கதுயாது? அதைக் கட்டளை யிடும், மிதிலைக்கு போ என்று அவ்வம்மணி சொன்ன வார்த்தைகளை நான் அறிவேன், நீர் எதற்காக என்னிடத்து வந்திருக்கிறீரென்பதும் எனக்குத் தெரியும்" என்றான். வேடனுடைய இந்தவார்த்தைகளைக் கேட்ட பிராமணர் வியப்புற்றார். அவர் "இது நான் பார்க்கும் இரண் டாவது விந்தை" என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டார். அப்பொழுது வேடன் பிராமணரைப் பார்த்து "நீர் இப்பொழுது நிற்குமிடம் உமக்குத் தக்கதன்று, ஆகலால் ஓ புண்ணியரே! உமக் கிஷ்டமானால் என்னுடைய வீட்டுக்குப் போவோம்" என்றான். அத ற்குப் பிராமணர் சம்மதித்தார். அதன்பேரில் அந்தப் பிராமணரை முன்னிட்டுக் கொண்டு வேடன் வீட்டுக்குச் சென்றான். பார்ப்பத ற்கு இனிமையான தன் வீட்டை யடைந்ததும் வேடன் அப்பிராம ணருக்கு ஆசனமளித்தான். அவருடைய கால்கள் முகம் கழுவ ஜல மும் கொடுத்தான். இவ்வுபசாரங்களைப் பெற்றுக் கொண்டு அப் பிராமணர் சுகமாய் உட்கார்ந்தார். அவர் வேடனை நோக்கி, "இந்தத் தொழில் உனக்கு யோக்கியமன்று, இக்கொடுமையான தொழிலை நீ

அநுசரிப்பதைப் பற்றி எனக்கு மிகவும் விசனமாயிருக்கிறது" என்றார். அதற்கு வேடன் பின்வருமாறு பதிலுரைத்தான். இந்தத் தொழில் வம்சபரம்பரையாய் எங்களுக்கு ஏற்பட்டது, அந்தக் கிரமப்படி என் தகப்பனிடமிருந்து நான் அதை அடைந்திருக்கிறேன். பிறப்பினால் எனக்கு ஏற்பட்டிருக்கும் தொழிலைப் பற்றி நீர் துக்கிக்க வேண்டாம், பகவானால் முன்னமேயே எனக்கு விதிக்கப்பட்டிருக்கிற ஜாதிதர்மங்களை செய்துகொண்டு, நான் என்னுடைய மேலோர்க்கும் விருத்தர்களுக்கும் பணிவிடைகள் செய்துவருகிறேன். நான் எப்பொழுதும் உண்மையே பேசுகிறேன், பிறரைக் கண்டு பொறாமைப் படுகிறதில்லை, என்னால் கூடியமட்டும்பிறருக்கு தானம்செய்கிறேன். தேவதைகள், அதிதிகள் என்னைச் சார்ந்திருப்பவர்கள் இவர்களுக்குக் கொடுத்து மிகுந்ததை நான் உண்ணுகிறேன். சிறிதாயினும் பெரிதாயினும் நான் ஒன்றையும் பற்றி தூஷிக்கிறதில்லை, ஒருவன் பூர்வத்தில் செய்த கர்மங்கள் அவனை எப்பொழுதும் பின்பற்றுகின்றன. இவ்வுலகத்தில் மூன்று முக்கியமான தொழில்களுண்டு:— அதாவது பயிரிடுதல், ஆடுமாடுகளை ரக்ஷித்தல், வியாபாரம். பரலோகசாதனத்துக்கு மூன்று வேதங்கள், ஞானம், தர்மசாஸ்திரம் ஆகிய இவைகள் முக்கியமானவைகள். மற்ற மூன்று வருணத்தார்களுக்கும் பணிவிடை செய்வதே சூத்திரனுக் கேற்பட்ட தர்மமாயிருக்கிறது. பயிரிடுதல் வைசியர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. சண்டைபோடுதல் க்ஷத்திரியர்களுடைய தர்மம். பிரமசரிய விருதத்தை அநுசரித்தல், தவம் செய்தல், மந்திரங்களை உச்சரித்தல், சத்தியம் இவைகள் பிராமணர்களுக்கு விதிக்கப்பட்ட தர்மங்கள் அவரவர்களுடைய ஜாதிகர்மங்களைச் செய்யும் குடிகள் விஷயத்தில் அரசன் தர்மமாய் ராஜ்யபரிபாலனம் செய்யவேண்டும். வருணாசிரமதர்மத்தினின்றும் தவறுகின்றவர்களை அவரவர்களுக்கு ஏற்பட்ட தர்மங்களைச் செய்துவரும்படி கண்டிப்புச் செய்யவேண்டும். அரசனே குடிகளுக்கு நாதன், ஆதலால் அவர்கள் அவனுக்கு ஆளாகி, நடக்கவேண்டும். அம்புகளால் மான்களின் வேகங்களை எவ்வாறு தடுக்கின்றார்களோ, அதுபோல் அவரவர்களின் ஜாதித்தொழில்களினின்றும் வழுவுகின்ற குடிகளை அவ்வாறு செய்யாமல் தடுத்தல் வேண்டும். அவனவன் பிறப்புக்கேற்ற ஜாதித்தொழில்களைச் செய்யாதிருக்கின்ற மனிதன்ஜனகருடைய ராஜ்யத்தில்கிடையாது. இவ்வூரில் உள்ள நான்கு வருணத்தார்கள் எல்லோரும் அவரவர்களுடைய வரு

ணதனுக்குரிய தொழில்களைச் செய்துவருகிறார்கள். ஜனகராஜர் தன் மகனாயிருப்பினும் துஷ்டனாயிருப்பவனைத் தண்டிக்கிறார். ஆனால் தர்மவழியில் நடப்பவர்களை அவர் தண்டிக்கிறதில்லை, பன்றி, எருமை இவைகளின் மாம்சங்களை நான் எப்பொழுதும் விற்கிறேன். நான் அந்த மிருகங்களை ஒருபொழுதும் கொல்லுகிறதில்லை. பிறரால் கொல்லப்பட்ட மிருகங்களின் இறைச்சிகளைத்தான் நான் விற்கிறது. நான் மாம்ஸம் உண்ணுகிறதில்லை, மாதவிடாயிலிருந்து ஸ்நானம் செய்த காலம் தவிர மற்ற காலங்களில் நான் என் மனைவியுடன், கூடுகிறதில்லை. நான் எப்பொழுதும் பகலில் உபவாஸமிருந்து இரவில் போஜனம் செய்கிறேன். ஒருவன் ஜாதிக்கு ஏற்பட்ட தொழில் கெட்டதாயிருந்தாலும் அந்த ஜாதியில் பிறந்த மனிதன் நல்லொழுக்கமுள்ளவனாயிருக்கலாம், ஆதலால் மிருகங்களைக் கொல்லுதலே ஒருவனுடைய ஜாதித்தொழிலாயிருந்தபோதிலும் அவன் யோக்கியனாக ஆகலாம்.'' இவ்விதமாக அந்த வேடன் தர்மங்கள், அவைகளை அனுஷ்டிக்கும் விதங்கள், பஞ்சபூதங்கள், ஆத்மஞானம் ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் மோட்சத்தை அடைவதற்குரிய ரகஸ்யங்கள் ஆகிய இந்த விஷயங்களைப் பற்றி பிராமணருக்கு விவரமாய் எடுத்துரைத்தான். இவைகளையெல்லாம் பிராமணர் கேட்டு மிகுந்த ஆனந்தத்தை யடைந்தார். அவர் அவ்வேடனை நோக்கி, ''நீர் சொல்வதெல்லாம் யுக்திக்கு ஒத்திருக்கின்றன. ஆத்மஞான வித்தையில் உமக்குத் தெரியாதது ஒன்றுமில்லை, யென்று நினைக்கிறேன்'' என்றார். அதற்கு வேடன் ''ஓ சாதுவான பிராமணோத்தமரே! நான் பாராட்டுகிறதும் என்னை இந்த நிலைமைக்கு உயர்த்தியிருக்கிறதுமான தர்மம் முழுவதையும் நான் உமக்குக்காண்பிக்கிறேன் நீரே நேரில் பாரும். தயவுசெய்து எழுந்திரும், உள்ளறைக்குச் செல்வோம், நீர் என்னுடைய பெற்றோர்களைப் பார்க்கவேண்டுவது க்ரமம்'' என்று சொன்னான். அப்படியே பிராமணரும் வேடனுடன் உள்ளே சென்று, ஒரு அழகிய மாளிகையைக் கண்டார். அது நான்கு பெரிய அறைகளாகப் பிரிக்கப்பட்ட கம்பீரமான கட்டடம். தேவர்களே கண்டு ஆச்சரியப்படத் தக்க சொர்க்லோகத்து அரண்மனைகளில் ஒன்றுபோல் தோன்றிற்று. அங்கே சிறந்த பீடங்களும் படுக்கைகளும் நிறைந்திருந்தன. இன்பமாக வாசனைகள் வீசிக்கொண்டிருந்தன, வேடனுடைய வயது முதிர்ந்த

பற்றோர்கள் வெண்மையான வஸ்திரங்களையுடுத்து, போஜனமருந்திய பிறகு, சுகமாக உட்கார்ந்திருந்தார்கள். அவர்களைக் கண்டதும் அவன் அவர்களுடைய பாதங்களில் தன் தலைபடும்படி சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்தான். அவனுடைய பெற்றோர்கள் அவனை நோக்கி "ஓ பக்தியில் சிறந்தவனே! எழுந்திரு, தர்மம் உன்னை ரட்சிக் கட்டும், உன்னுடைய பக்தி விசுவாசத்திற்காக நாங்கள் உன்னிடத்து மகிழ்ச்சி யுடைய வர்களாய் இருக்கிறோம். நீ தீர்க்காயுள், ஞானம், புத்திதீக்ஷண்யம், உன் மனோபீஷ்டங்கள் நிறைவேறுதல் ஆகிய பாக்கியங்களை யடைந்து வாழக்கடவாய். நீ சத் புத்திரன்! ஏனென்றால், இடைவிடாமல் சரியான காலங்களில் எங்களைப் பற்றிக் கவனித்து எங்களுக்குப் பணிவிடைகள் செய்துவருகிறாய். தேவர்களிலும் சிறந்த தெய்வமாக எங்களையே நீ கொண்டாடிவருகிறாய்; நீ ஓயாமல் அனுசரித்து வருகிற இந்திரிய அடக்கத்தினால் பிராமணர்களுக்குரிய இந்திரிய நிக்கிரஹசக்தியை, யடைந்திருக்கிறாய். அந்த விசேஷத்தன்மைக்காகவும் எங்களிடத்து உனக்குள்ள பக்திவிசுவாஸத்துக்காகவும், உன்னுடைய பாட்டன்மார்களும் முன்னோர்களும் உன்பேரில் எப்பொழுதும்சந்தோஷமுள்ளவர்களாகவே யிருக்கிறார்கள். நீ உன்னுடைய எண்ணம், வார்த்தை செய்கை இவைகளால் எங்கள் விஷயத்தில் உள்ள கவனத்தில் குறைவுபடாமலே யிருக்கிறாய். ஜமதக்னிரிஷியினுடைய புத்ரர் ராமர் எவ்வாறு தம்முடைய பெற்றோர்களைச் சந்தோஷிப்பிக்க முயற்சித்து வந்தாரோ, அதற்கு மேலாகவே நீ எங்களை சந்தோஷிப்பிக்க பிரயத்னப்பட்டுக் கொண்டே வந்திருக்கிறாய்!" என்றார்கள். பிறகு, வேடன் பிராமணரைப் பற்றித் தன் பெற்றோர்களுக்கு அறிவித்தான். அவர்கள் பிராமணரை வரவேண்டுமென்று சொல்லி வணங்கினார்கள். பிராமணர் அவர்களுடைய உபசாரத்தை ஏற்றுக்கொண்டு அவர்களும் அவர்கள் வீட்டிலுள்ள மற்றவர்களும் க்ஷேமமாயிருக்கிறார்களா வென்று வினவினார். அதற்கு அந்த வயது முதிர்ந்த தம்பதிகள் "வீட்டிலுள்ள நாங்களெல்லோரும் சுகமாயிருக்கிறோம்" என்று பதிலுரைத்து "ஓ ஆர்யரே! நீர் இவ்விடத்துக்கு சௌகரியமாய் வந்து சேர்ந்தீரா?" என்று கேட்டார்கள். அதற்குப் பிராமணர் "ஆம்" என்று விடையளித்தார். பிறகு வேடன் "ஓ பூஜ்யரே! இந்த என்னுடைய பெற்றோர்களே நான் ஆராதிக்கும் விக்ரகங்கள். தேவதைகளுக்குரிய பூஜைகளையும் நான் குறைவரச்

செய்து வருகிறேன். உலகத்தில் மனுஷ்யர்கள் இந்திரன் முதலாகிய முப்பத்துமுக்கோடி தேவர்களையும் எப்படி ஆராதித்து வழிபடுகிறார்களோ, அப்படியே நான் என் பெற்றோர்களைப் பூஜிக்கிறேன். பிராமணர்கள் தேவர்களுக்கு அவிர்ப்பாகங்கள் கொடுப்பதற்காக எவ்வாறு முயற்சிக்கிறார்களோ, அவ்வாறே இந்த என்னுடைய இரண்டு விக்கிரகங்கள் விஷயமாயும் நான் பக்தியாய் நடந்துவருகிறேன். என் பெற்றோர்களே எனக்கு மேலான தெய்வங்கள். நான் இவர்களைப் புஷ்பங்கள், பழங்கள், ரத்னங்கள் இவைகளால் திருப்தி செய்துவருகிறேன். பெரியோர்களால் சொல்லப்பட்ட மூன்று அக்னியும் எனக்கு இவர்களே. நான்கு வேதங்களும், யாகங்களும் எனக்கு இவர்களே. என்னுடைய ஐந்துபிராணவாயுக்களும், என்னுடைய பத்னி, குழந்தைகள், என்னுடைய சிநேகிதர்கள் இவர்களெல்லாம் அவர்களுடைய பிரயோசனத்துக் கென்றே இருந்து வருகிறார்கள். நான் என் பெண்சாதி குழந்தைகளுடன் அவர்களுக்குப் பணிவிடைகள் செய்து வருகிறேன். நான் என்னுடைய கைகளாலேயே அவர்களுக்கு ஸ்நானம் செய்விக்கிறேன்; அவர்களுடைய பாதங்களைக் கழுவுகிறேன். அவர்களுக்கு அன்னம் உண்பிக்கிறேன்; அவர்களுக்கு இன்பமானதையே நான் சொல்லுகிறேன். அவர்களுக்குப் பிரியமில்லாததை நான் பேசுகிறதில்லை. கண்டிப்பாய்ப் பார்க்குமிடத்து ஞாயவிரோதமா யிருப்பினும், அவர்களுக்கு எது இன்பமானதோ, அதைச் செய்வதையே நான் என்னுடைய உயர்ந்த கடமையாகக் கொண்டிருக்கிறேன். நான் எப்பொழுதும் ஜாக்கிரதையாய் அவர்களுக்குத் தொண்டு செய்துவருகிறேன். க்ஷேமத்தை விரும்புகிறவன் தன்னுடைய் இருபெற்றோர்கள், ஹோமாக்னி, ஆத்மா, குரு ஆகிய இவ் வைவர்களிடத்தும் பயபக்தி விசுவாஸத்துடன் நடக்க வேண்டும். இவர்கள் விஷயத்தில் கிரமமாய் நடந்து வருவதால் ஒருவன், நிலையாய் அக்னியை வளர்த்தி வருவதினால் உண்டாகும் பலனை அடைகிறான். இல்லற தர்மத்திலிருப்பவர்க ளெல்லோருக்கும் இது ஏற்பட்ட ஸ்திரமான கடமையாக இருக்கிறது. ஓ! பிராம்ணரே! நான் அநுஷ்டித்து வரும் தர்மத்தின் காரணமாக என்னுடைய ஞானதிருஷ்டியானது விசாலித்திருக்கின்றது. இதை யுத்தேசித்தே அநேக, சத்தியவதியும், பதிவிரதையுமான பிராமணி உம்மை மிதிலைக்குப் போமென்றும், தர்மரகசியங்களை உமக்கு விவரித்து

உரைக்கக் கூடிய வேடன் இருக்கிறான் என்றும் சொன்னாள்." பிறகு பிராமணர் வேடனை நோக்கி, "தர்மக்கட்டன்களைத் திடமாக நிறைவேற் றிவரும் பக்தியுடன் கூடியவனே! புருஷனிடத்து உண்மையும் நற் குணமும் நிறைந்த அந்த அம்மணி என்னிடத்துச் சொன்னதை நான் நினைத்தால் நீ மிகவும் சிறந்த குணங்களுடையவ னென்று என் மனதுக்கு நிச்சயமாய்ப் புலப்படுகிறது" என்றார். அதற்கு வேடன், "அப்பதிவிரதை என்னைப் பற்றி உம்மிடத்தில் சங்கதிகளை நன்றாயறிந்தே சொல்லியிருக்கிறாள் என்பதற்குச் சந்தேகமில்லை. உம்மிடத்துள்ள அன்பால் நான் இதையெல்லாம் உமக்கு விவரித்துச் சொன்னேன். உமக்கெது நன்மையோ அதை விவரித்துச் சொல் லுகிறேன்; கேளும். ஓ! குற்றமற்றகுணமுடைய பிராமணோத்தமரே! நீர் உம்முடைய பெற்றோர்களுக்கு அபராதம் செய்திருக்கிறீர். எப் படியென்றால், வேதத்தை அறியும் பொருட்டு, அவர்களுடைய அனு மதியன்னியில் நீர் வீட்டை விட்டுப் புறப்பட்டிருக்கிறீர். இந்த விஷ யத்தில் நீர் செய்தது சரியன்று. ஏனென்றால் தவமகிமையுடையவர் களும் விருத்தர்களுமான உம்முடைய பெற்றோர்கள் உம்முடைய பிரிவினால் உண்டான துக்கத்தால் முற்றிலும் குருடர்களாய் விட் டார்கள். இந்த தர்மத்தை நீர் எப்பொழுதும் கைவிடக்கூடாது. நீர் வீட்டுக்குப் போய் அவர்கள் மனதைச் சமாதானப் படுத்தும். நீர் கருணையான மனதையுடையவர். தவசக்தி யுடையவர். உமக்கு விதித்திருக்கும் தர்மத்தில் பற்று உள்ளவர். ஆயினும், அவைக ளெல்லாம் உமக்கு இப்பொழுது வீணாயின. நான் சொன்ன வார்த் தையை அலட்சியம் செய்யக்கூடாது. ஓ! பிராமணரிஷியே! உம க்கு எது ஹிதமோ அதையே நான் சொல்லுகிறேன். இன்றயத்தின மே வீட்டுக்குப் புறப்படும்" என்றான். பிராமணர், "நீ சொல்லு வது உண்மை. உனக்கு க்ஷேமம் உண்டாகுக. உன்னிடத்து நான் மிகவும் சந்தோஷத்தை யடைகிறேன்" என்றார். அதற்கு வே டன், "ஓ! பிராமணோத்தமரே! சுத்தமான மனதையுடையவர்களாலும் கூட அடைவதற்கு அரிதான புராதனமும் தெய்வீகமும் சாசு வதமுமான தர்மங்களை நீர் ஜாக்கிரதையாய் அனுசரித்து வருவ தால் நீர் ஒரு தெய்வம்போல் விளங்குகிறீர். உம்முடைய பெற் றோர்களின் பக்கத்தைச் சீக்கிரத்தில் அடையும். விரைவாய்ச் செ ன்று அவர்களைக் களிப்படுத்தும். ஏனென்றால் இதை விட மேலான தர்ம மிருக்கிறதாக எனக்குத் தோற்றவில்லை" என்றான். பிராமணர்

வேடனைப் பார்த்து, "ஏதோ என்னுடைய நல்ல அதிர்ஷ்டத்தால் நான் இங்கு வந்தேன். உன்னுடைய சிநேகிதம் கிடைத்ததும் என்னுடைய நல்ல அதிர்ஷ்டந்தான். தர்ம ரகஸ்யங்களை இவ்வளவு நன்றாய் எடுத்துரைக்கும் மனிதனை நாம் இவ்வுலகில் காண்பதரிது. தர்ம சாஸ்திரத்தில் தெளிவான ஞானமுடையவன் ஆயிரத்தில் ஒருவன் கூட இருப்பது அரிது. ஓ! உத்தமனே! உன்னுடைய சிநேகிதம் கிடைத்ததற்காக நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். நீ க்ஷேமமாயிருப்பாயாக!. நான் நரகில் விழுந்திருவாயில் நீ என்னை விடுவித்தாய். நீ என் வழிவந்து கை கொடுத்தது தர்ம விசேஷந்தான். ஓ! புருஷசிரேஷ்டனே! யயாதிராஜனை தர்மாத்மாக்களான அவருடைய பேரன்மார்கள் எவ்வாறு ரட்சித்தார்களோ, அதுபோல் நீ என்னைக் காப்பாற்றினாய். நீ சொன்ன புத்திமதிப் பிரகாரம் என் பெற்றோர்களை நான் கனப்படுத்துகிறேன். அசுத்தமான மனதையுடையவன் தர்மம், பாபம் இவைகளின் அந்தரங்கங்களை எடுத்துப்பேசத் தக்கவனல்லன். சூத்திர ஜாதியில் பிறந்தவன் சாசுவதமான தர்மத்தின் உண்மைகளை அறிவது சாத்தியமில்லையாதலால், நீ சூத்திரனென்று நான் மதிக்கவில்லை. உனக்கு இந்தப் பிறப்பு நேர்ந்த விஷயமாய் ஏதோ ரகஸ்யமிருக்கிறது. நீ செய்த பூர்வஜென்ம கர்மத்தால் உனக்கு இந்த சூத்திரஜென்மம் நேர்ந்திருக்கிறது. இதன் உண்மையை நான் தெரியவிரும்புகிறேன்; உனக்கு இஷ்டமிருந்தால் உன்னிடமிருந்து கேட்க விரும்புகிறேன்" என்றார். வேடன் பதில் சொன்னதாவது:— "பிராமணர்கள் என்றால் எவ்விதத்திலும் பூஜிக்கத்தக்கவர்கள். என்னுடைய பூர்வஜென்ம விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேளும். நான் பூர்வஜென்மத்தில் பிராமணன். வேதங்களையும் சாஸ்திரங்களையும் நன்றாய்க்கற்றறிந்தவன். என்னுடைய குற்றத்தினால் இந்தத் தாழ்ந்த நிலைமையையடைந்திருக்கிறேன். தனுர்வேதத்தில் நிபுணனான ஒரு அரசன் எனக்குச் சிநேகிதனாக இருந்தான். சகவாஸ தோஷத்தினால் நானும் வில்வித்தையில் வல்லவனானேன். ஒரு நாள் அரசன் தன் மந்திரிமார்களுடன் தன்னுடைய சிறந்த யுத்தவீரர்கள் பின்தொடர, வேட்டையாடப் புறப்பட்டான். அவன் ஒரு ஆச்ரமத்தின் அருகே அநேக மான்களைக் கொன்றான். நானும் ஒரு கொடிய அம்பு எய்தேன். அது ஒரு ரிஷியைப் போய்க் காயப்படுத்திற்று. அவர் பூமியில் விழுந்து உரத்தசப்தத்துடன், 'நான் ஒருவருக்கும் தீங்

உரைக்கக் கூடிய வேடன் இருக்கிறான் என்றும் சொன்னாள்.'' பிறகு பிராமணர் வேடனை நோக்கி, "தர்மக்கட்டன்களைத் திடமாக நிறைவேற்றிவரும் பக்தியுடன் கூடியவனே! புருஷனிடத்து உண்மையும் நற்குணமும் நிறைந்த அந்த அம்மணி என்னிடத்துச் சொன்னதை நான் நினைத்தால் நீ மிகவும் சிறந்த குணங்களுடையவனென்று என் மனதுக்கு நிச்சயமாய்ப் புலப்படுகிறது" என்றார். அதற்கு வேடன், "அப்பதிவிரதை என்னைப் பற்றி உம்மிடத்தில் சங்கதிகளை நன்றாயறிந்தே சொல்லியிருக்கிறாள் என்பதற்குச் சந்தேகமில்லை. உம்மிடத்துள்ள அன்பால் நான் இதையெல்லாம் உமக்கு விவரித்துச் சொன்னேன். உமக்கெது நன்மையோ அதை விவரித்துச் சொல்லுகிறேன்; கேளும். ஓ! குற்றமற்ற குணமுடைய பிராமணோத்தமரே! நீர் உம்முடைய பெற்றோர்களுக்கு அபராதம் செய்திருக்கிறீர். எப்படியென்றால், வேதத்தை அறியும் பொருட்டு, அவர்களுடைய அனுமதியன்னியில் நீர் வீட்டை விட்டுப் புறப்பட்டிருக்கிறீர். இந்த விஷயத்தில் நீர் செய்தது சரியன்று. ஏனென்றால் தவமகிமையுடையவர்களும் விருத்தர்களுமான உம்முடைய பெற்றோர்கள் உம்முடைய பிரிவினால் உண்டான துக்கத்தால் முற்றிலும் குருடர்களாய் விட்டார்கள். இந்த தர்மத்தை நீர் எப்பொழுதும் கைவிடக்கூடாது. நீர் வீட்டுக்குப் போய் அவர்கள் மனதைச் சமாதானப் படுத்தும். நீர் கருணையான மனதையுடையவர். தவசக்தி யுடையவர். உமக்கு விதித்திருக்கும் தர்மத்தில் பற்று உள்ளவர். ஆயினும், அவைகளெல்லாம் உமக்கு இப்பொழுது வீணாயின. நான் சொன்ன வார்த்தையை அலட்சியம் செய்யக்கூடாது. ஓ! பிராமணரிஷியே! உமக்கு எது ஹிதமோ அதையே நான் சொல்லுகிறேன். இன்றயத்தினமே வீட்டுக்குப் புறப்படும்'' என்றான். பிராமணர், "நீ சொல்லுவது உண்மை. உனக்கு க்ஷேமம் உண்டாகுக. உன்னிடத்து நான் மிகவும் சந்தோஷத்தை யடைகிறேன்'' என்றார். அதற்கு வேடன், "ஓ! பிராமணோத்தமரே! சுத்தமான மனதையுடையவர்களாலும் கூட அடைவதற்கு அரிதான புராதனமும் தெய்வீகமும் சாசுவதமுமான தர்மங்களை நீர் ஜாக்கிரதையாய் அனுசரித்து வருவதால் நீர் ஒரு தெய்வம்போல் விளங்குகிறீர். உம்முடைய பெற்றோர்களின் பக்கத்தைச் சீக்கிரத்தில் அடையும். விரைவாய்ச் சென்று அவர்களைக் கனப்படுத்தும். ஏனென்றால் இதை விட மேலான தர்மமிருக்கிறதாக எனக்குத் தோற்றவில்லை'' என்றான். பிராமணர்

வேடனைப் பார்த்து, "ஏதோ என்னுடைய நல்ல அதிர்ஷ்டத்தால் நான் இங்கு வந்தேன். உன்னுடைய சிநேகிதம் கிடைத்ததும் என்னுடைய நல்ல அதிர்ஷ்டந்தான். தர்ம ரகஸ்யங்களை இவ்வளவு நன்றாய் எடுத்துரைக்கும் மனிதனை நாம் இவ்வுலகில் காண்ப தரிது. தர்ம சாஸ்திரத்தில் தெளிவான ஞானமுடையவன் ஆயிரத்தில் ஒருவன் கூட இருப்பது அரிது. ஓ! உத்தமனே! உன்னுடைய சிநேகிதம் கிடைத்ததற்காக நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். நீ க்ஷேமமாயிருப்பாயாக!. நான் நரகில் விழுந்தருவாயில் நீ என்னை விடுவித்தாய். நீ என் வழிவந்து கை கொடுத்தது தர்ம விசேஷந்தான். ஓ! புருஷசிரேஷ்டனே! யயாதிராஜனை தர்மாத்மாக்களான அவருடைய பேரன்மார்கள் எவ்வாறு ரட்சித்தார்களோ, அதுபோல் நீ என்னைக் காப்பாற்றினாய். நீ சொன்ன புத்திமதிப் பிரகாரம் என் பெற்றோர்களை நான் சந்தோஷப்படுத்துகிறேன். அசுத்தமான மனதையுடையவன் தர்மம், பாபம் இவைகளின் அந்தரங்கங்களை எடுத்துப்பேசத் தக்கவனல்லன். சூத்திர ஜாதியில் பிறந்தவன் சாசுவதமான தர்மத்தின் உண்மைகளை அறிவது சாத்தியமில்லையாதலால், நீ சூத்திரனென்று நான் மதிக்கவில்லை. உனக்கு இந்தப் பிறப்பு நேர்ந்த விஷயமாய் ஏதோ ரகஸ்யமிருக்கிறது. நீ செய்த பூர்வஜென்ம கர்மத்தால் உனக்கு இந்த சூத்திரஜென்மம் நேர்ந்திருக்கிறது. இதன் உண்மையை நான் தெரியவிரும்புகிறேன்; உனக்கு இஷ்டமிருந்தால் உன்னிடமிருந்து கேட்க விரும்புகிறேன்" என்றார். வேடன் பதில் சொன்னதாவது:— "பிராமணர்கள் என்றால் எவ்விதத்திலும் பூஜிக்கத்தக்கவர்கள். என்னுடைய பூர்வஜென்ம விருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன் கேளும். நான் பூர்வஜென்மத்தில் பிராமணன். வேதங்களையும் சாஸ்திரங்களையும் நன்றாய்க்கற்றறிந்தவன். என்னுடைய குற்றத்தினால் இந்தத் தாழ்ந்த நிலைமையையடைந்திருக்கிறேன். தனுர்வேதத்தில் நிபுணனான ஒரு அரசன் எனக்குச் சிநேகிதனாக இருந்தான். சகவாஸ தோஷத்தினால் நானும் வில்வித்தையில் வல்லவனானேன். ஒரு நாள் அரசன் தன் மந்திரிமார்களுடன் தன்னுடைய சிறந்த யுத்தவீரர்கள் பின்தொடர, வேட்டையாடப் புறப்பட்டான். அவன் ஒரு ஆச்ரமத்தின் அருகே அநேக மான்களைக் கொன்றான். நானும் ஒரு கொடிய அம்பு எய்தேன். அது ஒரு ரிஷியைப் போய்க் காயப்படுத்திற்று. அவர் பூமியில் விழுந்து உரத்தசப்தத்துடன், 'நான் ஒருவருக்கும் தீங்

கிழைத்ததில்லையே. எந்தப் பாபி இக்காரியத்தைச் செய்திருக்கிறான்' என்றார். நான் கத்துகிறது மான் என்று நினைத்து, அவரை யணுகிப் போய்ப் பார்த்ததில், என்னுடைய அம்பு அவரைத் துளைத்ததென்று தெரியவந்தது. என்னுடைய துஷ்டச் செய்கையால் என் மனது மிகுந்த துன்பத்தையடைந்தது. பூமியில் விழுந்தழுதுகொண்டிருந்த தவமகிமையுடைய அந்த ரிஷியை நோக்கி, 'ஓ! ரிஷியே! அறியாத் தன்மையால் இக் காரியம் செய்துவிட்டேன். என்னுடைய குற்றத்தைப் பொருத்தருளவேண்டும்' என்று வேண்டினேன். அவர் என் மீது கோபாக்னியால் பொங்கி, 'நீ சூத்திரஜாதியில் துஷ்டவேடனாய்ப் பிறக்கக்கடவாய்' என்று சபித்தார். இவ்வாறு அவரால் சபிக்கப்பட்ட நான் அவருக்குப் பின்வருமாறு சமாதானம் செய்தேன்:— 'ஓ! முனிவரே! என் குற்றத்தைப் பொறுத்தருளவேண்டும். நான் தெரியாமல் செய்துவிட்டேன். ஓ! பூஜ்யரே! கோபத்தைப் பாராட்டக் கூடாது' என்றேன். அதற்கு ரிஷி, 'என்னுடைய சாபம் பொய்யாகாது. அது நடந்தே தீரும். ஆனால் எனக்கு உன்பேரில் ஏற்பட்ட தயவினால் ஒரு அனுகூலம் செய்கிறேன். நீ சூத்திரஜாதியில் பிறந்தாலும் தர்மவானாயிருப்பாய். உன்னுடைய பெற்றோர்களை மரியாதையுடன் நடத்துவாய். இவ்வாறு செய்வது மூலமாய் உனக்குச் சிறந்த ஆத்மஞானம் உண்டாகும். உனக்கு முந்தினஜென்ம சங்கதிகளும் ஞாபகத்துக்கு வரும். மோக்ஷத்தை யடைவாய். இந்த சாபம் தீர்ந்தவுடன் நீ மறுபடியும் பிராமணனாகப் பிறப்பாய்' என்றார். எனக்கு நேரிட்ட சாபத்தின் விருத்தாந்தத்தைச் சொன்னேன். நான் பிறகு அவருடைய தேகத்தில் தைத்திருந்த அம்புகளை யெடுத்து ஆச்ரமத்திற்கு அவரைக் கொண்டு போனேன். அவர் உயிரிழக்கவில்லை. முன்போல் சௌக்கிய மடைந்தார். ஓ! பிராமணசீலரே! ஆதியில் எனக்குச் சம்பவித்ததையும், இனிமேல் நான் எவ்வாறு மோட்சமடையக்கூடு மென்பதையும் நான் உமக்குத் தெரிவித்து விட்டேன்" என்றான்.

பிராமணர் சொன்னதாவது:— "ஓ! மிக்க அறிவுடையவனே! எல்லாமனிதர்களுக்கும் சுகமுமுண்டு, துக்கமுமுண்டு. நீ அதைப் பற்றி வருத்தப்படலாகாது. உன்னுடைய ஜாதி பரம்பரை வழக்கத்தை அனுசரித்து நீ இந்தத் தீய ஒழுக்கங்களை அனுஷ்டிக்கும்படி நேர்ந்தது. ஆனால் நீ எப்பொழுதும் தர்மத்தினிடத்தே பதிந்த

மனதை யுடையவனு யிருக்கிருய். உலகத்தின் அனுபவங்களையும் ரகசியங்களையும் அறிந்திருக்கிருய். இது ஜாதிக் கேற்பட்ட தொழிலா யிருத்தலால் தீய கர்மமென்ற பாவம் உன்னைச் சேராது. கொஞ்சகாலம் நீ இங்கே வசித்து, பிறகு பிராமணனுய்ப் பிறப்பாய். இப்பொழுதும் கூட நான் உன்னைப் பிராமணனுகவே எண்ணுகிறேன். ஏனென்றல், வீண்பெருமை, கர்வம், கெட்ட செய்கைகளையே செய்தல், தீயதும் தாழ்ந்ததுமான கர்மங்களை அப்பியசித்தல் ஆகிய இத்தன்மைகளை யுடைய பிராமணன் உண்மையில்சூத்திரனே. ஆனுல் தர்மம், அடக்கம், சத்தியம் ஆகிய இக் குணங்களோடு கூடியவன் சூத்திரனுயிருப்பினும் அவனைப் பிராமணனுகவே நான் எண்ணுகிறேன். ஒருவன் தன் குணத்தாலேயே பிராமணனுகின்றன். ஒருவன் அவனுடைய தீய கருமத்தால் பயங்கரமான கதியை அடைகிருன். உன்னுடைய பாபம் விலகி விட்டது என்று நான் நம்புகிறேன். நீ இதற்காகத் துக்கிக்கக் கூடாது. உன்னைப் போல் உலகத்தின் தத்துவங்களை அறிந்த ஞானிக்குத் துக்கப்பட ஒரு காரணமும் கிடையாது''.

வேடன்: "தேகவியாதியை மருந்தால் சொஸ்தஞ் செய்யவேண்டும். மனோவியாதியை ஆத்மஞானத்தால் போக்கவேண்டும். இதுவே ஞானத்தின் சக்தி. இதையறிந்த ஞானிகள் சிறுவர்களைப் போல் நடந்து கொள்ளக்கூடாது. மந்த புத்தியுள்ளவர்கள் அவர்களுக்குத் துன்பமான விஷயம் ஒன்று நேர்ந்தாலும், நல்லதாயும் அல்லது அவர்கள் ஆசைப்படுகிறதாயும் இருக்கிற ஒரு விஷயம் நேராவிட்டாலும், துக்கத்தில் ஆழ்கின்றர்கள். உண்மையில் எல்லா ஜீவர்களும் சுகம் துக்கம் என்ற தன்மைக்கு வசப்பட்டிருக்கிருர்கள். துக்கமென்பது ஒருவனையே அல்லது ஒரு ஜாதியையே பிடிக்கத் தக்கதல்ல. இந்த உண்மையை அறிந்த ஜனங்கள் தங்கள் நடத்தைகளைச் சீர்படுத்திக் கொள்கிருர்கள். இந்த ரகசியத்தை முன்னமேயே அவர்கள் தெரிந்துகொள்வார்களானுல் துக்கத்தின்கொடுமையினின்று முற்றிலும் விடுபடுகிருர்கள். எவனொருவன் கஷ்டத்தை நினைத்துத் துக்கிக்கிருனே, அவன் துக்கமுள்ளவனுகவே யிருக்கிருன். தங்களுடைய ஞானத்தால் மனதிருப்தியையும் சந்தோஷத்தையும் பெற்றிருப்பவர்களும் சுகதுக்கங்களை ஒன்ருய்ப் பாவிப்பவர்களுமாகிய ஞானிகள் உண்மையில் சந்தோஷமாகவே இருக்கிருர்கள். அறிவுள்ளவன் திருப்தியுடனிருக்கிருன். மூடன் எப்பொழுதும் அதிருப்

தியாயிருக்கிறான். அதிருப்திக்கு அளவில்லை. மனத்திருப்தியே யாவற்றிலும் சிறந்த ஆனந்தம். சுத்த நெறியை யடைந்தவர்கள் ஒன்றுக்கும் துக்கிக்கிறதில்லை. எல்லா ஜீவர்களுடைய கடைசி முடிவைப் பற்றி அவர்களுக்கு எப்பொழுதும் ஞாபகமுண்டு. அதிருப்தியே ஒருவனுக்குக் கொடுமையான விஷம். அதற்கு அவன் இடம் கொடுக்கக் கூடாது. ஒரு குழந்தையை கோபிக்கின்ற பாம்பு எவ்வாறு கொல்லுகிறதோ, அது போல் அதிருப்தியானது பக்குவமில்லாத மூடனைக் கொல்லுகின்றது. பலமாய் முயற்சிக்க வேண்டிய காலம் சம்பவிக்கும்பொழுது, முயற்சியைக் கைவிட்டு, தைரியமிழந்து, மனச்சஞ்சலத்தை யடைகிறவன் ஒரு பேடி. நாம் செய்யும் கருமங்களை அவைகளின் பலன்கள் கட்டாயம் பின்பற்றுகின்றன. ஒருவன் உலகவிஷயங்களில் அலக்ஷியமாயிருந்து காலம் கழிப்பதனால் மட்டும் ஒரு நல்ல காரியத்தையும் சாதிக்கமாட்டான். ஒருவன் தனக்கு நேர்ந்த துன்பத்தைப் பற்றி முணுமுணுத்து நொந்து கொள்ளாமல், அத்துன்பத்தினின்றும் விலகுவதற்குரிய எத்தனம் செய்யவேண்டும். தான் நல்ல கதியை அடைய வழி தெரிந்த பிறகு, இந்திரிய சுகமாகிய பந்தத்தினின்றும் அவன் தன்னை விடுவித்துக் கொள்ளவேண்டும். உயர்ந்த ஞானத்தை யடைந்தவன் இவ்வுலகத்திலுள்ள வஸ்துக்கள் யாவும் அநித்திய மென்பதைத் தான் எப்பொழுதும் உணர்ந்த வண்ணமாயிருப்பான். அவன் எல்லோரும் அடையக் கூடிய கடைசி கதியைத் தான் எப்பொழுதும் மனதில் சிந்தித்துக் கொண்டு, ஒரு பொழுதும் துக்கப்படுகிறதில்லை. நானும் கூட துக்கிக்கிறதில்லை. என் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டு, நான் இந்த வாழ்நாளைக் கழிக்கிறேன். ஆதலால், சந்தேகங்களால் நான் மனக்கலக்கம் அடைகிறதில்லை'' என்றனன்.

பிராமணர் வேடனுக்கு மங்கள ஆசிகள் கூறி, அவனைச் சுற்றி வந்து, செலவு பெற்றுக்கொண்டு புறப்பட்டார். பிராமணர் தன் வீட்டுக்கு வந்து, தன் பெற்றோர்களுக்குப் பக்தியாய்ப் பணிவிடைகள் செய்து வந்தனர். இச் சரித்திரத்தினால் கௌசிகருடைய தவப்பயன், பதிவிரதாதர்மம், பெற்றோர்களிடத்து விசுவாசம் ஆகிய இவைகள் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன.



# 53. கௌதமர்





அங்கிரஸ் (1) வம்சத்திலுதித்த கௌதமர் பாரிபாத் பர்வதத்தில் ஒரு விசாலமான ஆச்ரமம் கட்டிக்கொண்டு, அங்கே அறுபதினாயிரம் வருஷம் கடுமையான தவஞ் செய்தார். அஷ்டதிக்குப்பாலர்களில் ஒருவராகிய எமதர்மராஜர், அப் புண்ணியசீலரான ரிஷி தவஞ்செய்துகொண்டிருக்கும்பொழுது, அம் முனிவரிடத்துச் சென்றார். எமதர்மராஜர் கௌதமரை அங்கே கண்டார். அந்த முனிவர், தம்மிடம் வந்திருப்பது எமதர்மராஜரென்று அறிந்துகொண்டு, துரிதமாய் அவரை வணங்கி, அவருடைய ஆக்ஞையை எதிர்பார்த்துக்கொண்டு, கைகூப்பி உட்கார்ந்திருந்தார். அப்பொழுது எமதர்மராஜர் ரிஷியை நோக்கி, "ஓ! முனிவரே! உமக்கு நான் செய்யவேண்டுவது யாது?" என்று கேட்டார். அதற்குக் கௌதமர் தர்மராஜரை நோக்கி, 'ஒருவன் தன்னுடைய தாய்க்கும் தகப்பனுக்கும் செலுத்தவேண்டிய கடன்களிலிருந்து எவ்விதமான செய்கைகளால் தன்னை நிவர்த்தித்துக் கொள்ளவேண்டியது? அன்றியும், கிடைப்பதற்கரிதான உத்தமமான புண்ணியலோகங்களை எவ்வாறு ஒருவனடைகிறான்?" என்று கேட்டார். அதற்கு எமன், "ஒருவன் சத்தியத்தையே விரதமாகப் பூண்டு, திரிகரண சுத்தியையும், தவ விரதத்தையும் அனுஷ்டித்துக்கொண்டு வருபவனாய், தன் தாயையும் தகப்பனையும் இடைவிடாது ஆராதிக்கவேண்டும். ஒருவன் பிராமணர்களுக்கு ஏராளமான தக்ஷிணைகள் சகிதம் அசுவமேதயாகங்கள் செய்ய வேண்டும். அவ்விதமான செய்கைகளால் அவன் ஆச்சரியகரமான தோற்றங்களுள்ள சிறந்த அநேக புண்யலோகங்களை அடைகிறான்" என்று கூறித் தம்மிருப்பிடம் சென்றார்.

வ்ருஷதர்ப்ப ☘ அரசனால் கௌதமர் முதலிய ரிஷிகளைக் கொல்லும்படி ஏவப்பட்ட யாதுதானி கொல்லப்பட்ட விவரம் பரத்வாஜமகரிஷியின் சரித்திரத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருப்பதைக் காணலாம்.

---

(1) மகாபாரதம்—சாந்திபர்வம். ☘ மஹாபாரதம்—அனுசாஸனபர்வம்.

உலகசிருஷ்டிகளிலுள்ள X அவயவங்களின் அழகைச் சேர்த்து பிரமதேவர் அகல்யை என்னும் பேருடைய ஒரு மாதைச் சிருஷ்டித்தார். 'ஹல்' என்ற வடமொழிப் பதத்திற்கு அவலக்ஷணம் என்று பொருள். யாதொரு அவலக்ஷணமுமில்லாமல் ஜெனித்தபடியால் இவளுக்கு அகல்யை என்ற பெயர் உண்டாயிற்று. அப்பெயர் பிரமதேவரால் அவளுக்குக் கொடுக்கப்பட்டது. அந்த ஸ்திரீயை சிருஷ்டித்து பிரமா அவளை யாருக்குக் கொடுக்கலாம் என்று ஆலோசித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது இந்திரன் தன்னுடைய உயர்ந்த அந்தஸ்தை நினைத்துக் கர்வம் கொண்டவனாய், அவளை ஏற்கனவே தன் மனைவியைப் போல் மதித்தான். பிரம்மதேவர் அவளைக் கௌதம ரிஷியினிடம் ஒப்புவித்தார். அநேக வருஷங்களுக்குப் பிறகு அவளை யாதொரு குறைவுமில்லாமல் பிரமாவிடத்தில் திரும்பக் கொடுத்தார். அதன் பேரில் கௌதமருடைய பொறுமையையும் வைராக்கியமான அடக்கத்தையும் கண்டு வியந்து, பிரமதேவர் அவளை அவருக்கு விவாகம் செய்து கொடுத்தார். தர்மாத்மாவான அம்முனிவர் அவளுடன் சுகமாய்க் கூடி வாழ்ந்துவந்தார். இவ்வாறு கௌதமருக்கு அகல்யையைக் கொடுத்த விஷயமாய்த் தேவர்களெல்லாம் ஏமாறுதலானார்கள். தேவேந்திரனும் அதைப் பற்றிக் கோபங்கொண்டு காமத்துக்கு வசப்பட்டவனாய், இதனடியில் கண்டபிரகாரம் அவளைக் கற்பழித்தான்:—

ஆதிகாலத்தில் ♣ மிதிலா நகரத்தைச் சேர்ந்த ஒரு தோப்பில் தேவர்களாலும் மரியாதையாகக் கொண்டாடப்பட்ட உத்தமமான ஆச்ரமத்தில் மகாத்மாவாகிய கௌதமமுனிவர் தன்பாரியையான அகல்யையுடன் கூட இருந்து, அநேக வருஷங்களாக அரிய தவஞ்செய்து வந்தார். அகல்யையினுடைய விசேஷமான சௌந்தரியத்தினால் அவளிடத்துக் காதல் கொண்டிருந்த இந்திரன் அவளை யணையச் சமயம் பார்த்துக்கொண்டிருந்தான். ஒருகாலத்தில் கௌதமரில்லாத தருணம் பார்த்து, இந்திரன் அவரைப்போல் வேஷம் பூண்டு, அகல்யையை நோக்கி, "ஓ! மிக்க அழகுடையவளே! காமவிளையாட்டில் இச்சை உடையவர்கள் ஸ்திரீயினுடைய ரஜஸ்வலை காலத்தை உத்தேசித்துக் காத்திரார்கள். ஆதலால், இச்சமயமே உன்னைக் கூடவேண்டு

X இராமாயணம்—உத்தரகாண்டம். ♣ இராமாயணம்—பாலகாண்டம்.

மென்று நான் விரும்புகிறேன்'' என்றான். அதன்பேரில் தவறும்
சஞ்சலமுமான புத்தியையுடைய அகல்யை தேவராஜனுடைய அபிப்
பிராயத்துக்கு இணங்கினாள். அவள், எண்ணம் நிறைவேறியவுடன்,
தேவர்கோனாகிய இந்திரனைப் பார்த்து, "ஓ! அமரர்களுக்கு அதிபதி
யே! உம்முடைய எண்ணம் நிறைவேறிற்று; நீர் இவ்விடத்தை
விட்டுச் சீக்கிரம் போகவேண்டும்; அவமானம் நேரிடாமல் என்னை
யும் உம்மையும் காப்பாற்றிக் கொள்ளும்'' என்றாள். இந்திரன் புன்
சிரிப்புடன் அகல்யையை நோக்கி, "ஓ! அழகிய இடையையுடைய
வளே! நான் திருப்தியடைந்தேன்; என்னுடைய இருப்பிடத்துக்கு
இப்பொழுது போகிறேன்'' என்றான். இவ்வாறு அகல்யையுடன்
கூடின பிறகு, கௌதமருக்காக மிகவும் பயந்து, துரிதமாய் அக்
கூரைக்குடிசையை விட்டு வெளியே புறப்பட்டான். அத்தருணத்
தில் முனிவர்களுக்குள் முதன்மையானவரும், தேவர்களாலும் அசு
ரர்களாலும் தடுக்க முடியாதவரும், தபோசக்தி நிறைந்தவருமாகிய
கௌதமர் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து, அக்னி
போன்ற தேஜஸையுடையவராய், சமித்து தர்ப்பைகள்சகிதம் வருவதை
இந்திரன் கண்டான். அவரைக் காணவும், தேவராஜன் முகம்
வெளுத்தான். முனியைப்போல் வேஷம்பூண்டு தம்முன் தோன்றிய
இந்திரனை அம்முனிவர் பார்த்துக் கோபாவேசத்துடன், "ஓ! துஷ்ட
புத்தியை உடையவனே! நீ என்னுடைய வேஷம் பூண்டு இந்த
ஹீனமான தொழிலைச் செய்திருக்கிறபடியால், நீ உன்னுடைய அண்
டத்தை யிழக்கக் கடவாய்'' என்று சபித்தார். மகாத்மாவான கௌ
தமர் சினத்தோடு இவ் வார்த்தையைச் சொன்னவுடன், இந்திரனு
டைய அண்டமானது கீழே பூமியில் விழுந்தது. இந்திரனுடைய
இந்நிலைமையைப் பார்த்து, தம்முடைய பத்நினியையும் பின்வரு
மாறு சபித்தார்:—"நீ ஒரு ஆயிரம் வருஷகாலம் ஆகாரமில்லாமல்
காற்றைமட்டும் புசித்துக்கொண்டு பச்சாத்தாபத்தினால் இம்ஸிக்கப்
பட்டவளாய் ஒருவர் கண்ணுக்கும் தென்படாமல் இந்த ஆச்ரமத்தி
லிருக்கக் கடவாய். தசரத மன்னனுடைய அடங்கா வலிமையுள்ள
புத்திரனை ஸ்ரீராமன் இந்த ஆச்ரமத்துக்கு வரும்பொழுது நீ இந்த
சாபத்தினின்றும் விடுபடுவாய். ஓ! துஷ்டையே! அவருக்கு அதிதி
க்குச் செய்யவேண்டிய உபசாரங்களைச் செய்து, அஞ்ஞானமும் துரா
சையும் நீங்கின மனத்தினளாய் நீ உன்னுடைய சுயரூபத்தோடு என்
பக்கத்தைச் சந்தோஷமாயடைவாய்'' என்றார். இவ்வாறு அவளைச்

சபித்துவிட்டு, தவசிரேஷ்டரான கௌதமர் அவ்வாச்ரமத்தைத் துறந்து, சித்தர்களாலும் சாரணர்களாலும் வாசம் செய்யப்பட்ட ரமணீயமான ஹிமயமலைச் சிகரத்தில் தவம்புரியச் சென்றார்.

இந்திரனும் தன்னுடைய அண்டத்தை யிழந்து, பயத்தால் நடுங்கிய மனதுடன், அக்கினிபகவான் முதலாகிய தேவர்கள், சித்தர்கள், சாரணர்கள் ஆகிய இவர்களை நோக்கி, "நான் இம் முனிவருக்குக் கோபம் உண்டாகும்படி செய்து, அவருடைய தவத்தை அழித்ததனால் தேவர்களுடைய காரியத்தை நிறைவேற்றி விட்டேன். அவ்வாறு செய்ததால் என்னுடைய அண்டத்தை யிழந்துவிட்டேன். அகல்யையும் அவள் நிலைமை தவறும்படி செய்து விட்டேன். ஒரு பெரும் சாபத்தை இடும்படி செய்ததால் என்னால் அவருடைய தவ சக்தி குறைக்கப்பட்டது. ஆதலால், ஓ! தேவர்களே!, ஓ! சித்தர்களே! ஓ! சாரணர்களே! தேவர்களுக்கு உதவி செய்ததால் அண்டமிழந்த எனக்கு, அது மறுபடியும் கிடைக்கும்படி செய்ய வேண்டும்" என்றான். இந்திரனுடைய இவ் வார்த்தைகளைக் கேட்டு, அக்கினி முதலாகிய தேவர்களும், மருத்துக்களும் பிதுர் தேவதைகள் முன்பு சென்றார்கள். அவர்களை நோக்கி, அக்னிபகவான் பின் வருமாறு சொல்லலானார்:-"இவ்வாட்டுக்கிடாவுக்கு அண்டமிருக்கிறது. ஆனால் இந்திரனோ தன் அண்டத்தை யிழந்திருக்கின்றான். ஆதலால் நீங்கள் ஆட்டினண்டத்தை யெடுத்து அதை இந்திரனுக்குக் கொடுப்பீர்களாக. இவ்வாட்டுக்கிடா, தன் அண்டத்தை யிழந்தபோதிலும், உங்களுக்கு மிகுந்த திருப்தியை கொடுக்க வல்லதாயிருக்கும். இம் மாதிரி ஆட்டை உங்களுக்கு விருந்தாக அளிப்பவர்களுக்கு நித்யமான விசேஷ பலனை கொடுப்பீர்களாக". அக்கினிபகவானுடைய வார்த்தையைக் கேட்டு, பிதுர்க்கள் ஆட்டினண்டத்தை யெடுத்து இந்திரனுடைய தேகத்துடன் சேர்த்தார்கள். அந்தக் காரணத்தினால் அக்காலமுதல் பிதுர் தேவதைகள் எல்லோரும் அண்டமில்லாத ஆடுகளையே புசித்து வருகிறார்கள். ஏனென்றால், அவைகளுடைய அண்டம் இந்திரனைச் சேர்ந்துவிட்டது.

கௌதமருடைய (1) சாபத்தின்படியே தசரத புத்திரனாகிய ஸ்ரீராமனை விச்வாமித்ரர் தன்னுடைய யாகத்துக் குதவி புரிய

(1) இராமாயணம்—பாலகாண்டம்.

வேண்டுமென்று கூட்டிக் கொண்டு போனார். அப்பால் யாகம் நிறைவேறி, விச்வாமித்திரர் இராம லெட்சுமணர்களுடன் மிதிலைக்குப் போகும்பொழுது கௌதமரிஷியின் ஆச்ரமத்தின் வழியாகச் சென்றார்கள். மனிதசஞ்சாரமில்லாமல் பாழடைந்திருந்த அவ் வாச்ரமத்தைக் கண்டு, இதன் விருத்தாந்தம் என்னவென்று ஸ்ரீராமர் கேட்க, விசுவாமித்ரர் ஸ்ரீராமருக்கு அது கௌதமருடைய ஆச்ரமமென்றும், மேற்சொன்னபடி நிகழ்ந்த சங்கதிகளால் அவ்வாறிருக்கிறதென்றும் சொன்னதுமல்லாமல், அவர் ஸ்ரீராமனை நோக்கி, "ஓ! பலம் பொருந்தியவனே! நீ இந்த ஆச்ரமத்துக்குள் சென்று அழகிய தேவஸ்திரீயைப் போல் விளங்கும் அகல்யையை அவளுடைய சுயரூபத்தையடையும்படி செய்வாய்" என்றார். அப்படியே ராமர், லக்ஷ்மணருடன் அம் முனிவரை முன்னிட்டுக்கொண்டு, அவ் வாச்ரமத்துக்குள் சென்றார். அங்கே தனது தவத்தின் பலத்தால் பிரகாசித்து விளங்கும் அப் பெண்மணியைக் கண்டார். தேவர்களாலும் அசுரர்களாலும் கண்ணெடுத்துப் பார்க்க முடியாத காந்தியை யுடையவளாய் அவள் மேனியானது பிரகாசித்தது; தேவர்களும் கண்டு மோகிக்கும்படியான அழகுடையவளாய், பிரமதேவனுடைய மனத்தாலேயே சிருஷ்டிக்கப் பட்டாள் என்று சொல்லும்படி அப் பெண்மணி விளங்கினாள். புகையால் மறைக்கப்பட்டிருந்து, அப்பால் புகை நீங்கிப் பிரகாசிக்கும் அக்னி ஜுவாலையைப் போலவும், பனி மேகங்களால் மறைபட்டிருந்து, அவைகள் நீங்கினவுடன் பிரகாசிக்கும் பூர்ண சந்திரனைப் போலவும், மேகங்களால் மறைக்கப்பட்டிருந்த பகற்கால சூரியன், அம் மறைவினின்றும் நீங்கி, பார்க்கமுடியாத காந்தியுடன் பிரகாசிப்பது போலவும் அகல்யையானவள் கௌதமருடைய சாபத்தினின்றும் விலகி, ராமதரிசனத்தினால் அதிகக் காந்தியுடன் பிரகாசித்தாள். அப்பொழுது ராமலக்ஷ்மணர்கள் அவளுக்கு நமஸ்காரம் செய்தார்கள். ஆனால் அவளும், கௌதமர் தனக்கு முன் சொன்ன வார்த்தைகளை ஞாபகப்படுத்திக்கொண்டு, அவர்கள் இன்னாரென்பதைத் தெரிந்து, அவர்களை நமஸ்கரித்தாள். அப்பால் அவர்களை அர்க்யபாத்யாதிகளால் உபசரித்தாள். அவர்களும் தங்களுக்குக் கிரமப்படி செய்யப்பட்ட மரியாதைகளை ஏற்றுக்கொண்டார்கள். ஆகாசத்திலிருந்து புஷ்பமாரி பெய்தது. தேவவாத்தியங்கள் முழங்கி, கந்தர்வர்களும், அப்சரஸ்களும் மிகுந்த ஆனந்தமடைந்தார்கள். தேவர்கள் 'நன்று, நன்று' என்று உரத்துக் கூறி, தவத்தினால் பரிசுத்தை

யானவளாக அவளை மதித்து மரியாதை செய்தார்கள். அவள் மறுபடி யும் கௌதமரிஷியினுடைய ஆதீனத்தை யடைந்தாள். மிகுந்த தவ சக்தியை யுடைய கௌதமரும் அகலிகையுடன் தான் சேர்ந்த விஷ யத்தைப்பற்றிச் சந்தோஷப்பட்டு, ராமனை மிகவும் பூஜித்தார். அப் பால் அந்த ஆச்ரமத்திலேயே தவம் புரியலானார். கௌதமரிட மிருந்து விசேஷ மரியாதை பெற்றுக்கொண்டு ராமர் மிதிலைக்குப்புறப்பட்டார்.

ஒருசாலத்தில் (1) இந்திரன் விருத்ராஸுரனைக் கொன்றதனால் பிரம்மஹத்தி தோஷத்தை யடைந்து, அவன் எந்தவிடம் சென்ற லும் அதுவும் அவனைப் பின்றொடர்ந்தே வந்து கொண்டிருந்தது. அதை அவன் சகிக்கமுடியாதவனாய் ஒரு பெரிய தடாகத்தை யடை ந்து, அவ்விடத்திலுள்ள தாமரைத் தண்டில் ஒரு பெரிய நூலுடன் சேர்ந்து, தேவவருஷங்களில் ஆயிர வருஷகால மிருந்தான். பிரம ஹத்தி மட்டும் அக் காலமெல்லாம் குளக்கரையிலேயே யிருந்தது. அப்பால் தேவலோகத்திலுள்ள எல்லா தேவர்களும், "நாம் அரச னில்லாதவர்களாயிருந்து வருகிறோம். நாம் எவ்வாறு இந்திரனை அடைவது" என்று ஐக்கமாய் யோசனை செய்தார்கள். அச் சமயத் தில் பிரமதேவர் தேவர்களைப் பார்த்து, "ஓ! தேவர்களே! இந்திரனைக் கௌதமீதீரத்தில் ஸ்நானம் செய்வித்தால், அவன், ஹத்தி தோஷம் நீங்கி, சுத்தனாகி, தேவலோகத்தை முன் போல் அரசனாவான்" என்றார். அவ்வாறே எல்லாதேவர்களும் இந்திரனை அழைத்துக் கொண்டு, கௌதமி நதியை யடைந்தார்கள். தேவர்கள், ரிஷிகள் முத லிய எல்லோரும் இந்திரனுக்கு அபிஷேகம் செய்ய அங்கு வந்தார் கள். அதைப் பார்த்த கௌதமர் மிகுந்த கோபம் கொண்டு, "குருதாரத்தைப் புணர்ந்த மகா பாபியான இவனுக்கு அபிஷேகம் செய்யும் உங்களெல்லோரையும் சாம்பலாக்கி விடுவேன். ஆகை யால் நீங்கள் ஓடிப் போய்விடுங்கள்" என்றார். அந்த வார்த்தை யைக் கேட்டதும், தேவர்கள் எல்லோரும் இந்திரனை அழைத்துக் கொண்டு, நருமதாநதியின் வடக்குக் கரையை அடைந்தார்கள். அங் கேயும் அவ்வாறே அபிஷேகம் செய்ய ஆரம்பிக்க, அதைக் கண்ட பகவானாகிய மாண்டவியர் "இந்திரனை இவ்விடத்தில் அபிஷேகம் செய்வீர்களானால் உங்களைப் பொசுக்கிவிடுவேன்" என்றதும், தேவர்கள் மாண்டவியரைப் பலவிதங்களால் தோத்திரம் செய்து

(1) பிரம்மபுராணம்.

கொண்டாடினார்கள்:— "ஏ! ரிஷிசிரேஷ்டரே! தேவர்களுக்கெல்லாம் அதிபனான இந்திரன் இதோ யிருக்கின்றான். இவனை அபிஷேகம் செய்ய எத்தனிக்கு மிடங்களிலெல்லாம் கடுமையான இடையூறுகள் நேர்ந்து வருகின்றன. அதற்குப் பரிகாரத்தைச் செய்து அருள்புரியவேண்டும். மேலும், இவனுடைய பாபரூபமாகிய மலத்தை எங்கு போக்குகிறோமோ, அந்த இடமானது எல்லோருடைய மனோபீஷ்டங்களை நிறைவேற்றுவதாயும், தான்யங்கள், மரங்கள், பழங்கள் இவைகளின் அபிவிருத்தியை யுடையதாயும் இருக்கும்படி அருள்புரியவேண்டும். அவ்விடத்தில் மழையின்மையும், பஞ்சமும் எக்கலமு முண்டாகக் கூடாது" என்று வேண்டிக் கொண்டார்கள். உடனே லோகபூஜ்யரான மாண்டவியர், "அவ்வாறே ஆகக்கடவது" என்று அநுக்கிரகிக்க, இந்திரனுக்குத் தேவர்கள் அபிஷேகம் செய்தார்கள். அச் சமயத்தில் தேவர்களும், ரிஷிகளும் அந்த யிடத்திற்கு மாளவம் என்று பெயரிட்டார்கள். அதுதான் அன்று முதல் மாளவதேசம்.

பரமசிவன் (1) கங்காதேவியைத் தமது ஜடையில்தாங்கினதைப் பார்வதிதேவி சகியாதவளாய், 'அவளை விட்டுவிடும்' என்று பல தடவை சொல்லியும், அவர் கேட்கவில்லை. பிறகு அவள் பரமசிவனால் தான் அனாதரவு செய்யப்பட்டதாய் நினைத்து விநாயகர், சுப்பிரமணியர், ஜயை இவர்கள் மூவரிடத்திலும் இதைப்பற்றி முறையிட்டாள். அவர்கள், 'பரமசிவன் தலையிலிருந்து கங்கையை நாங்கள் நீங்கும்படி செய்கிறோம்' என்று சொல்லிவிட்டு, கௌதமரிஷியின் அழகான ஆச்ரமத்துக்குச் சென்றார்கள். அங்கே ஜயை என்பவள் ஒரு பசு ரூபமெடுத்துக்கொண்டு கௌதமரிஷியின் வயலில் மேய்ந்து கொண்டிருந்தாள். அதைக் கௌதமர் தடுத்து அடித்தார். அப்பால் அது கீழேவிழுந்து இறந்ததுபோல் கிடந்தது. உடனே அம் மகரிஷி பாபநிவர்த்திக்காக விக்னேசுவரரைப் பிரார்த்திக்குங் காலத்தில், அவர், "ஈசுவரனுடைய தலையிலிருந்து கங்கையைக் கொண்டுவந்து அதில் ஸ்நானம் செய்தால் பாபம் நிவர்த்தியாகும்" என்றுசொல்ல, அவர் அப்படியே கயிலாயத்திற்குச் சென்று, பரமசிவனை வெகுவாய்த் துதித்துக் கங்கையைக் கொண்டுவந்ததில், அது பதினைந்து பிரிவுகளாகப் பிரிந்து, மூன்று லோகங்களிலும் பாய்ந்தது. கௌதமர் அதன் மூலமாய்ப் பாபத்தினின்றும் நீங்கி, பரிசுத்தரானார். பார்

(1) பிரம்மபுராணம்.

வதி தேவியும் தன் பர்த்தாவின் தலையிலிருந்து கங்காதேவி நீங்கின தைப் பற்றி மிகுந்த சந்தோஷத்தை யடைந்தாள்.

கௌதமர், அகல்யை, இந்திரன் இவர்கள் விஷயமாய் மேலே சொல்லப்பட்ட இராமாயண விருத்தாந்தத்துக்கும் பிரம்மபுராணத்திலுள்ள சங்கதிகளுக்கும், கௌதமர் அகல்யையடைந்தது, அவளை இந்திரன் கற்பழித்தது, கௌதமரால் இந்திரன் அகல்யை இவர்களுக்குச் சாபம் நேர்ந்தது ஆகிய இந்த விஷயங்களில் முக்கியமான பேதங்களிருக்கின்றன. அவையாவன:— (1) கௌதமர் பிரமதேவரின் எண்ணத்திற் கொப்ப, காமதேனு லிங்கம், தேவர்கள் இவர்களைப் பிரதட்சணம் செய்தது மூலமாய் பூப்பிரதட்சணம் செய்ததற்குச் சமானமான பலனை யடைந்து அகல்யையை மணந்தல், (2) அகல்யை இந்திரனென்று தெரியாமல் தன் பர்த்தாவுடனே கூடுவதாக நினைத்தது, (3) அகல்யை மனதாற் குற்றம் செய்தவளல்லள் என்பதை யுத்தேசித்து, அவளை, சிறுநதிரூபமாக மாறி, கௌதம நதியுடன் சங்கமமானவுடன் முன்போல ஸ்திரீரூபமாக மாறவேண்டிய தென்று சாபம், பிரதிசாபம், (4) இந்திரன் சரீரத்தில் ஆயிரம் பெண் குறிகள் உண்டாகி, அகல்யை சங்கமப் புண்ய நதியில் ஸ்நானம் செய்வது மூலமாய் அந்த விகாரம் நீங்கி, ஆயிரங்கண்களை யுடையவனாக மாறுதல் என்ற சாபப் பிரதிசாபங்கள் ஆகிய இந்த வேறுபாடான விஷயங்கள் பிரம்மபுராணத்திலிருக்கின்றன. இது கல்பபேதம் என அறிக.

இவர் ஒரு ஸ்மிருதி கர்த்தா.



# 54. கௌரமுகர்.



ஸ்ரீ ப்ரதீகன் [1] என்ற ஒரு அரசன் இருந்தான். அவனுக்கு துர்ஜயன், சுத்யும்னன் என்ற இரண்டு குமாரர்களுண்டு. அந்த அரசன் தன் மூத்தகுமாரனை துர்ஜயனிடத்தில் தனது இராஜ்யத்தை ஒப்புவித்துவிட்டு, தவம் செய்யச் சித்ரகூட பர்

[1] பவிஷ்யத் புராணம்.

வதம் சென்றான். துர்ஜயன் தனது பராக்கிரமத்தினால் அனேக இராஜ்யங்களைக் கைவசப்படுத்தி, அதினால் கர்வங்கொண்டு இந்திரனை ஜயிக்க விரும்பினான். இந்திரன் அதை நாரதர் மூலமாய் அறிந்து, துர்ஜயனைக்கொல்லுவதற்குக் கீழ்தேசம் வந்து சேர்ந்தார். அங்கிருந்து திரும்பிவரும்போது ஹேஹாவினுடைய குமாரத்தி சுகேசி, பிரஹேஹாவின் மகள் மிச்ரகேசி ஆகிய இவ் விருவரையும் அவன் விவாகஞ்செய்து, அவ்விருவரிடத்திலும் முறையே பிரபவன் சுதர்சனன் என்ற இரண்டு குமாரர்களையுமடைந்தான். அவன் வெகு காலத்திற்குப் பிறகு காட்டிற்குச் சென்று, அவ்விடத்திலுள்ள துஷ்டமிருகங்களை யெல்லாம் வதம் பண்ணிக்கொண்டு வரும் காலத்தில், குற்றமற்றவரும் மஹாபாக்கியசாலியுமான 'கௌரமுகர்' என்ற ரிஷியை அவருடைய ஆச்ரமத்தில் தவம் செய்து கொண்டிருக்கக் கண்டான். அவரது ஆச்ரமம் பரிசுத்தமான ஜலத்தினாலும், புஷ்பவாசனைகளைக் கொணர்ந்து வீசும் இளங்காற்றினாலும், வேதமோதும் சிஷ்யர்களாலும், அழகு நிறைந்த ரிஷிகளின் குமாரத்திகளினாலும், ரமணீயமாயும் மங்களமாயும் விளங்கிற்று. துர்ஜயன் அவ்வாச்ரமத்தைக்கண்டு வியப்படைந்து, 'நான் இந்த ஆச்ரமத்துக்குள் பிரவேசித்து மிகுந்த தார்மிஷ்டர்களான ரிஷிகளைத்தரிசிக்கிறேன்'' என்று தனக்குள் சொல்லிக்கொண்டு ஆச்ரமத்துக்குள் சென்றான். உடனே, மகாதர்மசாலியான கௌரமுக முனிவர், அரசன் வரவைக் கண்டு களிப்புற்று, அவனுக்கு வேண்டிய மரியாதைகள் செய்து, அவன் ராஜ்யத்தின் யோகக்ஷேமங்களை விசாரித்தார். பிறகு அவர், அரசனை நோக்கி, ''ஓ! ராஜசிரேஷ்டனே! என் சக்திக்குத் தக்கவாறு சேனாபரிவாரங்களுடன் கூட உமக்கு விருந்தளிக்க விரும்புகிறேன்; வாகனங்களெல்லாம் அவிழ்த்து விடப்படட்டும்,'' என்று சொல்லி முடித்தார். அரசனும் அவரிடத்து மிகுந்த பக்தியினால், அதற் குடன்பட்ட போதிலும், ''நம்மிடத்திலோ ஐந்து அக்ரோணி சேனைகளிருக்கின்றன; இவரோ ரிஷி; இவ்வளவு சேனைகளுக்கு எவ்வாறு உணவளிக்கப்போகிறார்'' என்று ஆலோசித்துக்கொண்டிருந்தான். பிறகு கௌரமுகர் துர்ஜயனுக்கு விருந்து சொல்லிவிட்டு, 'இவ் வரசனுக்கு எப்படிப் போஜனம் செய்விக்கப் போகிறேன்?' என்றாலோசிக்கும் காலத்தில், அவர் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியை மனதில் தியானித்தார். உடனே கங்காநதிக்குச் சென்று, அந்த பகவானை உத்தேசித்து, ''ஏ! ஆதிதேவனே! உலகத்தில் காணப்படுகிற சகல வஸ்துக்களும்

டமது ஸ்வரூபமே. ஆதலால் உலகத்தில் உம்மைத் தவிர வேறு ஒன்றும் கிடையாது. இப்பொழுது தூர்ஜயன் என்ற அரசனுக்கு விருந்திடுவதாய் வாக்களித்துவிட்டேன்; நானோ திரவிய மில்லாதவன்; நீர் உலகங்களுக்கெல்லாம் நாயகரா யிருப்பதால், பக்தியுடன் வணங்குகிற எனக்குப் போதுமான *அன்னபானாதிகளைக் கொடுக்க வேண்டும்; மேலும், நான் எனது கையினால் எந்த வஸ்துவைத் தொடுகிறேனோ, கண்களால் எதைப் பார்க்கிறேனோ, அது கட்டையாயிருந்தாலும், புல்லாயிருந்தாலும், கிழங்காயிருந்தாலும், சமைக்கப்பட்ட நான்குவித அன்னங்களாகும் படியாய்க் கருணைபுரிய வேண்டும்; தவிரவும், என் மனதினால் என்னென்ன உண்டாக வேண்டும் என்று நினைக்கிறேனோ, அது அப்படியே உண்டாகவேண்டும்'' என்று பிரார்த்தித்தார். பகவான், இதைக் கேட்டு மிகவும் சந்தோஷமடைந்து, கருடவாஹனரூடராய் அவருக்குத்தரிசனம் கொடுத்தார். அப்பொழுது கௌரமுகர் கைகூப்பி சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, எழுந்து, "ஏ! மஹாவிஷ்ணுவே! எனக்கு நீர் வரங்கொடுக்கவந்திருப்பீராகில், இப்பொழுது எனது ஆச்ரமத்தில் சேனைகளுடன் வந்திருக்கிற தூர்ஜயன் என்ற அரசன் என்னால் விருந்தளிக்கப்பட்டு, மிகுந்த திருப்தியுடன் நாளையதினம் அவன் ஊருக்குத் திரும்பிப் போய்ச் சேரவேண்டும்,'' என்று கேட்டார். உடனே மகாவிஷ்ணு, மிகுந்த ஒளி வீசுகிறதாயும், நினைத்ததைக் கொடுக்கச் சக்தியுள்ளதுமான 'சிந்தாமணி' என்ற இரத்நத்தை அம் முனிவருக்குக் கொடுத்து மறைந்துபோனார். அம் முனிவர், அம் மணியைப் பெற்றுக்கொண்டு, அனேக ரிஷிகள் தவம் செய்து கொண்டிருக்கும் தமது ஆச்ரமத்துக்குச் சென்று, இமயமலையின் கொடுமுடிக்குச் சமானமான உன்னதமுள்ளதாயும், சந்திரகிரணம் போல் வெளுப்பாயும், மிகுந்த அழகாயுமுள்ள அனேகமாயிர மாடமாளிகைகளை நிர்மாணம் பண்ணினார். அதன் சமீபத்தில் அனேகம் ப்ராகாரங்கள், அழகிய வாவிகள், குயில் முதலிய பக்ஷிகள் சத்திக்கவும், அனேக புஷ்பங்கள் சுகந்தமான வாசனைகளை வீசவும், அனேக* விருக்ஷஜாதிகள் நிறைந்துமுள்ள பூந்தோட்டங்கள், இன்னும் அனேக யானைகள் குதிரைகள், மாடுகள், இவைகளைக் கட்டுவதற்குரிய விடுதிகள் முதலியவைகளை ஏற்படுத்தினார். அனேகவகை ஆகாரங்களையும் சித்தம் செய்துவிட்டு, தூர்ஜயனிடம் சென்று, 'எல்லாசேனையுடன் போஜனம் செய்யவாரும்' என்று அழைக்க, அரசனது பரிவாரங்களைச்

லாம் அவ்வாறே புறப்பட்டன. அப்பொழுது அம் முனிவர் தமது கையில் அந்தச் சிந்தாமணியை வைத்துக்கொண்டு அரசனைப் பார்த்து, "உங்களுடைய ஸ்நானம், ஆகாரம் இவைகளைச் சரிவர நடத்திவைப்பதற்கு அனேகம் தாசிகளையும் தாசர்களையும் அனுப்பி வைக்கிறேன்" என்று சொல்லி, அரசன் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, விஷ்ணுபகவானால் கொடுக்கப்பட்ட சிந்தாமணியை ஓரிடத்தில் வைத்தார். அச் சமயத்தில் ஆயிரக்கணக்கான அழகிய ரூபமுள்ளவர்களும், மிருதுவும் மெல்லியதுமான சரீரங்களுள்ளவர்களும், மருண்ட கண்களையும் கருப்பும் சுருட்டையுமான கூந்தல்களையுமுடையவர்களுமான ஸ்திரீகள் அவர்களுடைய கைகளில் தங்கப்பாத்திரங்களை எடுத்துக்கொண்டு வெளிமேயறினார்கள். அப்படியே இன்னும் அனேக வேலைக்காரர்களும் வந்தார்கள். பிற்பாடு அந்த அரசன், அவனுடைய சேனைகள் ஆகிய எல்லோருக்கும் ஸ்நானம், நல்ல வஸ்திரங்கள், உயர்ந்த ஆபரணங்கள், போஜனம் ஆகிய இவைகளை யெல்லாம் அந்த ஸ்திரீகளும் வேலைக்காரர்களும் உபசாரமாய் அளித்தார்கள். பிற்பாடு அனேகவிதமான வாத்யகோஷங்கள் ஆடல் பாடல் முதலிய விநோதங்கள் நடந்தன. அவைகளையும் கண்டு யாவரும் களித்தார்கள். தேவேந்திர போகத்துக்குச் சமதியான இந்தச் சுகங்களை அனுபவித்த துர்ஜயமகாராஜன் அடங்காத மகிழ்ச்சி கொண்டு, 'இவைகளெல்லாம் முனிவருடைய சாமர்த்தியமோ, அல்லது தவமஹிமையோ! மணியின் பிரபாவமோ!' என்று ஆலோசித்துக்கொண்டிருந்தான். அதற்குள் சூரியனும் அஸ்தமனமானான். பிறகு சந்திரன் தனது அமிர்தகிரணங்களை வீசிக்கொண்டும், விடபுருஷகளுக்குக் காமத்தை விருத்திசெய்துகொண்டும் உதயமானான். அப்பால் எல்லோரும் அவரவர்கள் விடுதிகளுக்குச் சென்று, தேவேந்திரன் தேவலோகத்தில் அப்ஸரஸ்திரீகளுடன் சுகங்களை யனுபவிப்பது போல், உத்தமஸ்திரீகளுடன் இன்பசுகங்களை யனுபவித்தார்கள். இவ்வாறு இராப்பொழுது கழிந்தது. மறுநாட்காலையில் மாளிகைகள், ஸ்திரீகள் முதலிய யாவும் மறைந்து போயின. அவைகளைக் காணாமல் அரசன் மிகுந்த துக்கத்துடன், "இச் சிந்தாமணி எனக்கெவ்விதம் கிட்டும்? இதைத் திருடிக்கொண்டாவது போவேன்" என்று தீர்மானித்துக்கொண்டு, தனது சேனைகளைப் புறப்படும்படி கட்டளையிட்டான். அரசன் சேனைகளுடன்

ரிஷி ஆச்ரமத்திலிருந்து கொஞ்சதூரம் சென்று, 'விரோசனன்' என்ற தனது மந்திரியை ரிஷியினிடமிருந்து அம்மணியைக் கேட்டு வாங்கிவரும்படி அனுப்பினன். அம் மந்திரியும் முனிவரிடம் சென்று, "ரத்னங்களையெல்லாம் அடைய வேண்டியவன் அரசன். ஆனதால் உம்மிடமுள்ள மணியை எனது அரசனுக்குக் கொடும்" என்றுகேட்டான். அதற்குக் கௌரமுகர், "பிராமணன் வாங்கு வதற்கு உரியவன்; அரசன் கொடுப்பதற்குரியவன். இவ்வித மிருக்க, நீ அரசனுயிருந்தும் ஏழை போல் எவ்விதம் யாசிக்கிறாய்? என்று அந்த துராசாரனை துர்ஜயனிடம் சொல்லிவிட்டு வா, போ. அவனுக்குக் கிடைக்கக் கூடிய மறுமைப்பயனை உத்தமலோகத்தை அவன் இழந்து விடவேண்டாம்," என்று சொன்னார்.

பிறகு மந்திரி விரைவாய்த் தன் அரசனிடம் சென்று, நடந்த சங்கதியை சவிஸ்தாரமாய்ச் சொன்னன். அரசன் மிகுந்த கோபம் கொண்டு, நீலன் என்பவனை அழைத்து, "ஏ! தூதா! நீ அந்தப் பிரா மணனிடத்திலிருந்து மணியை அபகரித்துக் கொண்டு, விரைவாய் வந்து சேரவேண்டும்" என்று கட்டளையிட்டான். நீலன் அனேக சேனைகளை அழைத்துக்கொண்டு, முனிவரின் ஆச்ரமத்துக்குச் சென் றுன். அவருடைய அக்னிஹோத்ரசாலையில் அச் சிந்தாமணி யிருக் கக்கண்டு, இரதத்தினின்றும் கீழே இறங்கினன். மிகவும் சூரனை அந்த நீலன் ரதத்தினின்று மிறங்கினவுடனே, சிந்தாமணியினின்றும் சஸ்திரங்கள், இரதங்கள், கொடிகள், குதிரைகள், வில்லுகள், அம் பராத்தூணிகள் இவைகளுடன் மிக்க வலிமை பொருந்திய ஆயிரக் கணக்கான யுத்த வீரர்கள் வெளிக்கிளம்பினர்கள். உடனே இரு திறத்தார்களுக்கும் மிகுந்த பயங்கரமான யுத்தம் நடந்தது. எங்கும் ரத்தப்ரவாகமாக ஓடிற்று. அரசனுடைய மந்திரியும் தனது சேனை களுடன் யமலோகத்துக் கனுப்பப்பட்டான். அச் சமாசாரத்தை அரசன் அறிந்து, தனது மிகுந்த சேனைகளை யழைத்துக்கொண்டு, அம் மணியினிடத்திலிருந்தும் உண்டான வீரர்களோடு கடுமை யான யுத்தம் செய்தான். அச் சமயத்தில் கௌரமுகமுனிவர் சமித்து தர்ப்பை முதலியவைகளைச் சேகரித்துக்கொண்டு தமது ஆச்ரமத்தை நோக்கி வருங்காலத்தில், பார்ப்பவர்களின் மனதைக் கலக்கும்படியான கோரயுத்தத்தைப் பார்த்தார். அனேக சேனை களுடன் கூடிய துர்ஜயனையும் கண்டார். அவர் தமது ஆச்ரமத்

தின் வாயிலி லிருந்துகொண்டு ஆலோசித்து, இம் மணியின் நிமித்த மாகவே இந்த யுத்தம் நேர்ந்திருக்கிறதென்று தீர்மானித்துக்கொண் டார். பிறகு முனிவர் மகாவிஷ்ணுவைத் தியானம்பண்ண, கரு டாரூடராய் பகவான் எழுந்தருளி, "நான் இப்பொழுது செய்ய வேண்டிய காரிய மென்ன?" என்று வினவ, முனிவர் அவரைப் பக்தியுடன் வணங்கி, கைகூப்பினவராய் மிகுந்த வினயத்துடன் "இதோ இருக்கிற துர்ஜயனை அவன் சேனைகளுடன் சம்ஹாரம் செய்யவேண்டும்" என்று வேண்டினார். உடனே பகவான் அக்னி போல் பிரகாசிக்கின்ற தமது சக்ராயுதத்தினால் துர்ஜயனை அவன் சேனைகளுடன் ஒரு நிமிஷத்துக்குள் கொன்றுவிட்டார். பிறகு பகவான் கௌரமுகரைப் பார்த்து, "ஒரு நிமிஷத்துக்குள் இவர்க ளெல்லாரையும் கொன்றதினால், இந்த ஆரண்யத்திற்கு "நைமி சாரண்யம்" என்று பெயருண்டாகக் கடவது. நானும் இந்த ஆர ண்யத்தில் 'எக்ஞபுருஷன்' ஆகிய அவதாரத்துடன் விளங்குகிறேன்" என்று சொல்லிவிட்டு மறைந்து போனார்.



# 55. க்ரது.



இவர் (1) பிரமாவினது மரீசி முதலான ஆறு புத்திரர் களில் ஒருவர். இவர் பிரமாவினுடைய கையினின் றும் ஜனித்தார். க்ரது முனிவரது புத்ரர்கள் வால கில்யர்கள். இவர்கள் சூரியனுடைய சிநேகிதர்கள். சத்யமும், விரத சீலமும் நிறைந்தவர்கள். மூன்றுலகங்களிலும் கீர்த்திபெற்றவர்கள். க்ரதுரிஷி பிரஜாபதிகளில் ஒருவராயிருந்து உலகத்தில் ஜீவவிருத்தியைச் செய்துவிட்டு, அவருடைய தவத்தின் மகிமையால் பிரமலோகத்தில் பிரமாவின் சபையி லிருந்துவரு கிறார்.

இவர் உபஸ்மிருதி கர்த்தாக்களி லொருவர்.

(1) மஹாபாரதம்—ஆதிபர்வம்.

# 56. சக்தி.

வசிஷ்ட மகரிஷியினுடைய*நூறு புத்திரர்களில் மூத்தவர் சக்திரிஷி. இவ்வுலகத்தில் கல்மாஷபாதன் என்ற பெயரையுடைய ஒரு அரசனிருந்தான். அவன் இக்ஷ்வாகுவம்சத்தைச் சேர்ந்தவன். உலகத்தில் பராக்கிரமத்தில் தனக்கு ஒருவரும் எதிரில்லாமல் அரசாட்சி செய்து வந்தான். ஒரு நாள் அரசன் தன் நகரை விட்டு, காட்டில் வேட்டையாடச் சென்றான். தன்னுடைய பாணங்களால் அநேக மான்களையும், காட்டுப் பன்றிகளையும், காண்டாமிருகங்களையும் வேட்டையாடிக் கொன்றான். அப்பால் களைப்படைந்து இளைப்பாறியிருந்தான்.

விசுவாமித்ர மகரிஷி அவ் வரசனுக்குத் தான் குருவாக இருக்க வேண்டுமென்று உத்தேசித்திருந்தார். அரசன் களைப்பு நீங்கி, காட்டின் வழியாகச் சென்றுகொண்டிருந்தான். வசிஷ்டருடைய குமாரரான கீர்த்தி பெற்ற சக்தி மகரிஷி அதேவழியாய்த் தன் எதிரில் வருவதைக் கண்டான். அரசன் அவரைப் பார்த்து, "வழி விலகி நில்லும்" என்றான். ரிஷி சமாதானமான விதமாய் அரசனை நோக்கி இனிமையான வசனங்களால் 'ஓ! அரசனே! இது என்னுடைய வழி. அரசன் பிராமணர்களுக்கு வழிவிட்டு விலகிப்போகவேண்டும் என்று தர்ம சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டு ஆதிகாலமுதல் அநுஷ்டிக்கப்பட்டுவரும் சாசுவதமான வழக்கமாயிருக்கிறது' என்று கூறினார் ஒவ்வொருவரும் இவ்வாறு தர்க்கித்து, "வழிவிலகி நில், வழிவிலகி நில்" என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். ரிஷியின் பக்ஷத்தில் நியாயம் இருந்தபடியால் அவர் தன் வழியை விட மறுத்தார். அரசன் கோபத்தாலும் மமதையாலும் தான் வழிவிட முடியாது என்று பிடிவாதம் செய்தான். இவ்வாறு ரிஷி தனக்கு இணங்காததைக் கண்டு அரசன் கோபங்கொண்டு, ராக்ஷதனைப் போன்ற நடத்தையையுடையவனாய், அந்த ரிஷியைத் தன் சவுக்கா லடித்தான். உடனே அவர் கோபத்தால் அறிவிழந்து, அவ் வரசனை நோக்கி, "ஓ! அரசர்களுக்குள் அதமனே! ஒரு ராக்ஷதன் போல் தபசியான என்னை நீ இம்சிக்கிறபடியால், நீ இன்று முதல் நரமாம்ஸத்தைத் தின்று ஜீவிக்கிற ஒரு ராக்ஷதனாகக் கடவாய்! நீ இவ்விடத்தை விட்டுச் செல்.

* மஹாபாரதம்—ஆதிபர்வம்.

ஸாமாம்ஸத்தில் இச்சைகொண்டவனாய்ப் பூமியில் அலையக்கடவாய்!'' என்று சபித்தார். கல்மாஷபாத ராஜனிடத்தில் புரோகிதராயிருக்கும் விஷயத்தில் விசுவாமித்ரருக்கும் வசிஷ்டருக்கும் ஏற்கனவே மனஸ்தாபம் ஏற்பட்டிருந்ததில், மேல் சொல்லியபடி சக்தி ரிஷியும் கல்மாஷபாத அரசனும் சச்சரவு செய்துகொண்டிருக்கையில், தம் ஞானதிருஷ்டியால் சங்கதிகளை யறிந்த தபோதநரான விசுவாமித்ர மஹரிஷியானவர் அவ் விருவருக்கும் தெரியாமல் அந்த இடத்தில் மறைந்திருந்து, நடந்த சங்கதிகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

இவ்வாறு சபிக்கப்பட்ட அரசன், அந்த ரிஷி வஸிஷ்டருடைய புத்திரரென்றும், வஸிஷ்டரைப் போல் தவசக்தி நிறைந்தவரென்றும் அறிந்துகொண்டான். பிறகு, அரசன் சக்திரிஷிக்கு நலம் சொல்ல வேண்டுமென்ற உத்தேசத்துடன் அவரை வணக்கமாய் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள ஆரம்பித்தான். உடனே விசுவாமித்திரர், அரசனுடைய நற்குணத்தை யறிந்து, அவ் விருவர்க்கும் சமாதானம் ஏற்பட்டு விடும் என்று எண்ணி, ஒரு ராக்ஷஸனை அரசனுடைய சரீரத்துக்குள் பிரவேசிக்கும்படி கட்டளையிட்டார். அவ்வாறு சக்தியினுடைய சாபமும், விசுவாமித்ரருடைய கட்டளையும் நிறைவேறும் பொருட்டு, கிங்கரன் என்ற பெயருடைய அந்த ராக்ஷஸன் அந்த ராஜனுடைய சரீரத்துக்குள் பிரவேசித்தான். அந்தச் சங்கதி தெரிந்து விசுவாமித்ரர் அவ்விடத்தை விட்டுப் போய்விட்டார். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு, தன் மேல் ராக்ஷஸன் சார்ந்தபடியால் பிடிக்கப் பட்ட அரசன் தன்னுடைய அறிவை முற்றிலும் இழந்தான். அச் சமயத்தில் ஒரு பிராமணர் அரசனைக் காட்டில் சந்தித்தார். அவர் பசியால் வருந்தி, மாமிசத்தால் பக்குவம் செய்யப்பட்ட அன்னம் அளிக்கும்படி அரசனைக் கேட்டார். அரசன் அதற்குச் சம்மதித்து, அந்தப் பிராமணரைக் கொஞ்ச நேரம் காத்திருக்கும்படி வேண்டினான். இப்படிச் சொல்லிவிட்டு அரசன் போய்விட்டான். ஆனால் பிராமணர் அங்கேயே யிருந்தார். அரசன் தன்னிஷ்டப்படி வெளியே திரிந்துவிட்டுக் கடைசியாய்த் தன் அரண்மனையின் அந்தப்புரத்துக்குச் சென்றான். பிறகு, ராத்திரி விழித்து எழுந்து, பிராமணருக்குத் தான் சொன்ன வாக்குத்தத்தம் அவனுக்கு ஞாபகம் வந்தது. தன் சமையற்காரனைக் கூப்பிட்டு, ஒரு பிராமணருக்கு அன்னமளிப்பதாக தான் சொல்லிக் காட்டில் காத்திருக்கும்படி நிறுத்தியிருக்கும் சங்கதி

யைச் சொன்னான். "நீ அக்காட்டுக்குப் போய், அன்னத்துக்காக என்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் பிராமணருக்கு மாமிசம் சேர்ந்த அன்னத்தைச் சேகரித்துப் படைக்கக் கடவாய்!' என்றான். இவ்வாறு சட்டளையிடப்பட்ட சுயம்பாகி மாமிசத்தைத் தேடிப் புறப்பட்டான். யாதொரு மாமிசமும் அகப்படாமையால் அந்தச் சங்கதியைத் தன்னுடைய அரசனுக்குத் தெரிவித்தான். தன்னை ராக்ஷதன் என்ற பேய் பிடித்திருந்தமையால் ராஜன் கொஞ்சமேனும் தாக்ஷிண்யம் என்பது இல்லாமல் "நரமாமிசத்தைக் கொண்டு அந்தப் பிராமணருக்கு அன்னம் கொடு" என்று அடிக்கடி வற்புறுத்திக் கட்டளையிட்டான். அச் சுயம்பாகி 'நல்லது' என்று ஒப்புக்கொண்டு, அரசனுடைய கொலையாளிகள் இருக்குமிடத்துக்குச் சென்று, அவர்களிடமிருந்து நரமாமிசத்தை வாங்கிக்கொண்டு, அதைச் சுத்தமாக்கிக் கிரமப்படி பக்குவம் செய்து அன்னத்துடன் கலந்து, பசியாயிருந்த அந்தப் பிராமணருக்குக் கொடுத்தான். அப் பிராமணோத்தமர் தம்முடைய ஞானதிருஷ்டியால் அந்த அன்னம் அசுத்தமானதென்றும், ஆதலால் தாம் உண்ணத் தக்கதல்லவென்றும் தெரிந்து, கோபத்தால் கண்கள் சிவந்து, "அந்த ராஜப்பதர் அசுத்தமானதும், உண்ணத் தகாததுமான அன்னத்தை எனக்கு உண்ணக் கொடுக்கிறபடியால், அவனே நரமாமிசத்தில் ஆசையுடையவனாகக் கடவது. ஆகியில் சக்திரிஷி சபித்திருக்கிற பிரகாரம் நரமாமிசங்களைத் தின்றுகொண்டும், உலகத்திலுள்ள சகல ஜீவர்களையும் பயமுறுத்திக்கொண்டும், ஹிம்சித்துக்கொண்டும் அலைந்து திரியக் கடவது" என்று சபித்தார். இவ்வாறு சாபம் இரட்டிக்கப்பட்டுப் பலத்தை அடைந்ததுமன்னியில், ராக்ஷதனாலும் பீடிக்கப்பட்டபடியால், அரசன் முற்றிலும் தன் மதியை இழந்தான். சில காலத்துக்குப் பிறகு, அந்த ராஜேந்திரன் ராக்ஷதனுடைய செய்கையால் கொஞ்சமேனும் தன் வசம் இல்லாதவனாய்த் தன்னைச் சபித்த சக்திரிஷியைப் பார்த்து, "நீர் சுபாவ விரோதமான இக் கொடிய சாபத்தை எனக்கு இட்டபடியால், உம்மை முதலில் கொல்வது மூலமாக நரமாமிச ஜீவனத்தொழிலை ஆரம்பிக்கிறேன்" என்றான். இவ்வாறு சொல்லி, ஒரு புலியானது தனக்குப் பிரிய இரையாயுள்ள பிராணியைப் பிடித்துத் தின்பது போல், அரசன் அந்த ரிஷியைக் கொன்று தின்றுவிட்டான். இவ்வாறு சக்தியைக் கொன்று தின்ற பிறகு, விசுவாமித்ரர் வசிஷ்டருடைய மற்றப் புத்திரர்களையும் கொன்று தின்னும்படி

அவ்வரசனுடைய தேகத்துக்குள்ளிருந்த ராக்ஷதனை ஏவினார். கோப மூண்ட சிங்கம் காட்டிலுள்ள அற்பப் பிராணிகளைக் கொல்வது போல், அந்த ராஜன் வசிஷ்டருடைய மற்றப் புத்திரர்களையும் ஒருவர் கூட பாக்கியில்லாமல் கொன்றான். ஆனால், விசுவாமித்திரருடைய ஏவலால் தன்னுடைய புத்திரர்கள் அனைவரும் மாண்டார்கள் என்று வசிஷ்டர் தெரிந்து, பூமியைத் தாங்கும் பெரிய மலைபோல், தம்முடைய அடங்காத் துக்கத்தைப் பொறுமையுடன் சகித்துக்கொண்டிருந்தார்.

அவர் துக்க மிகுதியினால் தம்முடைய உயிரை மாய்த்துக் கொள்வதற்காகச் செய்த பிரயத்தனங்கள் முதலிய விருத்தாந்தங்களெல்லாம் வசிஷ்டருடைய கதையில் பார்க்கலாம்.

---

## 57. சங்கர்.



ங்கர், (1) லிகிதர் என்ற இரண்டு சகோதரர்களிருந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் அழகான பிரத்யேக வீடுகளிருந்தன. அவர்களுடைய வீடுகள் "பாஹுதா" என்னும் நதியின் கரையிலிருந்தன. அவர்களுடைய வீடுகளைச் சுற்றி, பழங்களும் புஷ்பங்களும் நிறைந்த ஏராளமான மரங்களிருந்தன. ஒரு காலத்தில் லிகிதர் தன் சகோதரரான சங்கருடைய வாசஸ்தலத்துக்கு வந்தார். அப்பொழுது சங்கர் ஏதோ காரியமாய்த் தம் வீட்டைவிட்டு வெளியே போயிருந்தார். தன் சகோதரனுடைய இருப்பிடத்தை யடைந்த லிகிதர், அங்கே யிருந்த கனிந்த பழங்களைப் பிடுங்கி, கொஞ்சமேனும் யோசியாமல், அதைத் தின்றுகொண்டிருந்தார். அச் சமயத்தில் சங்கர் தமது வாசஸ்தலத்துக்கு வந்தார். தன் சகோதரன் பழங்களைத் தின்றுகொண்டிருப்பதைக் கண்டு, சங்கர் அவரை நோக்கி, "இந்தப் பழங்கள் உனக்கு எவ்வாறு கிடைத்தன? அவற்றை ஏன் தின்கிறாய்?" என்று கேட்டார். லிகிதர் தன் தமையனை யணுகி, அவரை வணங்கி, புன்சிரிப்

---

[1] மஹாபாரதம்—சாந்திபர்வம்.

டன், "இவ்விடத்திலிருந்துதான் நான் அப்பழங்களை எடுத்தேன்" என்றார். சங்கர் கோபங்கொண்டு தன் தம்பியைப் பார்த்து, "என் அனுமதி யன்னியில் நீயாகவே இந்தப் பழங்களை அபகரித்தபடியால் நீ திருடி இருக்கிறாய். அரசனிடம் போய் நீ செய்த குற்றத்தை ஒப்புக்கொள். அரசனிடம் போய், 'ஓ! ராஜ உத்தமனே! எனக்குக் கொடுக்கப்படாத பழத்தை மோசமாய் அபகரித்ததாகிய குற்றத்தைச் செய்திருக்கிறேன்; ஆதலால், நான் திருடனென்பதை உணர்ந்து, உம்முடைய க்ஷத்திரிய தர்மப் பிரகாரம் திருடனுக்கு விதித்திருக்கிற தண்டனையை என்மேரில் பிரயோகியும்' என்று தெரிவித்துக்கொள்" என்றார். அப்படியே விரத சீலரான லிகிதர் சுத்யும்னன் என்ற அரசனிடம் போய், தன் வரவைக் காவலர்கள் மூலமாய்த் தெரிவித்தார். உடனே அரசன் தன் மந்திரிமார்கள் முதலியவர்கள் சகிதம் அவரை எதிர்கொள்ளச் சென்றான். அரசன், தர்மங்களை அறிந்தவர்களில் சிரேஷ்டரான அவரை நோக்கி, "ஓ! உத்தமரே! நீர் வந்திருக்கிற காரியம் என்ன? அது முன்னமே நிறைவேறினதாக மதித்துக்கொள்ளும்" என்றான். அதற்கு லிகிதர் அரசனைப் பார்த்து, "என் சொல் பிரகாரம் நிறைவேற்றுவேன் என்பதைப் பற்றி முதலில் உறுதிசொல்லும்; அதன் பிறகு, அந்த வாக்குத்தத்தத்தை நிறைவேற்றுதல் உமக்குத் தக்கதுதான். ஓ! அரசனே! என் தமயனார் எனக்குக் கொடுக்காத பழங்களை நான் தின்றேன்; ஆதலால், முன்பின் யோஜிக்காமல் என்னைத் தண்டிக்கவேண்டும்" என்றார். சுத்யும்ன ராஜன், "ஓ! பிராமண உத்தமரே! அரசனுக்குத் தண்டனை விதிக்க அதிகாரமுண்டானால், குற்றத்தை மன்னிக்கவும் அவனுக்கு அதிகாரமுண்டு. ஓ! சிறந்த விரதமுடையவரே! உம்முடைய செய்கை விஷயமாய் நீர் பரிசுத்தராகி மன்னிப்பை யடைந்தது போலவே நினைத்துக்கொள்ளும். உமக்கு வேறு விருப்பங்கள் இருந்தால் அதை எனக்குத் தெரிவியும்; அதை நிச்சயமாய் நிறைவேற்றிக் கொடுக்கிறேன்" என்றான். இவ்வாறு அரசனால் மரியாதையாய் வேண்டப்பட்டும், அவர் அரசனிடத்திருந்து யாதொரு உபகாரத்தையும் வேண்டவில்லை. அப்பொழுது அரசன் லிகிதருடைய இரண்டு கைகளையும் வெட்டும்படியாக உத்திரவு செய்தான். லிகிதரும் அத் தண்டனையைப் பெற்றுக்கொண்டு போய்விட்டார். தம்முடைய தமயனாகிய சங்கரிடத்து வந்து, அவர் மிகப் பிரீதியுடன், "தான் செய்த குற்றத்துக்காகத் தண்டிக்கப்பட்ட இந்தப் பாபியைத் தாங்கள் மன்

னித்தருளவேண்டும்'' என்றார். சங்கர், "ஓ! உத்தமனே! எனக்கு உன் பேரில் கோபமில்லை; நீ எனக்கு யாதொரு தீங்கும் செய்ய வில்லை; உன்னுடைய தருமமானது சீர்குலைந்திருந்தது. அந்த நிலைமையிலிருந்து நான் உன்னை விடுவித்திருக்கிறேன். உடனே பாகுதா நதிக்குப் போய் ஜலத்தினால் செய்யப்படும் அர்க்கியத்தால் தேவர்கள், ரிஷிகள், பிதுர்க்கள் ஆகிய இவர்களைத் திருப்திசெய். இனிமேல் மனதைப் பாபத்தில் செலுத்தாதே'' என்றார். சங்கருடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு, லிகிதர் நதிக்குச் சென்று, அங்கே ஸ்நானம் செய்து, அர்க்கியம் கொடுக்க ஆரம்பித்தார். அதன்பேரில் இரண்டு தாமரைகள் போல அவருடைய வெட்டுப்பட்ட நுனிகளிலிருந்து இரண்டு கைகள் தோன்றின. ஆச்சரியமடைந்து அவர், தன் தமையனிடத்து வந்து, தம்முடைய இரண்டு கைகளையும் காட்டினார். "இவைகளெல்லாம் என்னுடைய தவ சக்தியால் உண்டாயிற்று. இதைப்பற்றி நீ ஆச்சரியப்பட வேண்டாம். பகவானே காரணமாயிருந்து அனுக்கிரகித்திருக்கிறார்'' என்று சங்கர் சொன்னார். லிகிதர், "ஓ! மகிமை பொருந்தியவரே! உமக்கு இவ்வளவு தவ சக்தியிருக்க, நீர் ஏன் முதலிலேயே என்னைப் பரிசுத்தனாக்கவில்லை?'' என்றார். அதற்குச் சங்கர், "நான் அம்மாதிரி செய்திருக்கக்கூடாது. உன்னைத் தண்டிக்க எனக்கு அதிகாரமில்லை. உன்னைத் தண்டித்த அரசனும் அச் செய்கையால் பரிசுத்தமானதுமன்றி, நீயும் பிதுர்க்களும் புனிதர்களாய் விட்டீர்கள்'' என்றார்.

இவராலும் லிகிதராலும் ஸ்மிருதிகள் எழுதப்பட்டிருக்கின்றன.

## 58. சண்டகௌசிகர்.



மகத தேசத்தை (1) ஆண்டுவந்த பிருகத்ருதன் என்ற ஒரு அரசனிருந்தான். அவன் புஜபல பராக்கிரமம் உள்ளவனும், தேவேந்திரனைப்போல் கீர்த்தியும் செல்வமும் பெற்றவனுமிருந்தான். அவன் காசி ராஜனுடைய சௌந்

(1) மஹாபாரதம்—சபாபர்வம்.

தரியவதிகளான இரண்டு குமாரத்திகளையும் விவாகம் செய்துகொண்டான். அவர்களோடு பல சுகங்களையும் அனுபவித்துக் கொண்டு தன் ராஜ்யத்தைப் பரிபாலித்து வந்தான். ஆனால், அவனுடைய வம்சத்தை விருத்தி செய்யக்கூடிய ஒரு புத்திரபாக்கிய மில்லாததனால் அரசனும் அவன் மனைவிகளும் விசார மடைந்தார்கள். அரசன் புத்திரனை அடைவதற்காக புத்திரகாமேஷ்டி யாகம் முதலிய அநேக கடுமையான ஹோமாதிச் சடங்குகளை யெல்லாம் செய்தும் பயன்படவில்லை. ஒருநாள் கௌதம ரிஷியின் வம்சத்தில் உதித்த கக்ஷிவத் ரிஷியின் புத்திரராகிய மகாத்மாவான சண்டகௌசிகரிஷி தாம் செய்துவந்த தவத்தை நிறுத்திவிட்டு, உலகத்தில் சஞ்சாரம் செய்து கொண்டு வந்தவர், அங்கே ஒரு மாத்தின் நிழலில் வந்து உட்கார்ந்திருந்தார். அரசன் தன் மனைவிகள் சகிதம் அந்த ரிஷியினிடஞ் சென்று, அவருக்கு அநேக ஆடை யாபரணங்கள் முதலிய விலையுயர்ந்த வஸ்துக்களைத் தானமாகக் கொடுத்து, அவருக்கு வந்தன வழிபாடுகள் செய்து அவரைப் பூஜித்தான். அந்த ரிஷிசிரேஷ்டர், சத்தியத்தில் திடமான பற்றுள்ளவராய், அரசனைப் பார்த்து, "ஓ! அரசனே! உன்னிடத்தில் எனக்குச் சந்தோஷ முண்டாயிருக்கிறது. உனக்கு வேண்டிய வரங்களைக் கேள்" என்றார். அரசன் தன் மனைவிகள் சமேதனாய் தனக்குப் பிள்ளை உண்டாகுமோ என்ற அதைரியத்தினால் கண்களில் நீர் ததும்ப, அந்த ரிஷியை நோக்கிச் சொல்லுவானாயினான். "ஓ! தர்மசீலரே! என் ராஜ்யத்தைத் துறந்து, தவம் செய்வதற்காகக் காட்டுக்குச் செல்ல எத்தனமா யிருக்கிறேன். எனக்குப் புத்திர னில்லாததனால் நான் மிகவும் பாக்கியமற்றவனாக யிருக்கிறேன். ஆதலால், வரத்தினாலாவது, ராஜ்யத்தினாலாவது எனக்கு என்ன பிரயோஜனம்?" என்று சொன்னான். அரசனுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு, அந்த முனியானவர் அவருடைய இந்திரியங்களை முற்றிலும் அடக்கி, அந்த மாமரத்தின் அடியிலேயே யோகத்தியானத்தில் புகுந்தார். அவ்வாறு உட்கார்ந்திருக்கும் ரிஷியினுடைய மடியில் மிகவும் ருசிகரமானதும், கிளி முதலிய பறவைகளால் பரிசிக்கப்படாததுமான ஒரு மாம்பழம் விழுந்தது. அந்த முனிவர் பழத்தை எடுத்து, அதை அபிமந்திரித்து, உத்தமமான புத்திரனை அடைவாய் என்று சொல்லி, அரசன் கையில் கொடுத்தார். மீண்டும் விசேஷ ஞானதிருஷ்டியையுடைய அந்த மஹரிஷி அரசனைப் பார்த்து, "நீ உன் ராஜ்யத்துக்குத் திரும்பிப் போகலாம். உன்

மனோபீஷ்டம் நிறைவேறிற்று. நீ காட்டுக்குப் போகவேண்டியதில்லை" என்றார். அந்த முனிவருடைய வார்த்தையைக் கேட்டு, அவருடைய பாதங்களை வணங்கி, புத்திமானாகிய அந்த அரசன் தன்னுடைய ராஜ்யத்தைப் போய் அடைந்தான். தான் முன் வாக்களித்த பிரகாரம் அந்த மாம்பழத்தைத் தன் இரு பத்தினிகளுக்கும் சமமாகப் பாகித்துக் கொடுத்தான். அவர்கள் சிலகாலம் கழித்து கெர்ப்பவதிகளாகி, ஒவ்வொருத்தியும் ஒரே பாரிச அங்கங்கள் உள்ள ஜீவனற்ற ஒரு சிசுவைப் பெற்றார்கள். அதை உத்தேசித்து, அச் சிசுத்துண்டங்கள் இரண்டும் தாதிகளால் நகர்ப்புறத்தில் எறியப்பட்டன. அத் துண்டங்கள் இரண்டையும் ஜரை என்னும் ராக்ஷஸி எடுத்து, ஒன்று சேர்த்ததின் பேரில், அது உயிர் பெற்று ஒரே குழந்தையாயிற்று. அதை அவள் அரசனிடத்துக்கொண்டு போய்க் கொடுத்து நடந்த விருத்தாந்தங்களைத் தெரிவித்தாள். அரசன் அக்குழந்தையை வாங்கி, ஜரையால் சேர்க்கப்பட்டபடியால், அவனுக்கு ஜராசந்தன் எனப் பெயர் கொடுத்து வளர்த்து வந்தான். அந்த ஜராசந்தனே காலக்கிரமத்தில் மகத தேசத்துக்கு அரசனாகி, தன்னுடைய புஜபலபராக்கிரமத்தால் அநேக அரசர்களை ஜயித்து, கிருஷ்ணபகவானோடு பலமுறை யுத்தங்கள் செய்து, கடைசியாகப் பாண்டவர்களில் ஒருவனான பீமசேனனால் யுத்தத்தில் கொல்லப்பட்டான்.

---

## 59. சதானந்தர்.

---

இவர்¶ கௌதமருடைய மூத்தகுமாரர். கௌதமருக்கு அகல்யையிடத்துப் பிறந்தவர். மிகுந்த தவவலிமையுள்ளவர். இவர் ஜனகமகாராஜாவினது புரோகிதர். ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் சகிதம் விச்வாமித்ரர் ஜனகமகாராஜனுடைய யாகத்துக்காக மிதிலாபுரிக்கு வந்தார். அப்பொழுது இந்திரனுடைய செய்கையால் தன் தாய்க்கு நேர்ந்த சாபம் ஸ்ரீராமருடைய கடாட்சத்தால் விமோசனமானதை அறிந்த சதானந்தர் அளவில்லாத ஆனந்தத்தை அடைந்தார். பிறகு ஸ்ரீராமருக்குச் சதா

---

¶ இராமாயணம்—பாலகாண்டம்.

னந்தர் விச்வாமித்ர மஹரிஷியின் திவ்ய சரித்திரங்களை எடுத்துரைத்தார்.

## 60. சபரி.



ராம லக்ஷ்மணர்கள், (1) கபந்தன் வழிகாட்டிய பிரகாரம், பம்பா நதியின் மேற்குக் கரையில் தவத்தில் சிறந்தவளான சபரியின் ஆச்ரமத்தைக் கண்டார்கள். நான்கு பக்கங்களிலும் மரங்கள் நிறைந்துள்ள ஒரு பர்ணசாலையைப் போய் அடைந்து, அங்கே சுற்றிப் பார்த்து, சபரி என்ற தபசியைப் பார்த்தார்கள். உயர்ந்த தவசக்தியை யுடைய சபரி, ராம லக்ஷ்மணர்களைக் கண்டதும், கூப்பின கைகளுடன் எழுந்திருந்து, அவர்களை நமஸ்கரித்து, அவர்களுடைய கால்களையும் முகங்களையும் கழுவுவதற்கு ஜலம் கொடுத்தாள். இராமர் அவளை நோக்கி, "உன்னுடைய தவம் விக்கினமன்னியில் நிறைவேறி வருகின்றதா? உன்னுடைய தவம் மென்மேலும் பெருகிக்கொண்டு வருகின்றதா? ஓ! தவத்தையே செல்வமாக உடையவளே! உன்னுடைய கோபமும் ஆகாரமும் குறைவுபட்டு வருகின்றனவா? தர்ம விதிகளைச் சரியாய் அநுசரித்து உன்னுடைய மனது சாந்தியை அடைந்திருக்கின்றதா? நீ உன்னுடைய குருவை வழிபட்டு வந்து அதன் பலனை அடைந்தாயா?" என்று கேட்டார். இவ்வாறு கேட்கப்பட்டு, தவத்தின் முடிவை அடைந்த வயது முதிர்ந்த சபரி இராமரை அணுகிப் பின் வருமாறு சொல்லலானாள் :—

"உம்முடைய தரிசனத்தால் என்னுடைய தவம் எல்லாப் பயனையும் பெற்றது. என்னுடைய ஜென்மம் சாபல்யமாயிற்று. நான் என் ஆசாரியர்களுக்குச் செய்த பணிவிடைகளால் பலன் பெற்றேன். என்னுடைய தவமும் முடிவு பெற்றது. ஓ! உத்தமரே! நீர் தேவர்களுக் கெல்லாம் முதன்மையானவர். உம்மை நான் தரி

(1) இராமாயணம்—ஆரண்யகாண்டம்,

சித்து வணங்கிவிட்டு தேவலோகத்துக்குச் செல்வேன். ஓ! சத்துருக்களை வதைப்பவரே! மனிதர்களுக்கு அருள் செய்பவரே! உம்முடைய கிருபா நோக்கத்தினால் நான் தூய்மையை அடைந்து அழிவில்லாத தேவ லோகத்தை யடைவேன். நீர் சித்திரகூட பர்வதத்தை வந்து அடைந்தவுடனே நான் தொண்டுபுரிந்து வந்த தபோதனர்கள் ஒப்பற்ற பிரகாசத்தை யுடைய தேவ விமானங்களில் ஏறிக்கொண்டு விண்ணுலகத்துக் சேகினார்கள். தர்மங்களை அறிந்தவர்களான அம்முனிவர்கள் என்னைப் பார்த்து, "ஸ்ரீராமர் உன்னுடைய புண்ணிய ஆச்ரமத்துக்கு வருவார். அவரையும் லக்ஷ்மணரையும் நீ தக்க மரியாதையுடன் அழைத்து உபசரி. ஸ்ரீராமருடைய தரிசனத்தால், போய்த் திரும்பி வராத சாச்வதமான புண்ணிய லோகத்தை யடைவாய்" என்று என்னிடம் சொல்லிப் போனார்கள். நான் உமக்காக, பம்பைக் கரையில் உண்டாகின்ற சிறந்த பழங்களைச் சேகரித்து வைத்திருக்கின்றேன்" என்றாள்.

ஸ்ரீராமர், நடந்ததையும், இனி நடக்கப் போகிறதையும் அறிந்த அவளை நோக்கி, "உன்னுடைய தவ மகிமையைப் பற்றி தனு சொல்ல நான் கேட்டிருக்கின்றேன். உனக்கு விருப்பமதுவாயின், அதை நான் என் கண்ணால் பார்க்க விரும்புகின்றேன்" என்றார். இவ்வாறு இராமர் கூறக்கேட்ட சபரி, அப் பெருங் காட்டை அவர்களுக்குக் காட்டி, "ஓ! இராகவா! மிருகங்களும் பறவைகளும் நிரம்பி மேகம்போல் அடர்ந்திருக்கின்ற இக் காட்டைப் பாரும். இதற்கு மதங்கவனம் என்று பெயர். இக் காட்டில் சுத்த ஆத்மாக்களாகிய ஆசாரியர்கள் மந்திரங்களால் பரிசுத்த மடைந்த தங்கள் தேகங்களை ஓமாக்கினியில் ஆகுதி செய்தார்கள். இந்த வேதிகையின் பேரில் தான் அவர்கள் நடுங்குகின்ற கைகளால் தேவர்களைப் புஷ்பங்கள் கொண்டு அர்ச்சிப்பது வழக்கம். ஓ! ரகுகுலோத்தமா! ஒப்பற்ற அழகையுடைய இவ் வேதிகை அவர்களுடைய தவத்தின் மகிமையால் எல்லாப் பக்கங்களிலும் இன்னும் பிரகாசித்து விளங்குகிறது. இதோ பாரும். அவர்கள் பசியால் களைத்து நகரக்கூட முடியாத தருணத்தில் அவர்கள் நினைத்த மாத்திரத்திலேயே சமுத்திரங்களும் ஒன்றாகச் சேர்ந்து வந்து இங்கு தோன்றி யிருக்கின்றன. அவர்கள் நீராடிவிட்டு இம் மரத்தின் பேரில் வழக்கமாய் வைக்கின்ற இம் மரவுரிகள் இன்னும் உணராம லிருக்கின்றன. அவர்கள் தேவாராதனை

செய்யும்பொழுது, அவர்களால் அர்ச்சிக்கப்பட்ட நீலோத்பலங்கள் இன்னும் வாடாமலிருக்கின்றன. இவ் வனத்தை எல்லாம் நீரே நேரில் பார்த்திருக்கின்றீர். எல்லாச் சங்கதிகளையும் கேட்டுமிருக் கின்றீர். உம்முடைய உத்திரவுப் பிரகாரம் நான் இந்த மானிட தேகத்தை விட உத்தேசிக்கின்றேன். இந்த ஆச்ரமங்களிலிருந்து வந்தவர்களும், என்னால் தொண்டு செய்யப்பட்டவர்களுமாகிய புண் ணிய ஆத்மாக்களிருக்கும் இடத்துக்கு நானும் போக விரும்புகி றேன்'' என்றாள். இவ்வாறு அவ் வுத்தமி சொன்ன வார்த்தையைக் கேட்டு, ஸ்ரீராமர் மிகுந்த சந்தோஷமடைந்து, "இது வெகு ஆச்சரி யம்'' என்று உரத்துக் கூறி, சபரியைப் பார்த்து, "ஓ! மாதே! நான் உன்னால் பூஜிக்கப்பட்டேன். நீ உன்னிஷ்டப்படி சுகமாய்ச் செல்ல லாம்'' என்றார். இவ்வாறு இராமர் அனுமதி கொடுக்க, ஜடை தரித்து, மரவுரியும் மான்தோலும் உடுத்து நின்ற சபரி அக்னியில் குதித்தாள். பிறகு பிரகாசிக்கின்ற அக்னி சுவாலையைப் போல் ஆகாசத்தில் எழுந்தாள். அவள் தெய்வாபரணங்களை அணிந்து, தெய்வ மாலைகளைப் புனைந்து, சந்தனம் பூசி, தெய்வ ஆடை உடுத்தி மிகவும் அழகாய் விளங்கி, அவளுடைய தேக காந்தி மின்னல் கொடிபோல் பிரகாசித்தது. சபரி தன்னுடைய திடமான தவசக்தி யால் தனது ஆசாரியர்கள் வசித்த புண்ணிய லோகங்களைத் தானும் போய் அடைந்தாள். இவ்வாறு தவம் செய்பவர்களினுடைய அள விட முடியாத பெருமையைக் கண்டு வியந்து, ஸ்ரீராமர் லக்ஷ்மண ரிடம் சொல்லி அதிசயமுற்றார்.

---

## 61. சமங்கர்.

---

சமங்கர் ☘ மிகுந்த ஞானத்தையுடைய ஒரு மஹரிஷி. ஒரு காலத்தில் நாரதர் அவருடைய திடமான ஞான வைராக்யத்தைப் பார்த்து, ஆச்சரியமுற்று, அவரைப் பின்வருமாறு கேட்கலானார்: "ஓ! மகாமுனிவரே! உல

☘ மஹாபாரதம்—சாந்திபர்வம்.

கத்தில் அநேகர் தலைகுனிவது மூலமாய்ப் பெரியோர்களை வணங்கு கின்றார்கள். ஆனால் நீரோ பூமியில் விழுந்து உம்முடைய மார்பானது பூமியில் பொருந்தும்படி நமஸ்கரித்து வணங்குகின்றீர். நீர் வாழ் நாளாகிய இந்த நதியை உம்முடைய கைகளால் தாண்டுவதுபோல் தோன்றுகிறது. நீர் எப்பொழுதும் துக்கமில்லாதவராயும் சந்தோஷ முள்ளவராயும் காணப்படுகின்றீர். நீர் மனவிசாரத்துடன் இருப் பதை நான் எப்பொழுதும் பார்த்ததில்லை. நீர் எப்பொழுதும் மனத் திருப்தியும் குதூஹலமும் உடையவராயிருக்கின்றீர். நீர் ஒரு குழந்தை ஆனந்தமாய் விளையாடுவதுபோல் காணப்படுகிறீர்.'' இவ் வாறு கேட்கப்பட்ட சமங்கரிஷி, நாரதமுனிவரை நோக்கி, "ஓ! நாரத மகாமுனிவரே! மூன்று காலங்களையும் பற்றிய உண்மை எனக் குத் தெரியும். ஆதலால், நான் எப்பொழுதும் சோகத்தை யடைகிற தில்லை. கர்மங்களுக்கு மூலம் இன்னதென்றும், அக் கர்மங்களின் பலன்கள் என்னவென்றும், கர்மங்களுக்குத் தக்கவாறு பலன்கள் பல வாறு யிருக்கின்றன வென்றும் நானறிவேன். ஆதலால், நான் துக் கத்துக்கு வசப்படுகிறதில்லை. படியாத மூடர்கள், தரித்திரர்கள், செல்வவான்கள், குருடர்கள், மந்தர்கள், பைத்தியம் பிடித்தவர்கள், நாம் ஆகிய எல்லோரும் இருக்கின்றோம். எல்லோரும் அவர்கள் பூர்வஜென்மங்களில் செய்த கர்மங்களுக்குத் தக்கவாறு இப்பொழுது ஜென்மம் எடுத்திருக்கின்றார்கள். யாதொரு வியாதியு மில்லாமல் சுகஜீவிகளா யிருக்கின்ற தேவர்கள் அம்மாதிரி இருப்பதற்கு அவர் களது பூர்வஜென்மங்களே காரணம். பலவான்களும், பலமற்றவர் களும் அவர்களுடைய பூர்வகர்மங்களின் பலனுக்குத் தக்கபடி இந்த ஜென்மத்தில் வாழ்கின்றார்கள். ஆயிரம் உள்ளவர்களும் ஜீவிக்கின்றார் கள்; நூறு உள்ளவர்களும் ஜீவிக்கின்றார்கள். துக்கத்தில் ஆழ்ந் திருப்பவர்களும் ஜீவிக்கின்றார்கள். ஜீவிக்கின்ற என்னையும் பாரும். நான் துக்கத்தை அடையாதிருக்கும்பொழுது தர்மவழிகளை அனு சரிப்பதினாலும், புண்யகாரியங்களைச் செய்வதினாலும் எனக்கு அடையவேண்டிய பலன் என்ன இருக்கின்றது? உலகத்திலுள்ள சுக துக்கங்கள் நிலையற்றவைகளாகையால் அவைகளால் நான் மனக் கலக்க மடைகின்றதில்லை. எதை உத்தேசித்து மனிதர்களை ஞானி கள் என்று சொல்லுகிறார்களோ, எது ஞானத்துக்கு வேராக இருக் கின்றதோ, அது என்னவென்றால், இந்திரியங்கள் கலக்கமற் றிருப் பது தான். இந்திரியங்களே தவறுதலுக்கும் துக்கத்துக்கும் காரணமா

ருக்கின்றன. இந்திரியக் கலக்கமுள்ள ஒருவனை எப்பொழுதும் ஞானவான் என்று சொல்லமுடியாது. ஞானமில்லாத மூடன் உடையும் கர்வமானது அவனுடைய மூடத்தன்மைக்கு ஒரு அடையாளமாக யிருக்கின்றது. புத்திக்கலக்கமுள்ள மூடனுக்கு இவ் வுலகமும் இல்லை; பரஉலகமும் இல்லை. துக்கங்களும் சுகங்களும் சாச்வதமன்று. ஆதலால், சுகதுக்கங்கள் மாறி மாறிக் கொண்டு வருகின்ற இவ் வுலக வாழ்க்கையில் என்னைப் போன்றவர்கள் மோகமடைவார்களோ? என்போன்றவர்கள் இன்பசுகங்களுக்குரிய விஷயங்களை இலக்ஷியம் செய்யார்கள். அவ் விஷயங்களால் அடையப்படும் சுகத்தையும், அவைகளால் ஏற்படும் துக்கங்களையும் கருதார்கள். தன்னுடைய சந்தோஷத்தை தன்னிடத்திலிருந்தே அடைகின்ற ஒருவன் பிறருடைய சொத்துக்களை எப்பொழுதும் இச்சியான். தன் முயற்சியால் கிடையாத லாபங்களை அடைய விரும்பமாட்டான். அவன், ஏராளமான பொருள்கள் கிடைத்தாலும், சந்தோஷத்தினால் மமதை யடைய மாட்டான். அவன், தான் பொருள் இழந்ததற்குத் துக்கத்தை அடையவும் மாட்டான். சிநேகிதர்கள், செல்வம், உயர்பிறப்பு, வேதசாஸ்திரங்களில் பாண்டித்யம், மந்திரங்கள், சக்தி ஆகிய இவைகள் ஒன்றும் ஒருவனை மறு உலகத்தில் துக்கங்களிலிருந்தும் தப்புவிக்க முடியாது. அவனுடைய சத்கர்மத்தினால் தான் பரலோகத்தில் சுகத்தை யடையலாம். யோக மறியாதவனுடைய புத்தியானது மோட்சமார்க்கத்தில் முயற்சிக்கத் தக்கதன்று. யோகமில்லாதவன் சுகத்தை யடைய முடியாது. மனதை வெளியில் விடாமல் அடக்குவது, துக்கத்துக்கு இடம் கொடுக்காத, மனவுறுதி ஆகிய இவைகள் இரண்டும் எவனுக்கு இருக்கின்றனவோ அவனைச் சுகம் தானாகவே வந்தடையும். எது இன்பமாயிருக்கின்றதோ, அது சந்தோஷத்தைக் கொடுக்கின்றது. சந்தோஷ மடைவதால் கர்வம் உண்டாகிறது. கர்வத்தினால் துக்கம் உண்டாகின்றது. இத்தியாதி காரணங்களினால் நான் இன்பம், சந்தோஷம், கர்வம், துக்கம், இவைகளை விலக்குகின்றேன். மனதுக்கு மோகத்தையும் மயக்கத்தையும் உண்டுபண்ணுகின்ற பயம், கர்வம், தேகசம்பந்தமான சுகதுக்கங்கள், இவைகளில் நான் பற்றற்றவனாய், சாக்ஷி போல் பார்த்துக் கொண்டிருக்கிறேன். தனம், காமம், ஆசை, மோகம், இவைகளையெல்லாம் தள்ளிவிட்டு, யாதொரு சோகமும் மனக்கவலையு மில்லாமல், நான் இப் பூமியில் சஞ்சரிக்கின்றேன். அமிர்தபானம் செய்தவனைப் போல்

எனக்கு இம்மையிலாவது மறுமையிலாவது இறப்பு, அதர்மம், லோபம், இத்தியாதிகளினால் உண்டாகக்கூடிய பயம் யாதொன்றும் இல்லை. நான் செய்த உக்ரமும் அழிவற்றதுமுமான தவத்தின் பயனாக இந்த ஞானத்தை அடைந்தேன். ஆதலால், ஓ! நாரதரே! என்னைச் சோகம் வந்து அடைந்தாலும், அது என்னை எவ்விதத்திலும் வருந்துவதில்லை'' என்று இவ்வாறு மனிதர்களுக்குத் துக்கத்தாலும், மரணத்தாலும் உண்டாகும் பயத்தை நிவர்த்திக்கும் வழியை அனுபவத்தால் அநுஷ்டித்து வந்த தவசிரேஷ்டராகிய சமங்கமுனிவர் நாரதருக்குச் சொன்னார்.

---

## 62. சமீகர் 1—வது.

---

சமீகர் (1), தவசிரேஷ்டரும் பிரமத்தியானியுமான ஒரு மஹரிஷி. அவருக்கு அடியில் கண்டபடி ஆகாசத்தினின்றும் ஒரு சத்தம் கேட்டது. அதாவது:—''நீ எனக்குப் பிரியனாக இருந்து, உன் பிராணனை எனக்குக் கொடுத்து என்னைக் காக்கவேண்டும்.''

அவர் இந்த வார்த்தைகளைக் கேட்டதே யாரோ திவ்யமான ஸ்திரீ மோகமுற்று இப்படிக் கூறுகின்றாள் என்று கருதி, மனதிற் காமங்கொண்டு, தமது சுக்கிலத்தை அங்கிருந்த உலர்ந்த சருகில் விடுத்தார். அச் சுக்கிலத்திலிருந்து மகா ரோஷமுடைய ''ப்ருங்கி'' என்பவர் ரிஷபமுகத்துடன் பிறந்தார். அவர் பரமசிவனுடைய பிரமதகணங்களில் ஒருவர்; சிறந்த சிவபக்தர்களில் ஒருவர்.

---

(1)சிவ மஹாபுராணம்.

# 63. சமீகர் 2—வது.

இவருடைய ☘ சரித்திரம் முன்னமேயே ஆஸ்திக மஹரிஷியின் சரித்திரத்தில் வந்திருக்கிறது. மந்தபால முனிவருக்கு ஜரிதை என்ற சாரங்கத பக்ஷியிடத்து நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். அவர்களில் நான்காவதும், கடைசிக்குமாரனுமான துரோணர் என்பவர் பக்ஷிரூபமாயிருந்தாலும் வேதங்களை நன்றாய்க் கற்றுணர்ந்தவர். சம்பாதி என்ற கழுகு ராஜனுடைய வம்சத்தில் ஜெனித்த காந்தாரம் என்ற கழுகு ராஜன், மேனகை என்ற அப்ஸரஸின் குமாரத்தியும், பெண்பக்ஷிரூபத்தை அடைந்தவளுமான ஸ்திரீயை மணந்து, அவளிடத்துத் 'தார்க்ஷி' என்ற மகளைப் பெற்றான். அவள், மேற்சொன்ன துரோணருக்கு மனைவியாகி 3½ ஷீ முள்ள கெர்ப்பவதியா யிருந்தாள். அப்பொழுது அவள், கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் கொடிய போர் நடந்து கொண்டிருந்த குருக்ஷேத்திரத்துக்குச் சென்று, அங்கே தவிர்க்க முடியாத ஊழ்வினையின் பயனால் யுத்த முனையைப் போயடைந்தாள். அங்கே பகதத்தனுக்கும் அர்ச்சுனனுக்கும் பலமான யுத்தம் நடந்துகொண்டிருப்பதைப் பார்த்தாள். அப்பொழுது பார்த்தனுடைய வில்லிலிருந்து விடுபட்ட நீலநிறமுள்ள ஒரு பாணமானது, நாகம்போல் சீறிவந்து தார்க்ஷியின் வயிற்றைக் கிழித்துக்கொண்டு போயிற்று. அப்பொழுது அவள் வயிற்றிலிருந்த நான்கு முட்டைகள் பிரகாசத்துடன் ஒரு சிறுபஞ்சு முட்டைபோல் பூமியில் விழுந்தன. அதேகாலத்தில் 'சுப்ரதிகா'' என்ற சிறந்த யானையின் மீதிருந்த பெரிய மணியும் பாணத்தால் அடிபட்டுக் கீழே விழுந்தது. அது தெய்வகெதியாய் மேற்சொன்ன முட்டைகளின் பேரில் விழுந்து அவைகளைச் சாவதானமாய் மூடிக்கொண்டது. அதற்குப் பிறகு, வெகுநாளாக பாரதயுத்தம் நடந்து முடிவு பெற்றது. பிறகு, தவசிரேஷ்டரான சமீகமுனிவர் அம் முட்டைகளிருந்த இடத்தை நோக்கி வந்தார். அங்கே மணிக்குள்ளாக இருந்து உண்டான சத்தத்தைக் கேட்டு, ஆச்சரிய மடைந்து, அம் மணியைத்

☘ மார்க்கண்டேய புராணம்.

தூக்க, அங்கே நான்கு பறவைக் குஞ்சுகளிருக்கக் கண்டார். "இக் கொடிய யுத்தத்தில் இப் பக்ஷிகள் முட்டைகளா யிருந்ததும், அவை களின் காப்பாக இப் பெருமணி வீழ்ந்ததும் மிகவும் ஆச்சரியகரமா னது. இது தெய்வகிருபை என்றே எண்ணுகிறேன். இவைகளால் உலகத்துக்கு க்ஷேமம் உண்டாகும்" என்று இவ்வாறு முனிவர் சொல்லி, அப் பக்ஷிகளைக் கவனமாய் ரக்ஷித்துப் போஷித்து வரும்படி தனது சிஷ்யர்களுக்கு ஆக்ஞாபித்தார். அவைகளும் ஒரு மாச காலமான பிறகு, சகல ஞானமும் நிறைந்தவைகளாய் சமீகரிஷியைப் பார்த்து, "ஓ! பிதாவே! தாயை யிழந்த எங்களை நீர் ரக்ஷித்துக் கருணை யுடன் வளர்த்தீர். நாங்கள் இப்பொழுது எங்களைக் காத்துக் கொள்ள வயதுடையவர்களாய் விட்டோம். இனிமேல், நாங்கள் யாது செய் வது?" என்று கேட்டன. பிறகு, அவைகள் சமீக முனிவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, மரங்களும் கொடிகளும் நிறைந்த விந் தியபர்வதத்தைப் போயடைந்தன. அங்கே அந்த நான்கு பக்ஷிக ளும் வேதங்களை ஓதுவதிலும், மனதை யோகத்தில் அமர்த்திக் கடு மையான தவம் செய்வதிலும் காலம் கழித்து வந்தன. ஜைமினி என்ற மகரிஷியானவர் பாரத சரித்திர விஷயமாய்த் தனக்குண்டான சந்தேகங்களைத் தீர்க்கும் பொருட்டு மார்க்கண்டேய முனிவரைக் கேட்க, அவர் ஞானவான்களான இந் நான்கு பக்ஷிகளிடம் போய்க் கேட்டுத் தெரிந்து கொள்ளும்படி கட்டளையிட்ட பிரகாரம், ஜைமினி யானவர் அப் பக்ஷிகளிடம் போய்த் தமது சந்தேகங்களை அவை களுக்குத் தெரிவித்து, அவைகளிடமிருந்து தமது சந்தேகங்கள் தீர்ந்து தெளிவடைந்தார். அப் பக்ஷிகளால் சொல்லப்பட்ட விருத் தாந்தமானது மார்க்கண்டேய புராணத்தில் சவிஸ்தாரமாகச் சொல் லப்பட்டிருக்கின்றது.

---

## 64. சாத்வத்.



தமா (1) என்ற ரிஷிக்குச் சாத்வத் என்ற ஒரு குமாரர் இருந்தார். அவர் கையில் வில் பிடித்தவ

(1) மஹாபாரதம்—ஆதிபர்வம்.

ராய்ப் பிறந்தார். அவர் தனுர்வேத சாஸ்திரங்களைப் படிப்பதில் மிகவும் ஆவலுள்ளவராய், அதில் தேர்ச்சியடைந்தார். அவருடைய தவமகிமையினால் சகல அஸ்திரசஸ்திரங்களையு மடைந்தார். அவருடைய தனுர்வேத சாஸ்திர ஞானத்தையும், அவருடைய தவசக்தியையும் கண்டு, இந்திரன் அவரிடத்துப் பயங்கொண்டான். அவன் ஜானபதி யென்ற ஒரு அப்ஸரஸ்திரீயை அழைத்து, "சரத்வத் ரிஷியினுடைய தவத்தை அழிப்பதற்கு வேண்டிய முயற்சி செய்" என்று, அவளைப் பூலோகத்திற்கு அனுப்பினான். அவள் சரத்வத் மஹரிஷியினுடைய அழகான ஆச்ரமத்தை யடைந்து, வில், அம்புகள் சகிதம் விளங்கும் அந்த ரிஷியைத் தன் சௌந்தரியமான அங்கங்களால் மயக்க ஆரம்பித்தாள். உலகத்தில் ஒப்பில்லாத அழகுடையவளாயும், காட்டில் ஏகாந்தமாயும், ஒரே வஸ்திரம் உடுத்தவளாயும் இருந்த அந்த அப்சரஸைக் கண்டு சரத்வத்ரிஷியானவர் குதூஹலத்தை யடைந்தார். அவருடைய அம்பும் வில்களும் அவர் கையினின்றும் வழுவின. அவருடைய தேகமுழுவதும் ஆசையால் அசைவுற்றது. ஆகிலும் தவசக்தியும் மனோதிடமும் நிறைந்தவ ராகையால், அத் தூண்டுதலுக்கு உட்படாமல், பொறுமையினால் தன் ஆசையை அடக்கிக்கொண்டார். ஆனபோதிலும் திடீரென அவர் அடைந்த மனச் சஞ்சலத்தினால் அவரை யறியாமல் அவருடைய ரேதஸ் வெளி வந்தது. அவர் தன்னுடைய வில், அம்புகள், மான்தோல் இவைகளை வைத்துவிட்டு, அப்சரஸ்திரீயினின்றும் விலகி வேகமாய் ஓடினார். என்றாலும், அவருடைய ரேதஸானது நாணல்களின் மத்தியில் விழுந்து, இரண்டு பாகங்களாகப் பிரிய, அவைகள் பிறகு இரு குழந்தைகளாக ஆயின. அஸ்தினாபுரத்தரசனாகிய சந்தனு மஹாராஜன் வேட்டையாடச் சென்றிருந்த காலத்தில், அவ்வரசனுடைய ராணுவ வீரனொருவன் அந்த இரட்டைக் குழந்தைகளைப் பார்த்தான். வில், அம்புகள், மான்தோல் இவைகள் அங்கு இருப்பதையும் கண்டு தனுர்வேதத்தில் வல்லவரான ஒரு பிராமணருடைய குழந்தைகளாக யிருக்கவேண்டும் என்று நினைத்தான். அவ்வாறு தீர்மானித்துக்கொண்டு, அக் குழந்தைகளை வில், அம்புகளுடன் கொண்டு போய், தன் அரசனிடம் காண்பித்தான். அவர்களைப் பார்த்து அரசன் மிகவும் இரக்கங்கொண்டான். இவைகள் என் குழந்தைகளாய் இருக்கட்டும் என்று சொல்லி, அக் குழந்தைகளைத் தன் அரண்மனைக்குக் கொண்டுவந்து, சாஸ்திரப்படி அவர்களுக்குச் செய்ய

வேண்டிய ஜாதக நாம சமஸ்காராதிகளைச் செய்தார். அக் குழந்தைகளிடத்துக் கிருபையினால் அவர்களைத் தான் எடுத்து வளர்த்த காரணத்துக்கு அறிகுறியாக அக் குழந்தைகளில் ஆண் குழந்தைக்குக் "கிருபன்" என்றும், பெண் குழந்தைக்குக் "கிருபி" என்றும் நாமகாணமிட்டான். சரத்வத் ரிஷியானவர் அவருடைய ஞானதிருஷ்டியால் தம்முடைய குழந்தைகள் சந்தனு மகாராஜாவின் அரண்மனையிலிருக்கிறார்கள் என்று தெரிந்துகொண்டார். அதன்பேரில், அவர் அரசனிடத்துச் சென்று, தம்முடைய வம்சம், அவைகள் தம்முடைய குழந்தைகள் ஆகிய விருத்தாந்தங்களையெல்லாம் சொன்னார். அவர் தன் குமாரருக்குத் தனுர்வேத சாஸ்திரங்கள் முழுவதையும், மற்ற வேத வேதாங்கங்கள் முதலிய சாஸ்திரங்களையும் கற்றுக் கொடுத்தார். கூடிய சீக்கிரத்தில் கிருபர் தனுர்வேதம் முதலிய சகல சாஸ்திரங்களிலும் வல்லவரானார். அவரிடத்திருந்து திருதராஷ்டிர ராஜனுடைய நூறு புத்திரர்களான துரியோதனாதியர்களும், பாண்டவர்களும், யாதவர்களும், விருஷ்ணிகளும், இன்னும் மற்ற நானாவித தேசங்களிலிருந்து பற்பல ராஜகுமாரர்களும் வில்வித்தை கற்றுக் கொண்டார்கள். கிருபி என்பவள் பாரத்வாஜருடைய புத்திரராகிய துரோணாசாரியாருக்கு விவாகம் செய்து கொடுக்கப்பட்டாள். அவர்களுடைய புத்திரன் அச்வத்தாமன். துரோணாசாரியாரும் தனுர்வேத சாஸ்திரத்தில் மகாநிபுணராயிருந்து கிருபருக்குப் பிறகு, மேற்சொன்ன ராஜகுமாரர்களுக்குத் தனுர்வேத ஆசாரியராக இருந்தார்.

ஷை விருத்தாந்தம் பாரதத்தில் உள்ளது. பாகவதத்தில் சத்யத்ருதி யென்பவருடைய புத்திரர் சரத்வத் என்றும், அவருக்கு ஊர்வசியைப் பார்த்ததனால், வெளிவந்த ரேதஸிலிருந்து கிருபர், கிருபி உண்டானார்களென்றும் சொல்லப்படுகிறது. இது வேறு கல்ப சரித்திரமென்று தெரிகிறது.

## 65. சரபங்கர்.



சரபங்கர் (1), அருமையான பெரிய தவத்தைச் செய்து, அத் தவப் பயனால் பிரம்மலோகத்தை யடை

(1) இராமாயணம்—ஆரண்யகாண்டம்.

யத்தக்கவராயிருந்தார். அவர் கௌதம வம்சத்தில் ஜனித்தவர். தேவேந்திரன் மற்றத்தேவர்கள் சகிதம் சரபங்கமகரிஷியின் ஆச்ரமத்துக்கு வந்து, அவரைப் பிரமலோகத்திற்கு வரும்படி வேண்டினன். அப் பதவியானது இந்திரியங்களை அடக்கி உக்கிரமான தவம் செய்தவர்களுக்கேயன்றி, சாமான்ய ரிஷிகளுக்குக் கிடைக்கக் கூடியதன்று. அப்பொழுது பரமாத்மாவாகிய மகாவிஷ்ணு ஸ்ரீராமனாக அவதரித்துத் தமது ஆச்ரமத்துக்கு வரப் போகிறாரென்பதை ஞான திருஷ்டியாலறிந்து, அவரைத் தரிசித்து அதிதி உபசாரங்கள் செய்து, பிறகு சிறந்த லோகங்களுக்குப் போகவேண்டுமென்று எண்ணினர். அச் சமயம் ஸ்ரீராமரும் வந்தார். அப்பொழுது, ஸ்ரீ ராமர் தன்னைப் பார்ப்பது தகாதென்றும், ஸ்ரீராமர் ராக்ஷதர்களை ஜயித்த பிறகு அவர் தன்னைப் பார்ப்பது உசிதமென்றும் நினைத்து, தேவேந்திரன் மற்றத் தேவர்களுடன் தேவலோகத்துக்குப் புறப்பட்டுப் போனன். அக்னிஹோத்திரம் செய்து கொண்டிருந்த சரபங்கரும் இராமலக்ஷ்மணர்களுக்கு நல்வரவு கூறி, அவர்களுக்குத் தங்குவதற்குத் தக்க விடுதிகளும் நியமித்துக் கொடுத்தார். பிறகு, சரபங்கர் ஸ்ரீராமரை நோக்கி, "நான் பிரமம், நாகப்பிரஷ்டம் முதலிய லோகங்களை என்னுடைய தவப்பெருமையால் அடைந்திருக்கின்றேன். எனக்காக நீர் அவைகளைப் பெற்றுக் கொள்ளும்" என்று சொன்னர். அதற்குச் சகல கல்விகளிலும் தேர்ந்த புத்திமானன ஸ்ரீராமர், "ஓ! மகாமுனிவரே! அந்த லோகங்களையெல்லாம் நானே என்னுடைய முயற்சியால் அடைந்து கொள்கிறேன். நான் இந்த வனத்தில் வசிப்பதற்குத் தக்க இடம் எது வென்று எனக்குக் காட்டும்படி உம்மை வேண்டுகின்றேன்" என்று கேட்டார். சரபங்கர், "ஓ! இராமா! இக் காட்டில் மிகுந்த தவசக்தியையுடைய புண்ணியசீலரான சுதீக்ஷணர் என்ற மகாமுனிவர் ஒருவர் இருக்கின்றார். அவர் உமக்கு வேண்டிய நன்மையைச் செய்வார். வழக்கமாய்ப் போகும் திசைக்கு மாறகப் போகின்ற 'மாந்தாகினி' நதியின் வழியாய் நீர் செல்லும். அப்படிப் போனல் நீர் சுதீக்ஷணருடைய ஆச்ரமத்தைப் போய் அடைவீர். ஓ! உத்தமரே! இதுதான் நீர் போகவேண்டிய வழி. நீர் இங்கு கொஞ்ச நேரம் தங்கி, நாகமானது தன் சட்டையை யுரிவது போல் நான் இந்த மானிடதேகத்தை விட்டு நீங்குவதைப் பாரும்" என்று சொன்னர். பிறகு, சரபங்கர் அக்னி வளர்க்கச் செய்து, அதற்கு மந்திரபூர்வமாய் ஆஹுதிகள் செய்து, பிறகு அக்னியில் பிர

வேசித்தார். அக்னியில் அவருடைய ரோமம், தளர்ந்த தோல், எலும்புகள், சதை, ரத்தம் முதலிய எல்லாம் எரிந்துபோயின. பிறகு அவர் தேவசரீரம் பெற்று, தேவகாந்தியுடன், ஒரு இளைஞராகத் தோன்றினார். அவர் அக்கினியிலிருந்து எழுந்து, தேஜசுடன் விளங்கினார். அவர், ஹோமாக்னியைக் கொண்டு யாகாதிகள் செய்து கொண்டிருக்கும் முனிவர்கள், தேவர்கள், இவாகளுடைய லோகங்களை எல்லாம் தாண்டி, பிரமலோகத்துக்கு உயரச் சென்றார். பூலோகத்தில் உத்தமமான புண்ய கருமங்களைச் செய்த அம் மகாத்மா, தம்மைச் சார்ந்த மற்றத்தேவர்களுடன் வீற்றிருக்கும் பிரமதேவரைக் கண்டார். பிரமதேவரும் அப் பிராமணோத்தமரைக் கண்டு, மிகுந்த சந்தோஷத்தை யடைந்து, "வருக" என்று கூறினார். இவ்வாறு சரபங்கர் தமது தவத்தின் மகிமையால் பிரமலோகத்தை யடையும்படியான பாக்யத்தைப் பெற்றார்.

---

## 66. சாகல்யர்.

---

பரீக்ஷித்து மகாராஜன் தக்ஷகன் என்ற பாம்பினால் இறக்கக்கடவது என்று சபிக்கப்பட்டதும், தக்ஷகனுடைய விஷத்தினின்று அவ்வரசனைக் காப்பாற்றுமாபொருட்டு சென்று கொண்டிருந்த காசியபர் தக்ஷகனிடமிருந்து வேண்டிய திரவியங்களைப் பெற்றுக்கொண்டு அரசனைக் காப்பாற்றாமல் தமது வீட்டிற்குத் திரும்பிச்சென்றதும் ஆஸ்திகமஹா முனிவருடைய சரித்திரத்தில் விவரித்துக் கூறப்பட்டிருக்கின்றது. காசியபரோ (1) அரசனுடைய உயிரைக் காப்பாற்றும்படியான சக்தியுடையவராயிருந்தும் பொருளாசையால் அவ்வாறு செய்யத்தவறியதால் அவரே அரசனைக் கொன்றதற்குச் சமானமாயினர். இக் காரணத்தால் அவர் எங்கே போனாலும், ஊரிலுள்ள எல்லா ஜனங்களும், ஆச்ரமத்திலுள்ளவர்களும் அவரை வெகுவாய் நிந்தித்து அடித்துத் துரத்திவிட்டார்கள். அவர் வெகுகாலம் அலைந்து, கடைசியாகத் தவசிரேஷ்டராகிய சாகல்யமகரிஷியைச் சரணமடைந்து வணங்கி,

(1) ஸேது மஹாத்மியம்.

"ஸ்வாமி! நானெங்கே போனாலும் பிராமணர்கள், முனிவர்கள், பந்துக்கள், மித்திரர்கள், மற்றுமுள்ள எல்லோரும் என்னை நிந்தித்து அடித்துத் துரத்துகின்றார்களே! இதன் காரணமென்ன? நான் என்ன பாபம் செய்தேன்? அதை நீர் கிருபை புரிந்து எனக்குச் சொல்ல வேண்டும்" என்று கேட்க, சாகல்யரும் சற்று நேரம் யோஜித்து, "நீ பரீக்ஷித்து மகாராஜாவைக் காப்பாற்றச் சென்றவன் விஷத்தினின்றும் அவனை ரக்ஷிக்கச் சக்தியிருந்தும் துராசையினால் காப்பாற்றாமல் விட்டுவிட்டாய். அப்படிப்பட்டவன் மகாபாதகனென்றும், அவனைப் பார்க்கக் கூடாதென்றும், அவனோடு பேசவும் கூடாதென்றும், அவனோடு பந்திபோஜனம் பண்ணக்கூடா தென்றும் தர்மசாஸ்திரங்கள் கூறுகின்றன. தவிரவும், பரீக்ஷித்து மகாராஜன் மிகவும் தார்மிகன்; விஷ்ணு பக்தி யுடையவன்; மகா யோக்கியன்; வியாஸ புத்திரரான சுகமுனிவரிடத்தில் ஹரிகதையை பக்தியோடு கேட்டவன். அவ்வித பாகவத உத்தமனை நீ ரக்ஷியாமல் பாதிமார்க்கத்தில் திரும்பிவிட்டபடியால் நீயே அவனைக் கொன்றுவிட்டாய் என்று சொல்லலாம்" என்று பதிலுரைத்தார். காசியபர் அம் முனிவரை மறுபடியும் வணங்கி, "ஸ்வாமி! எப்படியாவது இந்தப் பாபத்தினின்றும் நான் நீங்கி, மனிதனாகும்படி கிருபை புரிய வேண்டும்" என்று கெஞ்சினார். சாகல்யர் கொஞ்ச நேரம் தியானத்திலிருந்த பிறகு, "ஓ! காசியபா! தக்ஷிண சமுத்திரத்தில் கந்தமாதனத்தில் காயத்ரீ, சரஸ்வதி என இரண்டு புண்ணிய தீர்த்தங்களிருக்கின்றன. நீ அதில் ஸ்நானம் பண்ணினால் பரிசுத்தனாவாய். புறப்பட்டுப் போ" என்று சொல்ல, காசியபர் அம் முனிவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு, பக்தியுடன் அத் தீர்த்தங்களில் கொஞ்சநாள் ஸ்நானஞ் செய்துவந்தார். அதனால் அவருடைய பாபம் விலகி, பரிசுத்தரானார். பிறகு காயத்திரியும், சரஸ்வதியும் ஸர்வாபரண அலங்கிருதர்களாய்த் தங்களுடைய திவ்ய ரூபங்களுடன் அப் பிராமணர் முன் தோன்றி, அவருக்குத் தரிசனம் கொடுத்தார்கள். அவர், அவர்களை வெகுவாக ஸ்தோத்திரஞ் செய்ய, அவர்கள், "ஓ! காசியபனே உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்; கொடுப்போம்" என்றார்கள். அதற்குக் காசியபர், "ஓ! தேவிகளே! உங்கள் தரிசனத்தினாலேயே நான் கிருதார்த்தனாய்விட்டேன். உங்கள் புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து பாபவிமோசன மடைந்த என்னைப் பிராமணர்கள், முனிவர்கள், பந்து மித்திரர்கள் யாவரும் அங்கீகரித்துக் கொள்ளவேண்டும். என் மனது

பர்பத்தில் செல்லாமல், எப்பொழுதும் தர்மத்திலேயே நோக்கமா யிருக்கவேண்டும். இந்த வரம் எனக்குப் போதும்" என்று கேட்க, அவர்கள், "அப்படியே ஆகக் கடவது" என்று அனுக்கிரகித்து விட்டு மறைந்து போயினார்கள். சாண்டில்யரும் தமது தேசத்திற்குச் சென்று, பந்துக்கள் முதலிய யாவராலும் சேர்த்துக்கொள்ளப்பட்டு, தர்மசீலராய்க் காலங்கழித்து நற்கதியை யடைந்தார். இவருக்கு மரணம் நேர்ந்த விருத்தாந்தத்தை யாக்ஞவல்கிய முனிவரின் சரித்திரத்தில் பார்க்கலாம்.

இவர் ஒரு கிருஹ்யசூத்திர கர்த்தா.

---

## 67. சாண்டிலி.

---



வருடைய சரித்திரம் காலவ முனிவரின் சரித்திரத்தில் வருகிறது.

---

## 68. சாண்டில்யர்

---



த்ம ஞானத்தை [1] அறியும் பொருட்டு அனுசரிக்க வேண்டிய யோக முறைகளையும், அந்த யோகாப்யாஸத்தினால் ஸ்தூலசரீரம், லிங்கசரீரம், பிரளயகாலத்திலும் கூட அழியாமலிருக்கின்ற காரண சரீரம் இவைகளை யெல்லாம் கடந்து, மனதுக்கும் அறிவுக்கும் எட்டாத பரமானந்த நிலையை அடையும் விதங்களையும் இம் மகா முனிவர் தம்முடைய யோகசக்தி

---

(1) மஹாபாரதம்—சாந்திபர்வம்.

யிலும், ஞானத்திலும், சாந்தோக்யோபநிஷத்தில் தெளிவாய்க் கூறியிருக்கின்றனர்.

---

## 69. சாந்தி.



வர் பூதி முனிவரின் சிஷ்யர். இவரது சரித்திரத்தைப் பூதிமுனிவரின் சரித்திரத்தில் காணலாம்.

---

## 70. சாபண்யர்.



வர் [1] ப்ருகு மகரிஷியின் புத்திரர். யமுனாநதிக் கரையில் ஆச்ரமம் கட்டிக்கொண்டு, அங்கே தவம் செய்துகொண்டிருந்தார். ஸ்ரீராமருடைய கடைசித் தம்பியாகிய சத்ருக்னர் லவணாசுரனோடு யுத்தம் செய்வதற்காகப் போகும்பொழுது, வழியில் அம் முனிவருடைய ஆச்ரமத்தில் தங்கி, அவரிடமிருந்து லவணாசுரனுடைய பராக்கிரமம், அவனுடைய வாளாயுதத்தின் சக்தி முதலிய விருத்தாந்தங்களை அறிந்துகொண்டார்.

---

## 71. சாருசீர்ஷர்.



ம் மகாமுனிவர் [2] அலம்பனர் என்ற முனிவரின் புத்திரர். இவர் இந்திரனுக்குப் பிரியமான நேசர்; விருத்த

---

(1) இராமாயணம்—உத்தரகாண்டம். [2] மஹாபாரதம்—அநுசாஸனபர்வம்.

தலையுடையவர். இவர் ஒரு காலத்தில் கோகர்ண பர்வதத்துக்குச் சென்று, நூறு வருஷகாலம் அருமையான தவம் புரிந்தார். அவருடைய தவத்துக்கு மகாதேவர் மகிழ்ந்து, உத்தமமான நூறு புத்திரர்கள் அம் முனிவருக்கு உண்டாகும்படி அருள் செய்தார். அப்படியே சாருசீர்ஷ முனிவருக்கு நூறு புத்திரர்கள் ஸ்திரீசம்பந்தமில்லாமல் உண்டானார்கள். அவர்கள் இந்திரிய நிக்ரஹம் உள்ளவர்களாயும், தர்மத்தை நன்றாய் அறிந்தவர்களாயும், மிகுந்த தேஜஸுடையவர்களாயும், வியாதி, துக்கம் இவைகள் அற்றவர்களாயும், லட்சம் வருஷங்கள் ஜீவித்து வாழ்ந்திருக்கும்படியான நீண்ட ஆயுள் உள்ளவர்களாயும் இருந்தார்கள். இப் பெரும் பாக்கியத்தை இம் மகாமுனிவர் அவருடைய தவமகிமையினால் அடைந்தார்.



## 72. சுகர்.

ஒரு காலத்தில் (1) பலவித புஷ்பங்கள் நிறைந்த மேருமலையின் உச்சியில் மகாதேவர் தம் பரிவாரங்களாகிய பூதகணங்களுடன் சுகமாக அமர்ந்திருந்தார். ஹிமயராஜனுடைய புத்திரியாகிய பார்வதிதேவியும் அவர் கூட இருந்தாள். அம் மலை உச்சிக்கு அருகாமையில், த்வீபத்தில ஜெனித்த வியாசமஹரிஷி அபூர்வமான கடும் தவம் செய்தார். தன்னுடைய யோகசக்தியினால் தன் ஆத்மாவிலே தான் அடங்கினவராய், ஒரு புத்திரனை அடையவேண்டுமென்ற விருப்பத்துடன் அகோரமான தவஞ் செய்தார். அவர் பகவானைக் குறித்து, "ஓ! சகல சக்திகளும் நிறைந்தவரே! அக்னி, பூமி, ஜலம், வாயு, ஆகாசம் இவைகளுடைய சக்திகளெல்லாம் சேர்ந்து அடையப்பெற்ற ஒரு குமாரன் எனக்கு வேண்டும்" என்று சொல்லிப் பிரார்த்தித்து ஸ்தோத்திரம் செய்தார்.

இவ்வாறு தம்முடைய திடமான யோகசக்தியால் பகவானைத் தியானித்து, நூறு தேவவருஷ காலம் வாயுவை மட்டும் பக்ஷித்துக்

---

(1) மஹாபாரதம்—சாந்திபர்வம்.

கொண்டு தவஞ் செய்தார். அந்த இடத்துக்கு மகாத்மாக்களாகிய சகல ரிஷிகள், இராஜரிஷிகள், சாத்யர்கள், வசுக்கள், ஆதித்யர்கள், ருத்ரர்கள், சூரியன், சந்திரன், மருத்துக்கள், சமுத்ரங்கள், நதிகள், அச்வினி தேவர்கள், மற்றத் தேவர்கள், கந்தர்வர்கள்; நாரதர், பர்வதர், விச்வாவஸு என்ற கந்தர்வன், ஸித்தர்கள், அப்ஸரஸ்கள் ஆகிய இவர்களெல்லோரும் வந்தார்கள். அங்கே ருத்ரர் என்று சொல்லப்பட்ட மகாதேவர், கர்ணிகாரபுஷ்பங்கள் நிறைந்த அழகிய மாலையைத் தரித்துக்கொண்டு, சந்திரன் போல், தேஜஸுடனும், குளிர்ந்த பிரகாசத்துடனும் வீற்றிருந்தார். வியாசர் தன்னுடைய அரிய தவத்தினால் தன் சக்தி குன்றாதவராயும், யாதொரு வருத்தத்தையும் அடையாதவராயுமிருந்தார். இதைக் கண்டு மூவுலகத்தாரும் ஆச்சரியப் பட்டார்கள். அளவில்லாத சக்தியையுடைய அந்த ரிஷி யோக நிலையில் உட்கார்ந்திருந்த பொழுது, அவருடைய சடை முடிகள், அவருடைய தபாக்னியில் அக்கினிக் கொழுந்து போல் பிரகாசித்தன. அந்த ரிஷியினுடைய பக்தியினாலும் தவசக்தியினாலும் மகாதேவர் திருப்தி அடைந்தவராய், அவருடைய மனோபீஷ்டத்தை நிறைவேற்ற வேண்டுமென்று தீர்மானித்தார். முக்கண்ணனாகிய அப் பகவான், இன்பமாகப் புன்னகை செய்து, வியாசரை நோக்கிச் சொல்வாராயினார்:—"ஓ! ரிஷியே! உன்னுடைய விருப்பத்தின்படியே ஒரு புத்திரனை அடைவாய். உத்தமகுணங்களை யுடையவனாய், அவன், அக்னி, வாயு, பூமி, ஜலம், ஆகாசம் இவைகளைப்போல் பரிசுத்தனாயிருப்பான். தான் பிரமம் என்றே தன்னை அறிவான். அவனுடைய புத்தியும் ஆத்மாவும் பிரம்மத்தினிடத்தே எப்பொழுதும் நாடி இருக்கும். அவன் பிரம்மத்தையே முற்றிலும் அனுசரிப்பவனாயிருந்து கடைசியில் பிரம்மத்துடன் லயம் ஆவான்."

சத்தியவதியினுடைய புத்திரராகிய வியாஸர், இந்த உத்தமமான வரத்தை மகாதேவரிடம் பெற்றபிறகு, ஒரு நாள் அக்னியை உண்டாக்குவதற்காக மரக்கழிகளைக் கடைந்தார். அவ்வாறு செய்து கொண்டிருக்கையில், கிருதாசி என்ற ஒரு அப்ஸரஸ்திரீயைக் கண்டார். அவளுடைய அதிசௌந்தரியத்தைக் கண்டு, மகரிஷிக்கு அவளிடத்துத் திடீரெனக் காதலுண்டாயிற்று. அக்காதலால் ரிஷியினுடைய மனது சஞ்சலப்படுவதைக் கிருதாசி அறிந்து, ஒரு பெண்

கிளியாகத் தன் உருவத்தை மாற்றிக்கொண்டு, அவ்விடத்துக்கு
வந்தாள். அந்த அப்ஸரஸ்திரீ வேறு ரூபமாக மாறக் கண்டும், ரிஷி
யினிடத்து உண்டான காதல் அவரைவிட்டு நீங்காமல், அவருடைய
சரீரம் முழுவதிலும் வியாபிக்க, அவர் தம்மால் கூடியமட்டும் தம்
மிடத்து எழுந்த ஆசையைப் பொறுமையாய்ச் சகித்துக்கொள்ள எவ்
வளவோ முயன்றும், அவரால் சாத்தியப்படவில்லை. பின்னால் நேரிடு
வதை எவராலும் தடுக்கமுடியாதாகையால் ரிஷியினுடைய மனம் கிரு
தாசியினுடைய அழகிய ரூபத்திலேயே படிந்திருந்தது. தம்முடைய
காதலை அடக்குவதற்காக அக்னியை உண்டாக்கும் தொழிலில் மிக
வும் தீவிரமாய்ப் பிரயத்தனம் செய்தார். அப்படியிருந்தும் அவரு
டைய சுக்லம் வெளியே வந்தது. ஆகிலும், அத் தவசிரேஷ்டர் அவ்
வாறு நேர்ந்ததைப் பற்றி மனச் சஞ்சலத்தை அடையாமல், கட்டை
யைக் கடைந்துகொண்டிருந்தார். விழுந்த அவருடைய விந்துவினி
ருந்து ஒரு புத்திரன் உண்டானான். அவன் பிறப்புச் சம்பந்தமாக
நேர்ந்த மேற்சொன்ன சங்கதிகளினால் அவனுக்குச் சுகன் என்று
பெயரிடப்பட்டது.

இவ்விதமாகவே ரிஷிகளுக்குள் சிரேஷ்டரும், மஹாதபஸியும்,
யோகிகளிலெல்லாம் சிறந்தவருமான சுகரிஷி, அக்னியுண்டாவதற்
காகத் தன் பிதா கடைந்துகொண்டிருந்த மரக்கட்டையிலிருந்து
ஜெனித்தார். ஒரு யாகத்தில் நெய் ஆஹுதி செய்தவுடன் அக்னி
யானது சுற்றிலும் பிரகாசித்து விளங்குவதுபோல், தன்னுடைய
சுதாசக்தியினால் ஜ்வலித்துக்கொண்டு சுகர் பிறந்தார். தன் தகப்
பனாரைப் போன்ற உருவமும் நிறமுமுடையவராய், சுத்தாத்மாவான
சுகர் புகையில்லாத அக்னியைப் போல் பிரகாசித்தார். நதிகளுக்
குள் சிரேஷ்டமான கங்கை, தன்னுடைய ரூபத்தை எடுத்துக்
கொண்டு, மேருமலையை வந்தடைந்து, தன்னுடைய பரிசுத்தமான
ஜலத்தால் சுகருக்கு ஸ்நானம் செய்வித்தாள். அப்பொழுது ஆகாசத்
திலிருந்து ஒரு சந்நியாசிக்குரிய தண்டமும், கருமையான
மான்தோலும் சுகரிஷியின் உபயோகத்தின் பொருட்டு விழுந்தன.
கந்தர்வர்கள் பாடினார்கள்; அப்ஸரஸ்கள் நடனம் செய்தார்கள்;
தேவதுந்துபிகள் முழங்கின; விச்வாவஸு என்ற கந்தர்வன், தும்புரு
நாரதர், ஹாஹா, ஹூஹூ என்ற கந்தர்வர்கள் சுகருடைய பிறப்
பைப்பற்றிச் சிலாகித்துக் கானம் செய்தார்கள். இந்திரன் முதலாகிய

அஷ்டதிக்குப்பாலர்களும், மற்றத்தேவர்களும், ரிஷிகளும் அவ்விடத்துக்கு வந்தார்கள். வாயுபகவான் தேவபுஷ்பமாரிகள் பெய்வித்தார். பிரபஞ்சத்திலுள்ள அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் எல்லாம் ஆனந்தத்தை யடைந்தன. பரமாத்மாவான மகாதேவர் பார்வதி தேவியாருடன் முனிகுமாரன் பிறந்த கொஞ்ச காலத்திற்கெல்லாம் அக் குழந்தையிடத்துள்ள அன்பினால் அங்கே வந்தார்; அக்குழந்தைக்கு யக்ஞோபவீதம் அணியச் செய்தார். தேவர்களுக்கு நாதனாகிய சக்ரன் அழகான தேவகமண்டலத்தையும், சில தெய்வீக ஆடைகளையும் சுகருக்கு அன்போடளித்தான். அன்ன பட்சிகளும், நாரைகளும், கிளிகளும், சக்கரவாகப் பறவைகளும் அக்குழந்தையினுடைய சிரசுக்கு மேல் வட்டமிட்டன. மகா தேஜஸும் புத்திக்கூர்மையும் உடையவராய் விளங்கிய சுகர் இரண்டு கழிகளிலிருந்து ஜனித்தவராய், அநேக விரதங்களையும் உபவாஸங்களையும் மிகவும் பக்தி சிரத்தையோடு அநுஷ்டித்துக் கொண்டு அங்கே வசித்தார்.

சுகர் பிறந்தவுடனே, வேதங்கள், அவைகளின் எல்லா ரகசியங்களுடனும், சகல தாத்பர்யங்களுடனும், அவருடைய பிதாவிடத்து அமர்ந்திருப்பது போல, அவரை வந்து அடைந்தன. அப்படியிருந்த போதிலும், உலகத்தார் அனைவரும் அநுசரிக்கும் சம்பிரதாயத்தை உத்தேசித்து, எல்லா வேதங்கள், அவைகளினுடைய அங்கங்கள், வியாக்கியானங்கள் இவைகளை யெல்லாம் நன்றாய்க் கற்றுத் தேர்ந்தவரான ப்ருகஸ்பதி பகவானைச் சுகர் தம்முடைய ஆசாரியராக அணுகினார். வேதங்கள், அவைகளினுடைய ரகசியங்கள், சாரம்சங்கள், எல்லா சரித்திரங்கள், ராஜநீதிசாஸ்திரம் இவைகளையெல்லாம் முற்றிலும் கற்றுத் தேர்ந்து, சுக முனி, தம்முடைய குருவுக்குக் குருதட்சணை கொடுத்துத் தம்முடைய வீட்டுக்குத் திரும்பி வந்துசேர்ந்தார். பிரமசரிய விரதத்தைக் கைக்கொண்டவராய், ஏகசித்தமான கவனத்துடன் உக்ரமான தவஞ்செய்ய ஆரம்பித்தார். அவருடைய இளம்பிராயத்திலேயே அவரது ஞானத்துக்காகவும், தபஸுக்காகவும், தேவர்களும், ரிஷிகளும் அவரை மிகவும் நன்கு மதித்தார்கள். அந்த மகரிஷியினுடைய மனம், கிருஹஸ்தாச்ரமம் உள்பட்ட மூன்று வர்ணாச்ரமங்களிலும் கொஞ்சமேனும் பிரியமில்லாமல், மோட்சத்தை யடையும் மார்க்கத்திலேயே முற்றிலும் திடமாய் நின்றது.

சுகர் மோக்ஷத்தையே கருதினவராய், அவருக்குச் சுபாவமாய் அமைந்துள்ள வணக்கத்துடன், மோக்ஷம் ஒன்றே தமக்குச் சாசுவதமான நன்மையென்ற நிச்சய புத்தியுடன், தம்முடைய பிதாவும் குருவும் ஆகிய கிருஷ்ணத்வைபாயனரை அடைந்து, "மோக்ஷத்துக்கு ஏதுவாகிய நிவர்த்தி மார்க்கங்களைத் தாங்கள் நன்குயறிவீர்கள். ஆதலால், ஓ! உத்தமரே! நான் பரமசாந்தியை அடையும் பொருட்டு, தாங்கள் அதைப்பற்றி எனக்கு உபதேசித்தருளல் வேண்டும்" என்று கேட்டார். தம்முடைய குமாரருடைய இந்த வார்த்தையைக் கேட்டு, அவரை நோக்கி, மகரிஷியானவர், "மகனே! மோக்ஷமார்க்க நூல்களையும், இன்னும் மற்றபலவித தர்மங்களையும் நீ படிக்கக்கடவாய்" என்றார். சுகர் தம் பிதாவின் உத்திரவுப் பிரகாரம் யோகத்தைப் பற்றி எழுதிய சாஸ்திரங்களையும், கபிலரால் வெளியிடப்பட்ட நூல்களையும் வாசித்தறிந்தார். இவ்வாறு சுகர் வேதங்கள், சாஸ்திரங்கள் முதலியவைகளில் முற்றுந் தேர்ந்தவராய், தவம், தர்மம், ஞானம் இவைகளில் உத்தமராயிருந்தார். வியாஸர் தமது புத்திரன் வேதவொளியுடனும், பிரம சக்தியுடனும், மோக்ஷமார்க்க நூல்களில் மிக்க தேர்ச்சியுடனு மிருப்பதைக் கண்டு, ஒருநாள், அவருடைய ஆத்ம க்ஷேமத்தின் பொருட்டு, அடியில் கண்ட பிரகாரம் அவருக்கு உபதேசிக்கலாயினர்:—

"ஓ! குமாரனே! நீ உன்னுடைய இந்திரியங்களை நிக்ரஹஞ் செய்து மிகுந்த குளிர்ச்சியையும், மிகுந்த உஷ்ணத்தையும், பசிதாகத்தையும், காற்றையும் அடக்கல் வேண்டும். இவைகளை யெல்லாமடக்கி நீ தர்மவழியில் ஒழுகல் வேண்டும். சத்தியத்தையும், க்ரோதம், த்வேஷம் இவைகள் நீங்கின யஞ்ஞ நிலையையும், அடக்கத்தையும், தயையையும், ஜீவர்களிடத்து உபகாரத் தன்மையையும், இரக்கத்தையும் நீ கிரமப்படி அநுசரிப்பாயாக. நீ எப்பொழுதும் சத்தியத்தில் நிற்கவேண்டும். மனதை தர்மத்தில் உறுதியாய்ச் செலுத்த வேண்டும். எவ்விதமான களங்கத்தையும், மோசத்தையும் அகற்றல் வேண்டும். தேவர்களுக்கும் விருந்தினர்களுக்கும் அளித்து மீந்த அன்னத்தைப் புசித்து உயிரைத் தாங்கல்வேண்டும். தேகமானது நீர்மேல் மிதக்கும் நுரையைப்போல் மிகவும் அநித்தியமானது. ஜீவாத்மா மரத்தின்மேல் நிற்கும் பக்ஷியைப்போல் பற்றற்றதாய் சரீரத்தில் அமர்ந்திருக்கிறது. சுகமான வஸ்துக்களுடைய சேர்க்கை

கள் எல்லாம் மிகவும் அற்பகாலம் தான் கிடைக்கின்றன. அப்படி யிருக்க, ஓ! மகனே! அஞ்ஞானத்தி லிருந்துகொண்டு, ஏன் தூங்குகிறாய்? உன்னுடைய ஆசாபாசங்களாகிய பகைவர்கள் மிகவும் ஜாக்கிரதை யுள்ளவர்களாய், உன்பேரில் பாய்வதற்கு எப்பொழுது சமயம் வாய்க்குமென்று காத்துக்கொண்டிருக்கிறார்கள். இவ் விஷயங்களை உன் அஞ்ஞானத்தால் ஏன் அறியாமலிருக்கிறாய்? நாட்கள் ஒன்றின்பின் ஒன்றாகச் செல்லச் செல்ல, உன்னுடைய வாழ்நாள் குறைந்துகொண்டே வருகிறது. இவ்வாறு, ஓயாமல் உன் வாழ்நாள் குறைந்து வருவதைப் பார்க்கிற நீ, விமோசனம் அடையும் வழியை அறிவதற்கு ஏன் ஒரு ஆசாரியரைத் தேடி யடையாமலிருக்கிறாய்?

"மறுமை ஒன்று உண்டு என்ற நம்பிக்கை யில்லாதவர்கள் மாத்திரம்தான், தசையையும் இரத்தத்தையும் விருத்தி செய்யக்கூடிய உலக வஸ்துக்களில் மனம் பதிந்தவர்களா யிருக்கிறார்கள். இச் சென்மம் நீங்கிய பிறகு ஏற்படக்கூடிய வேறு உலக சம்பந்தமான விஷயங்கள் எல்லாம் அவர்களுடைய மனதில் கொஞ்சமேனும் உதிப்பதில்லை. குதர்க்கமான விவகாரங்களினால் புத்தி கலங்கியிருப்பவர்கள் தர்மத்தில் தங்களுக்குள்ள வெறுப்பைக் காட்டுகிறார்கள். இம்மாதிரி பிசகானதும் மோசமுமான வழிகளை அநுசரிக்கும் கலங்கிய புத்தியையுடைய மனிதர்களை எவன் பின்பற்றுகிறானோ, அவன் அவர்களைப் போல தானும் துன்பத்தை யடைகிறான். அப்படிக் கில்லாமல், மனத்திருப்தி, சாஸ்திரங்களில் பக்தி இவைகளை யுடையவர்களாயும், மகாத்மாக்களாயும், மனோதிட முள்ளவர்களாயும் இருப்பவர்கள் எப்பொழுதும் சன்மார்க்க வழியையே அநுசரிக்கிறார்கள். நீ அவ்விதமான உத்தமர்களைப் போய் அடைந்து, அவர்களுக்குப் பணிவிடைகள் செய்து, அவர்களிட மிருந்து சிலாக்கியமான உபதேசங்களைப் பெற்றுக்கொள். தர்மத்திலேயே பற்றின நோக்கமுள்ளவர்களாயுள்ள ஞானவான்களிட மிருந்து நீ அடையும் உபதேசங்களின் பிரகாரம் நடக்கவேண்டும். அவ்விதமான உபதேசங்களால் தெளிவடைந்த சிறந்த புத்தியினால், சரியான வழியிலிருந்து விலகுவதற்கு எப்பொழுதும் ஆயத்தமா யிருக்கிற உன் மனதை அடக்குவாயாக. எவர்களுடைய புத்தியானது இச்சம்பந்தமான சங்கதிகளில் மட்டும் ஆழ்ந்திருக்கின்றதோ, எவர்கள் மறுமை விஷயமானது வெகுகாலத்துக்குப் பிந்தின சங்கதியென்று "பயமின்றி" அலக்ஷியம் செய்கிறார்

களோ, எவர்கள் உண்பதில் குணம், அளவு முதலிய நிர்ப்பந்தமில்லா மல் கண்டவைகளைப் புசிக்கிறார்களோ, அவர்கள் இந்த உலகமானது, ஆத்மா கர்ம பலன்களை அடைவதற்கு ஏற்ற பரிசோதனையிடம் என் பதை அறியாத மூடர்களாயிருக்கிறார்கள். உயரப் போவதற்குரிய தர்மமாகிய படிகளுக்குச் சமீபத்தில் நீ சென்று, ஒவ்வொன்றாக அப் படிகளில் ஏறிப்போ.

"ஒரு பூச்சியானது தன்னைச் சுற்றிலும் நூல்களால் ஒரு கூடு ஏற்படுத்திக்கொண்டு அதினின்றும் வெளியே வரமுடியாமல் தவிக் கின்றதோ, அதுபோல் இப்பொழுது நீ கர்மபந்தங்களில் உழன்று கொண்டிருக்கின்றாய். தர்மத்திலும் தெய்வத்தினிடத்திலும் பக்தி யில்லாத ஒரு மூடன், இந்திரியங்களால் ஏவப்பட்டு, தர்மங்களின் ஊத்துக்களை மீறி ஒழுகுகின்றான். வேகமாகவும், கரையை அறுத் துக்கொண்டும் செல்லுகிற நீரோட்டத்திற்குச் சமீபத்தில் உள்ள ஒரு வீட்டைப்போலவும், அல்லது கம்பீரமாக ஆகாயத்தை அளாவி நிற்கும் ஒரு மூங்கில் மரத்தைப் போலவும் அவன் நாசத்தை அடை கின்றான். அவ்விதமான மனுஷனுடைய சேர்க்கையை நீ கொஞ்ச மேனும் தாக்ஷணிய மன்னியில் ஒழிக்கக்கடவாய். பஞ்ச இந்திரியங்க ளாகிற ஜலங்களும், ஆசை, கோபம், மரணம் ஆகிய திமிங்கிலங்க ளும், சுழிகளாகிற பிறப்புக்களும் நிறைந்த இப் பிரபஞ்சமாகிய சமுத்திரத்தை ஞானமாகிற தெப்பத்தினால் நீ தாண்டக்கடவாய். இறப்பு, விருத்தாப்பியம் ஆகிய இவைகளால் பீடிக்கப்பட்டதும், இரவு பகல்கள் ஆகிய இடிகள் ஓயாமல் விழுந்து வருவதுமாகிய இவ் வுலகத்தை நீ தர்மமாகிய தெப்பத்தினால் தாண்டக்கடவாய். சாவா னது உன்னை எக்காலத்திலும் தேடிக்கொண்டே யிருக்கிறது. நீ உட் கார்ந்திருக்கையிலோ, அல்லது படுத்திருக்கையிலோ, அல்லது எச் சமயத்திலோ உன்னை எமன் இரையாகக் கொண்டுபோவது நிச்சயம். இந்தத் துன்பங்களிலிருந்து நீ விடுபடுவது எப்போது? ஒரு ஓநாய் ஆட்டுக்குட்டியை எவ்வாறு பலாத்காரமாய்க் கொண்டுபோகிறதோ, அதுபோல், பொருள் சம்பாதிப்பதிலேயே காலம் கழித்துக்கொண் டும், இன்ப சுகங்களை அநுபவித்து வருவதில் திருப்தி அடையாதவ னாயு மிருந்துகொண்டிருக்கிற ஒருவனை எமன் திடீரெனக் கொண்டு போகிறான். நீ இருட்டான இடத்தில் போகும்படி சம்பவிக்கும்

பொழுது, தர்மம், அறிவு என்ற பிரகாசத்தோடு கூடியதும், நன்ருய்ப் பிரகாசிப்பதற்கு ஏற்ற சாதனங்கள் அடையப் பெற்றதுமான தர்மஞான மென்ற விளக்கை நீ கைப்பற்றுவாயாக.

"ஒன்றின்பின் ஒன்ருய் இப் பூலோகத்தில் அநேக ஜன்மங்கள் எடுத்து, ஒரு ஜீவன் மிகவும் சிரமத்துடன் கடைசியாகப் பிராமணன் என்ற நிலைமையை அடைகிருன். அந்தப் பதவியை நீ இப்பொழுது அடைந்திருக்கிருய். ஆதலால், ஓ! மகனே! நீ அதைச் சரியான படி நிர்வகிக்க முயலுவாயாக. தன் ஆசையின்படி மனதைச் செலுத்துவது பிராமணனுக்கு ஏற்பட்ட தர்மமல்ல. ஆனல், அவன் இந்த உலகத்தில் தன்னுடைய தேகத்தைச் சகல அவஸ்தைகளுக்கும், தவங்களுக்கும் பிரயோஜனப்படுத்தினல், அவனுக்கு மறு ஜன்மத்தில் ஒப்பு உயர்வு இல்லாத போகங்கள் கிடைக்கும். பிராமணன் என்ற நிலைமையானது வெகுகாலமாகச் செய்யப்படும் உக்ரமான தவங்களால் அடையப்படுகிறது. அவ்விதமான உயர்ந்த நிலைமையை அடைந்த ஒருவன், இந்திரிய சுகங்களில் கட்டுப்பட்டு, தன் வாழ்நாளை வீண்போக்கலாகாது. இந்திரியங்களை அடக்குவதிலும், தவஞ் செய்வதிலும் நீ எப்பொழுதும் முயற்சிப்பாயாக. உனக்கு எது நன்மை யென்பதை உணர்ந்து, அதை மனச் சஞ்சலமில்லாமலும், சாந்தியுடையவனுகவும், நீ ஒழுகவேண்டும்.

"ஒவ்வொரு மனுஷனுடைய ஜீவகாலமானது ஒரு வேகமான குதிரையை ஒத்திருக்கிறது. அக் குதிரையினுடைய தன்மையானது இன்ன விதம் என்று அறியக் கூடாமலிருக்கிறது. வழக்கமாய்ச் சொல்லப்பட்ட பதினறு தத்துவங்களாலும் அதனுடைய சரீரம் ஆக்கப்பட்டிருக்கிறது. அதனுடைய சுவபாவம் மிகவும் ஸூக்ஷ்மமானது. க்ஷணம், த்ருடி, நிமிஷம் ஆகிய இவைகளே, அக் குதிரையின் தேகத்திலுள்ள ரோமங்கள். காலைமாலை சந்தியா காலங்களே, அதனுடைய பிடரிகள் பொருந்துமிடங்கள். பௌர்ணமியும், அமாவாசையும் சமமான சக்தியையுடைய அதன் இரண்டு கண்கள். மாதங்கள், அதனுடைய மற்ற அவயவங்கள். அக் குதிரையானது ஓயாமல் ஓடிக்கொண்டிருக்கிறது. உன் கண்கள் குருடாயில்லாத பக்ஷத்தில், அக் குதிரையானது வேகமாய்ப் போவதைக் காண்கின்ற நீ, உன்னுடைய ஆசாரியர்களிடத்துத் தக்க உபதேசங்களைப் பெற்றுக்கொண்டு, உன் மனதைத் தர்மத்தில் இடமாய் நாட்டு

வாயாக. தர்ம வழியிலிருந்து தவறுகின்றவர்களும், மனம் போன படியெல்லாம் நடப்பவர்களும், பிறரிடத்து எப்பொழுதும் குரோதம் செலுத்துவோர்களும், தீயவழிகளையே அநுசரிப்பவர்களும், எம லோகத்தில் யாதனு சரீரங்கள் பெற்று, அவரவர்களுடைய நானாவித மான பாபச் செய்கைகளுக்குத் தக்கவாறு பலவித நரகவாதனைகளை அடைகிறார்கள். தர்மத்தையே நாடின மனதையுடையவனும், துஷ்ட நிக்ரக சிஷ்டபரிபாலனத்தைப் பகுத்தறிந்து நடத்துபவனுமாகிய அரசன், தர்மாத்மாக்கள் அடையும் லோகங்களை அடைகிறான். அநேக விதமான சத்கர்மங்களைச் செய்வதனால், ஆயிரம் ஜன்மங்கள் எடுத்தாலும் அடையக் கூடாத குற்றமற்ற சிறந்த பதவியை அடைகிறான்.

"பெற்றோர்கள், ஆசாரியர்கள் இவர்களுடைய கட்டளைகளை மீறுகிறவன் நரகத்தில் வீழ்ந்து, அங்கே அநேக விதமான நாய்களாலும், இரும்பு மூக்குக்களுள்ள காக்கைகளாலும், கழுகுகளாலும், இன்னும் மற்றப் பக்ஷிகளாலும், ரத்தம் உறிஞ்சும் அட்டைகளாலும் இம்சிக்கப்படுகிறான். கொஞ்சமேனும் கவனமில்லாதவர்களாய், பிரம தேவரால் விதிக்கப்பட்ட பரிசுத்தம், திருப்தி, தவம், வேதம் ஓதுதல், பகவானைத் தியானித்தல், ஜீவஹிம்சை செய்யாதிருத்தல், பொய் பேசாதிருத்தல், களவு செய்யாமை, கொண்ட விரதங்களினின்றும் தவறாதிருத்தல், பொருளாசையை ஒழித்தல், ஆகிய இப் பத்துக் கட்டளைகளையும் மீறி நடக்கிறவர்கள் பிதுர் லோகங்களுக்கு ராஜாவாகிய எமனுடைய ராஜ்யத்திலிருக்கிற நரகத்தில் அநேகவிதத் துன்பங்களை அநுபவிக்கிறார்கள். காமத்தி லாழ்ந்தவன், அசத்தியத்திலேயே பிரியமுள்ளவன், வஞ்சனை செய்வதிலேயே சந்தோஷம் கொள்ளுபவன், பிறரை வஞ்சகமாய் ஏமாற்றி அவர்களுக்குத் தீங்கு செய்பவன் ஆகிய இவர்கள், தங்களுடைய பாபத் தொழிலுக்காக நரகக் குழியில் விழுந்து, சகிக்கமுடியாத நீடித்த துன்பத்தையும், துக்கத்தையும் அடைவார்கள். அவ்விதமான மனிதர்கள் மிகவும் சூடான ஜலத்தை யுடைய வைதரணி யென்னும் ஆற்றில் ஸ்நானம் செய்யும்படிக்கும், கத்திகள் போல் கூர்மையான இலைகளுள்ள மரங்கள் நிறைந்த காட்டில் போகும்படிக்கும், பிறகு மழுவாயுதங்கள் நிறைந்த படுக்கைகளில் படுக்கும்படிக்கும் நிர்ப்பந்திக்கப் படுகிறார்கள். இவ்வாறு பயங்கரமான நரகத்தில் மிகுந்த துயரத்தை அநுபவிக்கவேண்டியவர்களா யிருக்கிறார்கள்.

"பிரமா முதலான தேவர்களுடைய லோகங்களை மட்டும் நீ காண்கிறாய். இவைகளுக் கெல்லாம் மேலானதாயுள்ள மோக்ஷசாம்பிராஜ்ய பதவியை நீ அறிந்தாயில்லை. சகல பந்தங்களிலிருந்தும் விடுபடும்படியான நிலைமைக்குப் போகிற மார்க்கத்தில் நீ செல்வாயாக. ஏன் தாமதிக்கிறாய்? பேரின்ப சுகத்தை அடையவொட்டாமல் தடுக்கிற கோரமான பயம் இன்னும் உன்னைப் பிடிக்கவில்லை. மோக்ஷத்தை அடைவதற்கு வேண்டிய முயற்சிகளைத் துரிதமாகச் செய்.

"நீ, இறந்த பிறகு, எமதர்மராஜனுடைய உத்திரவுப் பிரகாரம், அவர் முன்பு கொண்டுபோகப்படுவது நிச்சயம். மறுமையில் இன்பமடைய வேண்டுமானால், கடினமும் பரிசுத்தமுமான விரதங்களை அனுஷ்டிப்பது மூலமாக ஏற்படும் தர்மத்தை அடைய முயலுவயாக. சக்திமானான எமதர்மராஜன் பிறருடைய கஷ்டங்களைப் பற்றிக் கவனியாமல், உன்னுடையவும், உன்னுடைய சிநேகிதர்கள் முதலிய எல்லாருடையவும் ஜீவன்களைக் கூடிய சீக்கிரத்தில் அபகரிக்கப் போகிறான். எமனை எதிர்ப்பார் ஒருவருமில்லை. கூடிய சீக்கிரத்திம் எமனுடைய காற்றானது உன் எதிரில் அடித்து, உன்னை அவனெதிரே கொண்டுபோய்த் தள்ளும். உனக்கு மறுமையில் நன்மையாயுள்ள காரியங்கள் எவைகளோ, அவைகளை இப்பொழுதே தேடிக்கொள். மிகவும் சீக்கிரத்தில் உன் எதிரில் வீசப்போகிற எமனுடைய காற்று இப்பொழுது எங்கேயிருக்கிறது? அதைப் பற்றி உனக்குக் கவனமிருக்கிறதா? நரக வாதனைக்குட் செல்லும் காலத்தில், நீ கற்ற வேதங்கள் உன் மனதுக்கு வரா. ஆதலால், மகா மகிமையோடு கூடியதான யோக மார்க்கத்தை அநுசரிப்பதில் உன் புத்தியைச் செலுத்து. அஞ்ஞானத்தினால், உண்டாகிற சத்கர்மங்கள், தீயகர்மங்கள் ஆகிய இவைகளை நினைத்துத் துக்கமடையாம லிருக்கும்படியான, ஒப்புயர் வில்லாத அந்த ஒரே பொக்கிஷத்தை நீ அடைய எத்தனிப்பாயாக. விருத்தாப்பியம், உன் தேகத்தைச் சீக்கிரத்தில் பலஹீனப் படுத்தி, உன் இந்திரியங்களின் சக்தியையும், தேகத்தின் அழகையும் கொள்ளை கொண்டு போகும். ஆதலால், அந்த ஒரே தனத்தை நீ அடைய முயலுவாயாக. மிகவும் சீக்கிரத்தில் எமன், வியாதியைத் தனக்குச் சாரதியாகக் கொண்டு, மிகவும் பலமாய், உன் தேகத்தைக் கிழித்தும், முறித்தும், உன் உயிரை அபகரித்துப் போவான். ஆதலால், நீ கடுமையான தவஞ் செய்யவேண்டும்.

"உன் தேகத்திலுள்ள ஆசைகள், குரோதங்கள் ஆகிய பயங்கரமான ஓநாய்களெல்லாம் நாலுபக்கங்களிலுமிருந்து கூடிய சீக்கிரத்தில் உன்னை ஹிம்சிக்கும். ஆதலால், தர்ம கர்மங்களைச் செய்வதிலேயே நீ பிரவர்த்திப்பாயாக. கூடிய சீக்கிரத்தில் நெருங்கிய அந்தகாரத்தையும், தங்க மரங்களையும் நீ காண்பாய். ஆதலால், சத்காரியங்களைச் செய்வதிலேயே நீ முயற்சிசெய். உன்னுடைய சிநேகிதர்கள்போல் நடித்து, உண்மையில் உனக்கு விரோதிகளாயுள்ள இந்திரியங்கள், உண்மை அறிவிலிருந்து உன்னைத் தவறி நடக்கச் செய்யும். ஆதலால், ஓ! மகனே! எது மிகவும் க்ஷேமகரமானதோ, அதையே அடைய முயலுவாய். அரசர்கள், திருடர்கள் இவர்கள் அபகரிப்பார்களோ என்ற பயமில்லாததும், நீ இறந்த பிறகும் கூட உன்னைவிட்டு அகலாததுமான, அந்த அரிய செல்வத்தை நீ பெற முயற்சிசெய். தன் கருமங்களின் பயனாகவே அடையப்பட்ட அந்தச் செல்வத்தில் இதரர்கள், தாங்களும் பங்காளிகள் என்று பாகம் கேட்க முடியாது. ஒருவன் இந்த உலகத்தில் தன் கருமத்தினால் தனக்கென்றே அடையப்பட்ட பலனை மறுமையில் அனுபவிக்கிறான். மற்றவர்களும் மறுமையில் நல்ல பதவியை அடையும்படியான உதவிகளை இவ்வுலகத்தில் நீ செய்வாயாக. அழியாததும், சாச்வதமுமான அந்தச் செல்வத்தை அடைவதற்கு நீ எத்தனம் செய்.

"நீ, உலகத்திலுள்ள சுகங்களையெல்லாம் அநுபவித்து, அதன் பிறகு முக்திமார்க்கத்தை அடைவதற்குப் பிரயத்தனம் செய்ய வேண்டும் என்று நினைக்காதே. ஏனென்றால், இந்த இந்திரிய சுகங்களை அநுபவித்து, அப்பால் அவைகளில் உனக்கு வெறுப்பு உண்டாவதற் குள்ளாகவே உனக்கு மரணம் வந்துவிடும். தாயாராவது, மகனாவது, பந்துக்களாவது, அருமையான சிநேகிதர்களாவது, வேண்டிய கௌரவங்களை அடையப் பெற்றும், இறந்துபோகிற ஒரு மனிதனுடன் தாங்களும் கூட வாரார்கள். எமலோகத்திற்கு ஒவ்வொருவனும், வேறு ஒருவரும் தன் கூட வாராமல், தானே தனிமையாய்ப் போகவேண்டியவனா யிருக்கிறான். ஒருவன் இறப்பதற்கு முன் அவன் செய்த நற்செய்கைகளும், தீய தொழில்களுமே மறு வுலகத்துக்குச் செல்கின்றன. மனிதனை விடாமல் பின்தொடர்கின்றன. ஒருவனுடைய தேகமானது இறந்துபோகும் காலத்தில், அவனால்

நன்மை தீமைகளைச் செய்து சம்பாதிக்கப்பட்ட தங்கங்களும், ரத்னங்களும் அவனுக்கு எவ்விதப் பயனையும் கொடுக்கமாட்டா.

"ஒருவன் தன்னுடைய ஜீவதிசையில் செய்ததும், செய்யத் தவறியதுமான கருமங்களுக்கு மறு உலகத்தில் அவனுடைய ஆத்மாவே முதன்மையான சாக்ஷியாக விளங்குகின்றது. யோகிகள் யோகத்தியானத்தினால் தங்களுடைய தேகங்களையே மறந்து, எவ்வாறு தங்கள் ஆத்மாக்களில் தனித்து இருக்கின்றார்களோ, அதுபோல் இத்தேகம் அழிந்த பிறகும், ஜீவாத்மாவானது சைதன்ய சாக்ஷியாக விளங்குகிறது. உண்மையில் சூரியன், அக்னி, வாயு ஆகிய இந்த மூன்று தேவர்களும் ஒரு மனிதனுடைய தேகத்தில் வசித்து, அவன் வாழ்நாளில் செய்யும் கருமங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டிருப்பதால், அவர்களும் அதனுடைய சாக்ஷிகளாக யிருக்கிறார்கள்.

''உலகத்திலுள்ள வஸ்துக்களை எடுத்துக் காட்டும் தன்மையை யுடைய பகல்களும், அவைகளை மறைக்கும் தன்மையை யுடைய இரவுகளும், ஓயாமல் ஓடிக்கொண்டிருப்பதனால், ஒருவனுக்கு ஏற்பட்ட வாழ்நாள்களை குறைத்துக்கொண்டே யிருக்கின்றன. ஆதலால், உனக்கு ஏற்பட்ட வருணாச்ரம தர்மத்தை நீ அநுசரிப்பாயாக. மறுமையில் எமலோகத்துக்குச் செல்லும் வழி, கொடிய மிருகங்களாலும், பக்ஷிகளாலும், அருவருக்கத்தக்க பயங்கரமான பூச்சிகளாலும், புழுக்களாலும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. உன்னுடைய கருமங்கள் நல்லனவா என்று கவனிக்கவேண்டும். ஏனென்றால், நீ செய்த கருமங்கள் தான் அந்த ஸ்தாவின் வழியாக உன்னைச் சார்ந்து வருகின்றன. அங்கே ஒருவன் செய்த கருமத்தில் மற்றொருவனுக்குப் பங்கில்லை. ஆனால், ஒவ்வொருவனும் அவனவன் செய்த கருமங்களின் பலன்களைச் சுகங்களாகவும், துக்கங்களாகவும் அனுபவிக்கிறான். அப்ஸரஸ்திரீகளும், மகரிஷிகளும் மிகுந்த இன்ப பலன்களை எவ்வாறு அடைகிறார்களோ, அதே பிரகாரம் தர்மமான காரியங்களைச் செய்கிற மனிதர்கள் அவர்களுடைய சத்கர்மங்களின் பயனாக, சாரதிகளின் இஷ்டப் பிரகாரம் எவ்விடத்திலும் செல்லக்கூடிய ஜ்வலிக்கும் பிரகாசத்தை யுடைய விமானங்களை மறு உலகத்தில் அடைகிறார்கள்.

" குற்றமற்ற செய்கைகள், பரிசுத்த ஆத்மா, நல்ல குடிப்பிறப்பு இவைகளுள்ள மனிதர்கள், இந்த ஜன்மத்தில் அவர்கள் செய்த ஸு

கர்மங்களுக்குத் தக்கவாறு மறு உலகத்தில் பலன்களை அடைகிறார்கள். கிரஹஸ்தாச்ரமத்துக்கு ஏற்பட்ட கர்மங்களை அநுஷ்டிப்பதாகிய உத்தம வழியைக் கைக்கொள்பவர்கள், பிரஜாபதி, பிருகஸ்பதி, அல்லது, இந்திரன் இவர்களுடைய லோகங்களை யடைந்து, சகலவித இன்பங்களையும் அடைகிறார்கள்.

"நான் அநேக மாயிரங்களான உபதேசங்களைச் செய்தாலுமென்ன? தர்மாநுஷ்டான மொன்றே, ஜனங்களை அந்தகாரமாகிய அஞ்ஞானத்தினின்றும் விலக்கி, இன்பத்தைக் கொடுக்கின்றது. உனக்கு இருபத்துநான்கு வயது ஆகிவிட்டது. இப்பொழுது இருபத்தைந்தாவது வயதி லிருக்கிறாய். உன்னுடைய வயது கழிந்து கொண்டே போகின்றது. தர்மத்தைச் சேகரம் செய்து வைப்பாயாக. அஞ்ஞானத்தினாலும், அஜாக்கிரதையினாலும் உண்டாகும் நாசமானது உன்னையும், உன்னுடைய இந்திரியங்களின் சக்தியையும் கூடிய சீக்கிரத்தில் அபகரித்துவிடும். ஆதலால், அவ்வித நிலைமையை அடைவதற்கு முன் உன்னுடைய சரீரத்தையே நம்பாமல் உனக்கு ஏற்பட்ட கருமங்களை விடாது அனுஸரிப்பாயாக.

"ஆத்மஞானத்தை யடையவேண்டிய வழியிலேயே போகவேண்டுவது உன்னுடைய கடமையா யிருக்க, உன்னுடைய தேகத்தையும், உன் மனைவி மக்களையும் நம்பியிருப்பதில் என்ன பிரயோஜனம்? எமனுடைய லோகத்துக்கு மனிதர்கள் யாதொரு துணையுமில்லாமல் ஏகாந்தமாய்ப் போகவேண்டி யிருப்பதால், அவ்வித பயங்கரமான நிலைமையை நீ உத்தேசித்து யோகசமாதியாகிய ஓரே தனத்தை அடையத் தேடல்வேண்டும். பராக்ரமமுள்ள எமன் பிறருடைய துன்பங்களை மதியாமல், ஒரு வம்சத்தினுடைய ஸ்நேகிதர்களையும், பந்துக்களையும் வேரோடு அற்றுப் போகும்படி அபகரித்துப் போகிறான். எமனை எதிர்க்க வல்லார் ஒருவருமில்லை. ஆதலால், தர்மங்களாகிற தனக் குவியல்களை நீ சேகரிப்பாயாக. நான் அநுசரிக்கிற சாஸ்திரங்களுக்கு ஒத்ததாயுள்ள இந்த உபதேசங்களை உனக்குச் செய்கிறேன். அவைகளின் தாத்பரியங்களின்படி நீ நடப்பாயாக.

"எவன் தன்னுடைய வருணத்திற்கு ஏற்பட்டிருக்கிற விதிகளின்படி நடந்து, தன் சரீரத்தைக் காப்பாற்றுகிறானோ, எவன் தான் செய்யும் தானங்களுக்குரிய பலன்களை விரும்பிச் செய்கிறானோ, அவன் அஞ்ஞானத்தினின்றும், பாபத்தினின்றும் விடுபடுகிறான். புண்ணிய

கருமங்களைச் செய்யும் ஒருவன் வேத வசனங்களிலிருந்து அடையும் ஞானமானது, எங்கும் தானாகவே இருக்கிறான் என்ற ஆத்ம ஞானத்தை விளைவிக்கின்றது. அது தான் ஒரு மனுஷனால் அடையப் படவேண்டிய ஞானத்தில் முதன்மையான சாஸ்திரமாகிய மோக்ஷம். விசுவாசமாய்க் கிரகிக்கிறவர்களுக்குச் செய்யும் உபதேசங்கள், மனிதனால் அடையப்படவேண்டிய ஒரே புருஷார்த்தமாகிய மோக்ஷத்துக்குச் சாதனமா யிருப்பதால், பயன் உள்ளவைகளாகின்றன. மனிதர்களுடன் சேர்ந்து, நாடு நகரங்களில் இருந்து வசிப்பதில் மனிதன் அடையும் சந்தோஷமானது, அவனை ஆசாபாசத்தில் பலவாறாய்க் கட்டுகிற கயிறா யிருக்கின்றது. அக் கட்டை முறித்துக்கொண்டு, தர்ம நெறியில் ஒழுகும் மனிதர்கள் மிகவும் இன்பசுகம் அனுபவிக்கும்படியான பதவியை அடைகிறார்கள். துஷ்டர்கள் அக் கட்டை முறித்து மீறச் சக்தியற்றவர்களா யிருக்கிறார்கள்.

"ஓ! மகனே! இறக்கவேண்டிய உனக்குப் பணத்தினாலாவது, பந்துக்களாலாவது, குழந்தைகளாலாவது என்ன பிரயோஜனம்? குகையில் அடைக்கப்பட்டிருக்கிற உன் ஆத்மாவைத் தேடி அறிவதில் நீ முயற்சிப்பாயாக. உன்னுடைய முன்னோர்களெல்லாம் எங்கே போய்விட்டார்கள்? நாளைக்குச் செய்வதா யுத்தேசித்திருப்பதை இன்றே செய். பகலில் செய்வதாக உத்தேசித்திருப்பதைக் காலையிலேயே செய். ஒருவன் அவன் செய்யவேண்டிய கடமையை முற்றிலும் முடித்தாய்விட்டானா, இல்லையா என்று கவனித்து, அதற்காக எமன் காத்திருப்பதில்லை. ஒருவன் இறந்தபிறகு அவனுடைய சுற்றத்தார்களும், ஜாதியார்களும், சிநேகிதர்களும் ஸ்மசானம் வரையில் தொடர்ந்துபோய்ப் பிரேதத்தை அக்னியில் போட்டுவிட்டுத் திரும்பி விடுகிறார்கள்.

"தர்மத்திலும், தெய்வத்தினிடத்திலும் நம்பிக்கை யில்லாதவர்கள், இரக்கமில்லாதவர்கள், துன்மார்க்க வழிகளை அநுசரிப்பவர்கள் ஆகிய இவர்களைக் கொஞ்சமேனும் தாக்ஷணிய மில்லாமல் நீ விலக்கக்கடவாய். உனக்கு எது க்ஷேமகரமா யுள்ளதோ, அதைக் கொஞ்சமேனும், வெறுப்பாவது, அசிரத்தையாவது இல்லாமல், தேடி அடைய முயற்சிப்பாயாக. இவ்வாறு உலகமானது இறப்பினால் பிடிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கின்ற நீ, கொஞ்சமேனும் நீங்காத ஆழ்ந்த பொறுமையுடன், உன்னுடைய முழுமனதோடு ஞான

வழியை அடைவாயாக. மோக்ஷத்தை அடையும் வழிகளை நன்றாய் அறிந்தவனும், தன்னுடைய வர்ணங்களுக்கு ஏற்பட்ட கர்மங்களைக் கிரமமாய்ச் செய்து வருபவனும், மறு உலகத்தில் மிகுந்த இன்பங்கள் களை அடைவான் என்பது நிச்சயம். ஒரு சரீரம் போய், மற்றொரு சரீரம் அடைவதை இறப்பு என்று மதிக்காதவனும், சாதுக்கள் அனுஷ்டித்த வழிகளையே அனுஷ்டிப்பவனுமான ஒருவனுக்கு அழிவு என்பது எப்போதும் கிடையாது. எவன் தர்மமாகிற நிதியைச் சேகரித்து விருத்தி செய்கிறானோ, அவன் ஞானவான். எவன் தர்ம வழியிலிருந்து தவறி நடக்கிறானோ அவன் மூடனாவான். நல்ல காரியங்களைச் செய்வதிலேயே தன் மனதைச் செலுத்துகிறவன் சுவர்க்கத்தை அடைந்து, அவனுடைய சத்கர்மங்களின் பலன்களை அநுபவிக்கிறான். துஷ்டச் செய்கைகளையே செய்துவருபவன் நரகக் குழியில் விழுகிறான்.

"அடைய அரிதான மனித ஜன்மத்தை அடைந்த ஒருவன், அதுவே மோக்ஷத்தை அடைவதற்காக ஏற்பட்ட படி என்று மதித்து, அவன் மறுபடியும் கீழ் ஜன்மத்தில் விழாமலிருக்கும் பொருட்டு பிரமத்தினிடத்தே அவன் மனதைச் செலுத்தவேண்டும். எவனொருவனுடைய மனதானது மாறாமல் மோக்ஷ வழியிலே செல்கின்றதோ, அவன் ஞானிகளால் உண்மையான புண்யாத்மாவாக மதிக்கப்படுகிறான். அவன் இறக்கும் பொழுது அவனுடைய சிநேகிதர்கள் துக்கப்படவேண்டும். எவனொருவனுடைய புத்தி சஞ்சலமில்லாமல் நிலையாயிருக்கின்றதோ, பிரமத்தினிடத்திலேயே நோக்கமாயிருக்கின்றதோ, அவன் சுவர்க்கத்தை அடைந்து, நரகமாகிய பயத்தினின்றும் விலகினவனாகிறான். தபசிகளுடைய ஆச்ரமங்களில் பிறந்து, அங்கேயே இறப்பவர்கள், தங்களாசைகளை நிறைவேற்றாமலும், இந்திரிய சுகங்களை அனுபவிக்காமலும் இருப்பதனால், மிகுந்த பலனை அடைகிறதில்லை. ஆனால், எவனொருவன், தான் அனுபவிப்பதற்குரிய விஷயங்களை அடைந்திருந்தும், அவைகளைத் தள்ளிவிட்டு, தவம் முதலான கர்மங்களை அனுஷ்டிக்கிறானோ, அவன் எல்லா மேன்மையையும் அடைகிறான். அத் தன்மையான மனிதனால் அடையப்பட்ட பலன்கள் மிகவும் உயர்ந்தன வென்று நான் நினைக்கிறேன்.

மாதாக்கள், பிதாக்கள், புத்திரர்கள், மனைவிகள் ஆகிய இவர்களை ஒவ்வொருவனும் நூறுகள், ஆயிரங்களாக முந்தின ஜன்மங்களில் அடைந்திருக்கிறான். அதேமாதிரி பிந்தின ஜன்மங்களிலும் அடைவான். ஆகிலும், அவர்கள் யார்? நாம் யார்? அவர்களுக்கும் நமக்கு மென்ன சம்பந்தம்? நான் முற்றிலும் தனியாயிருப்பவனே. நான் என்னுடையது என்று சொல்லக் கூடியது ஒன்றுமில்லை. நான் மற்றெவரையும் சேர்ந்தவனு மல்லன். நான் யாரைச் சேர்ந்தவன் என்று சொல்லக்கூடிய அவனை நான் காணேன். என்னுடையவன் என்று சொல்லக்கூடிய ஒருவனையும் நான் காணேன். அவர்களுக்கும் உனக்கும் ஒருவித சம்பந்தமுமில்லை. முந்தின ஜன்மங்களில் செய்த கர்மங்களுக்குத் தக்கவாறு ஜீவன்கள் பின் ஜன்மங்களை அடைகின்றன. அதேமாதிரி நீயும், உன்னுடைய கர்மங்களால் ஏற்படுகிறபடி, வேறு ஜன்மங்களில் பிறப்பை அடைவாய். இவ்வுலகத்தில் பணக்காரனைச் சார்ந்து இருக்கும் சிநேகிதர்களும், பரிவாரங்களும் தான் அவனிடத்து மிகவும் பணிவாகவும் உண்மையாகவும் நடக்கிறார்கள். ஆனால், ஏழைகளுடைய சிநேகிதர்களும், அவர்களைச் சாரந்தவர்களும் அவ் வேழைகளுடைய ஜீவதிசையிலேயே அவர்களைக் கைவிடுகிறார்கள். தன்னுடைய பத்னிக்கும் குழந்தைகளுக்குமாக மனிதன் அநேக கொடிய பாபத் தொழில்களைச் செய்கிறான். அதனால், இந்த ஜென்மத்திலும், அதற்குப் பிறகும் மிகுந்த துக்கத்தை அநுபவிக்கிறான். ஆதலால், ஓ! மகனே! நான் உனக்குச் செய்திருக்கிற எல்லா உபதேசங்களின்படியும் நீ நடக்கக் கடவாய்.

"உலகத்துச் சங்கதியை உள்ளது உள்ளபடி அறிகின்ற மனிதன், இவ்வுலகமானது கருமங்களையே செய்வதற்கு ஏற்பட்ட இடம் என்றறிந்தவனாய், மறுமையில் இன்பத்தை யடைய வேண்டும் என்ற உத்தேசத்துடன் நற்கர்மங்களையே செய்யவேண்டும். காலம், தடுக்க வொண்ணாத தன் வலிமையால் உலகத்திலுள்ள ஜீவன்களை யெல்லாம் தன்னுடைய சட்டியில் வைத்து வறுக்கிறது. அச் செய்கைக்கு மாசங்களும், ருதுக்களுமே கரண்டிகளா யிருக்கின்றன. சூரியன் எரிக்கும் அக்னியா யிருக்கிறான். ஒவ்வொரு ஜீவனாலும் செய்யப்படுகிற செய்கைகளை யெல்லாம் சாக்ஷியாயிருந்து பார்த்து வருகிற பகல்களும், இரவுகளும் விறகுகளா யிருக்கின்றன. பிறருக்குக் கொடாமலும், தான் அனுபவிக்காமலும் சேர்த்து வைக்கப்பட்டிருக்

கும் செல்வத்தினால் யாது பிரயோஜனம்? சத்துருக்களை ஜெயிக்க உபயோகப் படுத்தாத பலம், ஒருவனுக்கிருந்து என்ன பயன்? தர்மச் செய்கைகளைச் செய்யவேண்டுமென்று தூண்டாத சாஸ்திரங்களால் என்ன பயன்? இந்திரியங்களை அடக்காமலும், பாபத் தொழில்களை நீக்காமலுமிருந்து வருகிற ஜீவன் இருந்து என்ன பிரயோஜனம்?''

இவ்வாறு தன் தகப்பனாராகிய வியாஸமகரிஷியினால் சொல்லப்பட்ட நன்மை பயக்கும்படியான இந்த வார்த்தைகளைச் சுகமகரிஷி கேட்டு, தன் தகப்பனரிடத்து அனுமதி பெற்றுக் கொண்டு, மோக்ஷ ஞானத்தை உபதேசம் செய்யக் கூடிய ஆசாரியாரை நாடிப் புறப்பட்டார்.

அப்போது வியாசர், "ஓ! மகனே! மிதிலா நகரத்துக் கதிபதியாகிய ஜனகமகாராஜாவினிடத்திற்கு நீ போ. அவர் நீ மோக்ஷம் அடைவதற்குரிய விஷயங்களை யெல்லாம் உனக்குச் சொல்வார்" என்றார். அப்படியே தன் தகப்பனாருடைய உத்தரவைச் சிரமேற்கொண்டு, தர்மங்களினுடைய உண்மையையும், மோக்ஷ மார்க்க நிலையையும் தெரிந்து கொள்ளும் பொருட்டு மிதிலா நகரத்தை நோக்கிப் புறப்பட்டார். அவர் புறப்படுவதற்கு முன் அவருடைய பிதா, பின்னும் அவரை நோக்கி, "நீ சாமான்ய மனிதர்கள் போகும் வழியாய் அங்கே போகக் கடவாய். யோக சக்தியைக் கொண்டு ஆகாச மார்க்கமாய்ப் போகவேண்டாம்" என்று சொன்னார். இதைக் கேட்டுச் சுகர் ஆச்சரியப்படவில்லை. ஏனென்றால், அவர் இயற்கையிலேயே மிகுந்த வணக்கமுடையவர். வியாசர் பின்னும், "படாடோபமில்லாமல் சுபாவமாய்ப் போ. போகும் வழியில் ஸ்நேகிதர்களையும், மனைவிகளையும் அடைய நினைக்காதே. ஏனெனில், அவர்கள் உனக்கு உலகத்தில் பற்று உண்டாக்குவதற்குக் காரணஸ்தர்களா யிருக்கிறார்கள். நாம் ஜனகராஜனுடைய யாகாதிகளில் புரோகிதர்களாக இருந்து அவைகளை நடத்தும்படியான யோக்கியதையைப் பெற்றிருந்தபோதிலும், நீ அவருடன் கூடியிருக்கும் காலத்தில் அவரிலும் சிறந்தவனென்ற எண்ணத்தை எவ்விதத்திலும் பாராட்டி நடவாதே. நீ அவருடைய சொல்லுக்குக் கீழ்ப்படிந்து நடத்தல் வேண்டும். அவ்வரசர் உன் சந்தேகங்களை யெல்லாம் தெளிவிக்க வல்லவர், அவர் எல்லா தர்மங்களிலும்

மோக்ஷத்தைப் பற்றிய நூல்களிலும் மிகவும் தேர்ந்தவர். அவரு டைய யாகங்களுக்கெல்லாம் நானே புரோகிதராயிருக்கிறேன். அவர் சொல்லுகிறபடியெல்லாம் கொஞ்சமேனும் தயங்காமல் நடக்கக்கட வாய்" என்றார்.

இவ்வாறு உபதேசிக்கப்பட்டு, சுகர், நிலமும் கடலும் உள்ள இவ்வுலக முழுவதையும் ஆகாசமார்க்கமாய்க் கடக்கச் சக்தியுள்ளவ ராயிருந்த போதிலும், மிதிலா நகரத்துக்குக் கால் நடையாகவே சென்றார். அநேக குன்றுகள், மலைகள், நதிகள், ஏரிகள், கொடிய மிருகங்கள் நிறைந்த காடுகள், வனாந்திரங்கள் இவைகளையெல் லாம் தாண்டிச் சென்றார். மேரு வர்ஷத்தையும், அதன் பின் ஹரிவர்ஷத்தையும், பிறகு ஹிமவத் வர்ஷத்தையும், தாண் டிக் கடைசியில் தெற்கேயுள்ள பாரத வர்ஷத்துக்கு வந்து சேர்ந் தார். சீனர்கள், ஹூன் முதலிய ஜாதியார்களால் குடியேறப்பட்ட அநேக நகரங்களையும் பார்த்துக்கொண்டு, அப்பால் ஆரிய வர்த் தத்தை அடைந்தார். தன் பிதாவினுடைய வார்த்தையை ஞாபகத் தில் வைத்துக்கொண்டு, பூமியிலேயே நடந்து சென்றார். வழியில் அநேக அழகியதும், ஜனப்பெருக்கமுள்ளதுமான நாடு நகரங்களையும், நானாவிதமான செல்வங்களையும் அவர் கண்டார். ஆனால், அவை களைக் கவனித்துப் பார்க்கும் பொருட்டு அவர் தாமதிக்கவில்லை. வழியில் அநேக சிங்காரத் தோட்டங்களையும், மைதானங்களையும், அநேக புண்ணிய தீர்த்தங்களையும் பார்த்தார். கூடிய சீக்கிரத்தில் தர்மம் நிறைந்த மகாத்மாவான ஜனக மகாராஜனால் பரிபாலிக்கப் பட்டு வந்த விதேக நாட்டை அடைந்தார்.

அங்கே அவர் ஜனங்கள் நிறைந்த அநேகக் கிராமங்களையும், நானாவிதமான அன்னபானாதி வஸ்துக்களையும், ஏராளமான ஆடுமாடு கள், பசுக்கள் இவற்றின் மந்தைகளையும், இடையர்களையும், அவர்க ளுடைய வீடுகளையும் பார்த்தார். நெல், கோதுமை முதலிய அநேக தான்யங்கள் நிறைந்த வயல்களையும், அன்னங்களும், நாரைகளும் வாழும் அநேக தாமரைத் தடாகங்களையும் அவர் கண்டார். தன வான்கள் நிறைந்த விதேக தேசத்தின் வழியாகச் சென்று, நானாவித மரங்களால் செழிப்பாய் விளங்கும் இனிமையான மிதிலை நகரத்தின் தோட்டங்களுக்கு வந்து சேர்ந்தார். அந்நகரத்தில் யானைகள், குதி ரைகள், ரதங்கள், நானாவித மனிதர்கள், ஸ்திரீகள் ஆகிய பலவித

விநோதங்களையும் கண்டும், அவைகளை உற்றுநோக்கும் பொருட்டுத் தாமதியாமல், அவர் போய்க்கொண்டே யிருந்தார். மோக்ஷம் என்ற விஷயம் ஒன்றே, அவர் மனதில் முற்றிலும் குடிகொண்டிருந்தது. அவ்வாறு உள்நோக்கத்திலேயே ஆனந்தபரவசராய்ச் சென்றுகொண்டிருந்த சுகர் கடைசியாக மிதிலை நகரம் வந்து சேர்ந்தார்.

அந் நகரத்தின் கோட்டைவாயிலை அடைந்து, வாயில் காப்போர் மூலமாகத் தம் வரவை அரசனுக்கு அறிவித்தார். கலக்கமற்ற சாந்தமுடையதும், யோகத்திலும் தியானத்திலும் ஆழ்ந்திருப்பதுமான மனத்தினராய், அவர் அரசனுடைய அனுமதிபெற்று நகரத்துக்குள் பிரவேசித்தார். தனிகர்களான நகரவாசிகள் நிறைந்துள்ள விஸ்தாரமான தெருக்களின் வழியாகச் சென்று, அரசனுடைய அரண்மனைக்குள் எவ்வித சஞ்சலமுமின்றிப் பிரவேசித்தார். வாயில் காப்போர்கள் கடுமையான வசனங்களால் அவரைப் 'போகக்கூடா'தென்று தடுத்தார்கள். அதன்பேரில், சுகர் கொஞ்சமேனும் கோபமில்லாதவராய், அவ்விடத்திலேயே நின்று காத்துக்கொண்டிருந்தார். வெயிலினாலாவது, அவ்வளவு தூரம் நடந்து வந்ததினாலாவது அவர் கொஞ்சமேனும் களைப்படையவில்லை. பசி, தாகம், சிரமம் ஆகிய இவைகளால் அவர் தூர்ப்பலம் அடையவில்லை. சூரியனுடைய வெப்பமானது அவரைக் கொஞ்சமேனும் சுடவாவது, வருத்தவாவது, மனோதுக்கத்தை உண்டாக்கவாவது இல்லை. அவ்விடத்து இருந்த வாயில் காப்போர்களில் ஒருவன், அவர் மத்தியான்னத்து சூரியனைப்போல் தேஜஸுடன் விளங்குவதைக் கண்டு, அவரிடத்தில் மிகவும் பரிதாபமுற்றான். அவரைத் தக்கவாறு பூஜித்துக் கைகூப்பி வணங்கி, அரண்மனையில் முதல் கட்டுக்கு அழைத்துப் போனான். சுகர் அங்கே உட்கார்ந்துகொண்டு மோக்ஷத்தையே நினைத்துக்கொண்டிருந்தார். சமமான புத்தியுடையவராய், நிழலுள்ள விடத்தையும், சூரிய கிரணத்தால் தவிக்கப்பட்ட இடத்தையும் ஒன்றாகவே மதித்தார். கொஞ்சநேரம் கழித்தபிறகு, அரசனுடைய மந்திரியானவர், கூப்பின கைகளுடன், அவ்விடத்துக்கு வந்து, அவரை அரண்மனையின் இரண்டாவது கட்டுக்குக் கூட்டிச் சென்றார்.

அக் கட்டின் வழியாய் அரண்மனையின் அந்தப்புரத்துடன் சேர்ந்ததான ஒரு விஸ்தாரமான சிங்காரத் தோட்டத்திற்குப் போக வழி உண்டு. அது சைத்ரரதத் தோட்டத்தை ஒத்திருந்தது. அங்கே இடையிடையே பல இடங்களில் அழகான நீர்க்குட்டைகள் இருந்

ன. ஏராளமாய்ப் புஷ்பித்துக்கொண்டிருந்த நானாவித மரங்கள் அத் தோட்டத்தில் வளர்ந்திருந்தன. கண்ணைக் கவரும்படியான அழகு வாய்ந்த ஸ்திரீகள் கூட்டமாய்ப் பணிவிடைசெய்யச் சித்தமாயிருந்தார்கள். அரசனுடைய மந்திரியானவர் சுகரிஷியை இரண்டாம் கட்டிலிருந்து அந்த சிங்கார வனத்துக் கழைத்துப்போய், ஆசனங் கொடுத்து, மரியாதை செய்யும்படி சொல்லிவிட்டுத் தான் போய்விட்டார். அந்த மாதர்கள், அழகான அவயவங்கள் அமைந்த இளமைப் பருவம் பொருந்தியும், அழகாக நெய்துள்ள சிவப்பு ஆடைகள் தரித்தும், அநேக தங்க ஆபரணங்களைப் பூண்டும் விளங்கினார்கள். மதுரமாய் வசனிப்பதிலும், புத்தியை மயக்குவதிலும், காமலீலைகளைச் செய்வதிலும் சமர்த்தர்களாயும், பரதநாட்டியம், சங்கீதம் ஆகிய இந்த சாஸ்திரங்களில் முற்றிலும் தேர்ந்தவர்களாயும் இருந்தார்கள். உதடுகள் திறந்தபடியே எப்பொழுதும் புன்சிரிப்போடு கூடிய அவர்கள் சௌந்தர்யத்தில் அப்ஸரஸ்திரீகளுக்கு ஒத்தவர்களாயிருந்தார்கள். காமத்தை விளைவிக்கும் செய்கைகளிலெல்லாம் மிகவும் சதுரர்களாயும், தாங்கள் நாடியிருக்கும் புருஷர்களுடைய நோக்கங்களை யறிய வல்லவர்களாயும், மிகவும் உயர்ந்த ஜாதி லட்சணத்தில் சேர்ந்தவர்களாயுமுள்ள ஐம்பது மாதர்கள் அந்தத் தபஸியைச் சுற்றியிருந்தார்கள். அவருக்குப் பாதசுத்தி செய்வதற்காக ஜலம் கொடுத்தும், வழக்கமாய் ஏற்பட்ட பதார்த்தங்களைக் கொண்டு அவருக்குத் தக்கபடி மரியாதை செய்தும், அக்காலத்துக் கேற்ற ருசியான அன்னபானாதிகள் கொடுத்தும் அவரைத் திருப்தி செய்தார்கள். அவர் உண்ட பிறகு, அந்த ஸ்திரீகள் ஒவ்வொருத்தியாய் அவரைத் தனித்தனியே தோட்டத்தில் பல இடங்களில் அழைத்துக் கொண்டுபோய் அங்கே விநோதமாயுள்ள ஒவ்வொரு வஸ்துவையும் அவருக்குக் காட்டினார்கள். மனிதர்களுடைய இருதயங்களையெல்லாம் அறிவதில் மிக்க வல்லவர்களான அந்த ஸ்திரீகள் விளையாடுவதிலும், சிரிப்பதிலும், பாடுவதிலும் அந்த மகாத்மாவாகிய ரிஷியைச் சந்தோஷிப்பிக்க முயன்றார்கள். ஆனால், அந்த மகாத்மாவோ, கொஞ்சமேனும் சலிக்காமல், தமக்கு ஏற்ற கருமங்களைச் செய்வதிலேயே திடமான நோக்கமுடையவராய், அவருடைய இந்திரியங்களையும், கோபத்தையும் முற்றிலும் அடக்கி, அந்த ஸ்திரீகளினுடைய செய்கைகளைப்பற்றிச் சந்தோஷமாவது, கோபமாவது அடையவில்லை. பிறகு, அழகில் உத்தமிகளான அந்த ஸ்திரீகள்

அவருக்கு அழகிய ஆசனம் ஒன்று கொடுத்தார்கள். சுகர் தம்முடைய கால் முதலிய அவயவங்களைச் சுத்திசெய்துகொண்டு, அந்த ஆசனத்தில் அமர்ந்து, சந்தியாவந்தனம் செய்துவிட்டு, தாம் அங்கு வந்த விஷயத்தைக் குறித்துச் சிந்திக்கலாயினர். அன்றிரவு, முதல் பாகத்தில் அவர் யோகத் தியானத்திலேயே முற்றிலும் அமர்ந்திருந்தார். அவ்விரவின் மத்திய பாகத்தை நித்திரையில் போக்கினர். கூடிய சீக்கிரத்தில் நித்திரையிலிருந்து எழுந்திருந்து, தம்முடைய தேகத்தைக் கிரமப்படி சுத்தி செய்துகொண்டு, அந்த அழகிய ஸ்திரீகளின் மத்தியிலிருந்தும், மறுபடியும் திடமான யோக நிலையிலிருந்தார். இவ்விதமாகவே அன்று பிற்பகற்பொழுதையும், முழு இரவையும் வியாசருடைய புத்திரர் கழித்தார்.

மறு நாட்காலையில் ஜனகமகாராஜர், தம்முடைய குடும்பத்தார், பந்துக்கள், மந்திரிகள், இவர்கள் பின்னே வர, தம்முடைய குருவானவர் தம் முன்னே செல்ல, சுகரிடம் வந்தார். விலையுயர்ந்த ஆசனங்களையும், பல விதமான ரத்னங்கள் முதலிய ஆபரணங்களையும் தம்முடன் கொணர்ந்தும், அர்க்கியத்துக்கு வேண்டிய சாமான்களைத் தன் சிரசிலேயே தாங்கிக்கொண்டும், அரசர் தம்முடைய ஆசாரியருடைய புத்திரராகிய சுகரை யடைந்தார். அவர் தம்முடைய குருவினிடத்து இருந்த, ரத்னங்கள் பதித்தும், அழகான மேலாடை விரித்தும் விளங்கிய அழகிய விலையுயர்ந்த ஆசனத்தைத் தனது கைகளில் பெற்றுக்கொண்டு, மிகுந்த மரியாதையுடன் அதைச் சுக ரிஷிக்குக் கொடுத்தார். அதன்மேல் சுகர் உட்கார்ந்த பிறகு, அரசன் கிரம விதிகளின்படி அவருக்கு உபசாரங்கள் செய்தார். முதலில் அவருக்குப் பாதங்களைச் சுத்திசெய்ய ஜலம் கொடுத்தும், பிறகு அவருக்கு அர்க்கியமும், பசுக்களும் கொடுத்தார். இவ்வாறு மந்திர பூர்வமாகத் தமக்குக் கொடுக்கப்பட்ட மரியாதைகளைச் சுகர் ஏற்றுக்கொண்டார். பிறகு, அந்த ரிஷி அரசருக்கு மரியாதை செய்தார். அப்பால், அரசருடைய க்ஷேமங்களைப் பற்றி வினவினர். அரசருடைய பரிவாரங்கள், உத்யோகஸ்தர்கள் இவர்களுடைய க்ஷேமங்களைப் பற்றியும் விசாரித்தார். சுகருடைய அநுமதியின்பேரில் அரசர் தம் பரிவாரங்கள் சகிதம் அங்கே உட்கார்ந்தார். பிறப்பினும், குணத்தினும் உயர்ந்தவரான அந்த அரசர் கூப்பின கைகளுடன், தரையில் உட்கார்ந்தார். சுகருடைய க்ஷேமங்களைப் பற்றி விசாரித்தார். பிறகு, அவர் வந்த காரியம் இன்னதென்று தெரிவிக்கும்படி வேண்டினர். அதற்குச்

சுகர், "ஓ! அரசரே! உமக்கு மங்களமுண்டாகுக! என் பிதா விதேக தேசத்துக்கதிபதியாகிய உலகமுழுவதிலும் பிரசித்தி பெற்ற ஜனகர் மோக்ஷ மார்க்க தத்துவத்தை நன்ருய் உணர்ந்தவரென்றும், பிரவிர்த்தி, அல்லது நிவர்த்தி மார்க்கங்களில் எனக்குள்ள சந்தேகங்களை அவரைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாமென்றும் சொன்னூர். பிறகு என் பிதா உடனே அவரிடம் செல்லும்படிக்கு எனக்கு ஆக்ஞாபித்தார். ஆதலால், தங்களிடமிருந்து உபதேசங்கள் பெற்றுக்கொள்ளும்படி இங்கு வந்தேன். தர்ம சிரேஷ்டரான தாங்கள் என் பேரில் கிருபை கூர்ந்து, எனக்கு உபதேசிக்க வேண்டும். பிராமணனுக்கு ஏற்பட்ட தர்மங்கள் என்ன? முமுக்ஷுக்களாயிருப்பவர்கள் அனுசரிக்கவேண்டிய தர்மங்களென்ன? மோக்ஷமடைய வேண்டியது எவ்விதம்? மோக்ஷமடைவது ஞானத்தினலா? அல்லது தவத்தினலா?" என்று கேட்டார்.

அதற்கு ஜனகர், "பிராமணன் பிறந்த காலமுதல் அவனுக்கு விதித்திருக்கிற தர்மங்களைச் சொல்லுகிறேன், கேளும். எக்ஞோபவீதம் ஆனபிறகு அவன் கருத்தாய் வேத அத்யயனம் செய்யவேண்டும். தவங்கள் செய்தும், பக்தியுடன் தன் குருவுக்கு வந்தனை வழிபாடுகள் செய்தும், பிரமசரிய தர்மங்களைக் கிரமமாக அநுஷ்டித்தும், தேவர்களுக்கும், பிதுர்க்களுக்கும் செய்யவேண்டிய கர்மங்களைக் குறைவறச் செய்யவேண்டும். மனதில் குரோதத்தை ஒழிக்கவேண்டும். மிகவும் கவனத்துடன் வேதங்களைக் கற்று, தன்னுடைய இந்திரியங்களை அடக்கி, தன்னுடைய ஆசாரியருக்குத் தக்ஷிணை கொடுத்து, அவருடைய அனுமதியின் பேரில் தன் வீட்டுக்குத் திரும்பி வரவேண்டும். பிறகு, கிரகஸ்தாச்ரமத்தில் பிரவேசித்து, நற்குணமுள்ள பெண்ணை மணந்து, அவளிடத்து மட்டும் இந்திரிய சுகங்களை அனுபவித்து, ஒருவிதமான த்வேஷமும் இல்லாதவனய்த் தவருமல் அக்னிஹோத்திரம் வளர்த்து, இல்லற தர்மத்தை நடத்தி வரவேண்டும். மக்களையும், பேரன்மார்களையும் அடைந்து வம்ச விருத்தி செய்ய வேண்டும். அதற்குப் பிறகு வானப்ரஸ்தாச்ரமத்தை யடைந்து, கிரகஸ்தாச்ரமத்தில் செய்து வந்தபடி அக்னி ஹோத்திரம் செய்தும், வந்த விருந்தினர்களுக்குப் பயபக்தியாய் உபசரித்தும், தர்மமாக ஒழுகல் வேண்டும். கடைசியில் அக்னியைத் தன் ஆத்மாவில் நாட்டினவனய், சுகதுக்கம், குளிர்ச்சி, உஷ்ணம் முதலிய இருவித

பேதங்களிலிருந்தும் விலகினவனும், உலகத்திலுள்ள பற்றுக்களை யெல்லாம் முறித்தகற்றி, சந்நியாசி ஆச்ரமத்திலிருந்து கொண்டே, பிரம மார்க்கத்தை அநுசரித்து வரவேண்டும்" என்றார்.

சுகர்:—"சாஸ்திரங்களை யெல்லாம் படித்தறிந்து, தெளிவான ஞானத்தையும், வஸ்துக்களின் உண்மையான நிலைமைகளையும் ஒருவன் அடைய முடியுமானாலும், உலகத்திலுள்ள வஸ்து பேதங்களினால் மனதானது சஞ்சலமடையாமல் பற்றற்ற நிலைமையை ஸ்திரமாக அடைந்திருந்தாலும், அப்பொழுதும் கூட ஒன்றன் பின் ஒன்றாக பிரம்மசரியம், கிரஹஸ்தம், வானப்பிரஸ்தம் ஆகிய இந்த மூன்று ஆச்ரமங்களையும்அநுஷ்டிக்க வேண்டியது அவசியமா? இதைத் தாங்கள் எனக்குச் சொல்லவேண்டும். இது விஷயமாக சாஸ்திரங்களின் உண்மையான தாத்பரியம் என்ன?" என்று கேட்டார்.

ஜனகர்:—"வேதசாஸ்திரங்களைப் படிப்பதனால் தெளிவை உண்டாக்குகிற ஞானத்தினுடைய உதவி இல்லாமலும், வஸ்துக்களை உள்ளது உள்ளபடி அறிவதாகிய விக்ஞானம் என்பது இல்லாமலும், முக்தி யடைவது என்பது அசாத்யம். அந்தத் தெளிந்த ஞானமும், குருமுகமா யில்லாமல், அடைய முடியாதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஞானமே படகு; ஆசாரியரே படகை நடத்துகிறவர். அவ் விருவரு மில்லாமல் சம்சாரமாகிய சமுத்திரத்தைத் தாண்டுதல் அரிது. அவ் விதமான படகை அடைந்த பிறகு, அவனுடைய மனோபீஷ்டம் நிறைவேறுகிறது. கடலைத் தாண்டின ஒருவனுக்கு அவைகள் இரண்டும் தேவையில்லை. பிரபஞ்சங்களெல்லாம் அழியாம லிருக்கும்படிக்கும், உலகத்துக்கு ஆதாரமாயுள்ள தர்மங்கள் கெடாமலிருக்கும் பொருட்டும், முன் காலத்து ஞானிகள் நான்கு ஆச்ரமங்களையும், அவைகளுக்குரிய கர்மங்களையும் ஏற்படுத்தி அனுஷ்டித்து வந்தார்கள். மேற்படி ஆச்ரமக் கிரமங்களின் பிரகாரம், நல்லது தீயது ஆகிய இருவினைகளையும் அகற்றி, அநேக ஜென்மங்களெடுத்து, அப்பால் ஒருவன் மோக்ஷத்தை அடைகிறான். ஒருவன் முந்தின அநேக ஜென்மங்களில் செய்த தவங்களினால் தெளிவான ஞானத்தை அடைவானேயானால், அவனுக்கு அப்பால் ஏற்படும் புது ஜென்மத்தில் முதல் ஆச்ரமத்திலேயே, அதாவது, பிரமசாரியா யிருக்கும் பொழுதே, மோக்ஷத்தை அடையும்படியான சக்தியுடையவனாகிறான். ஒருவன் சுத்த ஞானவானும், மோக்ஷத்தை

படையும்படியான நிலைமையைப் பெற்று, அதன் காரணமாகப் பிர பஞ்சத்தோற்றங்கள் விஷயமாக உண்மையான ஞானத்தை படைந்த பிறகு, மற்ற மூன்று ஆச்ரமங்களை அநுஷ்டிப்பதினால், அவனுக்கு அடையவேண்டிய பிரயோஜனமென்ன இருக்கிறது? ராஜஸம், தாமஸம் ஆகிய குணங்களால் ஏற்படும் குற்றங்களை ஒருவன் எப்பொழுதும் விலக்கவேண்டும். ஸத்வ வழியிலே நின்று, ஒருவன் தன் ஆத்மாவால் பரமாத்மாவை யறியவேண்டும். எல்லாப் பிராணிகளிடத்தும் தானு யிருப்பதையும், தன்னிடத்து எல்லாப் பிராணிகள் இருப்பதையும், ஒருவன், ஜலத்தில் நனையாமல் அதில் சஞ்சரிக்கும் நீர்வாழும் ஜந்துக்களைப் போல், பற்றற்றவனாய்த் தன் வாழ் நாளைக் கழிக்கவேண்டும். குணபேதங்களை யெல்லாம் கடந்து, அவைகளினுடைய சக்திகளுக்கு மீறினவனாய், எவன் இருக்கிறானோ, அவன் எல்லாவிதப் பற்றுக்களையும் தவிர்க்க சக்தியுள்ளவனாகிறான். பூமியிலிருந்து ஆகாயத்துக்குப் பறந்துபோகும் பறவையைப்போல், சுவர்க்காதி லோகங்களை யடைந்து, அங்கே அளவிறந்த இன்பத்தை அனுபவிக்கிறான். இது சம்பந்தமாய் யயாதி ராஜனால் முன் காலத்தில் பாடப்பட்ட ஒரு சுலோக மிருக்கிறது. மோக்ஷ மார்க்க சாஸ்திரங்களை அறிந்த எல்லா ஜனங்களும் அதை ஞாபகத்தில் வைத்து வருகிறார்கள். அந்த சுலோகத்தில், 'பரமாத்மாவானவர் ஒருவனுடைய ஆத்மாவிலே இருக்கிறார். வேறு அந்நியரிடத்திலன்று. எல்லா வஸ்துக்களிடத்தும் சமமாகவே யிருக்கிறார். யோகத்தில் திடமாய்ப் பதிந்த மனதையுடைய ஒருவன் பரமாத்மாவைத் தானே காண்பான். பிறர் தன்னைக் கண்டு பயப்படாதிருக்கும்படிக்கும், தான் பிறரைக் கண்டு பயப்படாமலும், ஆசையும், த்வேஷமு மற்றவனாயும் எவன் இருக்கிறானோ, அவனே பிரமத்தை யடைந்தவன். தன்னால் கேட்கப்பட்டும், பார்க்கப்பட்டு மிருக்கிற எல்லா வஸ்துக்கள் விஷயமாயும் சமத்துவமான தன்மையாய் நடக்கிறவனாயும், சுகதுக்கங்கள் அற்றவனாயும் இருக்கிறவனே பிரமத்தை அடைந்தவன். ஸ்துதி நிந்தை, தங்கம் இரும்பு, சுகதுக்கம், உஷ்ணம் சீதளம், நன்மை தீமை, இன்பம் துன்பம், 'பிறத்தல் இறத்தல், இவைகளை யெல்லாம் எவன் சமமாகப் பாவிக்கிறானோ, அவனே பிரமத்தை யடைந்தவன். பிக்ஷுகதர்மங்களை அனுசரித்து வருபவன் தன்னுடைய இந்திரியங்களையும் மனதையும் அடக்கி, ஆமையானது தன்

னுடைய அவயவங்களை அடக்கிக்கொள்வதுபோல், ஒழுகல் வேண்டும். இருட்டால் மூடப்பட்ட ஒரு வீட்டை விளக்கு வெளிச்சத்தினால் எவ்வாறு பார்க்க முடியுமோ, அதேவிதமாக ஞானமாகிய விளக்கினால் ஆத்மாவைப் பார்க்கலாம்' என்று கூறப்பட்டிருக்கிறது.

"புத்திமான்களில் சிரேஷ்டராயிருப்பவரே! நான் தங்களுக்குத் தெரிவிக்கிற இந்த ஞானங்களெல்லாம் தங்களிடத்தே விளங்குவதை நான் காண்கிறேன். மோக்ஷத்தை அடைய விரும்புகிறவனுக்குத் தெரியவேண்டியதெல்லாம் தங்களால் முன்னமேயே அறியப்பட்டிருக்கின்றன. ஓ! மகரிஷியே! தங்களுடைய குருவின் கிருபையாலும், தாங்கள் பெற்றிருக்கிற உபதேசங்களினாலும் இந்திரியங்களால் அறியப்படும் விஷயங்களையெல்லாம் தாங்கள் கடந்தவர்களாயிருக்கிறீர்கள். தங்களுடைய பிதாவின் அனுக்கிரகத்தால் எல்லாவற்றையும் பார்க்கும்படியான ஞானத்தை நான் அடைந்திருக்கிறேன். அதனால்தான், தங்களையும் உள்ளபடி அறியவல்லவனானேன். தங்களுக்கிருப்பதாகத் தாங்கள் நினைத்திருப்பதைவிட ஜாஸ்தியான ஞானம் தங்களிடத்தில் விளங்குகிறது. தங்களுக்கிருப்பதாகத் தாங்கள் தெரிந்துகொண்டிருக்கிற சக்தியைவிட ஜாஸ்தியான சக்தி தங்களிடத்தி லிருக்கின்றது. தங்களுடைய இளம்பிராயத்தினாலோ, அல்லது, தங்களிடத்து நீங்காதிருக்கும் சந்தேகங்களினாலோ, அல்லது, மோக்ஷத்தை யடையவில்லையே என்ற அதைரியத்தினாலோ, தங்களிடத்து விளங்குகின்ற பிரம ஞானத்தை அவ்வாறு இருப்பதாகத் தாங்கள் அறிந்துகொள்ளாமலிருக்கிறீர்கள். நம்மைப் போன்றவர்களால் ஒருவருடைய சந்தேகங்கள் நீங்கி, தெளிவடைந்த பிறகு, அவர், மனதிலிருக்கிற கட்டுகள் நீங்கப் பெற்றவராய், சரியான முயற்சியினாலும், அப்பியாசத்தினாலும் அந்த ஞானத்தை அடைவது மல்லாமல், அதைத் தான் அடைந்திருப்பதாகவும் அறிகிறார். தாங்களோ, அந்த ஞானத்தை முன்னமேயே அடைந்துவிட்டீர்கள். தங்களுடைய புத்தியோ, திடமாயும், கலக்கமற்றதாயுமிருக்கிறது. தாங்கள் ஆசாபாசம் முற்றிலும் துறந்தவர்கள். அப்படியிருந்த போதிலும், ஒருவரால் அடையவேண்டிய பேறுகளிலெல்லாம் மிகவும் சிலாக்கியமான பிரமத்தை முயற்சியால் அல்லாமல் அடைதல் அரிது. சுகத்துக்கும் துக்கத்துக்கும் தாங்கள் பேதம் வைக்காமலிருக்கிறீர்கள், தங்களுக்கு ஆசையில்லை. நடனத்திலும், சங்கீதத்திலும்

தங்களுக்கு விருப்பமில்லை. தாங்கள் ஒருவிதமான பற்றுமில்லாம லிருக்கிறீர்கள். தங்களுக்கு ஸ்நேகிதர் என்ற பற்றுமில்லை. பயத்தை உண்டாக்குகிற வஸ்துக்களிடத்துத் தாங்கள் பயப்படுகிறதில்லை. ஏ! பாக்கியவானே! ஒரு தங்கக் கட்டியையும், ஒரு மண் கட்டியையும் வேற்றுமையின்றி ஒன்ருகவே தாங்கள் மதிக்கிறீர்கள் என்பதை நான் அறிவேன். நானும், ஞானிகளான இதரர்களும், தாங்கள் எல் லாவற்றிலும் சிறந்ததும், நித்தியமாய் விளங்குவதுமான சாந்தியை அடையும் மார்க்கத்தில் திடமான வைராக்யத்துடன் இருக்கிறீர்கள் என்பதைக் காண்கிறேம். ஓ! பிராமண உத்தமரே! ஒரு பிராமணன் அடைய வேண்டிய, வேண்டியதற்குரிய பலனைக் கொடுப்பதும், மோக்ஷ சாம்பிராஜ்யத்தை அடைவதற்கு முக்கியமான அம்சமா யிருப்பதுமான கர்மங்களில் தாங்கள் திடமாய் நிற்கிறீர்கள். இன் னும், தாங்கள் என்னிடம் கேட்க வேண்டியது என்ன?'' என்ருர்.

ஜனகமகாராஜனுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு, சுத்தாத் மாவும், திடமான வைராக்கியமு முள்ளவரான சுகமகரிஷியானவர், தன்னுள்ளே தன் ஆத்மாவை நோக்கினவராய்த் தன் ஆத்மாவும் பர மாத்மாவும் ஒன்ருக இருந்தார். அவருடைய மனேபீஷ்டம் நிறை வேறினபடியால், அவர் சந்தோஷத்தையும், சாந்தியையும் அடைந் தார். ஜனகரை மறுபடியும் கேள்விகள் ஒன்றும் கேட்காமல், அவர் வாயுவே போலவும், வாயுவேகமாயும் ஹிமயமலையை நோக்கி வட பக்கம் சென்ருர்.

அந்தப் பர்வதங்கள் நானுவித அப்ஸர ஸ்திரீகளாலும், அநேக மிருதுவான ஓசைகளின் எதிரொலிகளாலும் நிறைந்து விளங்கின. அங்கே அநேக மாயிரம் கின்னரர்களும், கிம்புருஷர்களும், பலவித மான மயில்களும், அன்னக்கூட்டங்களும், குயில்களும் நிறைந்து, அப் பர்வதங்கள் ரமணீயமாய் விளங்கின. அம் மலைகளின் உச்சியில் புட்களுக்கு அரசனுகிய கெருடன் எப்பொழுதும் வசித்து வந்தார். நான்கு திக்குப் பாலர்களும், தேவர்களும், ரிஷிகளும், உலகத்தின் க்ஷேமத்தின் பொருட்டு, அங்கே அடிக்கடி வருவது வழக்கம். அவ் விடத்தில்தான் பரமாத்மாவான விஷ்ணுவானவர், ஒரு புத்திரனை அடையவேண்டும் என்று அகோரமான தவஞ் செய்தார். தேவர் களுக்குச் சேனதிபதியாகிய குமாரக்கடவுள் தம்முடைய இளம்பரு வத்தில் மூன்று உலகங்களையும், தேவர்களையும் ஒரு பொருட்டாய்

என்னுமல், தம்முடைய வேலாயுதத்தைக் கோற எறிந்த [illegible] துளைத்தது அவ்விடத்தில் தான். அவர் தம்முடைய [illegible] யெறிந்து, இப்பிரபஞ்சத்தை நோக்கி, "பராக்கிரமத்தில் [illegible] மேலானவனாவது, அல்லது, என்னைக் காட்டிலும் பிராமணர்களை யும், வேதங்களையும் மிகவும் பக்தியாய் மிக்கா [illegible] [illegible] லது, என்னைப் போன்ற சக்தியுடையவனாவது ஒருவன் இருப்பானேயாகில் அவன் இந்த வேலாயுதத்தை எடுக்கட்டும், அல்லது, அசைக்கட்டும்" என்று சொன்னார். இவ் வார்த்தையைக் கேட்டு, மூன்று உலகங் களும் மனக்கலக்க மடைந்தன. "இந்த வேலாயுதத்தைப் பிடுங்கி எடுக்கக் கூடியவர் யார்?" என்று உலகின் கண்ணுள்ள ஜீவன்களெல் லாம் ஒருவரை யொருவர் கேட்டுக்கொண்டார்கள். மகாவிஷ்ணு வானவர் தேவர்களும், அசுரர்களும், ராக்ஷஸர்களும் மனக் கவலை கொண்டிருப்பதை யறிந்தார். அச்சமயத்தில் யாது செய்வது நலம் என யோசித்தார். இவ் வேலாயுதத்தை அசைத்து எடுக்கும் விஷய மாய் ஸ்கந்தர் சண்டைக்கு இழுத்த வசனத்தைப் பொறாதவராய், அக்னி குமாரராகிய ஸ்கந்தரைத் தம்முடைய கண்களால் நோக்கி னார். சுத்தாத்மாவான விஷ்ணு, பிரகாசித்துக் கொண்டிருக்கும் அவ் வேலாயுதத்தைத் தம்முடைய இடது கையில் பிடித்து அசைக்க வாரம்பித்தார். மகா வலிமை பொருந்திய விஷ்ணு இவ்வாறு வேலா யுதத்தை அசைத்துக் கொண்டிருந்தபொழுது, பூமி முழுவதும், அதி லுள்ள மலைகள், வனாந்தரங்கள், சமுத்திரங்கள் இவைகளுடன் அசைந் தது. அவ்வேலாயுதத்தைப் பிடுங்கி எடுக்க முற்றிலும் சக்தியுள்ளவ ராயிருந்த போதிலும், ஸ்கந்தருடைய கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமென்ற எண்ணத்துடன், அதை அசைத்ததே போது மென்று நிறுத்திவிட்டார். இவ்வாறு அசைத்து, பிறகு, பிரஹ்லா தரை நோக்கி, "குமாரதேவருடைய வல்லமையைப் பார்! இவ்வுல கத்தில் ஒருவரும் இவ் வேலாயுதத்தைப் பிடுங்க வல்லவரல்லர்" என் றார். பிரஹ்லாதர், இவ் வார்த்தையைக் கேட்கச் சகியாதவராய், அவ் வேலைத் தான் எடுப்பதாக நிச்சயத்துக் கொண்டார். அவர் அதைப் பிடித்தார். ஆனால், கொஞ்சம் கூட அசைக்க முடியவில்லை. உரத்த சத்தத்துடன் மலையின் உச்சியில் ஸ்மரணை தப்பிக் கீழே விழுந்தார். இச் சிறந்த பர்வதங்களின் வடக்கு பாரிசத்தில் ரிஷப வாஹனரான மகாதேவர் மிகவும் கடுமையான தவஞ்செய்தார். அவர்

தவஞ்செய்த இடம், எல்லாப் பக்கங்களிலும் கொழுந்து விட்டெரியும் அக்னியால் சூழப்பட்டிருக்கிறது. அசுத்தமான ஆத்மாக்கள் அங்கே அணுகமுடியாது. அம் மலைப்பாரிசம் 'ஆதித்யம்' என்று சொல்லப்படுகிறது. அதைச் சுற்றிலும் அக்னியானது பூண்போல் விளங்குகிறது. அம் மலைப்பாரிசம் பத்து யோசனை விஸ்தீரணம் உள்ளது. அங்கே யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், தானவர்கள் ஆகிய இவர்கள் போகமுடியாது. அக்னி பகவான் அங்கே நேரில் வசிக்கிறார். மகாதேவர் ஆயிரம் தேவவருஷங்களாக ஒரு காலால் நின்று, அங்கே தவஞ் செய்த காலத்தில், அக்னி பகவான் அங்கேயிருந்து, மகாதேவரைச் சுற்றிலும் ஏற்படும் இடைஞ்சல்களை நிவர்த்தித்துக் கொண்டு இருந்தார். அந்தத் தவாக்னியால் தேவர்கள் மிகவும் தகிக்கப்பட்டார்கள்.

இவ்வாறு சிறந்து விளங்கும் அம் மலைகளின் அடிவாரத்தில் ஒரு மறைவான இடத்தில் பராசருடைய புத்திரரும், தவ சிரேஷ்டருமான வியாசர் தம்முடைய சிஷ்யர்களான சுமந்தர், வைசம்பாயனர், ஜைமினி, பைலர் ஆகிய இந் நால்வருக்கும் வேதங்களை உபதேசித்துக்கொண்டிருந்தார். இமய மலையைநோக்கிப் போய்க்கொண்டிருந்த சுகர், வியாசர் சிஷ்யர்களால் சூழப்பட்டு விளங்கும் ஆச்ரமத்தை நோக்கிச் சென்றார். ஆச்ரமத்தில் உட்கார்ந்திருந்த வியாசர் தம் புத்திரன், அநேக கொழுந்துகளுள்ள அக்னி ஜ்வாலையைப் போலும், தேஜஸில் சூரியனைப் போலவும் பிரகாசிப்பதைக் கண்டார். அவர், மரங்களிலும், மலைப் பாறைகளிலும் தன் தேகம் படாமல் வருவதைக் கண்டார். இந்திரியங்களால் அறியப்பட்ட சகல வஸ்துக்களிலும் பற்றற்றவராயும், யோகத்தில் அமர்ந்தவராயும் இருந்த அந்தச் சுகப் பிரமரிஷி, வில்லிலிருந்து விடுபட்டு வரும் பாணத்தைப் போல் வேகமாக வந்தார். தன் பிதாவை அணுகி, அவரை நமஸ்கரித்தார். தன் தகப்பனாருடைய சிஷ்யர்களுக்கும் அவரவர்களுக்குத் தக்கபடி வந்தனை வழிபாடுகள் செய்தார். மகா சந்தோஷ சித்தராய், தனக்கும், ஜனகருக்கும் நடந்த சங்கதிகளைத் தன் தந்தையிடம் தெரிவித்தார்.

தன் மகன் வந்து சேர்ந்த பிறகும், வியாசர் தன் சிஷ்யர்களுக்கும், தன் மகனுக்கும் உபதேசம் செய்துகொண்டு, அங்கே ஹிமய பர்வதத்தின் பக்கத்தில் வசித்துக்கொண்டிருந்தார். சில காலஞ்ச

ளுக்குப் பிறகு; சிஷ்யர்கள் நால்வரும் குருவினிடத்து அனுமதி பெற்றுக்கொண்டு, அவரைப் பிரதக்ஷண நமஸ்காரம் செய்து வணங்கி, அவர் உத்தரவின் பிரகாரம் உலகத்தில் வேதங்களைப் பரவச் செய்யச் சென்றார்கள். அவர்கள் சென்ற பிறகு; வியாசர், தன் மகனுடன், அவ் வாச்ரமத்தி லிருந்துவந்தார். மிகவும் கவலையுடனும், சிந்தனையுடனும் அந்த ரிஷி ஆச்ரமத்தின் ஒரு ஒதுக்குப் புறத்தில் மௌனமாய் உட்கார்ந்திருந்தார்.

அச்சமயத்தில் தவ சிரேஷ்டரான நாரத முனிவர், வியாசரைப் பார்க்கும் பொருட்டு, அவ்விடத்துக்கு வந்தார். நாரதர் அவரைப் பார்த்து, மிருதுவான வசனங்களால், "ஓ! வஸிஷ்டருடைய வம்சத்தில் ஜெனித்த மகரிஷியே! ஏன் இப்பொழுது உங்களுடைய ஆச்ரமத்தில் வேதமோதும் சத்தங்கள் கேட்கப்படவில்லை? நீங்கள் ஏன் ஏதோ விசாரம் அடைந்தவர் போல் சிந்தித்துக்கொண்டு ஏகாந்தமாய் உட்கார்ந்துகொண்டிருக்கிறீர்கள்? வேத சத்தங்களின் எதிரொலிகள் இல்லாததினால், இம்மலையானது, ராகுவால் பீடிக்கப்பட்ட சந்திரனைப் போல், ஒளியற்று விளங்குகிறது. இம் மலையில் தேவ ரிஷிகள் வசித்துக்கொண்டிருந்தும், வேதத் தொனிகளில்லாததினால், அது அழகு குன்றி, கொடுந் தொழில் புரியும் நிஷாதர்கள் குடிசைகள்போல் காணப்படுகிறது. வேதத் தொனி யில்லாததினால் ரிஷிகள், தேவர்கள், கந்தர்வர்கள் ஆகிய இவர்கள் முன்னிருந்த தேஜஸுடன் பிரகாசிக்கிறார்களில்லை" என்றார். நாரதருடைய வார்த்தைகளைக் கேட்டு, வியாசர், "ஓ! மகரிஷியே! வேத ரஹஸ்யங்களை அறிந்தவரே! தாங்கள் சொன்னதெல்லாம் வாஸ்தவம். தாங்கள் திரிகாலங்களையும் அறியவல்லர்கள். தங்களுக்கு எல்லாம் தெரியும். மூன்று உலகங்களிலும் நடக்கும் சங்கதிகள் யாவும் தங்களுக்கு நன்றாய்த் தெரியும். ஆகையால், தங்களுடைய ஆக்ஞை எதுவோ அதைத் தெரிவியும். என்னுடைய சிஷ்யர்கள் என்னைவிட்டுப் பிரிந்தபடியால், நான் மனமகிழ்ச்சி குன்றி யிருக்கிறேன்" என்றார். அதற்கு நாரதர் "வேதங்களை ஓதாமல் நிறுத்துவதே, அவைகளுக்குக் குற்றம். விரதங்களை அனுஷ்டிக்கத் தவறுவதே, பிராமணனுடைய குற்றம். வாஹிக வம்சமே, உலகத்திற்கு ஒரு நிந்தை. சம்பந்தமில்லாத சங்கதிகளை அறிய ஆத்திரப்படுவது ஸ்திரீகளின் தீக்குணம். ஆதலால், நீங்கள் உங்கள் புத்திரனுடன் வேதகானம் செய்யுங்கள். வேதத்

தொனியின் எதிரொலிகளின் மூலமாய் ராக்ஷதர்களால் ஏற்படும் பயங் களைப் போக்குங்கள்'' என்றார். அதற்கு, வியாசர் மிகவும் சந்தோஷ மடைந்து, ''அப்படியே செய்கிறேன்'' என்று சொல்லி, தன் குமார ராகிய சுகருடன் வேதத்தை, மூன்று உலகங்களையும் வியாபிப்பது போன்ற உரத்த சத்தமாய், உச்சாரண சாஸ்திர விதிகளுக்கிணங்க, கானம் செய்யலானார்.

ஒரு நாள் தகப்பனாரும், குமாரரும் வேதம் ஓதிக் கொண்டிருக் கும் சமயத்தில், கடல் மத்தியிலிருந்து எழும்பும் காற்றுக்களால் தூண்டப்பட்டு வருவது போல், ஒரு கடுங்காற்றானது உண்டா யிற்று. அதனால் வேதமந்திரங்களை உச்சரிக்க அது தக்க சமய மில்லை யென்று அறிந்து, வியாசர், வேதமோதுவதை நிறுத்தும் படி, தன் மகனுக்குக் கட்டளையிட்டார். அவ்வாறே சுகர் ஆவலுள் ளவராய்த் தன் பிதாவை நோக்கி, ''ஓ! ஆரியரே! இக் கடுங்காற்று எங்கிருந்து வருகிறது? அதன் விருத்தாந்தத்தைக் கேட்க விரும்பு கிறேன்'' என்றார்.

இக் கேள்வியைக் கேட்ட வியாசர் ஆச்சரியமுற்றார். பிறகு, அவர் சொன்னதாவது:—''வேதம் ஓதுவதை நிறுத்தவேண்டுமென் பதற்கு அது ஒரு அறிகுறி. நீ பிரம ஞானத்தை அடைந்துவிட் டாய். உன் மனமானது, அசுத்தங்கள் எல்லாம் நீங்கப் பெற்ற பளிங்குபோல், தெளிவை யடைந்திருக்கிறது. ஆசையும் அஞ்ஞான மும் உன்னை விட்டு முற்றிலும் அகன்றுவிட்டன. நீ சாத்வீக நிலையை அடைந்திருக்கிறாய். ஒருவன் தன்னுடைய சாயலைக் கண் ணாடியில் பார்ப்பது போல், உன் ஆத்மாவை உன்னிடத்தே பார்க் கிறாய். அந்த நிலையி லிருந்துகொண்டு உபநிஷத்துக்களைச் சிந் திப்பாயாக. பரமாத்மாவை அடையும் வழி 'தேவயானம்', அதா வது, தேவர்கள்வழி யென்று சொல்லப்படுகிறது. தமோகுணத்தால் ஏற்பட்ட மார்க்கத்துக்குப் 'பிதுர்யானம்' என்று சொல்லப்படுகிறது. மறுமையில் இந்த இரண்டு மார்க்கங்கள்தான் ஏற்பட்டிருக்கின்றன. ஒரு மார்க்கத்தின் வழியாக மனிதர்கள் சுவர்க்கத்தை அடைகிறார் கள். மற்றொரு மார்க்கத்தின் வழியாக நரகத்தைச் சேருகிறார்கள். காற்றுக்கள் பூமியின்பேரிலும், ஆகாசத்திலும் வீசுகின்றன. சப்த வாயுக்கள் உண்டு. அவைகளை நான் ஒவ்வொன்றாகச்சொல்லுகிறேன் கேள். இந்த தேகத்திற்குப் பஞ்ச இந்திரியங்கள் உண்டு. இந்தி

யங்கள் ஸாத்தியர்களாலும், இன்னும் மிகுந்த பலம் பொருந்திய பெரிய ஜீவர்களாலும் நடத்தப்படுகின்றன. இவர்கள், ஜெயிப்பதற் கரிய 'ஸமானன்' என்ற புத்திரரைப் பெற்றார்கள். ஸமானன் என்றவ ரிடத்திலிருந்து 'உதானன்' உண்டானது. உதானனிடத்திலிருந்து 'வியானம்' உண்டாயிற்று. வியானத்திலிருந்து 'அபானன்.' கடைசி யில் அபானனிடத்திலிருந்து பிராணன் உண்டாயிற்று. பிராண னுக்குக் குழந்தை யில்லை. இந்த மருத்துக்களினுடைய வேலைகளை ஒவ்வொன்றாய்ச் சொல்லுகிறேன். ஜீவப்பிராணிகளுடைய பற்பல காரியங்களுக்குக் காற்றே ஆதாரம். அதனால்தான் ஜீவப்பிராணி கள் உயிரோடிருக்கிறார்களாகையால், அந்தக் காற்றுக்குப் பிராணன் என்று பெயர். மேலே சொன்னதில் முதலா யிருக்கிறதும், 'பிர வகன்' அல்லது 'சமானன்' என்று சொல்லப்படுகிறதுமான காற்றா னது உஷ்ணத்தினாலும், புகையினாலும் உண்டாகிற மேகக்கூட்டங் களை ஆரம்பமார்க்கத்தில் தள்ளிக்கொண்டு போகிறது. அந்தக்காற்று, ஆகாசமார்க்கமாய்ச் சென்று, மேகங்களிலுள்ள நீரோடு தாக்கி, மின் னல்களுக்கு இடையில் பிரகாசமான ஒளி ஆகிறது. 'ஆவகன்' என்ற இரண்டாவது காற்று: உரத்த சத்தத்துடன் வீசுகிறது. இந்த மருத்துத்தான் சந்திரன் முதலிய பிரகாச தேவதைகளை உதிக்கவும், மேலே உயரவும் செய்கிறது. அண்டம்போல், ஒரு சிறு அண்ட மாக விளங்கும் இந்தத் தேகத்தில் உள்ள அந்தக் காற்றைப் புத்தி மான்கள் 'உதானன்' என்று சொல்லுகிறார்கள். நான்கு சமுத்திரங் களிலிருந்தும் ஜலத்தைக் குடித்து, அதை மேகங்களிடம் கொண்டு போய்ச் சேர்த்து, அப்பால் கொண்டுபோய், மேகங்களுக்கு நாத னாகிய இந்திரனிடம் சேர்ப்பிக்கிறது. மூன்றாவது காற்று: அதற்கு 'உத்வகன்' என்று பெயர். மேகங்களுக்கு ஆதாரமாயிருந்து, அவை களை அநேக பாகங்களாகப் பிரித்து, மழைபாகப் பெய்யும்படி இளக்கு கிறது. அப்பால், அதைக் கட்டியாகச் செய்தும், கர்ச்சிக்கின்ற மேகங்களின் சத்தமாகக் கேட்கப்படுகிறது. அதுவே மேகரூபத்தை எடுத்துக்கொண்டு உலகத்தைக் காப்பாற்றிக்கொண்டிருக்கிறது. தேவர்களுடைய ரதங்களையெல்லாம் ஆகாசமார்க்கமாக நடத்து கிறது. இத் தொழில்களையெல்லாம் செய்யும் அக் காற்றுக்கு 'ஸம் வஹன்' என்று பெயர். இது நான்காவது காற்று: மிகுந்த பலத்தை யுடையது. மலைகளைக்கூட பிளக்க வல்லது. ஐந்தாவது காற்று:

பலமும் வேகமு முடையது. அது வராஹியானது. அது மரங்களை யெல்லாம் வேரோடு பிடுங்கி, கீழே தள்ளுகிறது. அவைகள் மேகங்களோடு சேர்ந்தால், அம் மேகங்கள் 'வலாஹகங்கள்' என்று சொல்லப்படுகின்றன. அக் காற்று அநேக விபரீத விநோதத் தோற்றங்களை இவ்வுலகில் உண்டாக்குகிறது. ஆகாசத்தில் கர்ஜனைச் சத்தங்களைச் செய்கிறது. அதற்கு 'விவஹன்' என்று பெயர். ஆறாவது காற்று: தேவலோகத்து நீரையெல்லாம் ஆகாசத்தில் தாங்கி, அந் நீரைக் கீழே விழாமல் தடுத்துக்கொண்டிருக்கிறது. தெய்வீகமான கங்காநதியின் புண்ணிய தீர்த்தங்களைத் தாங்கிக்கொண்டு, அவைகள் கீழ்நோக்கிச் செல்லாமல் தடுத்துக்கொண்டிருக்கிறது. தூரத்திலிருந்து அக்காற்றால் தடுக்கப்பட்டு, ஆயிரம் கிரணங்களை உடையவரும், உலகத்தைப் பிரகாசிப்பவருமான சூரியபகவான், ஒரே கிரணமுள்ள ஒரு பெரிய ஜோதி வஸ்துபோல் காணப்படுகிறார்; அக் காற்றினுடைய செய்கையால், சந்திரன் தினே தினே ஒளி குறைந்துகொண்டு, பிறகு பௌர்ணமை யன்று பூர்ண பிரகாசத்துடன் விளங்குகிறான். அந்தக் காற்றுக்குப் 'பரிவஹன்' என்று பெயர். மற்றொரு காற்று அவரவர்களுக்கு ஏற்பட்ட காலத்தில் எல்லா ஜீவன்களுடைய உயிரையும் கொண்டுபோகிறது. சூரியபுத்திரரான எமனும், அக் காற்றையே பின்பற்றிச் செல்கிறார். எல்லா வித லக்ஷணங்களை அறியக்கூடியவர்களும், எப்பொழுதும் யோகத்யானத்திலேயே நிலையாய் நிற்பவர்களும் ஆகிய யோகிகளுக்கு நித்யத்துவத்தை அடைவதற்கு அக்காற்று ஒரு ஆதாரமாயிருக்கிறது. அக் காற்றினுடைய உதவியால்தான், தக்ஷபிரஜாபதியினுடைய அனேகமாயிரம் பேரன்மார்களும், இப் பிரபஞ்சத்தினுடைய முடிவுகளை அடைந்து, அதன் காரணமாக மறுபடியும் இவ் வுலகத்துக்குத் திரும்பிவாராத மோக்ஷ சாம்பிராஜ்ய பதவியை அடையச் சக்தியுள்ளவர்களானார்கள். அக் காற்றுக்குப் 'பராவஹன்' என்று பெயர். அது காற்றுகளுக் கெல்லாம் மேலானது. அதை ஒருவராலும் எதிர்க்க முடியாது. இந்த மருத்துக்களெல்லாம் திதியினுடைய புத்திரர்கள். மிகவும் ஆச்சரியப்படத் தக்கவர்கள். அவைகள் எவ் விடங்களிலும் போக வல்லமை யுள்ளவைகளாயும், எல்லா வஸ்துக்களையும் தாங்கக் கூடியவைகளாயும், உன்னோடு ஒட்டியிராமல் உன்னைச் சுற்றி வீசுகின்றன. மலைகளுக் கெல்லாம் சிரேஷ்டமான இந்த

பர்வதமானது திடீரென்று அக் காற்றினால் அசைக்கப்படுவதைப் பார்த்தால், அது மிக ஆச்சரியமாயிருக்கிறது. இக் காற்றுதான் விஷ்ணு பகவானுடைய மூக்குக்களிலிருந்து வரும் சுவாசம். மிக வும் வேகமாய்த் தூண்டப்பட்டால், மிகவும் பலமாய் அடிக்க ஆரம் பித்து, பிரபஞ்சம் முழுவதையும் நடுங்கச் செய்கிறது. ஆதலால், அக் காற்றானது பலமாய் அடிக்க ஆரம்பிக்கும்பொழுது வேதங்களை அறிந்தவர்கள் அப்பொழுது வேதபாராயணம் செய்கிறதில்லை. வேதங்களும் ஒருவிதமான காற்று. அதைப் பலமாக ஓதும்பக்ஷத் தில், அதனால் வெளிக்காற்று துன்பமடைகிறது." பராசரர் புத்ர ராகிய வியாசர் இவ்வாறு சொல்லிவிட்டு, காற்றுத் தீர்ந்தவுடன் மறு படியும் வேதம் ஓதும்படிக்குத் தன் புத்திரனுக்குக் கட்டளையிட்டு, ஆகாய கங்கையில் ஸ்நானம் செய்வதற்காகப் புறப்பட்டுப் போனார்.

வியாசர் அவ்விடத்தை விட்டுப் போனபிறகு, நாரதர் ஆகாச மார்க்கமாய்ப் பிரயாணம் செய்துகொண்டு, வேதம் ஓதிக்கொண்டிருக் கும் சுகரிருக்கு மிடத்துக்கு வந்தார். தேவரிஷியாகிய நாரதர் வேதத்தில் சில பாகங்களுக்குத் தாத்பரியம் இன்னதென்று சுகரிடத் துக் கேட்கும் பொருட்டு வந்தார். நாரதருடைய வரவைக் கண்டு, சுகர் வேதவிதிப்படி அர்க்யம் முதலிய உபசாரங்களினால் அவருக்கு மரியாதை செய்தார். நாரதர் உபசாரங்களால் மகிழ்ந்து, சுகரைப் பார்த்து, "புண்ணியாத்மாக்களில் சிரேஷ்டமானவரே! ஓ! குழந் தாய்! உங்களுக்கு மிகவும் சிலாக்கியமான நன்மை உண்டாகும் விஷயத்தை நான் எவ்விதமாகச் செய்து முடிக்கவேண்டும்?" என்று வினவினார். இவ் வார்த்தையைக் கேட்ட சுகர், நாரதரை நோக்கி, "எனக்கு எது அனுகூலமானதோ அந்த விஷயத்தைப் பற்றி எனக்கு உபதேசிக்கும்படி தங்களை வேண்டுகிறேன்" என்றார். நாரதர் சுகரைப் பார்த்துப் பின் வருமாறு கூறுவாராயினார்.

ஆதிகாலத்தில் உத்தமமான ஸனத்குமாரர் உண்மைப் பொருளை அறியும் பொருட்டு, தம்மிடத்து வந்திருந்த சுத்தாத்மாக்களான ரிஷிகளிடத்துப் பின்வரும் வார்த்தைகளைச் சொன்னார். அதாவது:- ஞானத்தைப் போல் சிறந்த கண் வேறு இல்லை. சத்தியத்தை அனு சரிப்பதை விட மேலான தவம் கிடையாது. ஆசாபாசத்தைப் போல் துக்கம் வேறு கிடையாது. விரக்திக்குச் சமானமான ஆனந் தம் வேறு இல்லை. பாபச் செய்கைகளினின்றும் தவிர்த்தல், தர்மத்

களைச் செய்வதினுல் மனித ஜென்மத்தை அடைகிருன். முற்றிலும் தீய செய்கைகளையே செய்வதினுல் கீழான ஜென்மங்களையே அடைகிருன். துக்கம், மூப்பு, இறப்பு ஆகிய இவைகளால் பிடிக்கப்பட்டு, ஒரு ஜீவன், காலமாகிய பாத்திரத்தில் வறுக்கப்படுகிறது. இது உனக்குத் தெரியாத விஷய மன்று. உலகத்தில் மனிதர்கள் உண்மையாகவே பாதகமாயிருப்பதை நன்மை தருவதாகவும், உண்மையாகவே அநித்யமாயிருப்பதை நித்யம் போலவும், தீயதும், வெறுக்கத்தக்கதுமானவற்றை நல்லதாகவும், விரும்பத் தக்கதாகவும், அடிக்கடி நினைக்கிருர்கள். இந்த யதார்த்தத்தை நீயும் ஏன் இன்னும் அறியாம லிருக்கிருய்?

"பட்டுப்பூச்சி, தன்னுல் நெய்யப்பட்ட நூல் கூட்டில் எப்படி அகப்பட்டுக்கொண்டு, வெளியே வரமுடியாமல் தவிக்கின்றதோ, அதுபோல் உன்னுடைய அஞ்ஞானத்தாலும், தவறுதல்களினுலும் செய்கிற உன் கருமங்களாகிய கூட்டில் அகப்பட்டுக்கொண்டிருக்கிருய். ஆ! உன்னுடைய நிலைமையை நீ ஏன் இன்னும் உள்ளபடி அறியாமலிருக்கிருய்? இவ் வுலகத்திலுள்ள வஸ்துக்களிடத்துப் பற்றுவைக்காதே. உலக விஷயங்களில் ஆசைவைத்தல் துன்பத்தையே விளைவிக்கின்றது. தன்னைச் சுற்றிலும் நூல் கூட்டை அமைத்துக்கொள்ளுகிற பட்டுப் பூச்சியானது, கடைசியாய்த் தன்னுடைய செய்கைகளினுலேயே நாசத்தை அடைகிறது. காட்டு யானைகள் ஏரியின் சேற்றில் எப்படி அகப்பட்டுக்கொண்டு, அதனின்றும் தப்பமுடியாமல், கடைசியில் எவ்வாறு மரணத்தை அடைகின்றனவோ, அதுபோல், குமாரர்களென்றும், மனைவிகளென்றும், பந்துக்களென்றும் ஆசாபாசத்தில் கட்டுப்படுவோர்கள் கடைசியில் அழிவை அடைகிருர்கள். ஜலத்திலிருக்கும் மீன்கள் பெரிய வலைகளால் தரைக்கு எவ்வாறு இழுக்கப்படுகின்றனவோ, அதுபோல் அபிமானமாகிய வலையில் கட்டுப்படும்படி நடந்து கொள்கிறவர்கள் மிகுந்த துன்பத்துக் காளாகிருர்கள். பந்துக்கள், புத்திரர்கள், மனைவிகள், தேகம், மிகவும் கவனமாய்ச் சேகரித்து வைக்கப்பட்ட எல்லாவிதப் பொருள்கள் ஆகிய இவைகளெல்லாம் கொஞ்சமேனும் சாசுவத மில்லாதவைகள். இவைகளால் மறு உலகத்துக்கு எவ்விதப் பிரயோஜனமும் கிடையாது. ஒருவன் செய்யும் புண்ணிய பாவங்களாகிய செய்கைகளே, அவனை மறு உலகத்துக்குப் பின்பற்றுகின்

றன. இவைகளை யெல்லாம் விட்டுவிட்டு, எவ்வித உதவியு மற்றவ னாய், ஏகாந்தமாய் மறு உலகத்துக்கு நீ போகவேண்டுவது நிச்சயமா யிருக்க, ஐயோ! நீ, உண்மையும், சாசுவதமுமான பொருளை நாடா மல், உபயோகமற்றதும், நிலையற்றதுமான உலகப் பொருள் களிடத்து ஆசைவைத்து, ஏன் உழலுகின்றாய்? நீ பிரயாணமாய்ச் செல்லவேண்டிய மார்க்கமானது சிரமபரிகாரம் நீங்குவதற்குரிய யாதொரு தங்குமிடமில்லாமலிருக்கிறது. அவ்வழியாய்ப் போகும் ஒவ்வொருவனுக்கு, வழியில் ஆதாரவாகப் பிடித்துக்கொள்வதற்கு வஸ்து ஒன்றுமில்லை. எந்த தேசத்தின் வழியாக நீ பிரயாணம் செய் யும் பாதையானது போகிறதோ, அது இன்னதென்று தெரியாத தாயும், முன் பார்க்கப்படாததாயு மிருக்கிறது. அன்றியும், அது நெருங்கிய அந்தகாரத்தால் மூடப்பட்டிருக்கிறது. உனக்கு வழிச் செலவுக்கு வேண்டிய சாதனங்கள் ஒன்றுமில்லாமல், எவ்வாறு அவ் விதமான பாதையில் நீ செல்வாய்? நீ அந்த வழியாய்ப் போகும் பொழுது, உன் பின் ஒருவரும் வாரார்கள். இவ்வுலகத்திலிருந்து மறு உலகத்துக்குப் போகும்பொழுது, நீ செய்த நல்வினைகளும், தீவினைகளுமே, உன்னை மறு உலகத்துக்குப் பின் தொடரும்.

"ஒருவன், வஸ்துக்களிலெல்லாம் மேலான வஸ்துவை, கல்வியி னாலும், கருமங்களினாலும், அகத்திலும் புறத்திலுமுள்ள பரிசுத் தத்தினாலும், பெரிய ஞானத்தினாலும் அடைய முயற்சிக்கிறான். அச் சிறந்த பொருளை அடைந்தால், அவன் அப்பால் ஜனனத்தி லிருந்து விடுபடுகிறான். ஒருவன் மனிதர்கள் மத்தியில் இருந்து வாழவேண்டு மென்று கொள்ளும் ஆசையானது, அவனைச் சுற்றி, ஏற்பட்ட ஒரு கட்டாயிருக்கிறது. சத்கருமங்களைச் செய்பவர்கள், அக் கட்டை அறுத்தெறிந்துவிட்டு, தாங்கள் சுயேச்சையா யிருக்கும் படியான பாக்கியத்தை அடைகிறார்கள். துஷ்டச் செய்கைகளைச் செய்கிறவர்களோ, அக் கட்டுக்களை மீறமுடியாமலிருக்கிறார்கள்.

"ஜீவனுகிய நதியானது மிகவும் பயங்கரமானதா யிருக்கிறது. தேகசௌந்தரியமே, அந்நதிக்குக் கரை. மனதே, அந்நதியின் நீரோட் டத்தின் வேகம். ஸ்பரிசம் என்பது, அந் நதியின் மத்தியிலுள்ள தீவு. ரசம், அந் நதியின் நீரோட்டம். கந்தம், அந் நதியினுடைய சேறு. சப்தம், அந் நதியின் ஜலங்கள். மோக்ஷத்தை நோக்கிச் செல் கிற அந் நதியின் பாகம் மிகவும் கஷ்டங்கள் நிறைந்திருக்கிறது.

தேகமே, அந் நதியைத் தாண்டுவதற்குரிய படகு. கூமை ஆகிற துடுப்பினுல் அவ் வோடத்தைச் செலுத்தவேண்டி யிருக்கிறது. சத்யமே அவ் வோடத்தை அங்கு மிங்கும் அசையாமல் திடமாகச் செய்யும் ஒரு பாரமாக இருக்கிறது. தர்ம கர்மங்களைச் செய்வதே, சுழியான இடங்களில் படகைச் சாவதானமாகக் கொண்டுபோகக் கூடிய பாய்மரத்தில் கட்டப்பட்ட கயிறு. தானமே, அப் படகின் பாய்மரங்களை ஓட்டும் காற்ருக யிருக்கிறது. வேகத்தை அடையப் பெற்றவனுய், ஒருவன் இந்தப் படகின் மூலமாய்த்தான், ஜென்ம மாகிய நதியைக் கடக்கவேண்டும்.

"நன்மை தீமைகளையும், ஸத்யம் அஸத்யங்களையும், விலக்கு; ஸத்ய அஸத்யங்களை விலக்கி, அப்பால் எதைக்கொண்டு நீ அவைகளை விலக்குகிறுயோ, அதையும் விலக்கு. எல்லா விஷயங்களிலும் பலன்களை அபேக்ஷியாததின் மூலமாய்த் தர்மத்தையும் அகற்று. எல்லா ஆசைகளையும் துறத்தல் மூலமாய், எல்லாப் பாபங்களையும் துறக்கக் கடவாய். ஞானத்தின் உதவியால் ஸத்யாசத்யங்களை நீக்குவாயாக. கடைசியில், பிரமஞானத்தை அடைவது மூலமாக உன்னுடைய ஞானத்தையும் விடுவாயாக. எலும்புகளைத் தூண்களாகவும், நரம்புகளை ஆதாரக் கயறுகளாகவும், சதையையும், ரத்தத்தையும் மேல்பூச்சுகளாகவும், தோலை அதனுடைய மேல்மூடியாகவும் உடைய இத் தேகத்தை ஒழிப்பாயாக. மலஜலங்கள் நிறைந்ததும், அதனுல் மிகுந்த துர்நாற்றம் வீசுவதும், மூப்பு, துக்கம் ஆகிய துன்பங்களால் பீடிக்கப்பட்டதும், வியாதிகளுக கெல்லாம் இருப்பிடமானதும், துன்பத்தால் துர்ப்பலம் அடைந்ததும், ரஜோகுணம் மேலிட்டதும், நிலையற்றதும், சீக்கிரம் அழிந்துபோகக் கூடியதும், ஜீவாத்மாக்கள் வசிப்பதற்குரிய சொல்பகால குடியிருப்பு இடமாயிருக்கிறதுமான இத் தேகத்தை அவசியம் துறப்பாயாக.

"இந்த ஜடப்பிரபஞ்சமும், மகத் அல்லது புத்தி என்று சொல்லப்படுவதும் பஞ்சபூதங்களால் ஆக்கப்பட்டிருக்கின்றன. மகத் என்று சொல்லப்படுவது பரம்பொருளின் செய்கையா யிருக்கிறது. ஆகாயம், வாயு, அக்னி, ஜலம், பூமி ஆகிய இவைகள் பஞ்சபூதங்கள். சித்தம் என்பது ஆருவது. அகங்காரம் ஏழாவது. எட்டாவது மனம். புத்தி ஒன்பதாவது. ஸாத்வீகம், ராஜஸம், தாமஸம் ஆகிய முக்குணங்களும், மேற்சொன்ன பஞ்சேந்திரியங்கள் முதலிய

ஒன்பதும் சேர்ந்து, மொத்தம் பதினேழாகின்றன. இந்தப் பதினே
ழும் அவ்யக்தம் என்று சொல்லப்படுகின்றன. இந்திரியங்களுக்கு
விஷயங்களாயுள்ள ரூபம், ஸ்பரிசம், ரஸம், கந்தம், சப்தம் என்ற
இவைகள் வ்யக்தங்கள். இவைகளுடன் பிரஞ்ஞையும், அறிவும்
சேர்ந்து, மொத்தம் பிரசித்திபெற்ற இருபத்து நான்கு ஆகின்றன.
இந்த இருபத்து நான்கு தத்துவங்களும் கூடிய ஒருவன் ஜீவன் என்று
சொல்லப்படுகிறான். தர்மம், அர்த்தம், காமம் இம் மூன்றையும், சந்
தோஷம், துக்கம், பிறப்பு, இறப்பு ஆகிய இவைகளையும் உண்மை
யாயும், விபரமாயும் அறிகிறவன் எவனோ, அவனே, உண்டாகுதல்,
அழிதல் ஆகிய இவைகளின் தன்மைகளை அறிந்தவனாகிறான். இந்
திரியங்களால் எவைகள் அறியப்படுகின்றனவோ, அவைகள் பிரத்
யக்ஷப் பொருள்கள் என்று சொல்லப்படுகின்றன. இந்திரியங்களால்
அறிய முடியாததாயும், அனுமானத்தினால் மட்டும் அறியக்கூடிய
தாயும் இருப்பவைகளுக்கு அவ்யக்தவஸ்துக்கள் என்று பெயர்.
தாகத்தால் நாவரண்டு கஷ்டப்படுகிற பிராணியானவன், இன்பமாக
மழைபொழிந்தால், எப்படித் திருப்தி அடைவானோ, அதுபோல்,
இந்திரியங்களை அடக்குவதினால் ஒருவன் சந்தோஷத்தை அடை
கிறான்.

" இந்திரியங்களை ஜெயித்தபிறகு, ஒருவன், தன் ஆத்மாவானது
பிரபஞ்சத்திலுள்ள எல்லா வஸ்துக்களிடத்தும் பரவி நிற்பதையும்,
எல்லா வஸ்துக்களும் தன்னுடைய ஆத்மாவில் அடங்கியிருப்பதை
யும் காண்கிறான். ஞானத்தை ஆதாரமாகக்கொண்டு, தன்னுடைய
ஆத்மாவில் பரமாத்மாவை, அதாவது, எல்லாவிதமான ஜீவன்களை
யும் காண்கிறவனுடைய சக்தியானது எப்பொழுதும் நிலைபெற்றதாக
இருக்கிறது. ஞானத்தினுடைய உதவியால், அஞ்ஞானத்தினாலும்,
மயக்கத்தினாலும் உண்டாகிற எல்லாவிதக் கஷ்டங்களையும் தாண்டு
கிற பற்றற்ற ஒருவன், எல்லா வஸ்துக்களுடனும் பழகி ஒழுகுவதி
னால், எவ்விதத் தீங்கையும் அடைகிறதில்லை. அத்தகைய மனிதன்,
தான் அடைந்திருக்கிற ஞானத்தெளிவினால் உலகத்தில் வழங்கி
வரும் அநுஷ்டானங்களைப் பற்றி, குற்றம் பாராட்டுகிறதில்லை.
மோக்ஷமார்க்கத்தை அறிந்த ஒருவன், 'பரமாத்மா ஆதியும் அந்தமும்
அற்றது. எல்லா ஜீவன்களிலும் வியாபித்திருக்கிறது. ஜீவாத்மா

வில் ஒரு சாக்ஷியாக இருந்துகொண்டிருக்கிறது. ரூபமும் செயலு மற்றதா யிருக்கிறது' என்று சொல்லுகிறான்.

"ஒருவனுடைய தீய கருமங்களால் துக்கத்தை அடைகிறவன், அத் துக்கத்தை நிவர்த்தித்துக்கொள்ளும் பொருட்டு, அநேக ஜெந் துக்களைக் கொல்லுகிறான். இவ்விதமாக ஜீவன்களைக் கொன்று, யாகங்கள் செய்வதினால், யாகம் செய்கிறவர்கள், மறுபடியும் ஜென் மத்தை அடைந்து, பிரவிர்த்தி மார்க்கத்திலிருந்து நானாவித கருமங் களை அவசியமாகச் செய்யவேண்டியவர்க ளாகிறார்கள். அவ்வித மான மனிதன் அஞ்ஞானத்தால் மூடப்பட்டவனாகி, துக்கத்துக்குக் காரணமாகிய வஸ்துவைச் 'சுகம்' என்று பிசகாய் நினைத்து, நோயாளி அபத்யமான அன்னத்தை உண்பதுபோல், எப்பொழுதும் துக்கத்திலேயே மூழ்கி யிருக்கிறான். 'அத்தன்மையான மனிதன், தயிர் கடையப்படுவதுபோல், தன்னுடைய வினைகளால் துயரப் பட்டு, நிர்ப்பந்திக்கப்படுகிறான். கருமங்களால் கட்டுப்பட்டு, அவ னுடைய கருமங்களின் தன்மைக்குத் தக்கவாறு மறு ஜென்மங்களை அடைகிறான். அநேகவித வேதனைகளை அநுபவித்துக்கொண்டு, ஓயாமல் சக்கரம் சுழல்வதுபோல், ஒன்றன் பின் ஒன்றாக எண் ணிறந்த ஜென்மங்களை அடைகிறான்.

"ஆனால், நீயோ, உன்னுடைய கருமபந்தங்களை யெல்லாம் அறுத்துவிட்டாய். நீ பிரவிர்த்தி மார்க்கத்தினின்றும் விலகிவிட் டாய். திரிகாலஞான மடைந்தவனாயும், எல்லா வஸ்துக்களையும் ஜெயித்தவனாயுமுள்ள உனக்கு ஜெயம் உண்டாகுக. உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களிடத்தும் பற்றில்லாமல் சுதந்தரனாய் இருக்கக்கட வாய். இந்திரியங்களை அடக்கினதின் மூலமாயும், தவசக்தியாலும் ஆதிகாலத்தில் அநேகம் பேர்கள் கருமங்களின் கட்டுக்களை அழித்து, விசேஷ மேன்மையையும், நீடித்த பேரின்பத்தையும் அடைந்தார் கள்.

"மங்களகரமானதும், சாந்தியைக் கொடுப்பதும், துக்கத்தைப் போக்கி, இன்பத்தைக் கொடுப்பதுமான வேதசாஸ்திரங்களைக் கேட் பதினால், ஒருவன் சுத்தமான ஞானத்தை அடைகிறான். அதை அடைந்த பிறகு, மேலான இன்பத்தையும் அடைகிறான். ஒவ் வொரு நாளும் துக்கத்துக்கும், பயத்துக்கும் எண்ணிறந்த காரணங்

கள் அறிவில்லாத மூடனைப் பிடித்துக்கொண்டு வருகின்றன. ஆனால், கல்வியும், ஞானமும் நிறைந்த ஒருவனுக்கோ, அத்துன்பங்க ளில்லை. ஆதலால், உன்னுடைய துக்கங்களை ஒழிப்பதற்காக நான் சொல்லப்போகிற சில ஆதிகாலத்து விருத்தாந்தங்களை நீ கேட்பா யாக. தன் புத்தியைத் தன்வசமாகச் செய்துகொள்ளுகிறவன் இன் பத்தை அடைவது நிச்சயம். வெறுக்கத் தக்கவைகளைக் கைக் கொள்வதினாலும், விரும்பத் தக்கவைகளைச் செய்யாது, கைவிடுதலி னாலும், மூடாத்மாக்களா யிருப்பவர்கள் அநேகவிதமான துக்கங் களுக்கு உள்படுகிறார்கள். போனவிஷயங்களைப் பற்றி அவைகளின் பிரயோஜனங்களை அடிக்கடி நினைத்து, ஒருவன் துக்கப்படலாகாது. போனவிஷயங்களையே அபிமானித்து வருந்துகிறவன் எப்பொழுதும் பந்தகங்களினின்றும் விடுபடமாட்டான். ஒருவன், தான் எந்த விஷயங்களில் ஆசையும், பற்றும் வைக்க விரும்புகிறானோ, அவை களின் குணதோஷங்களைக் கண்டுபிடிக்க முயற்சிக்கவேண்டும். அவ் விதமான விஷயங்கள் மிகுந்த தீங்குகளை விளைவிக்கத் தக்கவைகள் என்றும் அவன் எப்பொழுதும் நினைக்கவேண்டும். அவ்வாறு நினைத்து, அவன் அவைகளின் ஆசையினின்றும் சீக்கிரம் விலகிக் கொள்ளவேண்டும். சென்ற விஷயத்துக்காக எவனொருவன் துக்கிக் கிறானோ, அவன் பொருளையாவது, கீர்த்தியையாவது, தர்மபலனை யாவது அடைகிறதில்லை. போனவஸ்துவானது மறுபடியும் கிடைக் காது. அவைகள் விஷயமாக ஒருவன் எவ்வளவாகத் துக்கப்பட்டா லும், அவைகள் திரும்பி வருகிறதில்லை. ஜீவன்கள் இவ்வுலகத்தில் சில காலங்களில் வஸ்துக்களை யடைவதும், சில காலங்களில் அவை களை இழப்பதுமா யிருக்கிறார்கள். இவ் வுலகத்திலுள்ள ஒரு மனி தன் தனக்கு நேரிடுகிற சங்கதிகளை யெல்லாம் நினைத்துத் துக்கமுறு தல் கூடாது. இறந்துபோனவர்களைப் பற்றியும், இழந்துபோன பொருள்களைப் பற்றியும் துக்கப்படும் ஒருவன், அத்துக்கத்தின் பய னாகத் துக்கத்தை அடைகிறதைத் தவிர, வேறு பயனை அடைகிற தில்லை. ஒரு துக்கத்துக்குப் பதிலாக இரண்டு துக்கங்களை அனு பவிக்கிறான். இந்த உலகத்தில் வாழ்நாளின் தன்மையையும், இறப் பையும் தங்களுடைய அறிவால் அறிந்துகொண்டு, துக்கப்படாம லிருப்பவர்களே, விஷயங்களைச் சரியானபடி கண்டவர்களென்று சொல்லப்படுகிறார்கள். அவர்கள் உலகத்தில் சம்பவிக்கக் கூடிய

எதைப் பற்றியும் துக்கிக்க வேண்டியதில்லை. தேகத்துக்காவது, மனதுக்காவது துன்பத்தை விளைவிக்கிற ஒரு கஷ்டம் ஒருவனுக்கு நேர்ந்து, அவைகளை அவனுடைய மிகுந்த முயற்சிகளாலும் நிவர்த்திக்க முடியாமல் போய்விட்டால், அவன் அதைப் பற்றியே சிந்தித்துத் துக்கிக்கலாகாது. இதுவே, துக்கநிவர்த்திக்கு மருந்து. மனோ துக்கங்களை ஞானங்களால் தொலைக்கவேண்டும். தேகத்துன்பங்களை மருந்துகளால் ஒழிக்கவேண்டும். இது ஞானத்தால் அடையக்கூடிய சக்தி. அம்மாதிரி விஷயங்களில் ஒருவன் அறிவில்லாதவர்களைப் போல் நடக்கக் கூடாது. இளமை, அழகு, ஜீவன் சேர்த்துவைத்திருக்கும் செல்வம், தேகசௌக்கியம், பிரியமானவர்களுடைய கூட்டுறவு இவைகளெல்லாம் மிகவும் நிலையற்றவைகள். ஞானத்தோடு கூடியிருப்பவன் இவைகளின் பேரில் ஆசைவைத்தல் கூடாது. ஒரு கூட்டத்தாருக்கு ஏற்பட்ட பொது துக்கத்தைப் பற்றி ஒருவன் தானே எல்லாத் துக்கத்தையும் வகித்துக்கொண்டு கஷ்டப்படக் கூடாது. துக்கம் வந்த காலத்தில், அதையே பாராட்டிக் கொண்டிருப்பதை விட, சமயம் வந்த காலத்து, அதை நிவர்த்திப்பதற்குப் பிரயத்தனம் செய்யவேண்டும். இவ்வுலகத்தில் சுகத்தை விட, துக்கம் ஜாஸ்தி என்பது வாஸ்தவம். இவ்வுலகத்தில் மனிதர்கள் இந்திரிய வஸ்துக்களில் பற்றுள்ளவர்களாயும், இறப்பை நினைத்து மிகவும் துன்பப்படுகிறவர்களாயும் இருப்பதற்குச் சந்தேகமில்லை. துக்கத்தையும், சந்தோஷத்தையும் எவன் துறக்கிறானோ, அவனே பிரமத்தை அடைந்தவன். அம்மாதிரி மனிதன் இறந்து, உலகத்தை விட்டுப் போகும்பொழுது, ஞானம் நிறைந்த மனிதர்கள் அவன் விஷயமாக எவ்விதமாகவும் துக்கிக்கிறதில்லை. பணத்தைச் செலவழிப்பதில் துன்பம் இருக்கிறது. அதைப் பாதுகாப்பதிலும் வருத்தமிருக்கிறது. அதைச் சம்பாதிப்பதிலும் கஷ்டமிருக்கிறது. ஆதலால், ஒருவனுடைய சொத்தானது அழிந்து போய்விட்டால், அவன் அதைப்பற்றித் துக்கப்பட வேண்டியதில்லை. அற்ப அறிவுடைய மனிதர்கள், பலவிதமான செல்வ நிலைமைகளை அடைந்து, மனத்திருப்தியை அடையாமல், கடைசியில் துக்கத்தோடு மடிகிறார்கள். ஆனால், ஞானமுடைய மனிதர்களோ, எப்பொழுதும் திருப்தியுள்ளவர்களாயிருக்கிறார்கள்.

"சேர்க்கைகளெல்லாம் கடைசியில் பிரிவை அடைவது நிச்சயம். உயர்ந்த வஸ்துக்களெல்லாம் நிலைகலங்கிக் கீழே விழுந்து, தாழ்மையை அடையும்படியாக விதிக்கப்பட்டிருக்கின்றன. சேர்க்கை என்பது ஒரு காலத்தில் பிரிவை அடையும் என்பது நிச்சயம். பிறப்பு உள்ளபோதெல்லாம் சாவுமுண்டு. ஆசை எவ்வளவு அனுபவித்தாலும் தீராதது. மனத்திருப்தியே சிறந்த ஆனந்தம். ஆதலால், ஞானிகள் மனத்திருப்தியைச் செல்வங்களிலெல்லாம் மேலான மதிப்புள்ளதாகக் கருதுகிறார்கள். ஒருவனுடைய வாழ்நாளுக்கு ஏற்பட்ட காலம் துடர்ந்தோடிக்கொண்டிருக்கிறது. ஒரு நிமிஷம் கூட அது நிற்கிறதில்லை. ஒருவனுடைய தேகமோ சீக்கிரம் அழியக் கூடியதாயிருக்க, ஒருவன் இவ்வுலகத்தில் சாசுவதமானது என்று நினைக்கக் கூடிய வஸ்து வேறு என்ன இருக்கிறது? உலகத்திலுள்ள ஜீவன்களுடைய தன்மைகளையெல்லாம் யோசித்துப் பார்த்து, மனதினால் அவைகள் கிரஹிக்க முடியாதவைகள் என்று தீர்மானித்து, உயர்ந்த மோக்ஷமார்க்கத்தில் தங்களுடைய கவனத்தைச் செலுத்தி, அதில் கூடியமட்டும் அபிவிருத்தி அடைகிறவர்கள் துக்கிக்க வேண்டுவதில்லை. புலி தன் இரையைப் பிடித்துக்கொண்டு ஓடுகிறதுபோல், அவ்விதமான பயனற்ற தொழில்களில் பொழுதைப் போக்கியும், ஆசைக்குரியதும், உலகசுகங்களுக்குக் காரணமானதுமான வஸ்துக்களிடத்துள்ள ஆசை தீராமலுமிருக்கிற மனிதனை யமன் பலாத்காரமாய்ப் பிடித்துக்கொண்டு ஓடுகிறான். ஒருவன் துக்கத்திலிருந்து தன்னை விடுவிக்க எப்பொழுதும் பிரயத்தனம் செய்யவேண்டும். ஒருவனுக்கு ஏற்பட்ட கருமங்களைச் சந்தோஷமாகச் செய்ய ஆரம்பிப்பது மூலமாய், அவனுக்கு ஏற்பட்டிருக்கும் துக்கத்தை அகற்ற முயலவேண்டும். அதாவது, தனக்கு நேர்ந்த துக்கத்துக்கு இடம் கொடாமல், அதினின்றும் விடுபட்டவனாய், குற்றமான ஒழுக்கங்களையெல்லாம் தவிர்த்து, தாங்கள் தன்னை அணுகாத வண்ணம் ஒருவன் தடுத்துக்கொள்ளல் வேண்டும். தனவான்களும், ஏழைகளும், சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்தம் ஆகிய இவைகளின் மூலமாய், சுகங்களை அனுபவித்துத் தீர்ந்த உடனேயே, அவ்வனுபோகங்களை அப்பால் காண்பதே கிடையாது. சேர்க்கை உண்டாவதற்கு முன் ஜீவன்கள் துன்பத்தை அடைகிறதில்லை. ஆகலால், சேர்க்கையினால் மனது சலனம் அடையாமலிருக்கிற ஞானி, அச் சேர்க்கையானது

முடிந்து, தன்னைப் பிரியும்பொழுது, துக்கத்துக் கிடம்கொடுக்கிற தில்லை. ஒருவன் இந்திரியசுக இச்சையையும், தின்பதில் மிருந்த ஆசையையும் பொறுமையினால் தடுக்கவேண்டும். ஒருவன் தன் கண்ணினுடைய உதவியினால் தன் கால்களையும், கைகளையும் ரக்ஷித்துக் கொள்ளவேண்டும். ஒருவன் தன் கண்கள், காதுகள் முதலிய இந்திரியங்களைத் தன் மனதால் பாதுகாக்கவேண்டும். தன் மனத்தையும், பேச்சையும் ஞானத்தால் அடக்கிவரவேண்டும். தனக்குத் தெரிந்தவர்களிடத்தும், தெரியாதவர்களிடத்தும் உள்ள அபிமானத்தையும், நேசத்தையும் ஒழித்துவிட்டு, ஒருவன் அகங்காரமற்றவனாய் நடக்கவேண்டும். அவனே, ஞானவான். அவனே, நிச்சயமாய்ச் சந்தோஷத்தை அடைவான். தன் ஆத்மாவிடத்திலிருந்தே சந்தோஷத்தை அடைபவனும், யோகத்திலேயே திடமான மனதை உடையவனும், தன்னைத்தவிர பிற வஸ்துக்களிடத்துச் சார்பில்லாதவனும், ஆசையற்றவனும், தன்னைத் தவிர வேறு எவ்விதமான உதவியில்லாமல் ஒழுகுகின்றவனும் உண்மையில் பேரின்பத்தை அடைகிறான்.

“சந்தோஷமும், துக்கமும் ஒருவனை அடையும்பொழுதும், விட்டு விலகும்பொழுதும் அம்மாறுதல்களை ஒருவன் தன் புத்தியினாலாவது, யுக்தியினாலாவது, முயற்சியினாலாவது தடுத்தல் முடியாத காரியம். ஒருவன், தன் உண்மையான தன்மையினின்றும் தவறுவதற்கு இடங்கொடாமல், தன் ஆத்மாவை ரக்ஷித்துக் கொள்வதற்குத் தன்னால் கூடியமட்டும் முயற்சிக்க வேண்டும். அம்மாதிரி ஜாக்கிரதையும், முயற்சியும் உள்ளவன் துன்பத்தை அடைய மாட்டான். தன் ஆத்மாவை எல்லாவற்றிலும் மிக்க அருமையாக மதித்து, மூப்பு, வியாதி, சாவு இவைகளிலிருந்து தன்னைக் காப்பாற்றப் பிரயத்தனப்படவேண்டும். பராக்கிரமமுள்ள வில்லாளியால் எய்யப்பட்ட கூரான அம்புகள் போல மனதிலும், தேகத்திலும் உண்டாகிற வியாதிகள் தேகத்தை வருத்துகின்றன. ஆசையினால் வதைக்கப்பட்டும், மனோவியாதியினால் சஞ்சலப்பட்டும், நிற்கதியாயும், இவ்வுலகத்தில் வாழ்நாள் நீடித்திருக்க வேண்டுமென்கிற ஆசையுடனும் இருக்கும் மனிதனுடைய தேகமானது துரிதமாய் நாசத்தை அடைகிறது. பகல்களும், இரவுகளும் மனித ஜீவன்களுடைய வாழ்நாள்களைத் தங்களுடைய வேகத்துடன் சேர்த்து இழுத்துக்கொண்டு இடைவிடாமல் ஓடிக்கொண்டிருக்கின்றன. நதிகளினுடைய ஓட்டங்கள்போல்,

அலைகள் திரும்பாமல் ஒரே முகமாகவும், ஓயாமலும், ஓடிக் கொண்டிருக்கின்றன. சுக்லபக்ஷமும், கிருஷ்ணபக்ஷம் இவைகள் ஒன்றன் பின் ஒன்றாய் விடாமல் வந்து, மனிதர்களுடைய வாழ்நாள்களைச் சேதப்படுத்துகின்றன. என்றுமழியாத சூரிய பகவான் ஒவ்வொருநாளும் உதித்தும், அஸ்தமித்தும் உலகத்திலுள்ள ஜீவன்களுடைய சுகங்களையும், துக்கங்களையும் ஓயாமல் அளவிட்டுக் கொண்டிருக்கின்றார். ஒரு மனிதனுடைய பூர்வ ஜென்ம கருமங்களின் பயனாகியதும், அவன் எதிர்பாராமலே அவனுக்குச் சம்பவிக்கிறதும் ஆகிய நல்லதும், தீயதுமான சம்பவங்களையும் கூட சேர்த்துக் கொண்டு, இராப்பொழுதுகள் ஓயாமல் போய்க்கொண்டிருக்கின்றன. மனிதனுடைய கர்மங்களின் பலன்கள், வேறு இதர காரணங்களைச் சார்ந்திராவிட்டால், அவன் தான் விரும்பினவற்றை யெல்லாம் அடையக் கூடுமல்லவா?

“இந்திரிய அடக்கமும், சாமர்த்தியமும், புத்திக்கூர்மையுமுள்ள மனிதர்கள் கூட, பிரயத்தினங்களைச் செய்யத் தவறினால் எவ்விதமான பலனையும் அடைய முடியாது. ஆனால் புத்திக்கூர்மையில்லாமலும், எவ்விதமான யோக்கியதைகளும் அடையப் பெறாமலும், மனிதர்களில் தாழ்ந்தவர்களாயிருப்பவர்கள், அவர்கள் விரும்பாமலும், எதிர்பாராமலு மிருந்தபோதிலும் கூட, அவர்களுடைய மனோபீஷ்டங்களெல்லாம் நிறைவேறும்படியான பாக்கியத்தை யடைகிறார்கள் என்பதை நாம் பார்க்கிறோம். எல்லா ஜீவன்களுக்கும் ஹிம்சைகள் செய்வதில் எப்பொழுதும் கருத்தாயிருப்பவனும், உலகத்தை யெல்லாம் வஞ்சிப்பதே தொழிலாக உடையவனுமாகிய மனிதன் சந்தோஷமாயிருப்பதையும் நாம் பார்க்கிறோம்; சோம்பலாயுட்கார்ந்திருக்கிறவன் மிகுந்த க்ஷேமத்தைப் பெற்றிருப்பதையும், மற்றொருவன் பலமான முயற்சிகள் செய்து, தனக்குக் கிடைக்கப் போகிறதென்று எதிர்பார்த்திருந்த பலன்களும், வாய்க் கெட்டினது கைக்கெட்டாமல் போயிற்றென்ற பழமொழிப்படி கிட்டாமல் மோசம் போவதையும் நாம் பார்க்கிறோ மல்லவா? இதற்கெல்லாம் மனிதனுடைய பூர்வகருமங்களைத் தவிர வேறு என்ன காரணம்?

“ஓரிடத்தில் உண்டான வீரியம் திரும்ப வேறொரு ஜீவனுடைய தேகத்தில் போய்ச் சேருகிறது. அப்படியிருக்கும் அந்த பிந்துவைக் கர்ப்பப் பையில் விட்டால், அது சில சமயங்களில்

சிசுவை ஜெனிப்பிக்கிறது; சில சமயங்களில் பயனற்றதாய்ப் போகிறது; சம்போகம் செய்தும், கர்ப்பம் இல்லாமல் போவதானது, ஏராளமான புஷ்பங்கள் புஷ்பித்தும், ஒரு பழம்கூட உண்டாகாமலிருக்கிற மாமரத்தை ஒத்திருக்கிறது. சிலர், தங்களுக்குக் குழந்தைகள் வேண்டுமென்ற ஆசையினால், அநேக தெய்வங்களை ஆராதித்து, மனப்பூர்வமாகப் பிரயத்தனம் செய்தபோதிலும், கர்ப்பத்தில் சிசு உற்பத்தியாகிறதில்லை. வேறு ஒருவன், குழந்தை பிறப்பதைக் கொடிய விஷமுள்ள பாம்பாக நினைத்துப் பயந்தபோதிலும், அவனுக்குத் தீர்க்காயுஸ் உள்ளவனும், தானே மறுபடியும் உலக அநுபவங்களை அநுபவிக்கப் பிறந்ததுபோல், தன்னைப்போன்ற மகன் பிறப்பதையும் நாம் பார்க்கிறோம். அநேக ஜனங்கள், குழந்தை வேண்டுமென்று மிகுந்த ஆசையுடையவர்களாய், அதுவிஷயமாக மிகவும் துக்கப்பட்டு, அநேக தெய்வங்களைப் பூஜித்தும், கடுமையான விரதங்களை அநுஷ்டித்தும், பத்து மாதகாலம் தாயின் கர்ப்பத்திலிருந்து தங்கள் வம்சத்துக்கே பதர்போன்ற துர்ப்பாக்கியமான பிள்ளைகளைக் கடைசியில் அடைகிறார்கள். சிலாக்கியமான விரதாநுஷ்டானங்களால் பிறந்த மற்றவர்கள் அவர்களுடைய முன்னோர்களால் தேடி வைக்கப்பட்ட செல்வத்தையும், தானியங்களையும், இன்னும் நானாவித போக வஸ்துக்களையும் உடனே அடைகிறார்கள்.

“ஸ்திரீபுருஷர்கள் சேர்க்கையினால் உண்டாகும் கர்ப்பமானது, தாயைப் பீடிக்கவந்த ஒரு துன்பம்போல், கருவில் பிரவேசிக்கின்றது. பிராண வாயுக்கள் நின்றவுடனே, தன்னுடைய ஸ்தூல சரீரம் அழியப் பெற்றதும், ஆனால் தனது கர்மங்களையெல்லாம், மாம்ஸ ஸ்லேஷ்மங்களா லமைக்கப்பட்ட அந்த ஸ்தூல சரீரத்தைக்கொண்டு செய்திருக்கிறதுமான ஜீவன், வேறு ஸ்தூல தேகத்தை யடைகின்றது. தேகம் அழிந்தவுடனே, அதுபோல் இனிமேல் அழியக்கூடியதுமான மற்றொரு தேகமானது, ஒரு படகிலிருந்து பிரயாணிகள் மற்றொரு படகில் ஏறுவதுபோல், பிராணனை இழந்த ஜீவனைப் பெற்றுக்கொள்ளத் தயாராய் வைக்கப்பட் டிருக்கிறது. சேர்க்கையினால், அம்சதனமாகிய ஒரு துளி பிந்து கர்ப்பப் பையிற் விழுகின்றது. அதில் விழுந்த கருவை உயிருடன் இருக்கும்படி செய்வது யார்? அதற்காக என்ன ஜாக்கிரதை எடுத்துக்கொள்ளப் படுகிறது? தேகத்தில் எந்த விடத்தில் அன்னம் போய் ஜீரணிக்கப் படுகின்றதோ

அங்கேதான் கருவும் வசிக்கின்றது. ஆனால், அது அங்கே ஜீரணிக்கப் படுகிறதில்லை. உதரத்திலிருக்கிற மலம் மூத்திரங்களுக்குப் போக்கானது ஸ்வபாவத்தாலே அமைந்திருக்கின்றது. அங்கே தங்கியிருப்பது, அல்லது, அவ்விடத்தை விட்டு வெளியே வருவது ஆகிய இந்த விஷயத்தில் கர்ப்பத்திலிருக்கும் ஜீவனுக்குத் தானாக சுதாவில் ஒன்றும் செய்யச் சக்தியில்லை. கற்பங்களிலுள்ள சில சிசுக்கள் பூர்ணமடையாமலே கற்பங்களிலிருந்து வீழ்கின்றன. மற்ற சிசுக்கள் கற்பத்திலிருந்து ஜீவனுடன் வெளிவந்து ஜீவித்திருக்கின்றன. ஆனால், வேறு சில சிசுக்கள் உயிர் பெற்ற பிறகும், கற்பத்திலேயே மரிக்கின்றன. ஏனென்றால், அவர்களுடைய கர்மங்களின் தன்மைப் பயனாக, அவர்களைப் பெறுவதற்கு வேறு சரீரங்கள் ஆயத்தமா யேற்படுகின்றன. ஸ்திரீயுடன் புணர்ச்சி செய்யும் ஒருவன், அச் செய்கையால் தனது விந்துவை அவளுடைய கற்பத்தில் விட்டு, அதனால் ஒரு குமாரனையாவது, ஒரு குமாரத்தியையாவது அடைகிறான். இவ்வாறு பிறந்த சிசுவானது காலக்கிரமத்தில், தானும் அதே மாதிரியாக இந்திரியப் புணர்ச்சி செய்கின்றது. ஒருவனுக்கு ஏற்பட்ட வாழ்நாள் கழியும்பொழுது, அவனுடைய சரீரத்தின் பஞ்சபூதங்களும் ஏழாவது, ஒன்பதாவது அவஸ்தைகளை யடைகின்றன. பிறகு ஜீவன் சரீரத்தை விடுகிறான். ஆனால், உண்மையில் ஜீவன்கள் மாறுதலை யடைகிறதில்லை.

"அற்பப் பிராணிகள் வேடர்களால் துரத்தப்பட்டபொழுது, துன்பமடைவதுபோல, ஜீவன்கள் வியாதியின் கொடுமையால் எழுந்திருந்து நடமாட முடியாதவர்களாய்க் கஷ்டப்படுகின்றார்கள். மனிதர்கள் மிகுந்த வியாதிகளால் பீடிக்கப்படும் காலத்தில், தாங்கள் சொஸ்தமடைவதற்கு ஏராளமான பொருள் செலவு செய்ய விரும்புகின்றார்கள். ஆனபோதிலும், வைத்தியர்கள் எவ்வளவோ முயற்சி செய்தும், குணப்படுத்த அசக்தர்களா யிருக்கின்றார்கள். வைத்திய சாஸ்திரங்களை நன்றாயக் கற்றறிந்து சமர்த்தர்களா யிருப்பவர்களும், சிறந்த ஔஷதங்களை வைத்திருப்பவர்களும் கூட, வேடர்களால் மிருகங்கள் துன்பமடைவதுபோல, தாங்களும் நோயின் கொடுமையால் வருந்துகின்றார்கள். மனிதர்கள் கஷாயங்களையும், பலவகையான ஔஷத கிருதங்களையும் எவ்வளவோ அருந்தியும், அவர்களது சரீரங்கள், பலமான யானைகளால் தாக்கப்பட்ட மரங்கள்போல், மூப்

பினால் சிறுகுலைந்து போகின்றன. மிருகங்கள், பக்ஷிகள், ஏழைகளான மனிதர்கள் ஆகிய இவர்கள் நோய்களினால் வருந்தும் பொழுது, இவர்களுக்கு மருந்துகள் கொடுத்து வைத்தியம் செய்கின்றது யார்? உண்மையில் அவர்கள் வியாதிகளால் அநேகமாய்த் துன்பப்படுகின்ற தில்லை. பெரிய விலங்குகள் சிறிய பிராணிகளை எதிர்த்து வருவது போல், வியாதிகள் உக்கிரமான பலமும், பராக்கிரமமுமுள்ள அரசர் களையும் வருத்துகின்றன. அநேக வியாதிஸ்தர்கள் வலி பொறுக்க மாட்டாமல், அழுகக்கூட சக்தியற்றவர்களாய், அஞ்ஞானத்திலும், சோகத்திலும் ஆழ்ந்து, அவர்களுடைய கர்ம வசத்தால் தள்ளப் பட்ட மார்க்கத்தை அனுசரித்து, இழுத்துக்கொண்டு போகப்படு கின்றார்கள். ஜீவன்கள் வியாதியால் பேரும் சுபாவத்தைப் பணத்தா லும், ராஜ்ய அதிகாரத்தினாலும், கடுமையான தவங்களினாலும் ஜெயிக்க எவ்வளவோ முயன்றும் பயன்படுவதில்லை.

"மனிதர்கள் செய்யும் முயற்சிக ளெல்லாம் பயன்படுவதா யிருந் தால், மனிதர்கள் இறப்பதேது? நோய், மூப்பு ஏது? எவ்விதத் துன் பமும் அவர்களை யணுகாது. முடிவில் அவர்களுடைய எல்லா விருப் பங்களும் நிறைவேறிச் சுகத்தை யடைவார்களல்லவா? எல்லா மனி தர்களும் வரவர உயர்ந்த பதவியை யடைய விரும்புகின்றார்கள். தங் கள் எண்ணம் நிறைவேறுவதற்காக அவர்களால் இயன்றமட்டும் மிகுந்த முயற்சிகளைச் செய்து வருகின்றார்கள். ஆனால், எல்லோருக் கும் அவர்களுடைய எண்ணம் போல், பலன்கள் கிடைக்கிறதில்லை. தவறுதல்கள் இல்லாதவர்கள், யோக்கியர்கள், சூரர்கள், பராக்கிரம முள்ளவர்கள் ஆகிய மனிதர்களும் கூட, செல்வச் செருக்கு, மது பானம் உண்பது ஆகிய இவைகளால் மயங்கி, மதங் கொண்டிருப்ப வர்களைப் போய் உபாசிக்கிறார்கள். சிலருக்குத் துன்பங்கள் வந்து, அவைகளை அவர்கள் உணரும் முன்னமேயே, அவைகள் அவர்களை விட்டு விலகுகின்றன. வேறு சிலர் யாதொரு பொருளும் இல்லா விடினும், யாதொரு கஷ்டமு மில்லாமல் வாழ்கின்றார்கள். கர்மச் சேர்க்கைகளினா லுண்டாகும் பலன்கள் ஒரே மாதிரியா யில்லாமல் பலவாறா யிருப்பதை நாம் காண்கிறோம். சிலர் பல்லக்குச் சுமக்கின்றார் கள். மற்றவர்கள் பல்லக்குச் சவாரி செய்கின்றார்கள். யாவரும் செல்வமும், க்ஷேமமும் வளர வேண்டுமென்றே கோருகின்றார்கள். ஆனால், சிலருக்கு மட்டும்தான் தேர்கள், யானைகள், குதிரைகள்

இவைகளில் ஏறவும், இவைகள் தங்களைச் சூழ்ந்து ஊர்கோலம் வரவும் ஆகிய பாக்கியங்கள் கிடைக்கின்றன. சிலர், தங்கள் மனைவிகளை இழந்து, வேறுமனைவியைப் பெற முடியாதவர்களா யிருக்கின்றார்கள். ஆனால், வேறு சிலருக்கோ நூற்றுக் கணக்காக மனைவிமார்க ளிருக்கின்றார்கள். சுகதுக்கங்கள் இரண்டும் அடுத்தடுத்தே யிருக்கின்றன. மனிதர்களுக்குச் சுகம் உண்டு, அல்லது துக்கம் உண்டு. இந்த ஆச்சரியமான விஷயத்தைக் கவனித்துப் பார்.

"ஆனால், இவ்விதக் காக்ஷியைக் கண்டு, நீ அஞ்ஞானத்தினால் கலக்கமடையாதே. நீ புண்ணிய பாவங்கள் இவை இரண்டையும் ஒழி. பொய், உண்மை இவை இரண்டையும் நீக்கு; பிறகு, எதன் உதவியால் சத்தியத்தை நீக்கினாயோ, அதையும் ஒழி, ஓ! முனிசிரேஷ்டனே! மிகுந்த அபூர்வமான இந்த ரகசியத்தை உனக்குச் சொன்னேன். இவ்வித உபதேசங்களின் உதவியால், ஆதியில் மனிதர்களாயிருந்த பெரிய தேவர்களும் உலகத்தைவிட்டு, தேவலோகத்தில் வந்து வசிக்கும்படியான மேன்மையைப் பெற்றார்கள்."

நாரதரால் சொல்லப்பட்ட இவ் வார்த்தைகளைக் கேட்டு, மிகுந்த அறிவையும், சாந்தியை அடைந்த மனதையு முடையவரான சுகர், தான் பெற்ற உபதேசங்களின் சாராம்சங்களைப் பற்றிச் சிந்தித்தார். ஆனால், ஒரு நிச்சயமான தீர்மானத்தைச் செய்ய முடியவில்லை. மனைவிகளையும், பிள்ளைகளையும் அடைவதனால் ஒருவன் மிக்க துன்பத்தை அடைகிறான் என்பதையும், சாஸ்திரத்தையும், வேத ஞானத்தையும் அடைவதற்கு ஒருவன் மிகுந்த சிரமப்பட வேண்டுமென்றும் அவர் அறிந்தார். ஆகலால், அவர், சாசுவதமாயும், எவ்விதமான துன்பமு மில்லாததாயும், மிகவும் க்ஷேமகரமாயு முள்ளதான பதவி எது என்று தனக்குள்ளேயே ஆராய்ந்து பார்த்தார். தான் அனுஷ்டிக்க வேண்டியதாக ஏற்பட்டிருக்கும் மார்க்க விதி இன்னதென்று கொஞ்சகாலம் யோசித்து, தர்மங்களினுடைய ஆரம்பத்தையும் முடிவையும் நன்றாய் அறிந்த சுகர், ஒப்பில்லாத உயர்ந்த பேரானந்தத்தைக் கொடுக்கக் கூடிய எல்லாவற்றிலும் சிறந்த பதவியை அடைய வேண்டுமென்று தீர்மானித்தார். "பற்றுக்களை யெல்லாம் நீக்கி, எல்லாப் பந்தங்களினின்றும் முற்றிலும் விடப்பட்டவனாகி, சிலாக்கியமான அப் பதவியை நான் அடைவது எப்படி?" என்று தனக்குள்ளேயே வினவினார். "அநேகவிதப் பிறப்புக்களாகிய சமுத்

திரத்தை மறுபடியும் திரும்பி அடையாத அந்த சிறந்த நிலைமையை நான் எவ்வாறு அடைவேன்? அதை அடைய நான் விரும்புகிறேன்; சகலவிதப் பற்றுக்களையும் அகற்றி, புத்தியின் உதவியால் ஆலோசித்து, ஒரு நிச்சயத்துக்கு வந்து அந்நிலைமையை அடைவேன்; எந்த நிலைமையில் என்னுடைய ஆத்மாவானது சஞ்சலமற்ற சாந்தியை அடைகிறதோ, மூப்பு முதலிய மாறுதல்கள் ஒன்றுமில்லாத அழிவற்றதாயும், சாசுவதமாயு மிருக்கின்றதோ, அந்த நிலைமையை நான் அடைவேன்; ஆனால் அந்தப் பதவி யோகத்தினுடைய சாதனமில்லாமல் அடையக்கூடிய தன்று; ஞான வரம்பையும் மனத் தெளிவையும் அடைந்த ஒருவன் தன்னுடைய வினைகளால் அல்பமான ஆசைகளையும் பற்றுக்களையும் அடைகிறதில்லை; ஆதலால், நான் யோக மார்க்கத்தை அனுசரித்து, என்னுடைய இப்பொழுது இருப்பிடமாகிய இத் தேகத்தை ஒழித்துவிட்டு, காற்றாக என்னை மாற்றிக்கொண்டு, சூரியனைப் போன்ற தேஜசுகள் நிறைந்த பிரமமாகிய ஜோதியை நான் அடைவேன். ஸோமன் முதலாகிய தேவர்கள் அவர்களுடைய புண்ணியங்கள் க்ஷீணித்த பிறகு, பூமியில் விழுந்து, அப்பால் புண்ணியங்களைச் செய்து, மறுபடியும் சுவர்க்கத்தை அடைவதுபோல், ஜீவாத்மா பிரமதேஜஸை அடைந்த பிறகு அவ்விதமான கஷ்டங்க ளில்லாமல் நித்யானந்தத்தை அடைகிறான். சந்திரன் எப்பொழுதும் தன் கலை குறைந்து கொண்டே வந்து, அப்பால் மறுபடியும் கலை விருத்தி யடைந்துகொண்டு வருவதையும் நாம் பார்க்கிறோம். இவ்வாறு கலை குறைதலும், அதிகரித்தலும் அடிக்கடி தொடர்ந்து வருவதைக் கண்ட நான், அவ்விதமான மாறுதல்களுள்ள ஜென்மத்தை விரும்பேன். சூரியன் தன்னுடைய உக்ரமான கிரணங்களால் உலகத்தை உஷ்ணிப்பிக்கிறார். அவருடைய வட்ட வுருவமானது எப்பொழுதும் குறைவை அடைகிறதில்லை; எப்பொழுதும் மாறாதவராய், வஸ்துக்களிலெல்லாம் உள்ள சத்துக்களைக் கிரகிக்கிறார்; ஆதலால், பிரகாசிக்கிற தேஜஸுடைய சூரியனை நான் அடைய விரும்புகிறேன். அங்கே ஒருவராலும் ஜெயிக்கப்படாதவனாய்க் கொஞ்சமேனும் பயமற்றவனாய், சூரிய மண்டலத்தில் இத் தேகத்தைத் துறந்துவிட்டு, நான் அங்கே வசிப்பேன். மகா ரிஷிகளோடு சூரியனுடைய அசாத்தியமான சக்தியில் நான் கலப்பேன். இவ் வுலகத்திலுள்ள எல்லா ஜீவன்களிடத்தும் நான் வியாபித்திருப்பேன் என்ற சங்கதியை எல்லா ஜீவன்கள், இதோ இருக்கிற விரு

க்ஷங்கள், யானைகள், மலைகள், பூமி, அஷ்டதிக்குக்கள், ஆகாசம், தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள், பிசாசுகள், உரகர்கள், ராக்ஷஸர்கள் இவர்கள் எல்லோரும் அறியச் சொல்லுகிறேன். எல்லா தேவர்களும், ரிஷிகளும் என்னுடைய யோக சக்தியை இன்று பார்க்கட்டும்," என்று சொன்னார். இவ்வாறு சொல்லி, உலகமெல்லாம் கீர்த்தி பெற்ற நாரதரிடம் தம்முடைய எண்ணத்தைத் தெரிவித்தார்.

நாரதருடைய அநுமதியைப் பெற்றுக்கொண்டு, சுகர் அவருடைய தகப்பனாரிருந்த இடத்துக்குச் சென்றார். தன்னுடைய தகப்பனாரைப் பிரதக்ஷணம் செய்து, அவருடைய க்ஷேமங்களைப்பற்றி விசாரித்தார். சுகருடைய உத்தேசங்களை வியாசர் கேட்டு, மிகவும் சந்தோஷமடைந்தார். சுகரை நோக்கி, வியாஸ மகரிஷி, "ஓ! குமாரனே! ஓ! என் அருமைக் குமாரனே! இன்று இங்கே தங்குவாயாக; ஏனென்றால், இன்று ஒருநாளாவது உன்னைப் பார்த்து என்னுடைய கண்கள் திருப்தி யடையட்டும்" என்றார். ஆனால், அந்த வேண்டுகோள் சுகருடைய மனதில் பதியவில்லை. ஆசையும் சந்தேகமும் மற்றவராய், அவருடைய மனம் மோக்ஷத்தையே நாடியிருந்தது. அதை அடையும் மார்க்கத்திலேயே நோக்கம் உள்ளவரா யிருந்தார். தன் தகப்பனாரை விட்டு, ரிஷிகளுக்கெல்லாம் சிரேஷ்டரான சுகர், தவமகிமை நிறைந்த முனிக்கூட்டங்களால் வாசம் செய்யப்பட்ட கைலாசபர்வதத்தின் விஸ்தாரமான இடத்தை அடைந்தார். அம்மலையின் உச்சியை அடைந்து, புற்களில்லாததும், மனிதர்களுடைய சஞ்சாரத்திலிருந்தும் விலகி யிருப்பதுமான ஒரு சமதரையான இடத்தில் உட்கார்ந்தார். சாஸ்திரங்களில் சொல்லி யிருக்கிற கிரமங்களையும், வழிகளையும் அநுசரித்து, யோகத்தினுடைய கிரம வரிசைகளை நன்றாய் அறிந்த அந்த ரிஷி, பாதத்திலிருந்து ஆரம்பித்து, ஒவ்வொரு அவயவங்களின் வழியாகச் செலுத்தி, அப்பால், கடைசியில் தன்னுடைய தேகத்தின் ஓரிடத்தில் தன் ஆத்மாவை அமர்த்தினார். சூரியன் உதித்துக் கொஞ்சநேரத்துக்குப் பிறகு, சுகர் கிழக்கு முகமாகத் தம்முடைய கைகளையும், கால்களையும் வணக்கமான நிலைமையில் மடக்கிக்கொண்டு உட்கார்ந்தார். யோகாப்பியாஸம் செய்யும் பொருட்டு, வியாசருடைய குமாரர் உட்கார்ந்த அந்த இடத்தில் பக்ஷிகளுடைய கூட்டமாவது, எவ்வித சத்தமாவது, பயங்கரம், அல்லது, வெறுப்பை உண்டாக்கக்கூடிய காக்ஷியாவது இல்லை. அவர் தன்

ஆத்மாவானது ஒரு பற்றும் இல்லாதிருப்பதை அறிந்தார். வஸ்துக்களுக்கெல்லாம் சிறந்ததாகிய பரம்பொருளைக் கண்டவராய், ஆனந்தக் களிப்பை அடைந்தார். மோக்ஷ மார்க்கத்தை அடைவதற்காக மறுபடியும் யோக நிலையில் பொருந்தியிருந்தார். யோகத்தின் கரை கண்டவராய், அவர் ஆகாசமாகிய பூதத்தைக் கடந்தார். அவர், பிறகு தேவரிஷியாகிய நாரதரைப் பிரதக்ஷணம் செய்து, ரிஷிகளுக்கெல்லாம் சிறந்தவராகிய அவரை நோக்கி, யாவற்றிலும் உயர்ந்த யோகத்தில் தான் அமர்ந்திருக்கும் விஷயத்தை அவருக்குத் தெரிவித்தார். "மோக்ஷ மார்க்கத்தை அடையும் வழியை நான் கண்டு பிடித்துவிட்டேன். நான் அதில் பிரவர்த்தித்து விட்டேன். ஓ! தபோநிதியே! தங்களுக்கு மங்களமுண்டாகக்கடவது. தங்களுடைய கிருபையால் எல்லாவற்றிலும் சிலாக்கியமான முடிவை அடைவேன்" என்றார்.

நாரதருடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு, சுகர் அவரை மறுபடியும் வணங்கி, யோக ஸமாதியில் இருந்து ஆகாசமாகிய பூதத்தில் பிரவேசித்தார். கைலாச மலையிலிருந்து உயர ஏறி, ஆகாசத்தின் மேலே சென்றார். ஆகாச மார்க்கமாய்ச் சஞ்சாரம் செய்யும்படியான சக்தியை அடைந்து, திடச் சித்தரான சுகர், வாயு என்ற பூதத்தை முற்றிலும் வியாபித்து, அதில் ஒன்றாகக் கலந்தார். மகரிஷிகளில் சிறந்தவரான சுகர், கருடனைப்போல் பிரகாசமாயும், வாயுவேக மனோவேகத்துடனும் ஆகாசமார்க்கமாகச் சென்றுகொண்டிருந்தபொழுது, எல்லா ஜீவன்களும் அவரைப் பார்த்தன. அக்னி, அல்லது சூரியனைப்போன்ற காந்தியுடையவராய், சுகர், மூன்று உலகங்கள் முழுவதையும் ஒரே மயமான பிரமமாக நினைத்து, அந்த நெடிய பாதை வழியாகச் சென்றார். அப்பொழுது அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் யாவும் அவரைத் தங்கள் கண்களால் நோக்கின. சலனமில்லாத ஒரே கவனமாயும், சஞ்சலம், பயமும் அற்ற ஆத்மசொரூபியாயும் அவர் போவதைக் கண்டார்கள். ஜீவன்களெல்லாம் சாஸ்திர விதிகளுக்கும், அவர்களுடைய சக்திக்கும் தக்கவாறு அவரைப் பூஜித்து வணங்கினார்கள். ஸுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்கள் அவர்பேரில் தேவபுஷ்பங்களைச் சரமாரிபோல் வருஷித்தார்கள். அப்ஸரஸ்திரீகளும், கந்தர்வர்களும் அவரைக் கண்டு, அதிசயித்து நின்றார்கள். தவசக்தியுள்ள ரிஷிகளும் வியப்படைந்தார்கள். "தம்

முடைய தவசக்தியினால் இப்பெரும்பேற்றை அடைந்திருக்கிற இந்த உத்தம புருஷர் யார்? தம் தேகத்தினின்றும் அகன்று மேல் நோக்கின பார்வையுடைய இம் மகாபுருஷர் தம்முடைய நோக்கத்தால் நம்மை யெல்லாம் ஆனந்தசாகரத்தில் மூழ்விக்கிறார்" என்று மஹரிஷிகள் பேசிக்கொண்டார்கள்.

மகா தர்மாத்மாவாயும், மூன்று உலகங்களிலும் கீர்த்தி பெற்றவராயும் விளங்கும் சுகமஹரிஷி, கிழக்குத் திசையை நோக்கின முகத்துடனும், சூரியனுக்கு நேரான பார்வையுடனும் மௌனியாய்ப் போய்க்கொண்டிருந்தார். அவர் போகும்பொழுது, எங்கும் நிறைந்த சப்தத்தோடு ஆகாசம் முழுவதையும் அவர் வியாபித்திருப்பதுபோல் காணப்பட்டார். அவ்விதமாக வருவதைக் கண்ட அப்ஸர ஸ்திரீகள் அனைவரும் பயத்தையும், ஆச்சரியத்தையும் அடைந்தார்கள். பஞ்சசூடை முதலிய அந்த ஸ்திரீகள் அதிசயித்தினால் பரந்த கண்களுடன் அவரைப் பார்த்தார்கள். அவர்கள் ஒருவரையொருவர் நோக்கி, "இச் சிறந்த பதவியை அடைந்த இத் தேவன் யார்? அவர் உண்மையில் பற்றுக்களை யெல்லாம் நீக்கினவராயும், சகலவித ஆசைகளினின்றும் விடுபட்டவராயும் இதோ வருகிறார்!" என்று பேசிக்கொண்டனர்.

அப்பால் சுகர், ஊர்வசியும், பூர்வசித்தியும் எப்பொழுதும் வசிக்கின்ற இடமாகிய மலைய பர்வதத்திற்குச் சென்றார். அவர்கள் இருவரும், அம் மஹரிஷியினுடைய அளவிலாத சக்தியைக் கண்டு, மிகவும் வியப்புற்றார்கள். "வழக்கமாய் வேதங்களை ஓதுதல், அவைகளின் பொருள்களை அறிதல், ஆகிய இக் கருமங்களைச் செய்துவந்த இவ் வுத்தம வாலிபருக்கு ஏற்பட்ட இத் திடமான ஏகசித்த நிலைமையானது ஆச்சரியப்படத் தக்கதா யிருக்கிறது. சந்திரனைப்போல் ஆகாயம் முழுவதையும் சீக்கிரம் சஞ்சாரம் செய்வார். தன் தகப்பனிடத்து பக்தியும், வணக்கமுமான பணிவிடைகள் செய்ததினால், இந்த வுத்தமமான ஞானத்தை இவர் அடைந்திருக்கிறார். தவமகிமை பெற்ற தன் தந்தையிடத்து அன்புள்ளவராயும், அவரால் பிரியமாக மதிக்கப்பட்டு மிருக்கிறார். ஐயோ! பாவம்! இவருடைய தகப்பனார் ஏன் இவரைப் பற்றி கவனியாதவரானார்? மறுபடியும் திரும்பிவர முடியாத இம் மார்க்கத்தை நோக்கிச் செல்லும்படி தன் மகனை ஏன் தள்ளிவிட்டார்?" என்றாள் ஊர்வசி. அவளுடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு, அதன் தாத்பரியத்தை அறிந்து, தர்மங்களை அறிந்த

வர்க்குக் கெல்லாம் சிறந்தவராகிய சுகர் எல்லாப் பக்கங்களையும் தன்னுடைய கண்களால் நோக்கினார். ஆகாசம், பூமி இவைகள் முழுவதையும், அவைகளிலுள்ள பர்வதங்கள், ஜலங்கள், வனாந்தரங்கள், ஏரிகள், நதிகள் இவைகள் எல்லாவற்றையும் மற்றொருதரம் பார்த்தார். ஆண் பெண் ஆகிய இருவகை தேவர்களும் கைகள் கூப்பினவர்களாய், த்வைபாயன ரிஷியின் புத்திரராகிய சுகருக்கு வந்தனை வழிபாடுகள் செய்து, பக்தியுடனும், ஆச்சரியத்துடனும் அவரைப் பார்த்தவண்ணமா யிருந்தார்கள். தர்மாத்மாக்களில் முதல்வரான சுகர், அவர்கள் எல்லோரையும் பார்த்துப் பின்வரும் இந்த வார்த்தைகளைச் சொன்னார்:—"என்னுடைய தந்தை என்னைத் தேடிப் பின்தொடர்ந்து, என் பெயர் சொல்லி, என்னை அடிக்கடி அழைத்தால், எனக்காக நீங்கள் எல்லோரும் அவருக்குப் பதில் உரைக்கவேண்டும். நீங்கள் எல்லோரும் என்னிடத்தில் வைத்திருக்கிற பிரியத்துக்கு என்னுடைய இந்த வேண்டுகோளை நிறைவேற்றுவீர்களாக." சுகருடைய இந்த வார்த்தைகளைக் கேட்டு, அஷ்ட திக்குக்கள்யாவும், வனாந்தரங்கள் யாவும், எல்லா நதிகளும், எல்லா சமுத்திரங்களும், எல்லாப் பர்வதங்களும், "ஓ! உத்தமரே! தங்களுடைய உத்தரவுப்படி நடக்கிறோம். தாங்கள் சொல்லுகிறபடியே ஆகுக. சுகர் என்று தங்களை அழைக்கும் வியாஸமுனிவருக்கு நாங்கள் மறுமொழி சொல்லுகிறோம்" என்று நாலாபக்கங்களிலிருந்தும் சுகருக்கு உத்தரம் அளித்தார்கள்.

இவ்வாறு சொல்லிவிட்டு, தபோத்தமரான சுகர், நான்கு விதமான குற்றங்களையும், எட்டு விதமான தாமச குணங்களையும், ஐந்து விதமான ராஜஸ குணங்களையும், தன்னுடைய புத்திக்கூர்மையால் ஸாத்விக குணத்தையும் முற்றிலும் அகற்றி, ஜெயசீலராய் விளங்கினார். இதெல்லாம் மிகவும் ஆச்சரியகரமாகத் தோன்றிற்று. எவ்விதக் குணங்களுமற்றதாயும், தோற்றங்களிலிருந்து விலகினதாயும், புகையற்ற அக்னியைப்போல் சாசுவத ஸ்தானமானதுமான பிரம்மத்தையடைந்தார். அப்பொழுது நக்ஷத்திரங்கள் உதிர்ந்தன. அஷ்டதிக்குக்களும், அக்னி கொழுந்துவிட்டெரிவதுபோல் பிரகாசித்தன. பூமி நடுங்கிற்று. இத் தோற்றங்களெல்லாம் வெகு அதிசயமாகத் தோன்றின. மரங்களிலிருந்து கிளைகள் முறிந்து விழுந்தன. மலைச்

சிகரங்கள் மலையினின்றும் பிரிந்து கீழே விழுந்தன. ஹிமயபர்வதத்தைப் பிளந்துவருவதுபோல் இடிபோன்ற உரத்த சத்தங்கள் உண்டாயின. அத் தருணத்தில் சூரியன் ஒளி மங்கித் தோன்றினர். அக்னி வழக்கம்போல் கொழுந்துவிட்டுப் பிரகாசிக்கவில்லை. தடாகங்கள், நதிகள், சமுத்திரங்கள் இவைகளெல்லாம் ததும்பின. தேவேந்திரன் சிறந்த மதுரமும், வாசனையும் நிறைந்த மழைத்துளிகளைப் பொழிந்தான். உயர்ந்த வாசனை கலந்த சுகமான இளங்காற்று வீசியது.

சுகர் ஆகாசத்தின் வழியாகச் செல்லும்பொழுது, ஹிமயகிரியைச் சேர்ந்த ஒரு சிகரம், மேருபருவதத்தைச் சேர்ந்த ஒரு சிகரம் ஆக இந்த இரண்டு சிகரங்களையும் கண்டார். அவைகள் ஒன்றையொன்று அடுத்து நெருங்கியிருந்தன. ஒரு சிகரம், தங்கத்தால் ஆக்கப்பட்டதால், மஞ்சள் நிறமாயும், மற்றொன்று, வெள்ளியால் ஏற்பட்டதால், வெள்ளையாகவும் காணப்பட்டன. ஒவ்வொன்றும் நூறு யோஜனை உயரமும், அதே அளவு அகலமுமான விஸ்தீரணமாயிருந்தது. சுகர் வடக்குத்திசையை நோக்கிச் சென்றபொழுது, அவ் விரு அழகிய சிகரங்களையும் கண்டார். அவர் பயமற்ற மனத்தினராய், அச் சிகரங்களின் நேரே தாக்கி மோதினர். அந்த பலத்தைத் தாங்கச் சக்தியற்றவைகளாய், அச் சிகரங்கள் இரண்டாய்ப் பிளந்தன. அப்பொழுது அவைகளின் காட்சி பார்க்க வெகு [illegible] புதமாயிருந்தது. சுகர் அவைகளுக்கிடையே பிளந்துகொண்டு சென்றார். அவர் போகும் வேகத்தை அச் சிகரங்களால் தடுக்க முடியவில்லை. ஆகாசத்தில் தேவர்கள் அப்பொழுது பெரிய ஆரவாரம் செய்தார்கள். மலைகள் இரண்டாய்ப் பிளந்து, அவைகளுக்கிடையே சுகர் பிளந்துபோன விமரிசையைக் கண்டு, கந்தர்வர்களும், ரிஷிகளும், அம்மலைச் சிகரத்தில் வசித்த மற்றோர்களும், உரத்த ஆனந்தகோஷம் செய்தார்கள். அச் சமயத்தில் எங்கே பார்த்தாலும் "வெகு நேர்த்தி, வெகு நேர்த்தி" என்று உரத்த சப்தம் கேட்கப்பட்டது. கந்தர்வர்களும், ரிஷிகளும், யக்ஷர்களும், ராக்ஷஸர்களும், வித்யாதர வகுப்பினர்களெல்லோரும் கூட்டம் கூட்டமாய் நின்று, அவரைத் துதித்து வணங்கினார்கள். தடுக்கவொண்ணாத அச் சிகரங்களைப் பிளந்துகொண்டு சுகர் சென்றகாலத்தில், தேவர்களால்

ஆகாயத்திலிருந்து வர்ஷிக்கப்பட்ட ஏராளமான புஷ்பவர்ஷங்களால் ஆகாயம் நிறம்பிற்று.

தர்மாத்மாவான சுகர், மிகுந்த அழகுவாய்ந்த 'மந்தாகினி' என்னும் தேவலோக நதியானது, உயர்ந்த பிரதேசத்திலிருந்து, அநேக புஷ்பங்கள் நிறைந்த சிங்காரத் தோப்புக்களாலும், வனாந்தரங்களாலும் அழகாய் விளங்கப்பட்ட பிரதேசத்தின் வழியாய்க் கீழ்நோக்கி ஓடிக்கொண்டிருப்பதைப் பார்த்தார். அந் நதியில் அநேக அப்ஸர ஸ்திரீகள் ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்தார்கள். தேகமற்றவராய்ப் போய்க்கொண்டிருக்கும் சுகரைப் பார்த்து, நிர்வாணிகளாயிருந்த அந்த ஸ்வர்க்கலோகத்து மாதர்கள் கொஞ்சமேனும் நாணமடையவில்லை.

சுகர் எல்லாவற்றிலும் சிறந்த பதவியை அடைவதற்காகப் பிரயாணப்பட்டார் என்றதைக் கேள்வியுற்ற வியாசரிஷி, தன் மகனிடத்துள்ள அபிமானத்தினால், ஆகாசமார்க்கமாய்ச் சுகரைப் பின்பற்றிச் சென்றார். இதன் மத்தியில் சுகர் வாயுப்பிரதேசத்துக்கு அப்பாலுள்ள பிரதேசத்துக்குச் சென்று, அவருடைய யோகசக்தியினால் பிரமத்துடன் கலந்து ஒன்றானார். உயர்ந்த யோகத்தின் சூக்ஷ்மமான மார்க்கத்தை அநுசரித்துத் தபோத்தமரான வியாசர் ஒரு கணப்பொழுதில் சுகர் மோக்ஷத்தை நாடிப் புறப்பட்ட இடத்துக்கு வந்தார். அதே வழியாகச் சென்று, மலைச்சிகரங்கள் இரண்டாய்ப் பிளந்திருப்பதையும், அவைகளுக்கிடையே சுகர் சென்றிருப்பதையும் கண்டார். அங்கிருந்த ரிஷிகள் வியாசரிஷியைக் கண்டு, அவருடைய குமாரருடைய பேராற்றல்களை அவருக்குச் சொன்னார்கள். ஆகிலும், வியாசர், தன் மகனைப் பேர் சொல்லி அழைத்தும், அவருடைய சத்தத்தினால் மூன்று உலகங்களையும் எதிரொலிக்கும்படி செய்தும், சோகத்தால் புலம்ப ஆரம்பித்தார். இதற்குள்ளாகத் தர்மாத்மாவாகிய சுகர், பிரபஞ்சங்களிலுள்ள வஸ்துக்களிலெல்லாம் வியாபித்து, அவைகளின் ஆத்மாவிலெல்லாம் தானாகி நின்று, எங்கும் நிறைந்து விளங்கினபடியால், "போ" என்ற எதிரொலி வசனத்தினால் தன் தகப்பனுக்கு விடை அளித்தார். அப்பொழுது அண்ட சராசரங்களெல்லாம் 'போ' என்ற பதத்தை உச்சரித்து, சுகர் சொன்ன மறுமொழியைச் சொல்லித் தாங்களும் சப்தித்தன. அது

காலமுதல் நாளது வரை மலைக்குகைகளிலாவது, மலைச்சாரல்களி லாவது சத்தமிட்டால், அவைகள், சுகருடைய மறுமொழியைத் தாங் களும் சொல்வதுபோல், இப்பொழுதும் எதிரொலி செய்கின்றன. சப்தகுணங்களை யெல்லாம் தவிர்த்து, தம்முடைய உருத்தோற்றமல் பிரமத்தில் சேரும்படியான யோகசத்தியைக் காட்டி, இவ்விதமாகச் சுகர் யாவற்றிலும் மேலான ஸ்தானத்தை அடைந்தார்.

அளவிடமுடியாத சக்தியுள்ள தன் குமாரருடைய பெருமை யையும், வல்லமையையும் கண்டு, வியாஸர், அம் மலைச்சாரலில் உட் கார்ந்து, புத்திரசோகத்தால் தன் மகனை நினைத்து வருந்தினர். தேவ நதியாகிய மந்தாகினிக் கரையில் நிர்வாணிகளாய் விளையாடிக்கொண் டிருந்த அப்ஸரஸ்திரீகள், ரிஷி அங்கு உட்கார்ந்திருப்பதைக் கண்டு, வெட்கத்தால் சஞ்சலம் அடைந்தவர்களாய் மிகவும் பயத்தை அடைந் தார்கள். சிலர், தங்கள் நிர்வாணத்தை மறைக்கும் பொருட்டு, நதிக்குள் மூழ்கினார்கள். வேறு சிலர், சமீபத்திலிருந்த தோப்பில் போய் ஒளிந்துகொண்டார்கள். வேறு சிலர், ரிஷியைக் கண்டதும், தங்கள் ஆடைகளை எடுத்துக்கொண்டார்கள். ஆனால், அவருடைய புத்திரராகிய சுகரைப் பார்த்தபொழுது எவ்விதமான மனச் சஞ்சலத் தையும் அவர்கள் அடையவில்லை. இச் செய்கைகளைக் கண்ட ரிஷி யானவர், தம்முடைய குமாரர் சகல பற்றுக்களிலிருந்தும் விடுபட் டார் என்றும், ஆனால் தான்மாத்திரம் ஆசாபாசத்தை அறுத்து விலகாமலிருப்பதாயும் அறிந்துகொண்டார். இதைப் பற்றி அவர் சந்தோஷமும், வெட்கமும் அடைந்தார்.

வியாஸர் இவ்வாறு அங்கே உட்கார்ந்திருந்தபொழுது, பினாக பாணியும், மங்களமூர்த்தியுமாகிய சிவன், அநேக தேவர்களும், கந் தர்வர்களும் தன்னைப் புடைசூழ்ந்து வர, மகரிஷிகளெல்லாம் தன் னைத் துதிக்க, அவ்விடத்துக்கு வந்தார். புத்திரசோகத்தினால் துக்க சாகரத்தில் மூழ்கியிருந்த அந்த ரிஷியைத் தேற்றி, மகாதேவர் அவரை நோக்கிப் பின்வரும் வார்த்தைகளைச் சொல்லலானார்:— “நீர் பூர்வத்தில் அக்னி, பூமி, ஜலம், வாயு, ஆகாசம் இவைகளி னுடைய சக்திகள் நிறைந்த ஒரு புத்திரன் வேண்டுமென்று என்னை வேண்டினீர். உம்முடைய தவமகிமையினால் ஜெனித்த உம் புதல் வன் அம் மாதிரியாகவே இருந்தான். என்னுடைய கிருபையால்

அனுக்கிரஹிக்கப்பட்டு, அவன் பரிசுத்தனாயும் பிரமசக்தி நிறைந்தவனாயு மிருந்தான். இந்திரியங்களை முற்றிலும் அடக்காதவர்களும், தேவர்களுங்கூட அடைய முடியாத மேலான முடிவை அவன் அடைந்திருக்கிறான். ஆதலால், ஓ! மகரிஷியே! அத்தன்மையான குமாரனைப் பெற்று நீர் ஏன் வியாகுலம் அடைகிறீர்? குன்றுகள் உள்ளளவும், சமுத்திரம் உள்ள காலமெல்லாம் உம்முடைய குமாரனுடைய பேரும் குறைவுபடாமல் நிலைநிற்கும். ஓ! மகரிஷியே! இவ்வுலகத்தில் உம் மகன்போன்ற உருவம் உள்ளதும், உம்முடன் எப்பொழுதும் சஞ்சரிப்பதும், எப்பொழுதும் உம்மைவிட்டு அகலாததுமான ஒரு சாயலை உமக்கு நான் அனுக்கிரகம் செய்கிறேன்'' என்றார். இவ்வாறு பரமசிவன் கிருபை புரிய, வியாசர் தன் பக்கத்தில் தன் மகனுடைய உருவின் தோற்றத்தைக் கண்டார். இதைக் கண்டு களித்து, தம்முடைய இருப்பிடத்துக்கு வந்து சேர்ந்தார்.

எவர்கள் சஞ்சலமற்ற மனதையுடையவர்களாய், மோக்ஷமடைந்த விஷயத்தைப் பற்றிய இந்தப் பரிசுத்தமான சரித்திரத்தைக் கேட்கிறார்களோ, அவர்கள் மேலான பதவியை அடைவார்கள் என்பது நிச்சயம்.

---

## 73 சுக்ரர்.

---

ஆதிகாலத்தில், (1) தேவர்களுக்கும், அசுரர்களுக்கும் மூன்று உலகங்களுக்கும் அதிபதிகளா யிருக்கும் விஷயத்தைப் பற்றி அடிக்கடி சச்சரவுகள் ஏற்பட்டுக்கொண்டிருந்தன. தேவர்கள், ஆங்கிரஸ் மகரிஷியின் புத்திரராகிய ப்ருஹஸ்பதியைத் தங்களுக்குக் குருவாக நியமித்துக் கொண்டார்கள். அசுரர்கள் ப்ருகு மகரிஷியின் புத்திரராகிய சுக்கிராசாரியாரை அவர்களுக்குக் குருவாக நியமித்துக் கொண்டார்கள். மேல்சொன்ன யுத்தத்தில் இறந்துபோன அசுரர்களெல்லாம் சுக்ராசாரியரால் 'சஞ்சீவினி' என்ற மந்திரசக்தியின் மூலம், மறுபடியும் உயிர் பிழைப்பிக்

---

(1) மஹாபாரதம்—ஆதிபர்வம்.

கப்பட்டார்கள். ஆனால், அந்த அபூர்வ மந்திரம் ப்ருஹஸ்பதிபக வானுக்குத் தெரியாது. அதனால், தேவர்கள் மிகவும் துக்கமடைந் தார்கள். அவர்கள் எல்லோருங் கூடி, பயமடைந்தவர்களாய், பிரு ஹஸ்பதியின் மூத்தகுமாரனாகிய 'கசன்' என்பவரிடம் சென்றார்கள். அவரை நோக்கி, அவர்கள், "நீங்கள் எங்கள் பேரில் தயவுபுரியவேண் டும். நாங்கள் உங்களை மிகவும் வணங்குகிறோம். எங்களுக்கு ஒரு பெரிதான உபகாரத்தைச் செய்யும்படி உங்களை வேண்டுகிறோம். சுக்ராசாரியாருக்குத் தெரிந்திருக்கிற சஞ்சீவினி மந்திரத்தை எப்படி யாவது நீங்கள் கூடிய சீக்கிரத்தில் தெரிந்துகொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் யாகங்களில் ஏற்படும் அவிர்ப்பாகங்களில் உங் களுக்கும் ஒருபங்கு கொடுக்கிறோம். அவர் வ்ருஷபர்வன் என்ற அசுரராஜனுடைய சபையிலிருந்துகொண்டு, எப்பொழுதும் எங் களுக்கு விரோதிகளான அசுரர்களையே ரக்ஷித்து வருகிறார். நீங்கள் அவருக்கு மிகவும் குறைந்த வயதாயிருப்பதால், அவரை வணங்கி வழிபடுவது தகுதியா யிருக்கின்றது. அவருடைய பிரிய குமாரி யாகிய தெய்வயானையையும் வணங்குவதும் சரியானதுதான். அவர் களிருவருக்கும் வந்தனைவழிபாடுகள் செய்து அவர்களை இணக்கிக் கொள்வதற்குத் தக்கவர் நீங்கள்தானே. நீங்கள் தெய்வயானை யிடத்துப் பெருந்தன்மையாயும், இன்பமாயும் நடந்து வருவது மூல மாய் அந்த மந்திரத்தை நிச்சயமாய் அடைய முடியும்" என்றார்கள். இவ்வாறு தேவர்களால் வேண்டப்பட்ட கசன் அப்படியே சம்மதித்து விருஷபர்வன் இருந்த இடத்துக்குச் சென்றான். அங்கே சுக்ராசாரி யாரைக் கண்டான். அவரை நோக்கி, "நீங்கள் என்னைச் சிஷ்யனாக அங்கீகரிக்க வேண்டும். நான் அங்கிரஸ் ரிஷியின் பேரன். பிரு கஸ்பதியின் புத்திரன். என் பேர் கசன். நான் தங்களிடத்து சிஷ் யனாயிருந்து ஆயிரவருஷகாலம் பிரமசரிய விரதத்தை அநுசரிக்கி றேன். அவ்வாறு அனுக்ரஹிக்க வேண்டும்" என்று கேட்டான். அதற்கு சுக்ராசாரியார், "ஓ! கசனே! உன்னுடைய வார்த்தையை அங்கீகரித்தேன். நான் உன்னை மதிப்பாய் நடத்துகிறேன். அப்ப டிச் செய்வதினால் பிருஹஸ்பதிக்கு நான் மரியாதை செய்தவனாகி றேன்" என்று சொன்னார். அதன்பேரில், தான் சொல்லியபடி பிரமசாரி விரதத்தைப் பூண்டவனாய், தன்னுடைய குருவுக்கும், அவ ருடைய புத்திரியாகிய தெய்வயானைக்கும் தன்னிடத்துச் சந்தோஷம்

உண்டாகும்படி நடந்துவந்தான். அவன் நடனத்தினாலும், சங்கீதத்தினாலும், தன்னைப்போல் இளமைப்பருவம் உள்ள தெய்வயானையை மிகவும் சந்தோஷப்படுத்தினான். அவளுக்குப் பழங்கள், புஷ்பங்கள் கொண்டுவந்து கொடுத்தும், அவளுக்கு வேண்டிய பணிவிடைகளைக் கவனமாய்ச் செய்தும், அவளைத் திருப்தி பண்ணினான். அவளும் அவனுடைய பிரமசரிய விரதத்துக்குக் குறைவில்லாமல் அவனோடு விளையாடுவதும், பாடுவதுமாய்ப் பொழுதுபோக்கினாள். இம்மாதிரி கசன் ஐந்நூறு வருஷகாலம் கழித்த பிறகு, கசனுடைய எண்ணம் தானவர்களுக்குத் தெரியவந்தது. அவனிடத்து மிகவும் கோபமுற்றவர்களாய் பிராமணனென்ற பச்சாத்தாப மில்லாமல், அவனைக் கொல்ல எத்தனித்தார்கள். ஒருநாள் கசன் தன் குருவின் பசுமாடுகளை மேய்த்துக்கொண்டு காட்டில் தனியாய்ச் சஞ்சரிப்பதை அசுரர்கள் கண்டு, பிருஹஸ்பதியினிடத்து அவர்களுக்கு இருந்த வெறுப்பினாலும், சஞ்சீவினி என்ற மந்திரத்தை அவன் தங்கள் குருவினிடத்திருந்து தெரிந்து கொள்ளாமலிருக்கும் பொருட்டும், அவனைக் கொன்றார்கள். பிறகு, அவன் தேகத்தைப் பல துண்டுகளாகச் சிதைத்து நரிகளுக்கும், ஓநாய்களுக்கும் இரையாகக் கொடுத்தார்கள். சாயங்காலம் மாடுகள் மட்டும் வந்தன. அவைகளை மேய்க்கக் கொண்டுபோன கசன் வரவில்லை. கசன் வராமையைக் கண்டு தெய்வயானை தன் தகப்பனாரை நோக்கி, "ஐயா! சந்தியா ஹோமாக்னியானது மூட்டப்பட்டிருக்கிறது. சூரியாஸ்தமனம் ஆய்விட்டது. பசுமாடுகளை மேய்க்கப்போன கசன் வராமல் அவைகள் மட்டும் வந்திருக்கின்றன. கசனை யாரோ கொன்றிருக்கிறார்களென்று தெரிகிறது. அவனில்லாமல் நான் ஜீவனை வைத்திருக்கமாட்டேன்" என்றாள். சுக்ராசாரியார் இதைக்கேட்டு, "அவனை நான் என் மந்திரசக்தியால் பிழைப்பிக்கிறேன்" என்று சொல்லி, அப்படியே தம்முடைய மந்திரசக்தியால் கசனை யழைத்தார். கசன் தன்னைத் தின்ற மிருகங்களின் வயிறுகளைக் கிழித்துக்கொண்டு சந்தோஷத்துடன் தன் குருவின் எதிரில் வந்து நின்றான். இதுவரை வாராததற்குக் காரணம் என்ன என்று தெய்வயானை கேட்க, அவன் தெய்வயானையை நோக்கி, "நான் இறந்து போயிருந்தேன். தர்ப்பங்களையும், சமித்துக்களையும், விறகு மூட்டைகளையும் எடுத்துக்கொண்டு, நம்முடைய கிருஹத்தைநோக்கி நான் திரும்பி வரும்போது, ஒரு ஆலமரத் தடியில் உட்கார்ந்திரு

தேன். பசுக்களும் ஒன்றுசேர்ந்து அம் மரத்து நிழலில் வந்து தங்கின. என்னைப் பார்த்த அங்குவந்த அசுரர்கள், 'நீ யார்?' என்று கேட்டார்கள். நான் பிருகஸ்பதி புத்திரன் என்று பதிலுரைத்தேன். உடனே தானவர்கள் என்னைப் பல துண்டுகளாக வெட்டிக் கொன்று, நரிகளுக்கும், ஓநாய்களுக்கும் ஆகாரமாகக் கொடுத்தார்கள். அவர்கள் சந்தோஷ சித்தர்களாய் வீட்டுக்குச் சென்றார்கள். ஆனால் உன்னுடைய தகப்பனாராகிய பார்க்கவரால் நான் அழைக்கப்பட்டு, மறுபடியும் உயிர் பெற்று, உன் முன்பாக வந்திருக்கிறேன்" என்றான். மற்றொரு காலத்தில் தெய்வயானை கோரியபிரகாரம் கசன் காட்டுக்குச் சென்றான். புஷ்பங்களுக்காக அவன் திரிந்துகொண்டிருக்கையில் தானவர்கள் அவனைக் கண்டார்கள். மறுபடியும் அவர்கள் அவனைக் கொன்று, அவனுடைய தேகத்தைப் பொடிகளாகச் செய்து, சமுத்திரத்தில் கலக்கி விட்டார்கள். அன்றும் நேரமாகியும் கசன் வராததால், தெய்வயானை தகப்பனிடத்தில் மறுபடியும் தெரிவித்தாள். சுக்ராசாரியாரால் மறுபடியும் அழைக்கப் பட்டவனாய், கசன் மந்திர சக்தியால் உயிர்பெற்றெழுந்து, தன் குரு, குருவின் மகள் இவர்கள் முன் தோன்றி, நிகழ்ந்ததை எல்லாம் அவர்களுக்குச் சொன்னான். அப்பால் அசுரர்கள் மூன்றாவது தடவையிலும் கசனைக் கொன்று, எரித்துச் சாம்பலாக்கி, குருவானவர் அருந்தும் சாராயத்துடன் சேர்த்துக் கொடுத்தார்கள். அப்பொழுதும் தெய்வயானை தன் தகப்பனைப் பார்த்து, "கசன் புஷ்பங்கள் கொண்டுவரக் காட்டுக்குப் போனவன், இந்நேரமாகியும் வந்து சேரவில்லை. அவன் இறந்து போயிருப்பதாகத் தெரிகிறது. அவனில்லாமல் நான் பிராணன் வைத்திரேன்" என்றாள். இதைக்கேட்ட சுக்ராசாரியார், "ஓ! மகளே! கசன் எமலோகம் சேர்ந்துவிட்டான். நான் என்னுடைய சாஸ்திர ஞானத்தினால் அவனைப் பிழைப்பித்தாலும், அவன் அடிக்கடி கொல்லப்படுகிறான். நான் என்ன செய்யத் தக்கது? நீ அழாதே! உன்னைப் போன்றவள் சாகத்தக்க ஒருவனைப் பற்றி இவ்வாறு துன்புறுதல் கூடாது. என்னுடைய சக்தியினால் ஒரு தினத்துக்கு மூன்று தடவை ஏற்பட்ட பூஜாகாலங்களில் பிரமன், பிராமணர்கள், இந்திரன் முதலாகிய தேவர்கள், வசுக்கள், அசுவினி தேவர்கள், அசுரர்கள் ஆகிய இவர்களாலும், இதுமட்டுமல்ல, இந்த ப்ரபஞ்சத்திலுள்ள எல்லாராலும் நீ பூஜிக்கப்படுகிறாய். அவனை உயிருடன் வைத்திருப்பது

சாத்தியமில்லாமலிருக்கிறது. ஏனென்றால், அவன் அடிக்கடி கொல்லப்படுகிறான்" என்றார். அதற்குத் தெய்வயானை, "அங்கிரஸ் என்பவரைப் பாட்டனாகவும், அவனிறந்த தபோமகிமையுள்ள பிருகஸ்பதியைப் பிதாவாகவும் அடைந்தவனும், அம் மஹரிஷிகளுக்குப் பேரனும், மகனுமா யிருப்பவனுமான கசனைப்பற்றி நான் ஏன் துக்கிக்கக் கூடாது? அவனும் ஒரு பிரமசாரியாகவும், ரிஷியாகவு மிருந்திருக்கிறான். அவன் மிகவும் ஜாக்கிரதை யுள்ளவன். எத் தொழிலிலும் வல்லவன். நான் பட்டினி கிடந்து கசன் சென்ற வழியை அடைகிறேன். அழகிய கசன் எனக்கு மிகவும் பிரியமானவன்" என்றாள். இந்த வசனத்தைக் கேட்ட சுக்ராசாரியார் கோபமுற்றவராய், "அந்த அசுரர்கள் என்னிடத்திலிருக்கிற சிஷ்யனை எப்பொழுது கொல்கிறார்களோ, அப்பொழுது எனக்கு மவர்கள் தீங்கு செய்பவர்களாகிறார்கள். அவர்களுடைய குற்றத்துக்கு என்னையும் உடந்தையாகச் செய்கிறதினால், எனக்குரிய பிராமணத்தன்மைகளும் என்னைவிட்டு நீங்கும்படி விரும்புகிறார்கள் என்று நினைக்கிறேன். இந்தக் குற்றத்தினால் மிகவும் கெடுதி யடைவார்கள். பிரமஹத்தி தோஷமானது இந்திரனையும் விடாது" என்றார். இவ்வாறு தெய்வயானையினால் தூண்டப்பட்டவராய், இறந்துபோன கசனைப் பிழைத்து வரும்படி யழைத்தார். ஆனால், சாஸ்திர சக்தியினால் அழைக்கப்பட்ட கசன், தான் வெளியே வருவதினால் தன் குருவுக்கு நேரிடக்கூடிய பாதகத்தை உத்தேசித்து, தன் குருவினுடைய இரைப்பையிலிருந்து மெல்லிய குரலுடன், "தேவரீர் என்னிடத்து அருள்புரிய வேண்டும். தங்களை வணங்குகிற கசன் நான்தான். தங்கள் குமாரனைப்போல் பாவிக்க வேண்டும்" என்றான். அதற்கு சுக்ராசாரியார், "எவ்விதமாய் என் இரைப் பைக்குள் வந்தாய்? நான் அசுரர்களை விட்டுவிட்டு இப்பொழுதே தேவர்களிடத்துப் போய்ச் சேருகிறேன்" என்றார். கசன், "தங்களுடைய கிருபையால், என் ஞாபகம் என்னை விட்டு நீங்காமல் இருக்கிறது. சங்கதிகள் நேரிட்டபடி எனக்கு ஞாபகங்கள் இருக்கின்றன. என்னுடைய தவசக்திகள் அழியாமலிருக்கின்றன. ஆதலால் சகிக்கமுடியாத இந்த துன்பத்தைச் சகித்துக்கொண்டு இங்கிருக்கிறேன். அசுரர்கள் என்னைக் கொன்று, எரித்துப் பஸ்மமாக்கி, தங்களுடைய மதுபானத்துடன் சேர்த்துத் தங்களுக்குக் கொடுத்துவிட்டார்கள். தாங்கள் உயிருடன் இருக்கும்பொழுது அசுரர்களுடைய தந்திரமானது பிராமணர்களுடைய சாஸ்திரத்தை மீறமுடியாது."

என்று சொன்னான். அதைக்கேட்டு சுக்ராசாரியார், "ஓ! மகளே! நான் உனக்குச் செய்யத்தக்க நன்மை யாது? நான் இறந்தால்தான் கசன் உயிர் பெற்று வருவதா யிருக்கிறது. என்னுடைய வயிற்றில் கசன் இருக்கிறான். என்னுடைய வயிற்றைக் கிழித்துக்கொண்டு வருவதைத் தவிர, அவன் வெளியே வர வேறு மார்க்கமில்லை" என்றார். தெய்வயானை, "இருபக்கத்திலும் எனக்கு நெருப்புப்போல் துன்பமாய் இருக்கிறது; கசனிறத்தலும், தாங்களிறத்தலும் எனக்கு ஒன்றுதான்; கசனிறந்தால் எனக்குச்சுகமில்லை. தாங்களிறந்தால் பிராணனைத் தரிக்கமாட்டேன்" என்றாள். பிறகு சுக்ராசாரியார், கசனைப் பார்த்து, "ஏ! பிரகஸ்பதியின் குமாரனே! உன் மனோபீஷ்டம் ஏற்சனவே நிறைவேறிவிட்டது; ஏனென்றால், தெய்வயானை உன்னை அவ்வளவு அன்பாக நேசிக்கிறாள். கசன் என்ற ரூபத்தை எடுத்துக் கொண்டிருக்கும் இந்திரனாக இல்லாமல், உண்மையிலேயே கசனாக இருக்கும்பக்ஷத்தில், நான் உனக்கு உபதேசிக்கிற இந்த சாஸ்திரத்தைத் தெரிந்துகொள்ளக்கடவாய். என்னுடைய வயிற்றிலிருந்து ஒருவனும் உயிருடன் வெளியில் வரக்கூடாது. பிராமணன் கொல்லப்படுதல் நியாயமன்று. ஆதலால், நான் உபதேசிக்கும் இந்த சாஸ்திரத்தைப் பெற்றுக்கொள். என் புத்திரனாக ஜீவன் பெற்று, என்னால் உயிர் பிழைப்பிக்கப்பட்டும், என்னிடத்திலிருந்து அந்த ஞானத்தை அடைந்தும், என் தேகத்தைவிட்டு வெளியே வந்தபிறகு, என் விஷயத்தில் நன்றி மறவாமல் விசுவாசமாக நடப்பதில் உறுதியாயிரு" என்றார். இவ்வாறு தன் குருவினால் சஞ்சீவினி மந்திரத்தை உபதேசிக்கப் பெற்று, அழகிய கசன் பௌர்ணமை மாலையில் உதிக்கும் சந்திரனைப்போல் அவருடைய வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியே வந்தான். இறந்து கிடந்த தன் குருவின் தேகத்தைக் கண்டு, தான் அடைந்திருக்கும் மந்திர சக்தியால அவரைப் பிழைப்பித்தான். மரியாதையுடன் வணங்கி, அவரை நோக்கிச் சொன்னதாவது:—"ஞானமில்லாத என்னுடைய காதுகளில், அமிருதம் பொழிவதுபோல், சஞ்சீவினி மந்திரத்தை எனக்கு உபதேசித்த தாங்களே எனக்குத் தாயும் தகப்பனும். ஒருவரிடமிருந்து அளவிட முடியாத உபகாரத்தைப் பெற்று, பிறகு அவருக்கே தீங்கு செய்யும்படியான அவ்வளவு நன்றி கெட்டவன் யாவன்? குருவினிடத்திலிருந்து வித்தையை அடைந்தவர்கள், அவர்களுக்கு வணக்கம் செலுத்தியும்

அவர்களை உலகத்திலுள்ள உயர்ந்த வஸ்துக்களிலெல்லாம் உயர்ந்ததாய் மதிக்கவும் கடமைப்பட்டிருக்கிறார்கள். அப்படிக்கில்லாமல் குருக்களுக்கு விச்வாஸ மில்லாதவர்களாய், தீங்கு செய்கிறவர்கள் உலகத்தில் சீ, சீ என்று பழிக்கப்பட்டவர்களாகி, மறுமையில் நரகில் விழுகிறார்கள்.''

இவ்வாறு சொல்லக்கேட்ட சகல வித்தைகளிலும் வல்லவரான சுக்ராசாரியார், மதுபானத்தினால் தான் மோசம் போனதையும், அதனால் ஞாபகம் மறந்து, அந்த ஸ்திதியில் எவனைச் சேர்த்துப் பானம் பண்ணும்படியாய் நேர்ந்ததோ, அந்த அழகிய கசன் தன் எதிரில் நிற்பதையும் பார்த்து, மதுபானத்தைக் குறித்துப் பிராமணர்கள் விஷயத்தில் வேறு விதி ஏற்படுத்தவேண்டும் என்று நினைத்தார். மகாத்மாவான சுக்ராசாரியார் எழுந்திருந்து, பின்வருமாறு உரைக்கலாயினார்:- "எந்தப் பாபியான பிராமணன் இன்று முதல் மதுபானம் செய்யும் ஆசையைக் கடக்க முடியாதவனாய், அதைப் பானம் செய்கிறானோ, அவன் தர்மங்களை இழந்தவனும், பிரமஹத்தி செய்தவனுமாகிய இவர்களுடைய பாபத்தில் சேர்ந்தவனாய், இகத்திலும், பரத்திலும் நிந்திக்கப்படுவான். பிராமணர்கள் எவ்விடத்திலிருந்தாலும் நான் சொன்ன இந்த விதிக்குக் கட்டுப்பட்டவர்கள் தான். இந்தச் சொல்லைச் சாதுக்களும், பிராமணர்களும், பெரியோர்களை மதிப்பவர்களும், தேவர்களும், இம் மூவுலகங்களும் கவனித்துக் கேட்கக் கடவது.'' இவ்வாறு சொல்லிவிட்டு, தபோத்தமரான சுக்ராசாரியார் கர்மவசத்தால் அறிவழிந்துபோன தானவர்களை அழைத்துப் பின்வருமாறு சொன்னார்:—"ஏ! மூட அசுரர்களே! கசன் அவனுடைய மனோவிருப்பத்தை அடைந்துவிட்டான். இதை நீங்கள் அறிவீர்களாக. அவன் இனிமேல் என்னிடத்திலேயே வசிப்பான். உயிர் பிழைப்பிக்கும்படியான உத்தம ஞானத்தை யடைந்த கசன் பிரமாவுக்குச் சமானமான வல்லமையை அடைந்துவிட்டான்.''

அதற்குப் பிறகு, கசன் பிரமசரிய விரதத்தை அனுஷ்டித்துக் கொண்டு, ஆயிரம் வருஷகாலம் சுக்ராசாரியாரிடம் இருந்துவிட்டு, அப்பால் தன் பிதாவிடம் போகக் குருவிடம் அநுமதி பெற்றுக் கொண்டு, தன் இருப்பிடத்துக்குப் போகச் செலவு கொடுக்கும்படி தெய்வயானையைக் கேட்டான். அவள் தன்னை மணந்துகொள்ளும்

படி அவனை வேண்டினாள். கசன், குருவின் குமாரத்தி சகோதரி யென்றும், கூடாதென்றும் மறுத்தான். அவள், அவனைப்பார்த்து, "நீ என் பிதாவினிடத்தில் கற்ற சஞ்சீவினி மந்திரம் உனக்கு உதவாமல் போகக்கடவது" என்று சபித்தாள். அதற்கு அவன், "உன்னை ரிஷிபுத்திரன் விவாகம் செய்யான். நீ பூலோகத்து மனுஷனுக்கு மனைவியாகக் கடவது" என்று சபித்தான்.

பின் ஒரு காலத்தில், தெய்வயானையும், 'விருஷபர்வன்' என்ற அசுரராஜன் புத்ரியாகிய 'சர்மிஷ்டையும்', இன்னும் அனேக கன்னிகைகளும் சேர்ந்து, 'சைத்ரரதம்' என்கிற நந்தன வனத்திலுள்ள தடாகத்தில் தங்களுடைய வஸ்திரங்களை வெளியில் களைந்து வைத்துவிட்டு, ஜலக்கிரீடை செய்துகொண்டிருந்தார்கள். இந்திரனுடைய மாய்கையால் வஸ்திரங்கள் ஒன்றோடொன்று கலந்து கொண்டன. ஜலக்கிரீடை முடித்துக்கொண்டு வந்த கன்னிகைகள் வஸ்திரங்களை உடுத்திக்கொண்டதில் தெய்வயானையுடைய வஸ்திரத்தைச் சர்மிஷ்டை தவறி உடுத்திக்கொண்டாள். அதனால் இருவருக்கும் வாக்குவாதம் ஏற்பட்டது. குருகுமாரத்தியாகிய தன்னுடைய வஸ்திரத்தைச் சர்மிஷ்டை உடுத்திக்கொள்ள அருகியல்ல வென்று தெய்வயானை அவளை யேசினாள். சர்மிஷ்டை, தான் ராஜாவின் குமாரத்தியென்றும், தன் பிதாவினிடத்தில் தெய்வயானையின் பிதா பிச்சைவாங்கிப் பிழைக்கிறார் என்றும் தெய்வயானையை ஏசினாள். சண்டை அதிகப்பட்டு, சர்மிஷ்டை தெய்வயானையைக் கிணற்றில் தள்ளிவிட்டாள். வேட்டைக்கு வந்த யயாதி மகாராஜன், அவளைக் கிணற்றிலிருந்து எடுத்து, அவளை ரக்ஷித்தான். அவள், தன் தகப்பனிடம் போய், நிகழ்ந்ததைச் சொன்னாள். சுக்ராசாரியார் கோபம் கொண்டு, சங்கதிகளை விருஷபர்வனுக்குத் தெரிவிக்க, அவன் அதற்குச் சமாதானம் சொல்லி, தெய்வயானை கோரியபிரகாரம், தன் மகள் சர்மிஷ்டையை அவளுடைய ஆயிரம் வேலைக்காரிகள் சகிதம் தெய்வயானைக்கு வேலைக்காரியாயிருந்து பணிவிடை செய்யும்படி நியமித்தான். அப்பால், கர்மவசத்தாலும், கசனுடைய சாபத்தாலும், தெய்வயானை யயாதி மகாராஜனுக்கு மனைவி யாயினாள். அவளுக்கு அவனிடத்துக் குழந்தைகள் பிறந்தன. சர்மிஷ்டையும், தெய்வயானைக்குப் பணிவிடைப் பெண்ணாக யயாதி மகாராஜனுடைய அரண்மனைக்குப் போய் இருந்தாள். யயாதி மகாராஜன், ஒரு

சமயம் அவளைக் கண்டு காதலுற்று, காந்தர்வ விவாகம் செய்து கொண்டு, அவளிடத்திலும் குழந்தைகளைப் பெற்றான். இந்தச் சங்கதியை அறிந்து, தெய்வயானை பிதாவிடம் போய் முறையிட்டாள். சுக்ராசாரியார் சினங்கொண்டு, யயாதிமகாராஜனை நோக்கி, "நீ இப்பொழுதே மூப்புத் திசையை அடையக்கடவது" என்று சபித்தார். யயாதி மகாராஜன் கிழத்தன்மையை அடைந்து, தன்னுடைய மந்திர சக்தியால் தன் கிழத்தன்மையைத் தன் குமாரர்களி லொருவனான 'பூரு' என்பவனுக்குக் கொடுத்து, அவனுடைய இளமையைத் தான் பெற்றுக்கொண்டு, தன்னுடைய பத்னிகளுடன் விஷய சுகங்களை யனுபவித்து வந்தான். பிறகு தன் இளமையை மறுபடியும் தன் மகனுக்குக் கொடுத்துவிட்டு, தன்னுடைய முதுமையைப் பெற்றுக்கொண்டு, அப்பால் இறந்து போய், ஸ்வர்க்கலோகத்தை யடைந்தான்.

தண்டன் (1) என்ற ஒரு அரசன் இருந்தான். அவன் இக்ஷ்வாகு என்ற அரசனுடைய கடைசிப் புத்திரன். அவன் பெரியோர்களிடத்தும், தன் தமையன்மார்களிடத்தும் வணக்கமில்லாதவனாயிருந்தது பற்றி, அவன் தண்டனைக்குப் பாத்திரனாவான் என்று உத்தேசித்து, 'தண்டன்' என்ற பேர் அவன் தகப்பனால் அவனுக்கு அளிக்கப்பட்டது. தண்டன் விந்தியம், சைவாலம் ஆகிய பர்வதங்களுக்கு மத்தியிலுள்ள அழகான நாட்டுக்கு அரசனானான். சுக்ராசாரியார் அவனுக்குக் குருவாக இருந்தார். அவன் குபேரன் போல் சுகமாகத் தன் ராஜ்யத்தை அனேக வருஷங்களாண்டு வந்தான்.

ஒருநாள் வசந்தகாலம் சித்திரை மாதத்தில் தண்டன் தன் புரோகிதருடைய அழகிய ஆச்ரமத்துக்குச் சமீபத்தில் வந்தான். அந்தக் காலத்தில் அழகிலும், கம்பீரத்திலும் எவரும் ஒப்பில்லாத சுக்ராசாரியாருடைய குமாரத்தி, அங்கே வனத்தில் உலாவிக்கொண்டிருந்தாள். அரசன், ஸ்திரீரத்னமாகிய அப்பெண்ணைக் கண்டு, மோகம் கொண்டு, மதிமயங்கி, அவளைச் சமீபித்து, "ஓ! அழகிய இடையுள்ள பெண்ணே! நீ யாருடைய குமாரத்தி? உன்னுடைய சந்திரன் போன்ற முகத்தைப் பார்த்து நான் மன்மத பாணத்தினால் துன்பப் படுகிறேன். ஆதலால், உன்னை வந்து அடைந்திருக்கிறேன்" என்றான். இவ்வாறு காமுகனாய்த் தன்னை நோக்கி வந்த துராத்மா

(1) இராமாயணம்—உத்தரகாண்டம்,

வான தண்டனைப் பார்த்து, அப் பெண்மணியானவள், "ஓ! அரசனே! நான் தபோத்தமரான சுக்ராசாரியின் புத்திரி. என் பேர் அரஜஸ். நான் இந்த ஆச்ரமத்தில் என் தகப்பனுடைய சம்ரக்ஷணையி லிருந்துவருகிறேன். நான் ஒரு கன்னிகை. நீர் என்னைத் தொடக் கூடாது. அன்றியும், என் தகப்பனர் உமது குரு. நீர் அவருடைய சிஷ்யர். அவர் கோபம் கொண்டால், உம்மைச் சபித்து விடுவார். ஓ! நரேந்திரா! உமக்கு என்னை அடைய விருப்பமுண்டாகில், என் தகப்பனரிடத்துப் போய், அவரை யோக்கியமாயும், பக்தியா யும் என்னைக் கொடுக்கும்படி வேண்டிக்கொள். இப்படிச் செய்யா விடில், கூடிய சீக்கிரத்தில் உனக்குக் கொடிய ஆபத்துக்கள் சம்பவிக் கும். என் பிதாவுக்குக் கோபம் வந்தால், மூன்று லோகங்களையும் எரிக்க வல்லவர். நீர் போய் வேண்டினுல், ஒருகால் என் பிதா என்னை உமக்குப் பாணிக்கிரகணம் செய்து கொடுப்பார்" என்றாள். இதைக் கேட்ட தண்டன், காமத்தால் ஏவப்பட்டவனாய், தன் இரு கைகளையும் தலைமேல் வைத்து, அவளைக் கும்பிட்டு, "ஓ! சுந்தராங் கியே! இனிமேல் ஒரு க்ஷணமும் தாமதிக்கக் கூடாது. உன்னை நினைத்து என் மனமானது உருகுகின்றது. உன்னை அடைவதன் பொருட்டு எனக்கு எவ்வித நாசமும், அல்லது, எவ்வித பயங்கர மான கேடுகள் நேர்ந்தாலும், நேரட்டும். நீ என்னை அணைவாயாக" என்றான். இவ்வாறு சொல்லி, அரசன் அவளைப் பலவந்தம் செய் தான். இப்படி மிகவும் கொடிய செய்கையைச் செய்து விட்டு, 'மதுமந்தா' என்ற தன்னுடைய நகரத்துக்கு வந்துசேர்ந்தான்.

அரஜஸ் என்பவள் உரத்த சத்தத்துடன் அலறி, தேவலோகத் துக்குப் போயிருந்த தன் பிதாவினுடைய வரவை எதிர்பார்த்திருந் தாள். அரஜஸ் என்பவள் விஷயமாக நடந்த சங்கதிகளை யெல்லாம் சுக்ராசாரியார் தன் சிஷ்யர்கள் மூலமாயறிந்து, அவர்கள் சகிதம் தன் ஆச்ரமத்தை அடைந்தார். அங்கே தன் மகள், ராகுவால் பீடிக் கப்பட்ட சந்திரனைப் போல், தேகமெல்லாம் தூசிபடிந்து, மிகவும் பரிதாபமான அலங்கோல நிலைமையி லிருப்பதைப் பார்த்தார். அவர், பசியால் களைத்தவராய், தன்னுடைய மகளின் நிர்பாக்கிய மான நிலையைப் பார்த்து, மூன்றுலகங்களையும் எரித்து விடுபவர் போல், கோபாவேசம் கொண்டார். தன் சிஷ்யர்களைப் பார்த்து, "அகர்மவழியில் நடந்த தண்டனிடத்து எனக்கேற்பட்டிருக்கிற

கோபத்தால் அவனுக்கு நேரிடுகிற பொல்லாத அனர்த்தங்களை நீங்கள் பார்ப்பீர்களாக. அந்தத் துஷ்டன் எரிகிற நெருப்பில் தன் கைகளை வைத்திருக்கிறான். ஆகலால், அவன் தன் பரிவாரங்கள் சஹிதம் நாசத்தை அடைவான். ஏழு தினத்துக்குள் தண்டன், அவனுடைய சேனைகள், குமாரன், மற்றப் பரிவாரங்கள் ஆகிய இவர்கள் சஹிதம் இறந்துபோகக் கடவன். இந்தத் துஷ்டராஜனுடைய ராஜ்யத்தில், நூறு யோஜனை விஸ்தீரண இடத்தில் இந்திரன் மண்மாரி பெய்விக்கக் கடவன். இந்த மண்மாரியினால் நகரத்திலுள்ள புல் பூண்டுகள் கூட இல்லாமல் சகல ஜீவன்களும் மடிந்துபோகக் கடவது. தண்டனுடைய ராஜ்ய விஸ்தீரணத்திற்குள் இருக்கிற எல்லா ஜீவன்களும் ஏழு தினத்துக்குள் அழிந்து போகக்கடவது" என்று சபித்தார். பிறகு, உசனஸ் தன் ஆச்ரமத்திலுள்ளவர்களை அந்த ராஜ்யத்தினுடைய வரம்புக்கப்பால் போயிருக்கும்படி கட்டளையிட்டார். அப்படியே அவர்கள் தண்டனுடைய ராஜ்யத்துக்குப் புறம்பாலுள்ள இடத்தில் வசித்தார்கள். சுக்ராசாரியார் அரஜையைப் பார்த்து, "ஓ! துர்ப்பாக்கியமான பெண்ணே! நீ சுத்தமான மனதை உடையவளாய் இந்த ஆச்ரமத்திலேயே காத்திரு. ஒரு யோஜனை விஸ்தீரணமுள்ள இந்தக் குளத்தின் கரையில் அக்காலத்தை எதிர் பார்த்துக் கொண்டிரு. ஏழுநாளுக்குள் உன்னை அணுகுபவன் இந்த மண்மாரியினால் நாசமடைவான்" என்று சொன்னார். அரஜஸ் "அப்படியே ஆகட்டும்" என்று அங்கிருந்தாள். அதன்பேரில் சுக்ராசாரியார் அவ்விடத்தைவிட்டு வேறு இடத்தில போய் வசித்தார். ரிஷியினுடைய வார்த்தையின் பிரகாரம், தண்டனுடைய பரிவாரங்கள், சேனைகள், வாஹனங்கள் முதலிய சகல ஜீவன்களும், வஸ்துக்களும் ஏழு நாள்களுக்குள் அழிந்துபோயின. அக்காலமுதல் அந்த ராஜ்யமிருந்த இடமானது பெரிய வனமாக மாறி, 'தண்டகாரண்யம்' என்று சொல்லப்பட்டு வருகிறது.

மேலே சொன்னது இராமாயணத்திலுள்ள விருத்தாந்தம். இதே விருத்தாந்தம் சில மாறுதல்களுடன் சிவமகாபுராணத்திலும், வாமன புராணத்திலும் சொல்லப்பட்டிருப்பதில், தண்டன் என்பவன், 'சூரியப்ரபை' என்னும் பெண்ணைக் காந்தர்வ விவாகம் செய்தபோதும், அவனோடு சுக்ராசாரியார் எட்டுநாள் யுத்தம் செய்

த்து போலவுமுள்ள வித்தியாஸமான சங்கதியுங் கண்டிருக்கிறது. இது கல்ப பேதம்.

அசுரர்கள் (1) தேவர்களால் ஜெயிக்கப்பட்டார்கள். அதன் பேரில் சுக்ராசாரியார் அவர்களுக்குத் தைரியம் சொல்லி, தான் பரம சிவனைக் குறித்துத் தவம்செய்து, அவர்களுக்கு ஜயம் கிடைக்கும் சஞ்சீவி மந்திரத்தைப் பெற்றுவருவதாயும், அதற்குள் தேவர்களால் ஹிம்ஸை நேரிட்டால், தனது தாயிடத்துப் போய் அடைக்கலம் புகுந்தால், அவள் ரக்ஷிப்பாள் என்றும் சொல்லிப் பரமசிவனைக் குறித்து, தலைகீழாகத் தொங்கிக்கொண்டு, அகோரமான தவம் செய்துக்கொண்டு வந்தார். அசுரர்களுடைய உபாயத்தைத் தேவர்கள் அறிந்து, அவர்களுடன் போர்செய்யத் தேவர்கள் சென்றதும், அசுரர்கள் சுக்ராசாரியாருடைய தாயாகிய பிருகு முனிவரின் பத்னியைப் போய்ச் சரணமடைந்ததும், அவள் மகாவிஷ்ணுவால் கொல்லப்பட்டதும் ஆகிய சங்கதிகள் பிருகு மகரிஷியின் சரித்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

அசுரர்களினுடைய (2) ஜயத்துக்காக சுக்ராசாரியார் பரமசிவனைக் குறித்துத் தவம் செய்வதை இந்திரன் அறிந்து, தன் குமாரத்தியாகிய ஜயந்தியைப் பார்த்து, "ஓ! பெண்ணே! நீ சுக்ராசாரியாரிடம் போய், அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து, அவருக்கு உன்னிடத்தில் சந்தோஷம் உண்டாகும்படி நடந்துகொள்" என்று சொல்லி, அவளை அவரிடம் அனுப்பினன். அவளும், தலைகீழாய்த் தவம் செய்துகொண்டிருக்கும் சுக்ராசாரியாருக்குப் பக்தியான பணிவிடைகள் செய்தும், இனிமையான வசனங்களை அவருக்குச் சொல்லியும், அவருடன் சேர்ந்து, அவளும் வெகுகாலம் தவம்செய்து வந்தாள். இவ்வாறு சுக்ராசாரியார் ஆயிரம் வருஷகாலம் தவம்செய்தார். பரமசிவன், அவருடைய தவத்துக்கு மகிழ்ந்து, அவர் முன்பாகத் தோன்றி, "ஓ! சுக்ர! நீ ஒருவன் இந்த அருமையான தவத்தைச் செய்திருக்கின்றாய். ஆதலால், உன்னுடைய புத்தியினாலும், சாஸ்திர ஞானங்களினாலும், தேஜஸினாலும், சக்தியினாலும் தேவர்களை ஜயிக்க வல்லவன் நீயே. இதுவுமன்றி, உன்னுடைய மற்ற மனோபீஷ்டங்களெல்லாம் நிறைவேறக் கடவது" என்று வரமளித்தார். இவ்வாறு வரங்களைப் பெற்று, சுக்ரர் அடங்காத ஆனந்தம்

(1) இராமாயணம் — உத்தரகாண்டம். (2) மத்ஸியபுராணம்.

கொண்டு, சிவனைப் பலவிதமாக ஸ்தோத்திரம் செய்தார். பிறகு, சிவன் மறைந்து போயினர். சுக்ரர், தன்னை அடுத்து நின்ற ஜயந்தியைப் பார்த்து, "என்னிடத்து இவ்வளவு பயபக்தியுடன் இருக்கிற நீ யார்? நீ ஏன் கஷ்டப்பட்டுப் பணிவிடைகள் செய்துவருகிறாய்? உன்னுடைய விருப்பம் யாது? அதைச் சொல்வாய்" என்று கேட்டார். அதற்கு ஜயந்தி, "ஓ! ஸ்வாமி! என்னுடைய மனோபீஷ்டங்களை நீரே உமது தவமகிமையால் அறிந்துகொள்ளும்" என்றாள். சுக்ராசாரியார் அவளுடைய எண்ணங்களை அறிந்து, "நீ என்னோடு பத்து வருஷகாலம் சேர்ந்து வசிக்க விரும்புகின்றாய். அப்படியே செய்யலாம்,வா" என்று சொல்லி, தமது வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய், அவளை மணம் செய்துகொண்டு, இருவரும் சுகமாய்க் காலம் நடத்திவந்தார்கள். அவளுடன் சுகமனுபவிக்கும் பொருட்டு, அவர் மற்றொருவர் கண்ணுக்குங் காணப்படாதவராயிருந்துவந்தார். தைத்தியர்கள் எல்லோரும் தங்களுடைய குருவானவர் அரிய வரங்களைப் பெற்று வந்திருப்பதைக் கேட்டு, சந்தோஷமடைந்து, அவரைத் தரிசித்து வணங்கச் சென்றார்கள். மறைவாயிருந்த அவரைப் பார்க்கமுடியாததால், எல்லோரும் திரும்பிவந்தார்கள்.

சுக்ரருடைய இச் செய்கையைப் பிருகஸ்பதி பகவான் கண்டு, தேவர்கள் கோரிய பிரகாரம், சுக்ராசாரியரைப்போல் வேஷம்பூண்டு, அசுரர்கள் முன்பாகச் சென்றார். அவர் அசுரர்களை நோக்கி, "நான் பரமசிவனிடம் பெற்றுவந்த மந்திரங்களை உங்களுக்கு உபதேசிக்கின்றேன்" என்று சொல்லி, அவர்களுக்கு ஏதோ மந்திரங்களை உபதேசித்துக்கொண்டு வந்தார். இதன் மத்தியில் சுக்ராசாரியாருக்கு ஜயந்தியிடத்தில் மேற்சொல்லப்பட்ட தெய்வயானை என்று ஒரு குமாரத்தி பிறந்தாள். அப்பால், பத்து வருஷமும் கழிந்தபிறகு, சுக்ரர் ஜயந்தியிடத்து விடைபெற்றுக்கொண்டு, அசுரர்களைப் பார்க்க அவர்களிடத்து வந்தார். அங்கே பிருகஸ்பதி பகவானுடைய மோசமான செய்கைகளைக் கண்டு, அவர்களைப் பார்த்து, "ஓ! அசுரர்களே! பரமசிவனிடம் வரம்பெற்று வந்த சுக்ராசாரியர் நானே. இவர் சுக்ரனல்ல; பிருகஸ்பதி" என்று சொல்லவும், சுக்ராசாரியார் வேஷம் பூண்டுள்ள பிருகஸ்பதி அதை மறுத்துச் சொல்லவும், அசுரர்கள் ஆலோசித்து, இவர்கள் இருவரும் சுக்ரரைப்போல் வேற்றுமை

யின்றி ஒரே ரூபமாய் இருந்ததால், சுக்ராசாரியார் சொன்ன வார்த்தையை ஏற்றுக்கொள்ளாமல் அவமதித்துவிட்டார்கள். அதன் பேரில் அவருக்குக் கோபம் பிறந்து, "ஓ! தானவர்களே!. நான் உங்களுக்குப் புலவாறு புத்திசொல்லியும், நீங்கள் என்னை உங்களுடைய குருவாக •அங்கீகரிக்க மறுத்துவிட்டபடியால், நீங்கள் உங்கள் மதியை இழந்து, தேவர்களால் ஜயிக்கப்பட்டுத் தூரத்தப்படுவீர்கள்" என்று சபித்தார். பிருகஸ்பதி பகவானும், மிகுந்த சந்தோஷத்தை யடைந்து, அசுரர்களை விட்டு அகன்று, தேவர்களிடத்து வந்துசேர்ந்தார். இதைக்கண்டு தானவர்கள் நிர்ப்ரமை கொண்டவர்களாய், ஒன்றும் தோன்றாமல் மயங்கினார்கள். "பிருகஸ்பதியினுடைய மோசத்தினால் நமக்கு சுக்ராசாரியாருடைய சாபம் ஏற்பட்டது" என்று பிரஹ்லாதர் முதலிய தானவர்கள் எல்லோரும் மிகுந்த வருத்தமுற்று, சுக்ராசாரியாரைப் போய் அடைந்தார்கள். அவர், அவர்களைப் பார்த்து, "நான் எவ்வளவோ சொல்லியும் நீங்கள் கேளாததால், என்னுடைய சாபம் நடந்தே தீரும்," என்று சொல்ல, பிரஹ்லாதர் முதலிய அசுரர்கள் எல்லோரும் மிகுந்த துக்கத்தை அடைந்தவர்களாய், கண்களில் நீர் ததும்ப, "நாங்கள் பிருஹஸ்பதியால் மோசம் போய்விட்டோம். எங்களை எப்படியாவது நீர் மன்னித்து ரக்ஷிக்கவேண்டும். இல்லாவிட்டால், நாங்கள் ரஸாதலலோகம் போய் விடுவோம்" என்று சொன்னார்கள். அப்பொழுது சுக்ரர் அவர்களிடத்துத் தயவுடையவராய், "ஓ! அசுரர்களே! உங்களுக்கு இப்பொழுது அபஜயம் நேர்ந்தாலும், பிறகு ஜயம் கிடைக்கும். நீங்கள் பாதாளலோகத்துக்குச் செல்லவேண்டாம்" என்று அவர்களுக்கு ஆறுதல் சொல்லி, அவர்களைத் தேற்றினார்.

அங்கிரஸ், (1) பிருகு என்ற தர்மவான்களான பிரமபுத்திரர்களில், அங்கிரஸ்ஸுக்கு பிருகஸ்பதியும், பிருகு முனிவருக்கு சுக்ரரும் புத்திரர்களிருந்தார்கள். அவ் விருவர்களுக்கும் உபநயனம் செய்யப்பட்டது. பிறகு, இவ் விருவர்களுக்கும் வேத அத்தியயனம் செய்யும் சமயமா யிருந்ததால், அவர்களுக்கு ஒரே ஆசாரிய ரிருக்கவேண்டுமென்றும், அதில் நம்மில் ஒருவர் இருப்போம் என்றும், அங்கிரஸ் முனிவரும், பிருகு முனிவரும் பேசிக்கொண்டார்கள். அந்தப் பிரகாரம் அங்கிரஸ் முனிவரே குருவாயிருந்து, அவ் விருவருக்கும் தனித்தனியே அத்தியயனம் செய்வித்து வந்தார். அப்படிச்

(1) பிரமபுராணம்.

செய்து வந்ததில், பட்சபாதத்தினால் தன் குமாரனுக்கு ஒருவித மாயும், சுக்ரருக்கு ஒருவிதமாயும் உபதேசித்து வந்தார்.

கொஞ்சகாலம் சென்றபிறகு, சுக்ரர் அங்கிரஸ் முனிவரைப் பார்த்து, "ஓ! ஆசாரியரே! நீர் கெட்ட எண்ணத்துடன் என்னைப் படிப்பிக்கிறீர். ஆசாரியர்களுக்குப் புத்திரன், சிஷ்யன் இவர்களுக்குள் வித்தியாசம் பாராட்டுவது தகுதியல்ல. சில மூடர்களான குருக்கள் சிஷ்யர்களிடத்தில் கெட்ட எண்ணத்துடன் கூடியவர்களா யிருக்கிறார்கள். அதினால் அவர்கள் அடையும் பாபத்திற்கு அளவில்லை. ஆசாரியரே! நான் உம்மை நன்றாய் அறிந்தேன். அடிக்கடி நான் உம்மை வணங்குகிறேன். மற்றொரு ஆசாரியனைப் போய் அடைவேன். எனக்கு உத்தரவு அளிக்கவேண்டும். என் பிதாவிடம் சென்று இந்தச் சங்கதியைத் தெரிவிப்பேன். அவரும் எனக்கு விரோதமான கொள்கை யுடையவரா யிருந்தால், மற்றோரிடம் செல்வேன். நான் போய்விடுகிறேன்" என்று சொல்லி, அங்கிரஸ் முனிவரிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, சுக்ரர் வெளியேறினார். அப்பொழுது அவர், எல்லா வித்தைகளையும் கற்றுக்கொண்டு, அப்பால், தம் பிதாவிடம் செல்லலாமென்று நினைத்தார். "நமக்குச் சிறந்த குரு எவர்? அதைப் பற்றி யாரிடம் யோஜிப்போம்" என்று தமக்குள்ளே சிந்தித்துக்கொண்டு, புத்திமானான விருத்த கௌதமரைக் கண்டு, "ஓ! ரிஷிசிரேஷ்டரே! நான் யாரை குருவாக வரிக்கட்டும். மூவுலகங்களுக்கும் யார் குருவாக இருக்கிறாரோ, அவரையே நான் குருவாக அடைவேன்" என்றார். அம் முனிவரும் சுக்ரரைப் பார்த்து, "நீ சொன்னபடியுள்ள குரு ஸ்ரீமத் சம்புவே. அவரை நீ போய் அடையலாம்" என்றார். உடனே காவியர், "நான் ஈசுவரனை எப்படிப் பார்ப்பேன்? அந்த கிரீசனை எவ்விடத்தி லாராதிப்பேன்?" எனக் கேட்டார். விருத்த கௌதமரும், "நீ, கௌதமி நதியில் ஸ்நானம் செய்து, மிக்க பரிசுத்தனாய் இருந்துகொண்டு, பல ஸ்தோத்திரங்களால் அப் பகவானைத் திருப்திசெய்தால், அவர் உனக்கு உத்தமமான வித்தையைக் கொடுப்பார்" என்று சொன்னார். உடனே பாலனாகிய பார்க்கவரும், கங்கையை அடைந்து ஸ்நானம் முதலிய அனுஷ்டானங்களைச் செய்து, பின்வருமாறு ஈசனைப் போற்றினார்:—"சம்போ! அநாதைகளுக்கும், ஏழைகளுக்கும் அடைக்கலமா யிருக்கிற உம்மைச் சரணம் அடைந்தேன். பாலசந்திரனை அணிந்திருப்பவரே!

நானோ பாலன். பாலபுத்தியுள்ளவன். உம்மை ஸ்தோத்திரம் செய்யும் வழியைச் சற்றேனு மறியாதவன். குருவினால் தள்ளப்பட்ட எனக்குச் சிநேகனும் கிடையாது. உதவிசெய்வாரும் இல்லை. லோகநாயகனே! நீர் சிநேகிதர் முதலிய எல்லா லக்ஷணங்களுடனு மிருப்பதற்கு வல்லவராயிருக்கிறீர். கனம் பொருந்தியவர்களுக்கெல்லாம் நீர் கனம் பொருந்தியவரா யிருக்கிறீர். பெரியவர்களுக் கெல்லாம் பெரியவராக யிருக்கிறீர். ஜகத்ரூபமாயிருப்பவரே! நான் மிகவும் அல்பனான குழந்தை. உம்முடைய மகிமையைச் சிறிதேனு மறியாதவன். வித்தையை அடைவதற்காக நான் உம்மைப் பிரார்த்திக்கின்றேன். என்பேரில் கிருபாநோக்கம் வைக்கவேண்டும். உமக்கு நமஸ்காரம்.'' இந்த ஸ்தோத்திரத்தினால் ஈசுவரன் சந்தோஷமடைந்து, "ஏ! குழந்தாய்! உனக்கு மங்களம் உண்டாகுக. உனக்கிஷ்டமான வரத்தைக் கேள். அது தேவர்களுக்குக் கிட்டாதாயினும் தருகிறேன்'' என்றார். உடனே கவியும் கைகூப்பி, "ஈசுவரா! நீரே எனக்குக் குரு; நீரே தெய்வம். பிரமா முதலிய தேவர்களாலும் அப்யஸிக்கப்படாத அபூர்வமான வித்தையை எனக்கு அருளும்படி நான் உம்மை வேண்டுகிறேன்,'' என்றார். அப்படியே அப் பகவானும், தேவர்களாலும் அறியப்படாத "மிருத சஞ்சீவினி'' என்ற வித்தையை சுக்ரருக்கு உபதேசித்தார். ஈசுவரனுடைய கிருபையை அடைந்தவர்க்கு எதுதான் கைகூடாது? சுக்ரரும் மிகுந்த சந்தோஷத்துடன் தமது பிதாவிடம் சென்றார். அவ் வித்தையின் மகிமையால் யாவராலும் கொண்டாடப்பட்டு, அசுரர்களுக்குக் குருவானார். பிறகு, மேலே சொல்லியிருக்கிற பிரகாரம் அவ் வித்யையை அவரிடமிருந்து பிருஹஸ்பதி புத்ரனான கசன் என்பவன் அடைந்தான். அதுமுதல் சுக்ரர் வரம் பெற்ற அந்த இடத்துக்கு அடுத்துள்ள தீர்த்தத்திற்கு 'மிருதசஞ்சீவினி தீர்த்தம்' என்று பெயர்.

திடமான (1) விரதங்களை யுடையவரும், யாவராலும் மரியாதையுடன் கொண்டாடப்பட்டவருமான பிருகு வம்சத்திலுதித்த சுக்ரர், அசுரர்களுக்குக் குருவா யிருந்துகொண்டு, தேவர்களுக்கு அப்பிரியமான காரியங்களைச் செய்துகொண்டு வந்தார். யக்ஷர்களுக்கும், ராக்ஷஸர்களுக்கு மதிபரான குபேரன், மூன்றுலகங்களுக்கும் நாதனாகிய இந்திரனுடைய பொக்கிஷத்துக் கதிபதியா யிருக்கிறான்.

(1) மஹாபாரதம்—சாந்திபர்வம்.

யோக சக்தியில் பெருமை பெற்றவரான உசனஸ் முனிவர் குபேர னுடைய சரீரத்தில் பிரவேசித்து, தமது யோகவலிமையினால் குபே ரனைச் சுயேச்சையாய் ஒரு காரியமும் செய்யவொட்டாம லடக்கி, அவரது தனங்களை யெல்லாம் கொள்ளைகொண்டார். இவ்வாறு தமது திரவியங்கள் அபகரிக்கப் பட்டதைக் கண்ட குபேரன், கோபத்தையும், மனக்கவலையையு மடைந்து, தேவர்களுக் கெல்லாம் முதல்வரான மகாதேவரிடம் சென்று, நடந்த சங்கதிகளை அவருக் குத் தெரிவித்தார். அளவிட முடியாத சக்தியை யுடையவரும், பல ரூபங்களை யுடையவரும், உக்ரமானவரும், அன்புள்ளவருமான பரம சிவன் கோபம் அடைந்தார். அவர் கண்கள் இரத்தம் போற் சிவந் தன. அவர், கையில் சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு, உசனஸைக் குத்துவதற்குத் தயாராய்க் காத்திருந்தார். அவ்வாறு கையிலெடுத் துக்கொண்டு, மகாதேவர், "அவன் எங்கே? அவன் எங்கே?" என் றார். இதன் மத்தியில் உசனஸ் தம்முடைய யோக சக்தியால் தூரத் திலிருந்தே பகவானுடைய எண்ணத்தைத் தெரிந்துகொண்டு, மௌனமாய் நின்றார். மஹேசுவரரிடம் செல்கின்றதா? அல்லது, அவரைவிட் டோடுகின்றதா? அல்லது, நின்றவிடத்திலேயே நிற்கி றதா? என்கிறதைப் பற்றி ஆலோசித்தார். அவருடைய உக்ரமான தவத்தின் உதவியால் பரமாத்மாவாகிய மஹாதேவரைச் சிந்தித்துக் கொண்டு, 'பரமயோகியான உசனஸ் அவருடைய சூலாயுதத்தின் நுனியில் போயிருந்தார். இதை ருத்ரர் அறிந்து, அவரை ஒன்றும் செய்ய முடியாததால், அந்த ஆயுதத்தைத் தமது கையினால் வளைத்த னர். உடனே அது விற்போல் வளைந்தது. அந்நாள் முதல் அந்த ஆயுதத்திற்கு 'பினாகம்' என்று பெயர் ஏற்பட்டது. இவ்வாறு தமது உள்ளங்கையில் பார்க்கவர் கொண்டுவரப் பட்டிருப்பதை உமாபதி யான பகவான் அறிந்து, தமது வாயைத் திறந்து, பார்க்கவரை அத னுள் போட்டு விழுங்கினர். யோக வலிமையுள்ள மகாத்மாவான உசனஸ், மஹேசுவரருடைய குடலை யடைந்து, அங்கே அலைந்து கொண்டிருந்தார். இவ்வாறு உசனஸை விழுங்கிவிட்டு, உக்ரமான விரதங்களையுடைய மஹாதேவர் ஒரு பெரிய ஏரியின் ஜலத்துக்குள் மூழ்கி, அங்கே அநேக கோடி வருஷங்களாகத் திடமான யோகநிலையி லமர்ந்து, ஒரு மரக்கட்டைபோல் அசைவற்று நின்றுகொண்டிருந் தார். இப்படி வெகு காலமான பிறகு, அவர் அந்த ஏரியினின்றும் வெளியே வந்தார். அப்பொழுது, பிரமதேவர் அவரிடம் வந்து,

அவருடைய தவத்தின் அபிவிருத்தி முதலிய யோகக்ஷேமங்களைப் பற்றி விசாரித்தார். விருஷபத்தை வாகனமாயுடைய பகவான் "[illegible] நன்றாய் நிறைவேறிற்று" என்று பதில் உரைத்தார்.

எல்லாம் அறிந்தவரும், சத்யவிரதருமான சங்கரர், தமது குடலி லிருந்த உசனஸ் அவருடைய தவத்தின் மகிமையால் தம்மிலும் மிகுந்த சக்தியுடையவரா யிருந்ததைக் கண்டார். யோகிகளுக்கெல் லாம் சிறந்தவரான உசனஸ் தவச்செல்வத்தினாலும், குபேரனிட மிருந்தடைந்த பொருட்செல்வத்தினாலும் தனிகராகி, மிகுந்த சக்தி யுடன் மூவுலகங்களிலும் பிரகாசித்து விளங்கினார். அதற்குப் பிறகு, மகாதேவர் மறுபடியும் யோகத்யானத்திலமர்ந்தார். உசனஸ் அத னால் மனக்கவலையடைந்து, பகவானுடைய குடலில் முன்போல் அலைந்துகொண்டிருந்தனர். மஹேசுவருடைய தேஹத்திலிருந்து வெளியே வரவேண்டுமென்ற விருப்பத்தினால், அவரை வெகுவாகத் துதித்துப் பாடினார். ஆனால், ருத்ரர் தமது தேஹத்திலுள்ள துவா ரங்களை யெல்லாம் அடைத்து, அவரை வெளியில் வரவொட்டாமல் தடுத்தார். அதிலும், தவசிரேஷ்டரான உசனஸ், "என்மீது கிருபை புரிதல் வேண்டும்" என்று அடிக்கடி மொழிந்து, பிரார்த்தித்தார். மஹாதேவர், தம்முடைய மற்றத் துவாரங்களை யெல்லாம் அடைத் துக்கொண்டு, தம்முடைய சீர்க்துவாரத்தின் வழியே வெளியே போகும்படி சொன்னார். இவ்வாறு நாலுபக்கங்களிலு மடைக்கப் பட்டு, பகவான் காட்டிய மார்க்கத்தின் வழியே வெளியேவரச் சக்தி யற்றவராய், மஹாதேவரது சக்தியால் தேஹமெல்லாம் தஹிக்கப் பட்டு, அங்குமிங்கு மலைந்துகொண்டிருந்தார். கடைசியில், வெளியே வரக்கூடிய ஒரு வழியைக் கண்டுபிடித்து, வெளியே வந்தார். அக் காரணத்தினால் அன்றுமுதல் அவருக்கு 'சுக்ரர்' என்று பெயர் ஏற் பட்டது. இவ்வாறு அலைந்துகொண்டிருந்ததின் நிமித்தம், அவர் வானத்தின் மத்யபாகத்தை யடையக் கூடவில்லை. தமது குடலை விட்டு தேஜஸுடன் அவர் வெளியே வந்ததைக் கண்டவர் கோபத் துடன் சூலாயுதத்தைக் கையிலேந்திக்கொண்டு நின்றனர். அப் பொழுது உமாதேவியார் தயவால் பரிந்துபேசி, "பிராமணனைக் கொல்லவேண்டாம்" என்று, ஜீவன்களுக்கெல்லாம் நாதனும், கோப முள்ளவருமான தமது பர்த்தாவைப் பிரார்த்தித்துத் தடுத்தார். அவ் வாறு உமாதேவியாரால் இரக்ஷிக்கப்பட்டபடியால், அன்றுமுதல் உச

னஸ் ரிஷி அந்த தேவிக்குக் குமாரரானார். உமாதேவி சொன்னதாவது:—"நீர் இவனைக் கொல்வது நியாயமன்று. அவன் என் புத்ரனாய் விட்டான். உம்முடைய இரைப்பையிலிருந்து வெளியே வந்தவன் உம்மால் கொல்லப்படுவது தகுதியன்று." இவ்வாறு தமது பத்தினியால் சமாதானம் செய்யப்பட்டவராய், பவர் புன்சிரிப்புடன், "இவன் இஷ்டமான இடத்திற்குச் செல்லட்டும்" என்று சொன்னார். உசனஸ் மஹாதேவரையும், பார்வதி தேவியையும் வணங்கி, தமது இருப்பிடம் சென்றார்.

இவர் ஸ்மிருதி கர்த்தாக்களில் ஒருவர்.

## 74. சுவேதகேது.



உத்தாலகர் (1) என்ற பெயருடைய ஒரு மகரிஷியிருந்தார். அவருக்கு அவரைப் போல் தவசக்தியுள்ள சுவேதகேது என்ற குமாரர் உண்டு.

அந்தக் காலத்திலும், அதற்கு முந்தின காலங்களிலும் ஸ்திரீகள், அவர்களுடைய கணவர்கள், பந்துக்கள் இவர்களுடைய சம்ரக்ஷணையில் இருந்துகொண்டு வீட்டுக்குள்ளேயே யிருப்பது என்கிற வழக்கம் கிடையாது. அவர்கள் வெளியே சுயேச்சையாய்ச் சஞ்சாரம் செய்துகொண்டு, அவர்கள் இச்சைப் பிரகாரம் சுகங்களை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் புணர்ச்சி விஷயங்களில் கணவர்களிடத்துமட்டும் என்கிற வரம்பு இல்லாமல் இருந்தார்கள். ஆகிலும், அவர்கள் பாபிகளாக எண்ணப்படவில்லை. ஏனென்றால், அதுவே அக்காலத்திய தர்மசம்மதமான வழக்கமா யிருந்தது. அக்காலத்திய அனுஷ்டானமானது, பக்ஷிகளும், மிருகங்களும் கொஞ்சமேனும் பொறாமை என்பது இல்லாமல், தங்களுடைய மனதுக்கு இயைந்தபடி புணர்ச்சி செய்யும் விதத்தை ஒத்திருந்தது. அந்த வழக்கமானது, அதற்கு முந்தின அனுஷ்டானங்களை அனுசரித்து வந்ததாயும், ரிஷிகளால் "சரி" என்று அங்கீகரிக்கப்பட்டதாயும்

(1) மஹாபாரதம்—ஆதிபர்வம்.

இருந்தது. (அந்த வழக்கம் இப்பொழுதும் உத்தரக்குரு ஜாதியர் களிடத்தில் கௌரவமானதாகவே மதிக்கப்படுகிறது.)

அப்படியிருக்க, ஒருநாள் சுவேதகேதுவினுடைய தகப்பனார் இருக்கையிலேயே, ஒரு பிராமணர் சுவேதகேது ரிஷியினுடைய தாயாரை, அவள் கையைப் பிடித்துக்கொண்டு, "போவோம், வா" என்று கூப்பிட்டார். தன் தாயைக் கையைப்பிடித்து இழுத்து முரட்டுத்தனமாய் அழைத்துக்கொண்டு போவதைக் கண்ட சுவேத கேதுவானவர் மிகவும் கோபம் அடைந்தார். அப்பொழுது உத்தா லகர் தன் மகனைப் பார்த்து, "ஓ! மகனே! கோபங்கொள்ளாதே. இது ஆதிகாலம் முதல் அங்கீகரிக்கப்பட்டு வருகிறது. நானாவித ஜாதிகளில் உள்ள ஸ்திரீகளெல்லோரும் சுயேச்சையானவர்கள். இந்த விஷயத்தை மனிதர்கள் அவரவர்களுடைய ஜாதிகளுக்குள் பசுக்களைப்போல் நடந்து வருகிறார்கள்" என்றார். ஆனபோதிலும், சுவேதகேது இவ்வழக்கத்தை அங்கீகரிக்காமல் கண்டித்து, இப்பொ ழுது மனிதர்கள் ஸ்திரீகள் விஷயமாக நடந்தேறி வருகிற வழக் கத்தை ஸ்தாபித்தார். அதாவது, ஒரு ஸ்திரீயானவள் தன் இஷ்டப் படி சஞ்சரிக்காமல், தன் ஜீவதிசை முழுவதும் தன் புருஷன் ஒரு வனைச் சார்ந்து இருப்பது என்பதுதான்.

அந்தக் காலமுதல் இந்த வழக்கமானது மனுஷ ஜாதிகளுக்குள் அங்கீகரிக்கப்பட்டு வருகிறது. ஆனால், பக்ஷிகளும், மிருகங்களும் முன்போலவே இப்பொழுதும் இருந்து வருகின்றன. இப் பிரகிருத வழக்கம் ஏற்பட்ட காலம்முதல் பாரியையானவள் ஒரே பர்த்தா வுக்குரியவளாய் இல்லாமல், வேறு விதமாயிருந்தால் அது பாபகர மாக மதிக்கப்படுகிறது. இவ்வாறு, சுவேதகேது ஏற்படுத்தின உத் தமமான விதியிலிருந்து எந்த ஸ்திரீ வழுவுகிறாளோ, அவள் சிசு ஹத்தி செய்த பாபத்தை அடைகிறாள். அதேபிரகாரம், உத்தம மான தன் ஸ்திரீயை அவமதித்து, பரஸ்திரீயுடன் போகிக்கும் புரு ஷனும் பாபம்செய்கிறவனாகிறான்.

சுவேதகேது ரிஷி தம்முடைய மிகுந்த தவசக்தியால் சரஸ்வதி தேவியை மனுஷ ரூபத்துடன் தரிசிக்கும்படியான பாக்கியம் பெற் றார். அவர் கேட்டுக்கொண்ட பிரகாரம், சரஸ்வதிதேவி உத்தம மாயும், சாதுரியமாயும் சம்பாஷிக்கும்படியான சக்தியை அவருக்கு

அனுக்கிரஹித்தாள். அதனால் வேதமந்திரங்களை உச்சரிப்பதிலும், சொல்வதிலும் மிக்க சமர்த்தர் என்று உலகத்தில் கீர்த்திபெற்றவ ராய் விளங்கி யிருந்தார். அவருடைய சகோதரியின் குமாரரான அஷ்டாவக்ரர் ஜனக மகாராஜாவினுடைய யாகசாலைக்குச் சென்று, அங்கே வருணகுமாரனை வந்தினை ஜயித்தார். அவருடன் சுவேத கேது முனிவரும் சென்றார். இந்த விருத்தாந்தம் அஷ்டாவக்ர மஹரிஷியின் சரித்திரத்தில் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

இவர் வடக்குப் பிரதேசங்களில் வசிக்கின்ற மகரிஷிகளில் ஒருவர்.

---

## 75 சுவேதர்

இவர் (1) அகஸ்திய மகாமுனிவருடைய சிஷ்யர். இவர் இந்திரியங்களை அடக்கி, மோக்ஷத்தைக் குறித்து நெடுங்காலம் தவம்பண்ணிக் கொண்டிருந்தார். இவருடைய தவத்தைக் கெடுக்க எண்ணி, அங்காரகை என்ற ராக்ஷஸி மலஜலரத்தங்களை வாரிப்பிறைத்தும், மேகம்போல் கர்ச்சித்தும், அவருக்கு மிக்க இடையூறுகள் செய்தாள். அப்பொழுது சுவேதர் கோபங்கொண்டு, அங்கிருந்த கல்லையெடுத்து, வாயுமந்திரத்தை உச்சரித்து, அவள்பேரில் பிரயோகம் பண்ணினார். பூர்வத்தில் விச்வாமித்திர மஹரிஷியின் தவத்தைக் கெடுப்பதற்காக இந்திரனால் ஏவப்பட்ட ரம்பையானவள் அவர்முன் தோன்றி, அவருடைய நிஷ்டையைக் கலைத்ததும், அவர் அவளைக் கல்லாகச் சபித்ததும், பின்னால் "சுவேதர் என்ற மகரிஷியால் நீ சாபவிமோசன மடைவாய்" என்று அவர் சொல்லியதும், விசுவாமித்திர மகாமுனிவருடைய சரித்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அவ்வாறு ரம்பை கல்ரூபமடைந்து கிடந்தாள். அக்கல்லையே சுவேதமுனிவர் அந்த ராக்ஷஸியின் பேரில் பிரயோகம் பண்ணினார். அந்தக் கல் ராக்ஷஸியைத் துரத்தவும், அவள் பயந்தோடி, தக்ஷிணசமுத்திரக் கரையை வந்தடைந்து, கபிதீர்த்தத்தில் விழுந்தாள். அவளை விரட்டிக்கொண்டு பின்தொடர்ந்து வந்த கல்லானது அவள் தலையில் பொத்தென்று விழவும், ராக்ஷஸி

(1) சேதுமஹாத்மியம்.

மடிந்தாள். அக் கல் கபிதீர்த்த மகிமையால் கல்ரூபம் நீங்கி, முன்போல் ரம்பை ரூபத்தை யடைந்து, திவ்வியாபரணங்களை யணிந்து, விமானத்திலேறிச் சொர்க்கலோகஞ் சென்றாள். அந்த ராக்ஷஸியும் பூர்வஜென்மத்தில் இருதாசி யென்ற தேவஸ்திரீயா யிருந்தவள். அவளுக்கு அகஸ்தியர் சாபத்தால் ராக்ஷஸ ஜென்மம் கிடைத்தது. இருதாசியும், ரம்பையும், சுவேதமுனிவருடைய அனுக்கிரஹத்தினாலும், கபி என்ற புண்ணியதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்ததினாலும் தங்களுடைய சாபங்கள் நீங்கினவர்களாய், முன்போல் தேவஸ்திரீகளாக வடிவம்பெற்று, சொர்க்கலோகத்துக்குச் சென்று, சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள்.



## 76. சுனகர்.



இவருடைய சரித்திரம் சௌனக முனிவரின் சரித்திரத்தில் வருகிறது.

## 77. சூளி.



குசர் என்பவர் (1) பிரம்மாவினுடைய புத்திரர். அவர் மிக்க தவமகிமையுடைய ஒரு மஹரிஷி. அவருக்கு வைதர்ப்பி என்பவளிடத்து குசாம்பர், குசநாபர், அதூர்த்தரஜஸ், வசு முதலிய நான்கு புத்திரர்கள் பிறந்தார்கள். இவர்களெல்லாம் பற்பல நகரங்களை ஸ்தாபித்து அரசாண்டார்கள். அவர்களில் குசநாபருக்கு ஒப்பற்ற அழகுடைய நூறு குமாரத்திகள் பிறந்தார்கள். அவர்கள் இளமைப் பருவம், அழகு இவைகளுடன் கூடினவர்களாய், மாரிக்காலத்து மின்னலைப்போல் பிரகாசித்துக் கொண்டும், உயர்ந்த ஆடை ஆபரணங்களை அணிந்து

---



(1) இராமாயணம்—பாலகாண்டம்.

கொண்டும், அவர்களுடைய சிங்காரத் தோட்டத்துக்கு வந்து உல்லாசமாய்ப் பாடிக்கொண்டும், நடனம் செய்து கொண்டும், வீணை முதலிய வாத்தியங்களை வாசித்துக்கொண்டும் இன்பமாய்க் காலம் கழித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் குற்றமற்ற அங்கங்களை யுடையவர்களாயும், ஒப்பற்ற அழகு பொருந்தியவர்களாயும், எல்லாச் சிறந்த குணங்களை யுடையவர்களாயும், மங்கைப் பருவமும், கம்பீரமும் நிறைந்து, மேகங்களின் மத்தியிலுள்ள நக்ஷத்திரங்களைப் போல் அந்தத் தோட்டத்தின் மத்தியில் பிரகாசித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது வாயுபகவான் அவர்களைக் கண்டு மோகங் கொண்டு, "ஓ! பெண்களே! நான் உங்களை நாடி வந்திருக்கின்றேன். நீங்களெல்லோரும் எனக்குப் பத்தினியாகுங்கள். நீங்கள் இம் மனித ரூபத்தை விட்டு தேவசரீரத்தைப் பெற்று நெடுங்காலம் வாழலாம். இளமை நீரிற் குமிழிபோல் நிலையற்றது. அதிலும் மனிதர்களுக்கோ இளமைப்பருவம் மிகவும் சொற்பம். நீங்கள் அழியாத இளமைப் பருவத்தைப் பெற்று இறவாத தெய்வத்தன்மையை அடையலாம்" என்றார். இதைக் கேட்டு அப் பெண்கள் நகைத்து, வாயு பகவானைப் பார்த்து, "நீரோ எல்லோருடைய சரீரங்களிலும் அலைகிறவர். ஓ! வாயுபகவானே! உம்முடைய சக்தியை நாங்கள் அறிவோம். நீர் ஏன் எங்களை அவமானம் செய்கின்றீர்? ஓ! தேவனே! நாங்கள் குசநாபருடைய குமாரத்திகள். நீர் தேவனாயிருந்தாலும் நாங்கள் உம்முடைய பதவியை இழக்கும்படி செய்வோம். ஆனால், எங்களுடைய தவப்பயன் வீண்போகாம லிருக்கும் பொருட்டு நாங்கள் பொறுத்துக் கொண்டிருக்கிறோம். ஓ! மூடபுத்தியை யுடையவரே! சத்தியவானை எங்கள் பிதாவை மதியாமல், நாங்களே சுயமாக ஒரு புருஷனை எக்காலத்திலும் தேடிக்கொள்ளமாட்டோம். எங்கள் தகப்பனே எங்களுக்கு நாதன். அவரே மூலதெய்வம். அவர்பார்த்து, எங்களையாருக்குக் கொடுக்கின்றாரோ அவரே எங்களுக்குரிய பர்த்தாவாவர்" என்றார்கள். இதைக்கேட்டு வாயுபகவான் மிகவும் கோபமடைந்து, அவர்களுடைய சரீரங்களுக்குள் பிரவேசித்து, அவர்களுடைய அங்கங்களை ஒடித்தார். அவர்களுடைய சரீரங்கள் இவ்வாறு வாயு தேவனால் ஒடிக்கப்பட்டதனால் அப் பெண்கள் மிகுந்த சஞ்சலமும், வெட்கமு மடைந்து, கண்களில் நீர்ததும்ப, அரசனிருக்குமிடத்துக்குப் போனார்கள். அரசன் சௌந்தரியவதிகளான தன்

னுடைய குமாரத்திகள் அங்கங்கள் குறைந்திருக்கும் பரிதாப நிலைமையைக்கண்டு, மனம் திடுக்கிட்டு, "ஓ! பெண்களே! இது என்ன? இவ்வாறு தர்மவிரோதமாய் நடந்தது யார்? இந்தக் கோணலான உருவம் உங்களுக்கு யாரால் நேர்ந்தது? நீங்கள் ஆறாத துக்கத்தால் ஏன் பதிலுரையாமலிருக்கிறீர்கள்?" என்று சொல்லி, பெருமூச்சு விட்டுக் கொண்டு, அவர்களுடைய பதிலை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தான். அவனுடைய குமாரத்திகள் தங்கள் தகப்பன் பாதங்களில் விழுந்து, வணங்கி, "வாயுபகவான் தனக்கு இணங்காத எங்களை அக்கிரமமான விதமாய் வசப்படுத்த இம்மாதிரி செய்திருக்கின்றான். இது தர்மமா என்பதைப் பற்றி கவனிக்கவேயில்லை" என்று வாயுபகவானுக்கும், தங்களுக்கும் நடந்த சங்கதிகளை விஸ்தாரமாகச் சொன்னார்கள். அரசன் அதைக் கேட்டு, "ஓ! பெண்களே! சாந்த முடையவர்கள் அனுசரிக்கவேண்டிய பொறுமையை நீங்கள் வாயுபகவான் விஷயத்தில் காட்டி இருக்கின்றீர்கள். நம்முடைய வம்சத்தின் பெருமையை நீங்கள் கவனித்தது உங்களுடைய மேன்மைக்கு ஏதுவாயிருக்கின்றது. மனிதர்கள், ஸ்திரீகள் ஆகிய இருவருக்கும் பொறுமையே ஒரு ஆபரணம். உங்களைப்போல் என் வம்சத்தில் ஜனிக்கும் ஒவ்வொருவனும் க்ஷமை யுடையவனாயிருக்கக் கடவன். க்ஷமையே தர்மம். க்ஷமையே சத்யம். க்ஷமையே யாகம். க்ஷமையே கீர்த்தி. உலகமே க்ஷமையினால்தான் நிலை பெற்றிருக்கின்றது" என்று சொல்லி, பிறகு தன் குமாரத்திகளை நல்ல குலத்திலுதித்த உத்தமமான ஒரு புருஷனுக்கு விவாகம் செய்து கொடுக்கும் விஷயத்தைப் பற்றி, மந்திரிமார்கள் முதலியவர்களுடன் ஆலோசித்தான்.

இச் சமயத்தில் மிகுந்த தேஜஸுடன் கூடிய சூளி என்ற மகாரிஷி ஒருவர் இந்திரியங்களை முற்றிலும் அடக்கினவராய்ப் பிரம்மத்தைக் குறித்துத் தவம் செய்து கொண்டிருந்தார். அப்பொழுது ஊர்மிளை என்பவளது குமாரத்தியான சோமதை என்ற ஒரு கந்தர்வஸ்திரீ, அவருக்குப் பணிவிடைகள் செய்து கொண்டிருந்தாள். இவ்வாறு மிகுந்த பக்திசிரத்தையுடன் வெகுகாலம் நடந்து வந்தாள். அதனால் அம் முனிவருக்கு அவளிடத்தில் மிகுந்த திருப்தி யுண்டாயிற்று. அவர் அவளை நோக்கி, "உன்னிடத்தில் நான் மிகவும் திருப்தியானேன். உனக்கு என்னால் செய்யவேண்டிய நன்மை ஏதாவது இருந்தால் அதைச் சொல்வாய்" என்று கேட்டார். அதைக்கேட்டு

அவள் சந்தோஷமடைந்து, "நீர் பிரம்மாவைப் போன்றவர். பிரம்ம தேஜசுடன் விளங்குகிறீர். மிகுந்த தவசக்தியையுடைய ஒரு உத்தம மான புத்திரனை எனக்கு நீர் அருள வேண்டும். எனக்கு இன்னும் விவாகமில்லை. ஆதலால், நான் இதுவரை ஒருவருக்கும் மனைவியல் லள்" என்று மிருதுவான வசனங்களால் தன்னுடைய விருப்பத்தை அவருக்குத் தெரிவித்தாள். அப்படியே அம்முனிவரும் பிரம தத்தன் என்ற பெயரையுடைய ஒரு புத்திரனை அவளுக்கு அளித் தார். அந்தப் பிரமதத்தன் க்ஷத்திரிய ஜாதியளான சோமதையிடம் பிறந்தவனாதலால் அரசனாகி, தேவேந்திரன் தேவலோகத்தை ஆள் வதுபோல், காம்பிலி என்ற பெயரையுடைய வளம் பொருந்திய நக ரத்தை ஏற்படுத்தி, அதில் மிகுந்த வைபவத்துடன் அரசுபுரிந்து வந்தான்.

குசநாபனென்ற அரசன் உத்தமனான பிரமதத்தனை யழைத்து, அவனுக்குத் தன்னுடைய நூறு புத்திரிகளையும் விவாகம் செய்து கொடுத்தான். பிரம்மதத்தன் அப்பெண்மணிகளை ஒவ்வொருவராகப் பாணிக்ரஹணம் செய்து கொண்டான். அவனால் தொடப்பட்ட வுடனே அரசனுடைய நூறு புத்திரிகளும் அவர்களுடைய அங்கங் களின் கோணல்களும், அதன் காரணமாக ஏற்பட்ட மனத்துயரமும் நீங்கினவர்களாய், முன்னிலும் சிறந்த அழகுடன் பிரகாசித்தார்கள். வாயுபகவானுடைய தீய செய்கையிலிருந்து அவர்கள் விலகிச் சுகமா யிருப்பதைக் கண்டு, குசநாபன் அடங்காத மகிழ்ச்சியை யடைந் தான். சோமதை என்ற கந்தர்வஸ்திரீயும் தன்னுடைய குமாரனை யும், தன்னுடைய நூறு மருமக்கள்மார்களையும் மிக்க ஆவலோடு தழுவிக்கொண்டு, அளவிடமுடியாத மகிழ்ச்சியை யடைந்தாள்.

---

## 78. சௌனகர்.

---



இதன் ஆரம்பத்தில் கண்டுள்ள வம்சாவளியின் பிர காரம் சௌனகர் பிருகுரிஷியின் வம்சத்தி லுதித்தவர். இது மகாபாரத விருத்தாந்தம். ஆதிபர்வத்திலுள்

ளது. ஆனால், அநுசாஸனபர்வத்தில் சௌனகருடைய முன்னோர்கள்வரலாறுவேறுவிதமாய் இருக்கின்றது. இவைகள் கல்பபேதங்களினால் ஏற்பட்ட வித்தியாசமென்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆகிலும், சௌனகருடைய முன்னோர்களின் வரலாறு அநுசாஸன பர்வத்தில் கண்ட பிரகாரம் இதனடியில் கண்டிருக்கிறது:—

மனுவினுடைய அனேக புத்ரர்களில் சர்யாதி என்பவர் ஒருவர். அவருடைய வம்சத்தில் "ஹேஹயன்" என்ற அரசன் ஜனித்தான், அவனுக்கு "விடஹவ்யன்" என்ற மற்றொரு பெயரு முண்டு. விடஹவ்ய ராஜனுடைய நூறு புத்ரர்களும், காசிதேசத்து அரசனான "ஹரியாச்வன்" மீது படையெடுத்து, யுத்தத்தில் அவனைக் கொன்றார்கள். பிறகு, ஹரியாச்வனுடைய புத்ரன் "சுதேவன்" காசிதேசத்துக்கு அரசனாக மகுடாபிஷேகம் செய்யப்பட்டான். அவன் மிகவும் உத்தமனாயும், தேஜஸுடன் கூடியவனாயும், நீதியாய் இராஜரீகம் செய்துவந்தான். அப்பொழுது விடஹவ்யனுடைய புத்ரர்கள் மறுபடியும் காசியின் மீது படையெடுத்து, சுதேவனை யுத்தத்தில் ஜயித்தார்கள். சுதேவனுக்குப் பிறகு, "திவோதாஸன்" அரசனானான். அவன் மிகவும் பராக்ரமமுள்ளவன். இந்திரன் கட்டளைப் பிரகாரம், விடஹவ்யனுடைய புத்ரர்களால் இடைஞ்சல் நேராமலிருக்கும் பொருட்டு, 'வாராணசி' என்ற தன்னுடைய பட்டணத்தின் கோட்டைகளை நன்றாய்க் கட்டிப் பலப்படுத்தினான். நீர்வளம், நிலவுளம் பொருந்திய தன்னுடைய விசாலமான ராஜ்யத்தைத் திவோதாஸன் நீதியாய் அரசாண்டு வருங்காலத்தில், ஹேஹயர்கள் மறுபடியும் படையெடுத்து வந்தார்கள். திவோதாசன் அவர்களோடு அநேக வருஷங்களாக யுத்தம் செய்து, தனது சேனைகளையெல்லாம் இழந்து, மிகுந்த கஷ்டத்துக்குள்ளானான். அவன், சேனைகளையுமிழந்து, பொக்கிஷத்திலும் யாதொரு ஐவேஜுமில்லாமல் தன்னுடைய நகரத்தை விட்டு ஓடிப்போனான். அவன் மிகுந்த ஞானத்தையுடைய தன்னுடைய ஆசாரியரான பரத்வாஜமுனிவரிடம் சென்று, அவரைச் சரணமடைந்தான். அவர் அவ்வரசனைநோக்கி, "உனக்கு என்ன சங்கடம் நேர்ந்தது. எதுவாயிருந்தாலும் சரி. எப்படியாவது உனக்கு அனுகூலம் செய்கிறேன்" என்றார். திவோதாஸன், விடஹவ்யனுடைய புத்ரர்களால் தன்னுடைய புத்ரர்கள் முதலிய பரிவாரங்கள் யாவும் மாண்டுபோய், தான் மாத்திரம் தனியே

நாட்டைவிட்டு ஓடிவந்த சங்கதியை அவருக்குத் தெரிவித்தான். பரத்வாஜர் அவனுக்குத் தேறுதல் சொல்லி, "நான் உனக்காக ஒரு யாகம் செய்கின்றேன். அதன் மூலமாய் உனக்கு உத்தமமான ஒரு புத்ரன் பிறப்பான். அவன் ஹேஹயர்களை யெல்லாம் ஜயிக்க வல்லவனா யிருப்பான்", என்றார்.

அப்படியே அவர் ஒரு யாகம் செய்தார். அதன் பயனாகத் திவோதாசனுக்கு "ப்ரதர்த்தனன்" என்று ஒரு குமாரன் பிறந்தான். அவன் பிறந்த உடனேயே பதின்மூன்று வயது பாலகனாய் வளர்ந்து, எல்லா வேதங்களையும் கற்று, தனுர் வேதத்திலும் மிக்க தேர்ந்தவனானன். பரத்வாஜ முனிவர் தம்முடைய யோகசக்திகளால் அந்த ராஜகுமாரனுடைய தேகத்துக்குள் பிரவேசித்தார். உலகத்தின் வஸ்துக்களிலுள்ள சக்திகளை யெல்லாம் ஒன்றாய்த் திரட்டி, பரத்வாஜர், பிரதர்த்தனனது தேகத்தில் பிரவேசிக்கச் செய்தார். பிரதர்த்தனன் பிரகாசமான கவசத்தைப் பூண்டு, வில்லைக் கையில் ஏந்தி, கவிஞர்களும், தேவர்களும் தன்னைப் புகழ்ந்து பாடவும், பாலசூர்யனைப் போல் பிரகாசித்து விளங்கினன். அவன் தன்னுடைய ரதத்தில் ஏறிக்கொண்டு, இடுப்பில் வாளாயுதம் கட்டித் தொங்க, அக்னியைப் போல் பிரகாசித்தான். பிரதர்த்தனன் இவ்வளவு விமரிசையுடன் தன் தகப்பனிடம் சென்றான். திவோதாசன் கண்டு, அடங்காத ஆனந்தம் கொண்டான். தன்னுடைய பகைவர்கள் முன்னமேயே கொல்லப்பட்டதாக நினைத்தான். அரசன் தன் மகனை இளவரசாக நியமித்தான். பிறகு, விடஹவ்யனுடைய புத்ரர்களை யுத்தத்தில் கொல்லும்படி தன் மகனை ஏவினன். பிரதர்த்தனன் விடஹவ்யர்களுடைய நகரத்துக்குப் படையெடுத்துச் சென்றான். அவர்களும் பிரதர்த்தனனுடைய தேர்ச் சக்கரங்களின் ஒலிகளைக் கேட்டு, தாங்களும் யுத்தசன்னத்தர்களாகி, தங்களுடைய ரதங்களில் ஏறிக்கொண்டு, தங்கள் நகரத்தைவிட்டு வெளியே வந்தார்கள். பிரதர்த்தனனைக் கண்டு, பராக்ரமசாலிகளான விடஹவ்ய ராஜனுடைய புத்ரர்கள், அவன்பேரில் ஏராளமான பாணம் தொடுத்தார்கள். பிரதர்த்தனன் அவர்களுடைய பாணங்களை யெல்லாம் கண்டித்துவிட்டு, தன்னுடைய கூர்மையான பாணங்களால், விடஹவ்யராஜன் புத்ரர்களை யெல்லாம் கொன்றான். பிறகு, விடஹவ்யராஜன், தன் புத்ரர்கள், சேனைகள் முதலிய பரிவாரங்கள் யாவையும் இழந்து, பிருகு மகரிஷியின்

ஆச்ரமத்துக்குச் சென்று, அவரைச் சரணமடைந்தான். அவரும் அவனுக்கு அபயமளித்தார். பிரதர்த்தன ராஜனும் விடஹவ்யனைத் துரத்திச் சென்றான். பிரதர்த்தனன் பிருகு முனிவரின் ஆச்ரமத்துக்குச் சென்று, அவருடைய சிஷ்யர்களைப் பார்த்து, "உங்களுடைய ஆசாரியரான மகாமுனிவரை நான் பார்க்கவேண்டும். என் வரவை அவருக்குத் தெரிவியுங்கள்," என்றான். வந்தவன் பிரதர்த்தனன் என்று அறிந்துகொண்டு, பிருகு முனிவர், தாமே ஆச்ரமத்தைவிட்டு வெளியே வந்தார். அவ்வரசனுக்குத் தக்க மரியாதைகள் செய்தார். ரிஷி, அரசனை "வந்தகாரியம் என்ன வென்று" கேட்க, அப் பிரதர்த்தனனும் தன் சங்கதியைச் சொன்னான். பிறகு, அம் முனிவரைப் பார்த்து, "ஓ! பிராமணோத்தமரே! விடஹவ்யராஜன் இங்கே வந்திருக்கிறான். அவனை என்னிடத்தில் கொடுத்துவிடும். அவனுடைய புத்ரர்கள் என் குலத்தை நாசம் செய்திருக்கிறார்கள். காசி தேசத்தின் பொருள்களை யெல்லாம் அழித்துச் சேதப்படுத்தி யிருக்கின்றார்கள். கர்வமுள்ளவர்களான இவ்வரசனுடைய புத்ரர்களை யெல்லாம் நான் கொன்றுவிட்டேன். இவ் வரசனையும் நான் கொன்று, என் தகப்பனுக்குரிய கடனைத் தீர்த்துக் கொள்கின்றேன்" என்றான். அதற்கு பிருகு முனிவர், விடஹவ்யனிடத்துள்ள கருணையினால், "இவ் வாச்ரமத்தில் க்ஷத்திரியர் ஒருவரும் இல்லை. இவ்விடத்திலிருப்பவர்கள் எல்லாம் பிராமணர்கள்தான்" என்று மறுமொழி புகன்றார். இவ்வாறு அவர் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, பிரதர்த்தனன் "அது சத்யமான வசனமாக இருக்கவேண்டும்" என்று மதித்து, அம் முனிவரை மெதுவாய் வணங்கி, சந்தோஷத்துடன் அவரைப் பார்த்து, "இதனால் நான் கீர்த்திப் பிரதாபத்தைப் பெற்றேன். ஏனெனில், இவ் வரசன் க்ஷத்திரியன் என்ற வகுப்பையே விட்டு பிராமணனாக மாறுவதற்கு என்னுடைய பராக்ரமமே காரணமாகின்றது. ஆதலால், நீர் எனக்குப் போக விடையளிக்க வேண்டும். எனக்கு மங்களமுண்டாகும்படி ஆசீர்வதிக்க உம்மை வேண்டுகின்றேன்" என்று சொல்லி, அவரிடத்து விடை பெற்றுக்கொண்டு, தன் நகரம் போய்ச் சேர்ந்தான்.

விடஹவ்ய ராஜனும் பிருகு முனிவருடைய மகிமையால், க்ஷத்திரியன் என்ற பதவியிலிருந்து மாறி, சிறந்த பிராமண பதவியை யடைந்தார். அதேபிரகாரம் சகல வேதங்களிலும் பாண்டித்ய முடை

யவரானார். விடஹவ்யனுக்கு இந்திரனைப்போல் அழகுள்ள 'கிருத்ஸமதர்' என்ற புத்ரர் பிறந்தார். இவர் மிகவும் சிரேஷ்டமான ரிஷி. "கிருத்ஸமதர் எங்கே யிருக்கின்றாரோ, அவரைப் புண்யசீலர்களான உத்தமர்கள் எல்லோரும் மிக்க மரியாதையுடன் கொண்டாடுகிறார்கள்" என்று சுருதியிலும் வாக்கியங்கள் ஏற்பட்டிருக்கின்றன. கிருத்ஸமதருடைய புத்ரர் 'சுதேஜஸ்' என்ற ரிஷி. அவருடைய புத்திரர் 'வர்ச்சஸ்'. அவருடைய புத்ரர் 'விஹவ்யர்'. அவருக்குப் புத்ரர் 'விதத்யர்.' அவருக்குப் புத்ரர் 'ஸத்யர்'. அவருக்குப் புத்ரர் 'சந்தர்'. அவருடைய புத்ரர் 'சிரவஸ்'. அவருடைய புத்ரர் 'தமர்'. அவருடைய புத்ரர் 'பிரகாசர்'. அவருடைய புத்ரர் 'வாஜீந்திரர்'. அவருடைய புத்ரர் 'பிரமதி' பிரமதிக்கு 'கிருதாசீ' என்ற அப்ஸர ஸ்திரீயிடத்துப் பிறந்தவர் 'ருரு ரிஷி.' ருருவுக்கு 'பிரமத்வாரா' என்ற அவர் மனைவியிடத்துப் பிறந்தவர் 'சுனகர்' என்ற ரிஷி. சுனகருடைய புத்ரர் 'சௌனக ரிஷி.' இவ்வாறு 'விடஹவ்யரும்', அவருடைய வம்சஸ்தர்களும் பிருகு மகரிஷியின் கிருபையால் பிராமணர்களாயும், மகரிஷிகளாயு மானார்கள்.

சௌனகர் நைமிசாரண்யத்தி லிருந்துகொண்டு, பன்னிரண்டு வருஷ காலங்களாக ஒரு பெரிய யாகத்தைச் செய்தார். அந்த யாகத்தில் சௌதி முனிவர் வந்திருந்து, இதிஹாஸ புராணங்களை நைமிசாரண்ய வாசிகளுக்கு எடுத்துரைத்தார்.

சௌனகர் ஒரு க்ருஹ்ய ஸூத்ரத்துக்குக் கர்த்தா.

---

## 79. ச்யவனர்.

---



இவர் ப்ருகு மஹரிஷியின் புத்ரர். இவருடைய பிறப்பின் மகிமையும், விருத்தாந்தமும், ப்ருகு மஹரிஷியினுடைய சரித்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மனுவினுடைய (1) குமாரத்தியாகிய ஆருஷி என்பவள் இவருடைய பத்னி. அவர்களுடைய புத்ரர் ஔர்வ மஹரிஷி.

(1) மஹாபாரதம்—ஆதிபர்வம்.

எப்பொழுதும் (1) திடமான தவமகிமை பெற்ற ச்யவன மகரிஷி 'உத்வாஸம்' என்னும் விரதத்தைக் கொஞ்சகாலம் அனுஷ்டிக்க வேண்டுமென்று விருப்பங் கொண்டார். கர்வம், கோபம், சந்தோஷம், துக்கம் இவைகளை விட்டவராய், அந்த விரதத்தை அனுஷ்டிப்பதாகச் சங்கல்பித்துக்கொண்டு, உத்வாஸத்துக்கு ஏற்பட்டிருக்கிற விதிகளின் பிரகாரம் பன்னிரண்டு வருஷங்கள் அனுஷ்டித்துவர ஆரம்பித்தார். பூமியிலும், ஜலத்திலும் வாழும் எல்லாப் பிராணிகளும் இவருடைய குற்றமற்ற செய்கையினால் இவரிடத்து அளவில்லாத அன்பும், நம்பிக்கையும் பாராட்டின. அவர் எல்லாரிடத்தும் இருந்த இன்பமான நடத்தையினால் ஒரு சந்திரன்போல் விளங்கினார். அவர் சகல தேவர்களையும் வணங்கி, யாதொரு பாபமுமில்லாமல் தன்னைச் சுத்தி செய்துகொண்டு, கங்கையும், யமுனையும் சேருகிற இடத்தில் ஜலத்திற்குள் பிரவேசித்து, அங்கே ஜீவனில்லாத ஒரு மரத்தூண்போல் நின்றார். அந்த இரண்டு நதிகளும் சேருகிற இடத்தில் ஜலமானது வாயுவேகமாகச் சென்றுகொண்டிருந்தது. அந்த வேகத்தைச் சகித்துக்கொண்டவராய், தம் சிரஸை அதன்பேரில் வைத்துக்கொண்டிருந்தார். ஆகிலும், கங்கை, யமுனை, இன்னும் பிரயாகையில் சேருகிற மற்ற நதிகள், ஏரிகள் ஆகிய இவைகளினுடைய ஜலங்களெல்லாம் அந்த ரிஷியை வருத்தாது, அவரைச் சுற்றிச் சென்றன. மரத்தூண்போல் இருந்த அந்த ரிஷி சில சமயங்களில் தண்ணீரில் படுத்துக்கொண்டு சுகமாகத் தூங்குவார். சில சமயங்களில் நேராக நிற்பார். நீர்வாழும் ஜெந்துக்களுக்கெல்லாம் அவர் மிகுந்த அன்பராக இருந்தார். கொஞ்சமேனும் பயமென்பதில்லாமல் அந்த ஜெந்துக்களெல்லாம் அவருடைய உதடுகளை முகர்வது வழக்கம். இவ்விதமாக வெகுகாலம் கழிந்தது. ஒருநாள் அநேகம் செம்படவர்கள் அங்கு வந்தார்கள். தேகபலமும், தைரியமும் உடையவர்களாயும், நன்றாகப் பருத்து விசாலமான மார்புகள் உடையவர்களாயும், ஜலசஞ்சாரத்துக்குப் பயப்படாதவர்களாயுமுள்ள அந்தச் செம்படவர்கள் ரிஷியிருந்த இடத்தில் மீன் பிடிப்பதற்காகத் தங்களுடைய வலைகளை விசாலமாகப் பரப்பிக் கட்டினார்கள். எல்லோரும் தண்ணீரில் இறங்கி, தங்களுடைய பெரிய வலையை முழுபலத்துடன் நிற்பயமாய் இழுத்தார்கள். அப்படி இழுத்ததில், அந்த வலையில் ஏராளமான மீன்கள், மற்ற நீர்வாழும் ஜெந்துக்கள் ஆகிய இவைகள் சகி

தம் ப்ருகு மகரிஷியின் புத்ரராகிய ச்யவனரும் இலகுவாக இழுக்கப் பட்டார். அவருடைய தேகம் ஆற்றுப்பாசியால் மூடப்பட்டிருந் தது. அவருடைய தாடியும், சடையும் பச்சைநிறமா யிருந்தன. அவருடைய தேகம் முழுவதும் சிப்பிகளும், சங்குகளும் படிந்திருந் தன. வேதஞானியான அந்த ரிஷி தங்களால் ஜலத்திலிருந்து இழுக் கப்பட்டா ரென்பதைப் பார்த்த செம்படவரெல்லோரும் கைகூப்பி னவர்களாய் நின்று, பூமியில் விழுந்து, அவரை அடிக்கடி பணிந்து வணங்கினார்கள். வலையிலிருந்து இழுக்கப்பட்ட பயத்திலும், வருந்தத்திலும், தரைக்குக் கொண்டுவரப்பட்டதிலும் வலை யில் அகப்பட்ட மீன்களெல்லாம் தங்களுடைய ஜீவன்களை இழந்தன. அந்தத் தவசிரேஷ்டர் ஏராளமான மீன்கள் மடிவதைக் கண்டு, மிக வும் பரிதாபமடைந்து, அடிக்கடி பெருமூச்சு விட்டார். செம்படவர் கள் ரிஷியை நோக்கி, "நாங்கள் அறியாமையினால் இப் பாவத்தைச் செய்துவிட்டோம். எங்கள்பேரில் கிருபைபுரிய வேண்டும். தங்கள் மனோபீஷ்டப்படி நடக்கச் சித்தமா யிருக்கிறோம்" என்றார்கள். மீன் குவியல்களின் மத்தியிலிருந்த ச்யவனர் அச்செம்படவர்களை நோக்கி, "என்னுடைய விருப்பம் இன்னதென்று சொல்லுகிறேன்; அதைக் கவனமாய்க் கேளுங்கள். நான் இந்த மீன்களுடன் பிராணனை விடு வேன்; அல்லது, அவைகளுடன் என்னையும் விற்றுவிடுங்கள். நான் வெகுகாலம் இவைகளுடன் ஜலத்தில் வசித்திருக்கிறேன். இச் சம யத்தில் அவைகளைத் தள்ளிவிட எனக்கு மனமில்லை" என்றார். இச் சொற்களைக் கேட்ட செம்படவர்கள் மிகவும் பயமடைந்தவர்களாய், நகுஷ மகாராஜனிடத்துச் சென்று, நிகழ்ந்தனவெல்லா மவரிடத் துச் சொன்னார்கள். உடனே நகுஷராஜன், தன்னுடைய மந்திரிகளும், புரோகிதர்களும் தன் பின்னே வர, ச்யவன ரிஷி யிருந்த யிடத்துக் குச் சென்றான். கிரமப்படி தன்னைச் சுத்தி செய்துகொண்டு, அரசன் கூப்பின கைகளுடன் ஏகசித்தனாய், ச்யவனரென்ற மகாத்மாவுக்கு முன் போய் நின்றான். அரசனுடைய புரோகிதர் கிரமப்படி அந்த ரிஷிக்கு வந்தனை வழிபாடுகள் செய்தார். நகுஷன் அவரை நோக்கி, "ஓ! ஸ்வாமி! தங்களுக்கு எது பிரியமோ, அதைத் தெரிவிக்கவேண் டும்; எது எவ்வளவு சிரமமான காரியமாய் இருப்பினும், தங்கள் உத் தரவுப்படி நிறைவேற்றச் சித்தனா யிருக்கிறேன்" என்றான்.

ச்யவனர்:—“மீன் பிடித்து ஜீவனம் செய்யும் இம் மனிதர்கள் மிகவும் சிரமத்தினால் களைத்திருக்கிறார்கள். நான் இம் மீன்கள் சந்தம் பெறக்கூடிய கிரயத்தை நீ இவர்களுக்குக் கொடுப்பாயாக.”

நகுஷன்:—“தங்கள் உத்தரவுப் பிரகாரம் தங்களுடைய கிரயத்துக்காக ஆயிரம் நாணயங்கள் இந்த நிஷாதர்கள் பெற்றுக் கொள்ளட்டும்.”

ச்யவனர்:—“ஆயிரம் நாணயங்கள் எனக்குச் சரியான விலையாகாது. அந்த விஷயம் உன்னுடைய இஷ்டத்தைப் பொறுத்தது. அந்த விலை இன்னதென்று நீ உன் புத்தியால் அறிந்துகொண்டு, ந்யாயமான விலையைக் கொடுப்பாயாக.”

நகுஷன்:—“ஓ! பிராம்மணோத்தமரே! இந்த நிஷாதர்களுக்கு இலக்ஷம் நாணயங்கள் கொடுக்கிறேன். அது தங்களுக்குச் சம்மதியா?”

ச்யவனர்:—“ஓ! ராஜோத்தமா! இலக்ஷம் நாணயங்களால் நான் வாங்கப்படுவது தகுதியன்று; உன்னுடைய மந்திரிகளுடன் யோஜித்துச் சரியான கிரயத்தை நீ இவர்களுக்குக் கொடுப்பாயாக.”

நகுஷன்:—“என்னுடைய புரோகிதர் இந்த நிஷாதர்களுக்குக் கோடி நாணயங்கள் கொடுக்கட்டும்; இது தகுதியான விலை; அல்லாவிட்டால், இன்னும் ஜாஸ்தியாகவே அவர்கள் பெற்றுக் கொள்ளட்டும்.”

ச்யவனர்:—“கோடி நாணயங்கள் கொடுத்தாவது, அல்லது, அதற்கு அதிகமான நாணயங்கள் கொடுத்தாவது நான் வாங்கப்படுவது என்பது எனக்கு இஷ்டமில்லை. எது சரியோ, ந்யாயமானதோ, அந்த விலை கொடுப்பாயாக. அதுவிஷயமாகப் பிராமணர்களிடம் யோசனை செய்.”

நகுஷன்:—‘‘என் ராஜ்யத்தில் பாதி, அல்லது, ராஜ்யம் முழுவதுமே இந்த நிஷாதர்கள் பெற்றுக் கொள்ளட்டும். அது தங்களுக்கு ஏற்ற விலை என்று நினைக்கிறேன். தங்களுடைய சம்மதி என்ன?”

ச்யவனர்:—“உன்னுடைய ராஜ்யத்தில் பாதியாவது, அல்லது, முழு ராஜ்யமாவது கொடுத்து என்னைக் கிரயம் பெறுவது எனக்கிஷ்டமில்லை. எது சரியானதோ, அந்த விலையை இவர்களுக்குக் கொடுப்பாயாக. அதுவிஷயமாக ரிஷிகளை யோசிப்பாயாக.”

ரிஷியினுடைய வார்த்தையைக் கேட்டு, நகுஷன் மிகவும் துக்கத்தால் வருந்தினன். தன்னுடைய புரோகிதருடனும், மந்திரிகளுடனும் இதுவிஷயத்தைப் பற்றி யோசித்தான். அப்பொழுது, பசுவினிடத்து ஜெனித்தவரும், பழங்களையும், கிழங்குகளையும் தின்று, காட்டில் வசிப்பவருமான ஒரு தவசியானவர் நகுஷனிடத்திற்கு வந்தார். அந்தப் பிராமணோத்தமர் அரசனைப் பார்த்து, "உனக்கும், மகரிஷிக்கும் திருப்தியாகும்படியான காரியத்தைச் செய்கிறேன். நான் எப்பொழுதும் பொய் சொல்லுகிறதில்லை. பரிகாசத்துக்காகக் கூடச் சொன்னதில்லை. நீ கொஞ்சமேனும் யோசிக்காமல், நான் சொல்லுகிற படி செய்யவேண்டும்" என்று சொன்னார்.

நகுஷன் "இந்த ச்யவன மகரிஷிக்காக என்ன விலை கொடுக்க வேண்டுமென்பதைச் சொல்லவேண்டும். இக் கஷ்டத்தினின்றும் என்னையும், என்னுடைய ராஜ்யத்தையும், என்னுடைய வம்சத்தையும் ரக்ஷிக்கக் கோருகிறேன். ச்யவனராகிய இந்த மகாத்மா கோபம் கொண்டால், மூன்று உலகங்களையும் அழித்துவிடுவார். அப்படி இருக்க, கொஞ்சமேனும் தவசக்தியில்லாதவனும், ஆயுதவலியால் மாத்திரம் ஜீவிக்கிறவனுமான நான் அவர்முன் எம்மாத்திரம்? என்னுடைய மந்திரிகள், புரோகிதர்கள் முதலியவர்களுடன் துக்கசாகரத்தில் அமிழ்ந்திருக்கிற எனக்குத் தாங்கள் ஒரு தெப்பமாக இருந்து ரக்ஷிக்கவேண்டும். அந்த ரிஷிக்காக என்ன கிரயம் கொடுக்கவேண்டுமென்பதை நீங்கள் சொல்லவேண்டும்" என்று கேட்டான்.

அதற்கு அந்த ரிஷி அரசனுக்கும், அவனுடைய பரிவாரங்களுக்கும் மனது சந்தோஷிக்கும்படியான இதனடியில் கண்ட வார்த்தைகளைச் சொன்னார். "ஓ! அரசனே! நான்கு வருணங்களிலும் பிராமணர்கள் முதன்மையானவர்கள். அவர்களுக்கு உலகத்திலுள்ள எந்த உயர்ந்த வஸ்துவும் சரியான விலையாகமாட்டாது.. அதுபோல், பசுக்களும் விலைமதிக்க முடியாதவைகள். ஆகலால், ஒரு ரிஷிக்கு ஒரு பசுவைச் சரியான விலையாக நீ மதிக்கக் கடவாய்." அந்த ரிஷியினுடைய இந்த வார்த்தையைக் கேட்டு, அரசன் தன் புரோகிதர்களுடனும், மந்திரிகளுடனும் ஆனந்தத்தை யடைந்தவனாய், ச்யவன மஹரிஷியிடத்திற்குச் சென்றான்.

நகுஷன் ச்யவன மஹரிஷியைப் பார்த்து, "தாங்கள் எழுந்திருப்பீர்களாக. தங்களை ஒரு பசுவைக் கிரயமாகக் கொடுத்து வாங்கப்

பட்டிருக்கிறது. இதுதான் தங்களுக்குச் சரியான விலை என்று நான் மதிக்கிறேன்'' என்றான்.

ச்யவனர், "ஓ! அரசனே! நீ என்னைச் சரியான கிரயத்துக்கு வாங்கியிருக்கிறாய். இந்த உலகத்தில் பசுக்களுக்குச் சமதியான தனம் கிடையாது. ஓ! அரசனே! பசுக்களைப் பற்றிப் பேசுவதும், அவைகளைப் பற்றிப் பிறர் பேசக் கேட்பதும், அவைகளைத் தானம் செய்வதும், அவைகளைப் பார்ப்பதும் ஆகிய இவைகள் மிகவும் மெச்சத் தக்கதும், மிகவும் மங்களகரமானதும், பாபங்களைப் போக்குவதுமான செய்கைகள். ஒருவனுடைய தேகத்துக்கு ஆதாரமாக இருக்கின்றன பசுக்கள் குற்றமற்றவைகள். பசுக்கள் ஹவிஸ்ரூபமான உயர்ந்த ஆகாரத்தைத் தேவர்களுக்குக் கொடுக்கின்றன. 'ஸ்வாஹா', 'வஷட்' என்ற பரிசுத்தமான மந்திரங்கள் பசுக்களிடத்தே நிலைபெற்றிருக்கின்றன. பசுக்களே யாகங்களை நடத்தும் முதல் கருவிகளாக இருக்கின்றன. அவைகளே யாகமூர்த்திக்கு ஒரு வாய்போல் விளங்குகின்றன. அவைகள் மிகவும் ருசியும், பலத்தைக் கொடுக்கும்படியான அமுதத்தை அளிக்கின்றன. அவைகள் உலகத்தார் எல்லோராலும் ஆராதிக்கப்பட்டு, அமுதத்துக்குக் காரணபூதமாயிருக்கின்றன. பூமியில் பசுக்கள் உருவத்திலும், சக்தியிலும் அக்னிக்குச் சமானமாயிருக்கின்றன. பசுக்கள் உலகத்திலுள்ள எல்லா ஜீவன்களுக்கும் சகல மங்களத்தையும், ஆனந்தத்தையும் கொடுக்கின்றன. எந்தத் தேசத்தில் பசுக்கள் ஆதரிக்கப்பட்டு, நிர்ப்பயமாக ஜீவிக்கின்றனவோ, அத் தேசமானது மிகுந்த அழகுடன் பிரகாசிக்கிறது. சகலவிதமான பாபங்களினின்றும் விலகி, பரிசுத்தத்தை அடைகிறது. பசுக்கள் ஸ்வர்க்கத்தை அடைவதற்கு மச்சுப்படிகள்போல் விளங்குகின்றன. ஸ்வர்க்கலோகத்திலேயே பசுக்களை வணங்குகிறார்கள். அவைகள் எல்லா வஸ்துக்களையும், மனோபீஷ்டங்களையும் கொடுக்கக்கூடிய தேவதைகளாக யிருக்கின்றன. பசுக்களைப்போல் உயர்ந்தவை இவ்வுலகத்தில் யாதொன்றுமில்லை'' என்று சொன்னார்.

நிஷாதர்கள், "ஓ! மகரிஷியே! தாங்கள் எங்களைக்கடாக்ஷித்தும், எங்களுடன் சம்பாஷித்து மிருக்கிறீர்கள். சாதுக்களுடன் ஏழு வார்த்தைகள் சம்பாஷித்தால் அவனால் சிநேகம் ஏற்படும் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. ஆதலால், தேவரீர் எங்களிடத்தில் அருள் புரியவேண்டும். எவ்வாறு யாககுண்டத்தில் பிரகாசிக்கும் அக்னி

யானது அதில் ஆஹுதி செய்யப்படும் நெய்யை எல்லாம் சாப்பிட்டு விடுகிறதோ, அதுபோல், தர்மாத்மாவாயும், தபோசக்தி நிறைந்தவராயும் உள்ள தாங்கள் மனிதர்களுக்குள் ஒரு அக்னிச்சுவாலை போல் விளங்குகின்றீர்கள். ஓ! ஞானமூர்த்தியே! நாங்கள் உங்களைத் துதித்துச் சரணம் அடைகின்றோம். தாங்கள் இந்தப் பசுவை எங்களிடத்தில் தானமாகப் பெற்றுக்கொண்டு, எங்களை ரக்ஷிக்கவேண்டும்'' என்றனர்.

ச்யவனர், ''ஏழையாயிருப்பவன், துக்கத்திலிருப்பவன், ஒரு தவசி, கொடிய விஷமுள்ள பாம்பு ஆகிய இவர்களுடைய கண்கள், அக்னியானது காற்றினுடைய உதவிகொண்டு உலர்ந்த புற்குவியல்களை எப்படி எரிக்கின்றதோ, அதுபோல், எந்த மனிதனைக் கோபமாய் நோக்குகின்றனவோ, அவனை, அவன் வம்சத்துடன் அற்றுப் போம்படியாய் அழிக்கின்றன. நீங்கள் எனக்குத் தானமாகக் கொடுக்க விரும்புகிற பசுவை நான் அங்கீகரிக்கிறேன். ஆதலால், ஏ! செம்படவர்களே! நீங்கள் சகலபாபங்களினின்றும் விடுபட்டவர்களாகி, உங்களால் பிடிக்கப்பட்டிருக்கின்ற இந்தமீன்களுடன் சுவர்க்கலோகத்தை அடைவீர்கள்'' என்றார்.

அந்த ரிஷி அவருடைய மிக்க தவசக்தியால் சொன்ன வார்த்தைகளின் காரணமாகச் செம்படவர்களும், மீன்களும் தேவலோகத்திற்குச் சென்றன. இதைப் பார்த்து, நகுஷன் மிகுந்த வியப்பை அடைந்தான். அதற்குப் பிறகு, ச்யவன மஹரிஷியும், பசுவிடத்துப் பிறந்த ரிஷியும் நகுஷராஜனை ஆசீர்வதித்து, அவனுக்கு அநேக வரங்களை அளித்தார்கள். நகுஷராஜன் சந்தோஷித்தவனாய், ''மிகவும் திருப்தி அடைந்தேன்'' என்று சொல்லிக்கொண்டு, தேவராஜனாகிய இரண்டாவது இந்திரனைப்போல் தர்மத்தில் தனக்கு மனோதிடம் கிடைப்பதாகிய வரத்தைப் பெற்றுக்கொண்டான். அவன் கோரிய வரத்தை அந்த ரிஷிகள் அவனுக்குக் கொடுத்தார்கள். அவன் அவர்களைப் பயபக்தியுடன் வணங்கினான். ச்யவனர் தாம் சங்கல்பித்த காரியம் நிறைவேறினவராய்த் தம்முடைய ஆச்ரமத்துக்குச் சென்றார். பசுவிடத்துப் பிறந்த மகரிஷியும் தம்முடைய இருப்பிடத்துக்குச் சென்றார். நகுஷராஜனும் பிராமணர்களும், மந்திரிகளும், தன் நகரத்தார்களும் புடைசூழ, தன் நகரத்துக்குச் சென்றான். இதனால் உத்தமர்களுடைய தரிசனமும், அவர்களுடன் சேர்ந்து இருத்தலும், வாழ்தலும் ஆகிய இவைகள் மிகுந்த அற்பர்களுக்குக்கூட

உயர்ந்த க்ஷேமத்தையும், பதவியையும் கொடுக்கின்றன என்பது நன்கு விளங்குகின்றது.

ச்யவன மகரிஷி, (1) தம்முடைய வம்சத்தார்களில் ஒருவன் பிராமணர்களுக்குரிய கருமங்களை விட்டுவிட்டு, க்ஷத்திரிய கர்மங்களை அநுசரிப்பதனால் தம்முடைய வம்சத்துக்கு ஏற்படக்கூடிய ஒரு நிந்தையைத் தம் ஞானதிருஷ்டியினால் அறிந்தார். அதனால் விளையக்கூடிய சாதக பாதகங்களையும், பலத்தையும், பலக்குறைவையும் யோஜித்தும், இம்மாதிரி நிலைமைக்குக் காரணமாய் ஏற்படுவது குசிக வம்சம் என்பதை உத்தேசித்தும் தபோதநமான ச்யவன மகரிஷி குசிகவம்சத்தையே அழித்துவிட வேண்டும் என்று நினைத்தார்.

அப் பிரகாரமே, குசிகராஜனிடத்துச் சென்று, "ஓ! அரசனே! சிலகாலம் உன்னோடு சேர்ந்து வசிக்கவேண்டுமென்று எனக்கு மனமிருக்கிறது" என்று சொன்னார். அதற்குக் குசிகராஜன் ஒப்புக்கொண்டு, அந்த மகரிஷிக்கு ஒரு ஆசனம் போஷித்து, தான் தன் பத்தினி சகிதம் அந்த மகரிஷியின் எதிரில் நின்றான். அவருடைய பாதங்களைக் கழுவ அவருக்கு ஜலம் கொடுத்தான். தன்னுடைய விருந்தினராகிய அந்த ரிஷிக்குச் செய்யவேண்டிய மரியாதைகளையெல்லாம் தன்னுடைய வேலைக்காரர்கள் மூலமாய்ச் செய்வித்தான். அதன்பிறகு, தேன் முதலிய பதார்த்தங்களைக் கிரமப்பிரகாரம் அவருக்கு உண்பதற்குச் சமர்ப்பித்தான். இவ்வாறு அவருக்கு மரியாதை செய்துவிட்டு, குசிகன் மகரிஷியைப் பார்த்து, "தங்களுடைய உத்தரவுப் பிரகாரம் நடக்கச் சித்தமாயிருக்கிறோம். நாங்கள் செய்யவேண்டுமென்பதை இன்னதென்று கட்டளையிடுங்கள். தங்களுக்கு வேண்டுவது எங்களுடைய ராஜ்யமேயாயினும், யாகத்தில் கொடுக்கப்படும் எல்லாப் பதார்த்தங்களேயாயினும், தங்களுக்கு எது பிரியமோ, அதைச் சொல்லுங்கள். தாங்களே இந்த ராஜ்யம் முதலிய எல்லாவற்றிற்கும் நாதனாயிருக்கிறீர்கள். நான் முற்றிலும் தங்களைச் சார்ந்தவன்" என்று சொன்னான். அவ் வார்த்தைகளைக் கேட்டு, அந்த ரிஷி, "ஓ! ராஜனே! உம்முடைய ராஜ்யமாவது, உம்முடைய செல்வமாவது, உம்மிடத்திலுள்ள ஸ்திரீகளாவது, உம்முடைய பசுக்களாவது, அல்லது, யாகத்திற்குரிய பதார்த்தங்களாவது எனக்குத் தேவையில்லை. நான் சொல்வதைக் கேள். உனக்கும், உன்னு

(1) மகாபாரதம்—அநுசாஸனபர்வம்.

டைய பத்னிக்கும் பிரியமிருக்குமானால், ஒரு விரதத்தை அனுஷ்டிக்க ஆரம்பிக்கலாம் என்று நினைக்கிறேன். அந்தக் காலத்தில் நீயும், உன் மனைவியும் கொஞ்சமேனும் களங்கமில்லாதவர்களாய் எனக்குப் பணிவிடைகள் செய்யவேண்டும்'' என்றார். அதற்கு அரசனும், அவனுடைய மனைவியும் சந்தோஷத்துடன் சம்மதித்தார்கள். அவரை அரண்மனையிலுள்ள ஒரு பெரிய அறைக்கு அரசன் அழைத்துச் சென்றான். அந்த அறையை அவருக்குக் காட்டி, ''ஓ! சுவாமி! தாங்கள் இங்கே தங்களிஷ்டம்போல் இருக்கலாம். இதோ தங்களுக்குப் படுக்கை யிருக்கிறது. தங்களுக்கு வேண்டிய எவ்வித சௌகரியத்தையும் கொடுக்க நானும், என் மனைவியும் காத்துக் கொண்டிருக்கிறோம்'' என்றான்.

அப்பொழுது சூரியன் அஸ்தமனமாயிற்று. ரிஷி தனக்கு அன்னபானாதிகள் அளிக்கும்படி அரசனுக்குக் கட்டளையிட்டார். அரசன் ரிஷியை வணங்கி, ''எவ்விதமான ஆகாரம் தங்களுக்குப் பிரியம்?'' என்று கேட்க, அதற்கு ரிஷி, ''எது ஹிதமானதோ, அந்த ஆகாரத்தைக் கொடு'' என்றார். அவ்வாறே அரசன் நல்ல உணவுகளை மகரிஷிக்கு அளித்தான். ரிஷி ஆகாரம் உண்டபின்னர், அரசனையும், அவன் மனைவியையும் நோக்கி, ''நான் நித்திரை செய்ய வேண்டும்'' என்றார். அதன் பிறகு, தமக்காக நியமித்திருந்த படுக்கையில் போய் சயனித்துக்கொண்டார். அரசனும், அவன் மனைவியும் கீழே உட்கார்ந்தார்கள். ரிஷி அவர்களை நோக்கி, ''நான் தூங்கும்பொழுது நீங்கள் என்னை எழுப்பக் கூடாது. நான் தூங்கும் காலமெல்லாம் நீங்கள் விழித்திருந்து, என்னுடைய பாதங்களை அமுக்கிக்கொண்டிருக்கவேண்டும்'' என்றார். குசிகராஜன் கொஞ்சமேனும் மனம் சலிக்காதவனாய், 'அப்படியே செய்கிறோம்' என்று ஒப்புக்கொண்டான். அவ்வாறே அரசனும், அவன் மனைவியும் அந்த ரிஷி சொல்லியபிரகாரம் இராமுழுதும் விழித்திருந்து, அந்த ரிஷிக்கு ஏவல் செய்தார்கள். ரிஷியினுடைய உத்தரவை அவர்கள் பக்திசிரத்தையுடன் கீழ்ப்படிந்து நடந்தார்கள்.

இந்தப் பிரகாரம் அந்த ரிஷி ஒரே முகமாகப் படுத்துக்கொண்டு, கொஞ்சமேனும் அசைவில்லாமல் இருபத்தோருநாள் நித்திரை செய்தார். அக்காலமெல்லாம் அரசனும், அவன் பத்தினியும் கொஞ்சமேனும் மனம் உறக்கமில்லாதவர்களாய், மிகுந்த சந்தோஷத்துடன்

உட்கார்ந்து, ரிஷிக்குப் பணிவிடைகள் செய்தார்கள். இருபத்தோரு நாள் கழிந்தபிறகு, அந்த ரிஷி தானாக நித்திரையிலிருந்து எழுந்தார். அவர்களிடத்து ஒரு சமாசாரமும் சொல்லாமல் வெளியே போய் விட்டார். பசிதாகத்தினால் இளைத்தவர்களாய், ராஜனும், ராஜபத்னியும் அவரைப் பின்தொடர்ந்து சென்றார்கள். ஆனால், அந்த ரிஷியோ, அவர்களைக் கொஞ்சமேனும் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை. அப்பால் சொஞ்சதூரம் போனபிறகு, அவர் தம்முடைய யோகசக்தியினால் அவர்கள் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்து போனார். இதைக் கண்டதும், அரசன் துக்கமுற்றுக் கீழே விழுந்தான். அப்பால் அரசன் மனம் தேறி எழுந்திருந்து, தன மனைவியுடன் அந்த ரிஷியைப் பலவிடங்களிலும் தேடினான். அவ்வாறு தேடி மிகவும் களைத்தவனாய், அரசன் தன் பத்னியுடன் தன் அரண்மனைக்கு வந்து சேர்ந்தான். ஆச்சரியத்தில் முழுகினவனாய், அவன் ஒருவரிடமும் பேசவில்லை. ச்யவனருடைய செய்கையைப்பற்றியே நினைத்துக் கொண்டிருந்தான். அப்பால் ஒன்றும் தோன்றாதவனாய், தன்னுடைய அறைக்குச் சென்றான். அங்கே ச்யவனரிஷி முன்போல் படுக்கையில் படுத்திருப்பதைக் கண்டான். ரிஷியைக்கண்டதும், அவர்கள் மிகவும் வியப்புற்றார்கள். இந்த விநோதக் காட்சியைப் பற்றிப் பலவாறு யோசித்தார்கள். அந்த ரிஷியைக் கண்டதும், அவர்கள் களைப்புநீங்கினவர்களானார்கள். முன்போல் அவர் பக்கத்தி லுட்கார்ந்து, மெதுவாய் அவர் பாதங்களைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். மற்றொரு புறமாகப் படுத்துக்கொண்டு, கொஞ்சமேனும் அசைவில்லாமல் மறுபடியும் இருபத்தோருநாள் ரிஷி சுகமாக நித்திரைசெய்தார்.

ராஜதம்பதிகள் செய்கையினாலாவது, மனதினாலாவது வேற்றுமை யில்லாதவர்களாய், பயபக்தியுடன் பணிவிடை செய்தார்கள். நித்திரையினின்றும் எழுந்து, ரிஷி அரசனையும், அவன் பத்னியையும் பார்த்து, "நீங்கள் என் தேகத்தில் தைலம் தேய்க்கவேண்டும். நான் ஸ்நானம்செய்ய விரும்புகிறேன்" என்றார். பசியும், களைப்பும் மிகுந்தவர்களா யிருந்தும், அவர்கள் ரிஷியின் வார்த்தைக் கிணங்கி, உயர்ந்த தைலத்தைக் கொண்டுவந்து, சுகமாக ரிஷி வீற்றிருக்க, அவர் பேரில் தைலத்தைப் பேசாமல் தேய்த்துக் கொண்டிருந்தார்கள். தவமகிமை பெற்ற ரிஷி போதுமென்று சொல்லவில்லை. ஆயி

னும், ராஜதம்பதிகள் கொஞ்சமேனும் மனச்சஞ்சல மடையவில்லை. திடீரென எழுந்து, ரிஷி ஸ்நான அறைக்குச் சென்றார். ஸ்நானத்துக்கு வேண்டிய ராஜயோக்கியமான சகல சாமான்களும் அங்கேயிருந்தன. அப் பதார்த்தங்களை உபயோகிக்காமல், ரிஷி அந்த நிலைமையிலேயே அவர்கள் கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்துபோனார். அதைப்பற்றி ராஜதம்பதிகளுடைய மனம் தடுமாற்ற மடையவில்லை. மறுபடியும், ரிஷி ஸ்நானம் செய்து, சிம்மாசனத்தின் மீது வீற்றிருப்பதைக் கண்டார்கள். ராஜதம்பதிகள் சந்தோஷித்தவர்களாய், மிகுந்த மரியாதையுடன் அந்த ரிஷிக்கு அன்னம் படைத்தார்கள். ஞானவானான அரசன் கொஞ்சமேனும் மனம் சலியாதவனாய், அன்னம் உண்ணும்படி ரிஷியை வேண்டினான். அதற்கு ரிஷி, "அன்னம் கொண்டு வரட்டும்" என்றார். அரசனும், அவன் ஸ்திரீயும் அவ்விடத்துக்கு அன்னம் கொண்டுவந்தார்கள். நானாவிதமான காய் கறி மாமிச பதார்த்தங்கள், பாயசங்கள், பக்ஷண வகைகள் முதலியன துவர்ப்பு, கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, இனிப்பு, கார்ப்பு ஆகிய அறுவகைச் சுவைகளுடன் நன்றாய்ச் சமைக்கப்பட்டுக் கொண்டுவரப்பட்டன. காட்டில் ரிஷிகள் பிரியமாய்த் தின்னக்கூடிய உணவுகளும், அநேக வகையான மதுரமான பழங்களும் அங்கேயிருந்தன. ரிஷிக்குக் கோபம் வராதிருக்கும் பொருட்டுச் சகலவிதமான நல்ல பதார்த்தங்களையும் சமைத்து வைக்கும்படி அரசன் முதலிலேயே கட்டளையிட்டிருந்தான். அவைகளெல்லாம் சமையல் அறையிலிருந்து கொண்டு வரப்பட்டு, வெள்ளை வஸ்திரங்களால் மூடப்பட்டு, அந்த ரிஷியின் முன் வைக்கப்பட்டன. அவருக்கு ஒரு ஆசனமும் போடப்பட்டது. ஒரு படுக்கையும் விரிக்கப்பட்டது. ஆகினும், அந்த ரிஷி உடனே அப் பதார்த்தங்களிலெல்லாம் நெருப்பு வைத்து, அவைகளை யெல்லாம் சாம்பலாகச் செய்தார். புத்தி மிகுந்த ராஜதம்பதிகள் ரிஷியினுடைய அச் செய்கைக்குக் கோபம் என்பது இல்லாதவர்களா யிருந்தார்கள். ரிஷியோ அவர்கள் முன்னிலையில் தான் இருப்பது தெரியாதபடி மறுபடியும் மறைந்துபோனார். ராஜரிஷியாகிய அரசன், பக்கத்தில் தன் மனைவியுடன் ஒருவார்த்தையும் சொல்லாமல், அன்று இராமுழுதும் நின்ற நிலையிலேயே நின்று கொண்டிருந்தான். மங்களம் நிறைந்த அம் மன்னனுக்குக் கொஞ்சமேனும் கோபம் உண்டாகவில்லை. ஒவ்வொரு நாளும் நானாவிதமான சிலாக்கியமும், சுத்தமுமான உணவுகள், நல்ல படுக்கை, ஸ்நா

னத்திற்கு வேண்டிய ஏராளமான வஸ்துக்கள், நாநாவித வஸ்திரங்கள் முதலியன சேகரிக்கப்பட்டு ரிஷிக்காகச் சித்தமாய் வைக்கப்பட்டிருந்தன.

அரசனுடைய செய்கையில் ச்யவனர் ஒரு குற்றத்தையும் காணுதவராய், மறுபடியும் அரசனிடம் தோன்றி, அரசனை நோக்கி, "நீயும், உன் மனைவியும் ஒரு ரதத்தில் உங்களைக் கட்டிக்கொண்டு, நான் கட்டளையிடுகிற இடத்திற்கு என்னை இழுத்துக்கொண்டு போக வேண்டும்" என்றார். அதற்குக் குசிகன் கொஞ்சமேனும் மனச் சலிப்புறாமல், 'சரி' யென்று ஒத்துக்கொண்டான். தவிரவும், "பவனி ரதமா? அல்லது, யுத்த ரதமா? எந்த ரதம் நான் கொண்டுவரவேண்டும்?" என்று அந்த ரிஷியை கேட்டான். "நீ எதிரிகளிடத்து யுத்தம் செய்வதற்காகக் கொண்டுபோகும் யுத்தரதத்தை அதற்கு வேண்டிய ஆயுதவகைச் சாமான்களுடன் கொண்டுவா" என்று சொன்னார். அப்படியே அரசன் ரதம் கொண்டுவந்து, இடது பக்கத்தில் தன் பத்னியைப் பூட்டி, தான் வலது பக்கத்தில் பூட்டிக் கொண்டான். மிகக் கூர்மையான தாறு அமைந்த சவுக்கும் ரதத்தில் வைக்கப்பட்டது. அரசன் ரிஷியைப் பார்த்து, "ஓ! சுவாமி! ரதம் எங்கே போகவேண்டியது?" என்று கேட்டான். அதற்கு ரிஷி, "நீங்கள் மெதுவாக எனக்கு வருத்தமில்லாமல் உன்னுடைய நகரவாசிகளெல்லாம் பார்க்க இழுத்துக்கொண்டுபோகக் கடவீர்கள். எதிரில் என்னை நோக்கி வருகிற எவனையும் துறத்தக் கூடாது. நான் போகும்பொழுதே பொருள்களைத் தானம் செய்து கொண்டு போகவேண்டும்" என்றார். உடனே அரசன், ரிஷி கட்டளையிடுகிற நாநாவிதப் பொருள்களையும் அவரிடம் கொண்டுவந்து கொடுக்கும்படி உத்தரவு செய்தான். அப்படியே, ரத்னங்கள், ஆபரணங்கள், அழகான ஸ்திரீகள், ஆடுகள், தங்கரத்னாபரணங்கள், பெரிய யானைகள் இவைகள் சகிதம் அரசனுடைய மந்திரிகள் ரதத்தில் ஏறிச் சென்ற ரிஷியைப் பின்தொடர்ந்து சென்றார்கள். இந்த அபூர்வமான காக்ஷியைக் கண்டு, நகரத்து ஜனங்கள் எல்லோரும் துக்கத்தில் மூழ்கினவர்களாய், "ஓஹோ! இதென்ன விபரீதம்!" என்று உரக்கக் கூவினார்கள். ரிஷி ராஜனையும், அவன் பத்னியையும் தம் கையிலேந்திய தாறுச்சவுக்கால் குத்தி அடித்தார். இவ்வாறு முதுகிலும், கன்னத்திலும் அடிக்கப்பட்டபோதிலும், ராஜதம்பதிகள்

மனம் தளராதவர்களாய், முன்போல் அவரை ரதத்தில் சுமந்து கொண்டு போனார்கள். ஐம்பது நாளாய் அன்னாகாரம் இல்லாமல், தேகம் முழுவதும் தள்ளாடிக்கொண்டு, அந்த ராஜனும், ராஜபத்னியும் மனோதைரியத்தினால் அந்த ரதத்தை இழுத்துக்கொண்டு போனார்கள். சவுக்கினால் அடிக்கடி குத்தப்பட்டவர்களாய், அவர்களுடைய தேகம் முழுவதும் ரத்தத்தால் மூடப்பட்டார்கள். நகரவாசிகள் தங்களுடைய அரசனுக்கும், அவன் பத்னிக்கும் நிகழ்ந்த துன்பத்தைக் கண்டு, அளவிறந்த வியாகுலத்தை அடைந்தார்கள். ஆனால், "ரிஷி சபித்துவிடுவார்" என்ற பயத்தினால் அவர்கள் ஒன்றும் பேச நாவெழாமல், தங்களுடைய துக்கத்தைச் சகித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் பற்பல இடங்களில் கூட்டம் கூடிக்கொண்டு, "தவத்தினுடைய மகிமையைப் பாருங்கள்! நாம் எல்லோரும் அந்த ரிஷியின் பேரில் கோபமாயிருந்தபோதிலும், அவரைக் கண்ணெடுத்துப் பார்க்கவும் நாம் அசக்தர்களாயிருக்கிறோம். மஹாத்மாவாகிய அம் மஹரிஷியின் சக்திக்கு அளவில்லை. தவிர, ராஜன், அவருடைய பத்னி இவர்களுடைய மனோதிடத்தையும் பொறுமையையும் பாருங்கள்! பசியால் களைத்து மெலிந்தும், அவர்கள் ரதத்தை இழுத்துக்கொண்டு போகிறார்கள்!" என்று பேசிக்கொண்டார்கள்.

இவ்வாறு எவ்வளவு கஷ்டங்கள் அனுபவித்தாலும், அந்த ராஜ தம்பதிகளிடத்து எவ்விதமானக் கொதிப்பையும், அதிருப்தியையும் அந்த ரிஷி கண்டாரில்லை. இவ்வாறு, அரசனும், அரசியும் கொஞ்சமேனும் கலக்கமில்லாதவர்களாய் இருப்பதை ச்யவனரிஷி பார்த்து, தான் இரண்டாவது குபேரன்போல் ராஜாவினுடைய பொக்கிஷத்திலிருந்த திரவியங்களை யெல்லாம் தாராளமாகத் தானம் செய்ய ஆரம்பித்தார். இந்த விஷயத்தைப் பற்றியும் குசிகராஜன் கொஞ்சமேனும் அதிருப்தி யில்லாமலிருந்தான். தானம் செய்யும் விஷயத்தில் ரிஷி எப்படிக் கட்டளையிட்டாரோ, அவ்வாறு செய்தான். இதை யெல்லாம் பார்த்த மஹரிஷி ராஜனிடத்தும், அவன் பட்டமகிஷியிடத்தும் மிகுந்த சந்தோஷம் கொண்டார். இரதத்தை விட்டுக் கீழே யிறங்கி, அவர்களைத் தேரினின்றும் அவிழ்த்து விட்டார். அவ்வாறு செய்து, அவர்களை நோக்கி, "உங்கள் விஷயத்தில் நான் மிகவும் சந்தோஷமடைந்தேன்; உங்களிருவருக்கும் உத்தமமான வரத்தைக்

கொடுக்கச் சித்தமா யிருக்கிறேன்" என்றார். அவர்களுடைய மெல்லிய சரீரங்கள் சவுக்குத் தாரினால் கிழிக்கப்பட் டிருந்தன. அந்தத் தபோத்தமர் அவர்களிடத்து அன்புகூர்ந்து, தம்முடைய கைகளால் அவர்களை மெதுவாய்த் தொட்டார். அதனால் அமிர்தம் உண்டவர்கள்போல், இரணங்கள் நீங்கிச் சௌக்கிய மடைந்தார்கள். அரசன் மஹரிஷியை நோக்கி, "எனக்கும், என் பத்னிக்கும் சிரமம் கிடையாது" என்றான்.

மஹரிஷியினுடைய தவசக்தியால் அவர்களுடைய களைப்புகளெல்லாம் நீங்கிற்று; அதனால் அரசன் ரிஷியிடத்து அவ்வாறு சொன்னான். அவர்களுடைய நடத்தையைப் பற்றிக் களிப்புற்றவராய், ச்யவனர் அவர்களை நோக்கி, "நான் இதுவரை பொய்சொன்னதில்லை. ஆதலால், நான் சொல்கிறபடி நடக்கும். கங்காநதிக் கரையிலுள்ள இந்த இடமானது சந்தோஷகரமாயும், மங்களகரமாயும் இருக்கிறது. ஆதலால், ஓ! அரசனே! நான் ஒரு விரதத்தை அநுஷ்டிக்கும் பொருட்டு, கொஞ்சகாலம் இங்கே வசிக்கிறேன். நீ உன்னுடைய தேசத்துச்குப் போ. நீ களைப்படைந் திருக்கிறாய். நீ உன்னுடைய பத்னி சகிதம் நாளைத் தினம் இவ்விடத்துக்கு வரலாம். நீ என்மீது கோபமாவது, வருத்தமாவது அடைதல் கூடாது. சிலாக்கியமான பலனை நீ அடையும்படியான காலம் வந்துவிட்டது. நீ உன் மனதில் எதை விரும்பி யிருக்கிறாயோ, அது நிறைவேறும்" என்றார். அரசன் அதற்கு அடியில் கண்டபடி மறுமொழி சொன்னான்:—"ஓ! உத்தமரே! எனக்கு வருத்தமாவது, கோபமாவது கிடையாது. தங்களால் நாங்கள் மிகவும் பரிசுத்தர்களாக்கப்பட்டோம். நாங்கள் மறுபடியும் பாலிய திசையை அடைந்திருக்கிறோம். எங்களுடைய சரீரங்கள் மிகவும் திடமாயும், அழகாயும் ஆகியிருப்பதைப் பாருங்கள். தாறுக்கம்புக் குத்தினால் எங்கள் தேகங்களில் உண்டான காயங்களெல்லாம் போய்விட்டன, பாருங்கள். நானும் என் மனைவியும் இப்பொழுது சௌக்கிய முடையவர்களாயே யிருக்கிறோம். என்னுடைய பத்னியும் ஒரு அப்ஸர ஸ்திரீயைப்போல் அழகும், பிரகாசமும் உள்ளவளா யிருக்கிறாள். இதற்கெல்லாம் தங்களுடைய கிருபையே காரணம். தங்கள் விஷயத்தில் இவைகளெல்லாம் ஒரு ஆச்சரியமல்ல" என்றான். இவ்வாறு சொல்லக் கேட்ட ரிஷி, "ஓ! அரசனே நாளை நீயும், உன் மனைவியும் இவ்விடம் வருவீர்களாக" என்றார்.

பிறகு, அரசன் தன் மனைவியுடன் மஹரிஷியிடம் அனுமதி பெற்றுக்கொண்டு, தேவேந்திரன்போல் அழகும், கீர்த்தியும் பெற்றவனாய்த் தன்னுடைய நகரம் வந்து சேர்ந்தான். அவனுடைய மந்திரிகளும், புரோகிதரும், சேனைகளும், நர்த்தனம் செய்யும் ஸ்திரீகளும், நகரத்து ஜனங்கள் யாவரும் அரசனை எதிர்கொள்ள வந்தார்கள். அவர்களால் புடைசூழப்பட்டு, கவிஞர்களும், கட்டியக்காரர்களும் அவனுடைய கீர்த்தியைக் குறித்துப் பாட, மிகுந்த சந்தோஷத்துடன் அரசன் நகரம் அடைந்தான். உடனே மாலைக் கடன்களை முடித்துக்கொண்டு, தன் பத்னியுடன் போஜனம் செய்தான். அன்றிரவைச் சந்தோஷமாகக் கழித்தான். அரசனும், அவன் மனைவியும் ஒருவரை யொருவர் இளமையும், அழகும் புதிதாய் அடைந்திருப்பதைக் கண்டார்கள். சகல துன்பங்களும் நீங்கினவர்களாய், தேவர்கள்போல் தாங்கள் விளங்குவதைக் கண்டார்கள். அன்றிரவை அவர்களுடைய சயனத்தில் சந்தோஷமாய்க் கழித்தார்கள். இதன் மத்தியில் தபோநிதியாகிய ச்யவனரிஷி அவருடைய யோக சக்தியால் கங்கைக் கரையிலிருந்த அழகிய காட்டை நானாவிதச் செல்வங்களும், ரத்னங்களும், ஆபரணங்களும் நிறைந்த ஒரு ஏகாந்த ஸ்தலமாய் மாறச் செய்தார். அதனால் அது தேவர்கள் இருப்பிடமாகிய ஸ்வர்க்க லோகத்தைக் காட்டிலும் அழகிலும், பிரகாசத்திலும் மேம்பட்டு விளங்கிற்று. மறுநாட் காலையில் அரசன் நித்திரைவிட்டெழுந்து, தன்னைக் கிரமப்படி சுத்திசெய்து, காலைக்கடன்களை முடித்து, தன் பத்னியுடன் மகரிஷி இருந்த இடத்திற்குச் சென்றான்.

அங்கே போய்ச் சேர்ந்ததும், முற்றிலும் தங்கத்தால் நிருமிக்கப்பட்ட ஒரு பெரிய அரண்மனைக் கட்டடத்தைக் கண்டான். அது நவரத்னங்களால் செய்யப்பட்ட ஆயிரம் தூண்கள் அமைக்கப்பெற்றதாய், கந்தர்வர்களுடைய மாளிகைபோல் விளங்கிற்று. தங்கத்தால் அமைக்கப்பட்டதுபோல், புற்கள், கொடிகள், செடிகள், மரங்கள், புஷ்பங்கள் நிறைந்து, நீர்வளம் மிகுந்த ரமணீயமான சோலைகளை அரசன் கண்டான். தங்கத்தாலும், ரத்னத்தாலும் அமைக்கப்பட்டு கம்பளங்கள், மெத்தைகள், படுக்கைகள் விரித்துள்ள ஆசனங்கள், இன்னும் தேவலோகத்திலுள்ள சுகத்துக்குரிய விலையுயர்ந்த பதார்த்தங்கள், தின்பதற்கு யோக்கியமாய்ப் பாகஞ்செய்து வைக்கப்பட்ட அன்னபானாதிகள், மதுரமான பழங்கள், கிளிகள், குயில்கள் முதலிய

அநேக விதமான பக்ஷிஜாதிகள், கந்தர்வர்கள், அழகிய அப்ஸரஸ்திரீ களின் கூட்டங்கள் இவைகளை யெல்லாம் அரசன் கண்டான். குருக் கள் சிஷ்யர்களுக்கு வேத சாஸ்திரங்கள் உபதேசிக்கும் இன்பமான சப்தங்களையும், காதுக்கு அமிர்தம்போல் விளங்கின தேவகானங்களை யும் கேட்டான். இவைகளை யெல்லாம் பார்த்துக் கேட்ட அரசன் 'கனவோ' என்று நினைத்தான். "நான் இந்த மனித தேகத்துடனே சுவர்க்க லோகத்துக்கு வந்துவிட்டேன். இது உத்தர குருக்கள் வசிக்கும் பரிசுத்த பிரதேசமோ, அல்லது, தேவராஜன் இருப்பிட மாகிய அமராவதியோ" என்று சொல்லி, அரசன் சிந்தித்துக் கொண்டு, கடைசியில் ச்யவன மஹரிஷியைப் பார்த்தான். அந்த அழகான மாளிகையில் மஹரிஷி ஒரு உயர்ந்த படுக்கையில் படுத் துக்கொண்டிருந்தார். அவரிடத்து அரசன் தன் பத்தினியுடன் சென் றான். உடனே ச்யவனர் தான் படுத்திருந்த படுக்கை சஹிதம் அவ் விடத்தைவிட்டுக் காணுமல் மறைந்துவிட்டார். அதற்குப் பிறகு, வேறொரு இடத்தில் ரிஷி தர்ப்பாசனத்தில் இருந்துகொண்டு, சில அரிய மந்திரங்களை உச்சரித்துக்கொண்டிருக்கக் கண்டான். இவ் வாறு ரிஷி அரசனைப் பிரமிக்கச் செய்தார்.

ஒரு க்ஷண நேரத்திற்குள் அந்த அழகிய சோலைகள், மாளிகை கள், அப்சர ஸ்திரீகள், கந்தர்வக் கூட்டங்கள் இவைகளெல்லாம் மறைந்துபோயின. கங்காநதிக்கரை முன்போல் தர்ப்பைகளும், கரை யான் புற்றுகளும் உள்ளதாய், யாதொரு சந்தடி அன்னியில் காணப் பட்டது. அரசனும், அவன் மனைவியும் அந்த விநோதக் காக்ஷிகள் இருந்ததையும், அவைகள் திடீரென்று மறைந்து போயினதையும் கண்டு, மிகவும் அதிசயித்தார்கள். அரசன் தன் மனைவியை நோக்கி, "ஓ! இனியவளே! இவ் விநோதக் காக்ஷிகள் உண்டானதும், மறைந் ததுமான இந்த அற்புதங்களுக்கு மஹரிஷியினுடைய தவோ மகிமை யும், சக்தியுமே காரணம். தவசக்தியானது மனதில் நினைத்ததை யெல்லாம் அடையச் செய்கிறது. மூன்று உலகங்களின் அரசாட் சியைவிட, தவமாகிய செல்வம் சிறந்தது. நன்றாய்ச் செய்யப்பட்ட தவமானது மோக்ஷ சாம்பிராஜ்யத்தையே கொடுக்க வல்லது. ஆத லால், ச்யவனரிஷி தம்முடைய தவசக்தியால் தம்முடைய இஷ்டம் போல் வேறு உலகங்களையும் சிருஷ்டிக்க வல்லவர். இவ்வாறு செய் யத் தக்கவர் ச்யவனரைப் போன்ற மகரிஷியைத் தவிர, வேறு எவ

ருளார்? ராஜ்ய பதவியை வெகு சுலபமாய் அடையலாம். ஆனால், பிராமணரா யிருக்கும் பதவியானது எளிதில் கிடைக்கத் தக்கதன்று. பிராமணருடைய உயர்ந்த வலிமையல்லவா நம்மை மிருகங்களைப் போல் ரதத்தில் பூட்டி இழுக்கச் செய்தது!" என்று சொன்னான்.

இவ்வாறு அரசனுடைய மனதில் நிகழ்ந்தவைகளை ச்யவனர் அறிந்து, அரசனைத் தம் சமீபத்தில் அழைத்து, அவர்களால் வணங்கப் பெற்று, அரசனுக்கு ஆறுதல் சொல்லி, ஒரு ஆசனத்தில் உட்கார ச் சொன்னார். அப்பால், அந்த ரிஷி அரசனை நோக்கி, "ஓ! அரசனே! உன்னுடைய ஐந்து கர்மேந்திரியங்களையும், ஐந்து ஞானேந்திரியங்களையும், என்னுடைய மனதையும் நீ முற்றிலும் ஜெயித்துவிட்டாய். உன்னைப் பரிசோதிக்கும் பொருட்டு நான் செய்த உக்ரமான பரீக்ஷையாகிய அக்னியிலிருந்து நீ யாதொரு பங்கமு மில்லாமல் வெளியே வந்திருக்கிறாய். நான் உன்னால் மிகவும் சந்தோஷமடைந்தேன். உன்னிடத்தில் எள்ளளவும் பாபம் கிடையாது. நான் எனனுடைய இருப்பிடத்துக்குப் போகவேண்டும். எனக்கு விடை கொடுப்பாயாக. உன்னிடத்தில் மிகவும் திருப்தி அடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள். நான் கொடுக்கத் தயாரா யிருக்கிறேன்" என்றார். குசிகராஜன், "ஓ! ஸ்வாமி! ஒருவன் நெருப்பின் மத்தியில் நிற்பதுபோல், தங்களுடைய சந்நிதானத்தில் நான் இருந்திருக்கிறேன். நான் எரிக்கப்படாமல் இருந்ததே போதுமானது. அதுவே எனக்குக் கிடைக்கக்கூடிய உத்தமமான வரம். தாங்கள் என்பேரில் திருப்தியடைந்ததும, என் வம்சமானது அழிக்கப்படாமல் நான் காப்பாற்றப்பட்டதும் ஆகிய இவைகளே எனக்கு மிகவும் உத்தமமான வரங்கள். இதுவே தாங்கள் என்பேரில் வைத்திருக்கும கிருபைக்குத் தக்க அத்தாட்சியா யிருக்கிறது. என் வாழ்நாளினுடைய பிரயோஜனம் இன்றுதான் நிறைவேறிற்று. நான் செய்திருக்கும் தவங்களினுடைய உயர்ந்த பலனை இன்றுதான் அடைந்தேன். என் பேரில் தங்களுக்குச் சந்தோஷம் ஏற்பட்டிருக்கும் பட்சத்தில், என் மனதிலிருக்கிற சில சந்தேகங்களை நீங்கித் தெளிவு படுத்தும்படியாக வேண்டுகிறேன்" என்றான். ச்யவனர், "ஓ! அரசனே! என்னிடத்திலிருந்து வரமொன்று பெற்றுக்கொள். உன் மனதிலிருக்கிற சந்தேகத்தை எனக்குத் தெரிவி. உன் மனோபீஷ்டங்களை யெல்லாம் நிறைவேற்றுகிறேன்" என்றார்.

குசிகன், "தங்களுக்கு என்பேரில் திருப்தியாயிருக்கும்பட்சத்தில், தாங்கள் கொஞ்சகாலம் என் அரண்மனையில் வந்து வசித்ததினுடைய உத்தேசத்தைத் தெரிவிப்பீர்களாக. அதை நான் கேட்க விரும்புகிறேன். தங்களுக்காக நான் நியமித்த படுக்கையில் இருபத்தோரு நாள் விடாமலும், பக்கம் திரும்பாமலும் தாங்கள் தூங்கினதின் கருத்தென்ன? ஓ! தவசிரேஷ்டரே! ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல், தாங்கள் மறுபடியும் அறையைவிட்டு வெளியே போனதின் கருத்தென்ன? இன்ன காரணமென்று தெரிய முடியாமல் தாங்கள் மறுபடியும் மறைந்ததும், பிறகு மறுபடி கண்ணுக்குத் தோற்றினதும் எதற்காக? மறுபடியும் தாங்கள் படுக்கையில் படுத்துக்கொண்டு, முன்போல் இருபத்தோரு நாள் ஓயாமல் தூங்கினதின் விஷயமென்ன? தாங்கள் ஸ்நாநம் பண்ணவேண்டுமென்ற உத்தேசத்துடன் நாங்கள் தங்களுக்குத் தைலம் தேய்த்தபிறகு, வெளியே போனதின் காரணமென்ன? நானாவித ஆகாராதிகளை என் அரண்மனையில் சேகரிக்கச் செய்து, அப்பால் அவைகளை யெல்லாம் அக்னியில் எரித்துவிட்டது ஏன்? ரதமேறி என்னுடைய நகரத்தின் வழியாகத் திடீரெனப் பிரயாணம் செய்தது யாது காரணம் பற்றி? ஏராளமான செல்வங்களைத் தானம் செய்ததில் தங்களுடைய கருத்தென்ன? தங்களுடைய யோக சக்தியால் சிருஷ்டிக்கப்பட்ட காட்டில் கண்ட அதிசயங்களை எங்களுக்குத் தாங்கள் காட்டினதின் தாத்பரியம் என்ன? தங்கத்தால் செய்யப்பட்ட அநேக மாளிகைகள், நவரத்தினக் கால்களுடைய படுக்கைகள் இவைகளை யெல்லாம் எங்களுக்குக் காட்டுவதில் தங்களுடைய எண்ணமென்ன? இவைகளெல்லாம் திடீரென எங்கள் முன்னிலையில் கூறாமல் மறைந்துபோன விதமென்ன? இவைகளினுடைய காரணங்களை யெல்லாம் நான் கேட்க விரும்புகிறேன். தங்களுடைய இச் செய்கைகளை யெல்லாம் நான் கண்டு, வியப்புற்றுப் பிரமித்தேன். இவ்வாறு தாங்கள் செய்ததற்குத் தகுந்த காரணமின்னதென்று என்னால் அறிய முடியவில்லை. ஓ! தபோநிதியே! இக் காரணங்களை யெல்லாம் விபரமாய்க் கேட்க விரும்புகிறேன்" என்று வினவினான்.

ச்யவனர், "ஓ! அரசனே! நான் அவ்வாறு செய்ததற்குக் காரணங்களைச் சொல்லுகிறேன், கேள். நான் உன்னால் கேட்கப்பட்டபடியால் உன்னுடைய சந்தேகத்தைத் தெளிவுப்படுத்தாமலிருத்தல்

கூடாது. முன்னொரு காலத்தில் தேவர்களெல்லாம் கூடி யிருக்கை யில், பிதாமகராகிய பிரமதேவர் சொன்ன சங்கதிகளைக் கேட்ட நான் உனக்குச் சொல்லுகிறேன், கேள். அதாவது:—பிராமணர்க ளுக்கும், க்ஷத்திரியர்களுக்கும் யார் மிகுந்த பராக்கிரமம் உள்ளவர் கள் என்பதைப் பற்றி, ஏற்படப் போகிற விவாதத்தினால் என்னு டைய வம்சத்தில் ஜாதிக்கலப்பு ஏற்படும். ஓ! அரசனே! உன்னு டைய பேரன் மிகுந்த பிரமசக்தியை அடைவான். இந்தச் சங்கதி யைக் கேட்ட நான் உன் வம்சத்தை அழித்துவிட வேண்டுமென்ற தீர்மானத்துடன் இங்கு வந்தேன். ஓ! குசிகராஜனே! உன்னுடைய வம்சத்தைக் கொஞ்சமேனும் பூண்டில்லாமல் வேரறுத்துப் பஸ்மீக ரம் செய்து போடவேண்டுமென்ற உத்தேசத்துடன் நான் வந்தேன். அவ்விதம் வந்து, நான் ஏதோ விரதம் அனுஷ்டிக்க வேண்டுமென் றும், நீ எனக்கு வேண்டிய பணிவிடைகள் செய்யவேண்டு மென் றும் சொன்னேன். அக் காலங்களி லெல்லாம் உன்னிடத்தில் எவ் விதத் தவறுதலையும் நான் காணவில்லை. அது காரணம் பற்றித்தான் நீ இப்பொழுது ஜீவனோ டிருக்கிறாய். இல்லாவிடில் நீ இறந்து போயிருப்பாய். இதை உத்தேசித்தே, என்னுடைய நித்திரை மத்தி யில் யாராவது எழுப்புவார்கள் என்றெண்ணி, இருபத்தோரு நாள் நான் நித்திரை செய்தேன். ஆனால், நீயும், உன் மனைவியும் என்னை எழுப்பாமல் இருந்தீர்கள். அப்பொழுதே உன்னிடத்து எனக்குச் சந்தோஷ முண்டாயிற்று. என் படுக்கையை விட்டெழுந்திருந்து, உங்களிடம் யாதொரு சங்கதியும் சொல்லாமல், நான் படுக்கை யறையைவிட்டு வெளியே போனேன். அப்படிப் போகும்பொழுது நீ என்னை ஏதாவது கேட்பாய். அந்தக் காரணத்தைக் கொண்டு, உன்னைச் சபிக்கலாமென்று நான் நினைத்தேன். நான் அப்பொழுது அந்தர்த்தானமாகி, மறுபடியும் என்னுடைய யோகசக்தியால் இருபத் தோரு நாள் தூங்கினேன். அப்படிச் செய்ததற்குக் காரணம் என்ன வென்றால், நீ பசியாலும், களைப்பாலும் வருந்தி, என்னிடத்துக் கோபமுள்ளவனாய் எனக்கு அப்பிரியமான காரியத்தைச் செய்வா யென்று நினைத்தேன். உன்னைப் பசியால வருந்தும்படி செய்ததும் அதே காரணம் பற்றித்தான். ஆனால், நீ உன்னுடைய மனதில் கொஞ்சமேனும் கோபமாவது, அல்லது, வருத்தமாவது இல்லாம லிருந்தாய். இதைக் கண்ட நான் உன்னிடத்து மிகவும் திருப்தி யடைந்தேன். நான் அனேகமானதிகளைக் கொண்டுவரச் செய்து,

அவைகளை யெல்லாம் நெருப்பிட்டுச் சாம்பலாகும்படி செய்ததின் காரண மென்னவென்றால், நீயும், உன் மனைவியும அதைக் கண்டு, கோபங்கொள்வீர்க ளென்பதுதான். ஆகிலும், என்னுடைய அந்தச் செய்கையையும் நீங்கள் க்ஷமையுடன் பொறுத்தீர்கள். அதற்குப் பிறகு, உன்னையும், உன் மனைவியையும் தேரில் கட்டி, அதில் நான் ஏறி, உங்களை யிழுக்கச் செய்தேன். நீ கொஞ்சமேனும் மனம் சலிக் காதவனாய், நான் சொன்னபடி நடந்தாய். அதனாலும் எனக்கு உன் பேரில் மிகுந்த சந்தோஷ முண்டாயிற்று. அதே பிரகாரம், நான் உன்னுடைய செல்வங்களை யெடுத்துத் தானஞ் செய்ததும், உனக்குக் கோபத்தை யுண்டாக்கவில்லை. உன்பேரில் ஏற்பட்ட சந்தோஷத்தி னால் நான் என்னுடைய யோக வலிமையைக் கொண்டு, நீயும், உன் பத்தினியும் பார்த்த சிங்கார நந்தவனத்தைச் சிருஷ்டித்தேன். அதற் குக் காரணம் என்னவென்றால், தேவலோகம் இன்ன விதமா யிருக் கிற தென்பதை நீயும், உன் மனைவியும் கொஞ்சம் பார்த்துச் சந் தோஷ மடையவேண்டு மென்பதுதான். நீ அந்த வனத்தில் கண்ட காக்ஷிகளெல்லாம் நீ பின்னால் அடையப்போகிற சுவர்க்கலோகங்கள் இன்னவித மென்பதைக் காட்டும் முகத்தின அநுபவ சகுனங்களாகும். நீங்கள் இந்த மனுஷ சரீரத்துடன் இருக்கும்பொழுதே, தேவலோகக் காட்சிகளை நீங்கள் ஒருவாறு பார்க்கும்படி செய்தேன். தவத்தின் மகிமை எத்தன்மையது என்பதையும், தர்ம வழியில் நடப்பவர்கள் அடையும் பிரயோசனம் எவ்விதமானது என்பதையும் உங்களுக்குத் தெரிவிக்கும் பொருட்டு நான் அவ்வாறு செய்தேன். இவைகளை யெல்லாம் பார்த்த நீ, என்னை நினைத்தா யென்பது எனக்குத் தெரி யும். இவைகளை யெல்லாம் பார்த்தும், இப் பூலோகத்துள்ள ராஜ்ய சுகங்களையும், தேவலோகத்து ராஜ போகங்களையும் கூட, மிகவும் அற்பமாக நீ மதித்து, பிராமணத்துவத்தையும், தவ மகிமையையும் அடையவேண்டு மென்று விரும்பினாய். பிராமணன் என்ற ஸ்தா னத்தை அடைவது மிகக் கடினமானது. அதை யடைந்தாலும், ரிஷி யென்ற பதத்தை யடைவது அதிலும் மிக்கக் கடினம்; ரிஷியாக ஆனபோதிலும்கூட, எல்லாவற்றையும் துறந்த உண்மையான சந்நியா சியாவது அதிலும் வெகுக் கடினம். இவ்வாறு நினைத்த உனது உன் மனோபீஷ்டங்க ளெல்லாம் நிறைவேறும். உன் பேருடையவனாய், உன் வம்சத்திலிருந்து ஒரு பிராம்மணன் ஜனிப்பான். உனக்கு

யிருக்க, மற்றவர்களோடு அவர்களும் சேர்ந்து சோமபானம் செய்வது எப்படி? அவர்கள் தேவர்களோடு சேர்ந்தவர்களல்ல. அச்வினி தேவர்களோடு சோமபானம் செய்ய எங்களுக்கு விருப்பமில்லை. தாங்கள் வேறு என்ன சொன்னாலும் அவ்வாறு நடக்க நாங்கள் சித்தமாயிருக்கிறோம். இது மாத்திரம் தாங்கள் சொல்வது கூடாது'' என்றான்.

ச்யவனர், ''அச்வினி தேவர்களும் உங்களோடு சோமபானம் செய்யவேண்டும். அவர்களும் தேவர்கள்தான். சூரியபுத்திரர்களல்லவா? ஆகலால், நான் சொல்லுகிறபடியே தேவர்களாகிய நீங்கள் செய்வீர்களாக. அவ்வாறு நடந்தால் தேவர்களுக்கு மிகவும் அனுகூலம் உண்டாகும். அப்படிச் செய்யாவிடில், அவர்களுக்குக் கெடுதி சம்பவிக்கும்'' என்றார். இந்திரன், ''ஓ! மகரிஷியே! நான் அச்வினி தேவர்களுடன் சோமபானம் செய்யமாட்டேன். மற்ற தேவர்களுக்குப் பிரியமிருந்தால் அவ்வாறு செய்யட்டும்'' என்றான்.

அப்பால், ச்யவனர் அச்வினி தேவர்களைக் கூடவைத்துக் கொண்டு, அவர்களுடைய நன்மைக்காக மேற்கண்டபடி சையாதி என்னும் ராஜனைக்கொண்டு ஒரு யாகம் செய்ய ஆரம்பித்தார். ச்யவனருடைய மந்திரசக்தியால் தேவர்களெல்லாம் அறிவு கலங்கியிருந்தார்கள். ச்யவனருடைய இச் செய்கையைக் கண்டு, இந்திரன் கோபமடைந்து, ஒரு பெரிய மலையைக் கையில் எடுத்துக்கொண்டு, வச்சிராயுதமும் கையிலேந்தியவனாய், அந்த ரிஷியின் எதிராக ஓடி வந்தான். தவசக்தியுள்ள ச்யவனர் தன்னை நோக்கி வரும் இந்திரனைக் கோபமாய்ப் பார்த்தார். கொஞ்சம் ஜலத்தை இந்திரன்மேல் எறிந்து, அவனை அசையவொட்டாமல் ஸ்தம்பிக்கும்படி செய்தார். அவர் செய்த ஹோமத்திலிருந்து இந்திரனுக்கு விரோதமாய் ஒரு விசாலமான வாயையுடைய பயங்கரமான அசுரன் தோன்றினான். அக்னியில் செய்யப்பட்ட ஆஹுதிகளிலிருந்து உண்டான அந்த அசுரனுக்கு 'மதன்' என்ற பேர் ஏற்பட்டது. நூறு யோசனை விஸ்தீரணமுள்ள ஆயிரம் பற்கள் அவனுக்கிருந்தன. அவனுடைய ஒரு கன்னம் பூமியில் சார்ந்தும், மற்றொரு கன்னம் ஆகாசத்தை அளாவியுமிருந்தன. தேவர்களெல்லோரும் சுறாமீனால் விழுங்கப்படும் நிலைமையிலுள்ள சிறு மீன்களைப்போல் அசுரனுடைய நாக்கினடியில் நின்றார்கள். இவ்வாறு மதன் என்ற அசுரனது வாய்க்குத் தேவர்கள

வந்தபோது, அவர்களெல்லோரும் சடுதியில் யோசித்து, இந்திரனை நோக்கி, "இந்த மகாத்மாவாகிய ரிஷியைத் தாங்கள் மரியாதையாய் வணங்கவேண்டும். நாம் கொஞ்சமேனும் களங்கமன்னியில் அச்வினி தேவர்களுடன் சோமபானம் செய்வோம்" என்றார்கள். அவ்வாறே இந்திரன் ச்யவனரிஷியைப் பணிந்து, அவர் கட்டளையிட்டபடியே செய்தான். இதன் மூலமாய்த்தான் அச்வினி தேவர்கள் மற்ற தேவர்களைப்போல் சோமபானம் செய்கிறவர்களானார்கள். மதன் என்ற அசுரனை ரிஷியானவர் திருப்பி யழைத்து, அவன் செய்ய வேண்டிய காரியங்களை அவனுக்கு நியமித்தார். அவனைச் சூதாடு மிடங்களிலும், வேட்டையிலும், மதுபானம் செய்வதிலும், ஸ்திரீக ளிடத்தும் நிலையாய் இருக்கும்படி கட்டளையிட்டார்.

ஆதலால், இந்த நான்கு காரியங்களிலேயும் பிரவர்த்திப்பவர்கள் நிச்சயமாய் நாசத்தை அடைகிறார்கள்.

## 80. ததீசி.



திகாலத்தில் (1) ததீசி என்ற ஒரு ரிஷி யிருந்தார். அவர் மிகவும் தவமகிமை யுள்ளவர். அவர் இந்திரியங் களை யெல்லாம் அடக்கினவர். பிரமசரிய விரதத்தை அநுஷ்டித்து வந்தார். அவருடைய மிகுந்த தவசக்தியைக் கண்டு, தேவேந்திரன் மிகுந்த பயத்தினால் பீடிக்கப்பட்டான். நானாவித தேவலோகத்து வஸ்துக்களைக் கொடுத்து, தவத்தினின்றும் அவ ருடைய புத்தியைக் கலைக்க முயன்றும் பயன்படவில்லை. கடைசி யில், இந்திரன் அவருடைய புத்தியைக் கலைப்பதற்காக, தேவ லோகத்து அப்ஸரஸும், மிகுந்த சௌந்தரியவதியுமான அலம்புஸை யென்பவளை அவரிடத்து அனுப்பினான். அப்பொழுது, ததீசிரிஷி சரஸ்வதிநதிக் கரையில தேவர்களுக்குத் திருப்தி செய்யும்பொருட்டு யாகாதிகள் செய்துகொண்டிருந்தார். அலம்புஸை அப்பொழுது அவர்முன் தோன்றினாள். அழகிய அங்கங்களையுடைய அந்த மாதைக் கண்டு, புண்யாத்மாவான அந்த ரிஷியினுடைய சுக்லமானது

(1) மஹாபாரதம்-சல்யபர்வம்.

வெளியே வந்தது. அது சரஸ்வதிநதியில் விழ, அதைச் சரஸ்வதி ஜாக்கிரதையுடன் தன்னுடைய கர்ப்பத்தில் தாங்கிக்கொண்டாள். காலக்கிரமத்தில் அது ஒரு சிசுவாகி, சரஸ்வதியின் கர்ப்பத்திலிருந்து ஜனித்தது. அதை அவள் ததீசி ரிஷியிடத்துக் கொண்டுபோனாள். ரிஷிக்கூட்டங்களின் மத்தியிலிருந்த அவரிடத்துச் சரஸ்வதி அந்தக் குழந்தையைக் கொடுத்து, அவரைநோக்கிப் பின்வருமாறு சொன்னாள்:—"ஓ! தவோத்தமரே! உம்மிடத்திலிருந்த பக்தியால் உம்முடைய குழந்தையாகிய இவனை என் கர்ப்பத்தில் வைத்து வளர்த்தேன். அலம்புஷை என்ற தேவஸ்திரீயைப் பார்த்தமாத்திரத்தில், உம்முடைய தேகத்திலிருந்து வெளியே வந்த சுக்லம் வீண்போகக் கூடாதென்று கருதி, அதை என் கர்ப்பத்தில் வைத்து உண்டான உம்முடைய குழந்தை இது. ஆகலால், குற்றமற்ற உம்முடைய இக் குழந்தையை நான் கொடுக்க, நீர் ஏற்றுக்கொள்ளக் கடவீர்." அவ்வாறே அந்த ரிஷி அந்தக் குழந்தையைச் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டார். அந்தப் பிராமணோத்தமர் அக்குழந்தையைப் பிரியத்தோடு உச்சிமுகர்ந்து, கொஞ்சநேரம் அதை இறுகத் தழுவிக் கொண்டிருந்தார். சரஸ்வதீ தேவியிடத்து மிகவும் சந்தோஷம் கொண்டவராய், ததீசி ரிஷி அவளுக்கு அடியில் கண்டபடி வரம் கொடுத்தார். அவர் அவளை நோக்கி, "விசுவதேவர்கள், ரிஷிகள், நானாவித வர்க்கங்களைச் சேர்ந்த கந்தர்வர்கள், அப்ஸரஸ்கள் ஆகிய இவர்கள் உன் ஜலத்தைக்கொண்டு செய்யும் அர்க்கியங்களால் மிகவும் திருப்தியை அடையக் கடவர்கள்" என்று சொன்னார். இவ்விதமாய் அவளைச் சந்தோஷிப்பித்து, மறுபடியும் அவர் அவளை நோக்கி, அடியில் வருமாறு சொன்னார்:—"ஓ! புண்ணியவதியே! நீ ஆதிகாலத்தில் பிரமதேவருடைய தடாகத்திலிருந்து உற்பத்தியானாய். உக்ரமான தவ விரதங்களையுடைய மகரிஷிகளெல்லாம் உன்னையறிவார்கள். எப்பொழுதும் இனிமையான அவயங்களையுடைய நீ, எனக்குச் செய்திருக்கிற உபகாரம் மிகவும் பெரிது. இந்த உன் குழந்தையானது 'ஸாரஸ்வத்' என்ற பேருடன் அழைக்கப்படுவான். புதிய உலகங்களைச் சிருஷ்டிக்க வல்ல தவோமகிமையுள்ள உன்னுடைய இந்தக் குழந்தை உன்னுடைய பெயராலேயே இவ்வுலகில் அறியப்படுவான். என்னுடைய அனுக்கிரகத்தால் நீ புண்ணிய நதிகளிலெல்லாம் சிரேஷ்டமாகக் கருதப்படுவாய்." இவ்வாறு ரிஷி

யால் வரத்தையும், மேன்மையையும் பெற்று, ஸரஸ்வதி தேவி அந்தக் குழந்தையை எடுத்துக்கொண்டு, தன்னுடைய இடத்துக்குச் சென்றாள். ஸரஸ்வதருடைய மற்ற விருத்தாந்தங்களை அவருடைய பிரத்தியேக சரித்திரத்தில் காணலாம்.

பிறகு, தேவர்களுக்கும், (1) அசுரர்களுக்கும் கோரமான யுத்தம் நடந்துகொண் டிருந்தது. அசுரர்களைக் கொல்லத்தக்க பலமான ஆயுதங்களை அடையவேண்டி, தேவேந்திரன் மூன்று உலகங்களிலும் அலைந்துகொண் டிருந்தான். எவ்வளவோ முயற்சித்தும், அசுரர்களைக் கொல்லவல்ல ஆயுதம் அவனுக்குக் கிடைக்கவில்லை. அப்பால் பிரமதேவருடைய யோஜனையின் பிரகாரம், சக்ரன் தேவர்களை நோக்கி, "பலிஷ்டர்களான அசுரர்களைக்கொல்ல நான் சக்தியற்றவனாயிருக்கிறேன். ததீசி ரிஷியினுடைய முதுகின் எலும்புகள் கிடைத்தாலொழிய, நான் நம்முடைய பகைவர்களை ஜயிப்பது அரிது. ஆதலால், ஓ! தேவர்களே! நீங்கள் எல்லோரும் அந்த மகரிஷியினிடத்துச் சென்று, 'ஓ! ததீசி மகரிஷியே! உம்முடைய எலும்புகளை எங்களுக்குக் கொடும்' என்று பிரார்த்தித்துக் கேளுங்கள். அவைகளைக் கொண்டு நம்முடைய சத்துருக்களைக் கொல்வோம்" என்று சொன்னான். இவ்வாறு தேவர்களால் தம்முடைய எலும்புகளுக்காகப் பிரார்த்திக்கப்பட்ட ரிஷிகளுக்கெல்லாம் சிறந்தவராகிய ததீசி, யாதொரு தடையுமின்றி, தம்முடைய ஜீவனைத் தம்முடைய தேகத்தினின்றும் ஒழித்தார். தேவர்களுக்கு ஹிதமான காரியத்தைச் செய்தபடியால், அந்த மகரிஷி என்றும் அழியாத மகிமைகளோடு கூடிய உயர்ந்த பதவியை அடைந்தார். அவருடைய எலும்புகளைக் கொண்டு தேவேந்திரன் வஜ்ராயுதம், சக்கிரம், கனமான கதாயுதங்கள் முதலிய நானாவிதமான ஆயுதங்களைச் செய்வித்தான்.

பிரமாவுக்குச் சமானமானவராய், பிரமாவினுடைய புத்திரரான பிருகு மகரிஷியினிடத்து அவருடைய அரிய தபோமகிமையால் ததீசி ரிஷி பிறந்தவர். பெருத்த அவயவங்களும், மிக்க அரிய சக்தியும் கூடிய ததீசி ரிஷி உலகத்தில் மகாபலமுடையவராய் விளங்கியிருந்தார். மிகுந்த மகிமைகளினால் கியாதிபெற்ற ததீசி, பருவதங்களுக்கெல்லாம் அரசனான ஹிமயகிரியைப்போல் உயர்ந்த ரூபமுடையவராயிருந்தார். அவருடைய தவசக்தியைக் கண்டு, பாகனைச் சம்

(1) மகாபாரதம்—சல்யபர்வம்.

ஹரித்தவனாகிய இந்திரன் எப்பொழுதும் மனக்கவலை கொண்டிருந்தான். பிறகு, மேற்கூறியவாறு இந்திரன் ததீசி ரிஷியின் முதுகெலும்பினால் அசுரர்களைக் கொல்லத்தக்க புதிய வஜ்ஜிராயுதம் ஒன்றைச் செய்துகொண்டான். பிரமசக்தி வாய்ந்த அந்த வஜ்ஜிராயுதத்தினாலும், மந்திரங்களினுடைய சக்தியினாலும் தேவேந்திரன் அந்த ஆயுதத்தைப் பிரயோகித்து, தைத்யர்களில் தொள்ளாயிரத்துத் தொண்ணூறு வீரர்களையும், த்வஷ்டாவின் குமாரனும், மகாதபஸ்வியுமான விசவரூபனையும், பராக்கிரமசாலியான விருத்ராசுரனையும் கொன்றான்.

தக்ஷப்பிரஜாபதி (1) ஒரு பெரிய யாகம் செய்தார். அதில் ருத்ர மூர்த்திக்கு அவிர்ப்பாகம் கொடுக்க ஆக்ஷேபித்து விட்டார். தம்முடைய யோகசக்தியினால் பின்வரும் சங்கதிகளை யறிந்த ததீசி ரிஷி மஹேசுவரரை அவமதிக்கக் கூடாதென்று எவ்வளவோ எடுத்துச் சொல்லியும், தக்ஷர் அதை அலக்ஷியம் செய்து, அங்கீகரிக்கவில்லை. அதனால் அந்த ரிஷி எச்சரித்த பிரகாரம், அந்தப் பெரிய யாகம் மகாதேவரால் அழிக்கப்பட்டது. அந்தக் காலத்தில் தக்ஷப் பிரஜாபதிக்கும், ததீசி மகரிஷிக்கும் நடந்த சம்வாதம் தக்ஷமகரிஷியின் சரித்திரத்தில் விஸ்தாரமாய்க் காணப்பட்டிருக்கிறது.

இம் மகரிஷிக்கு (2) மகாபுத்திசாலியும் உயர்குலத்தில் பிறந்தவளுமான லோபாமுத்ரை என்ற பத்னி இருந்தாள். அவளுக்கு 'வடவை' என்று மற்றொரு பெயருமுண்டு. அந்த உத்தமியுடன் ததீசி மகரிஷி தேவர்கள், பிதுர்க்கள், அதிதிகள் இவர்களைப் பூஜித்தும், ஔபாசனம், அக்னிஹோத்திரம் முதலிய கருமங்களைச்சரிவரச் செய்தும், இல்லற தர்மத்தை நடத்திவந்தார். மற்றொரு அகஸ்தியரைப்போல் மேன்மையுடன் விளங்கினவராய், கங்காநதிக் கரையில் அரிய தவஞ் செய்துகொண்டிருந்தார். அவருடைய தவமகிமையினால் அசுரர்கள், ராக்ஷஸர்கள் முதலிய எவரும் அங்கே வருகிறது கிடையாது. அவருடைய ஆச்ரமத்தை யடுத்து, அகஸ்திய மகாமுனிவருடைய ஆசிரம மிருந்தது. ஒருசமயத்தில் ருத்ரர்கள், ஆதித்யர்கள், அசுவினி தேவர்கள், இந்திரன், விஷ்ணு, எமன், அக்னி முதலியவர்கள் அசுரர்களை ஜயித்து, அதனால் மிகுந்த சந்தோஷமுடைய

(1) மஹாபாரதம்—சாந்திபர்வம். (2) பிரம்மபுராணம்

வர்களாய், மற்ற தேவர்களால் துதிக்கப்பட்டு, ததீசி மகரிஷியின் ஆச்ரமத்துக்கு வந்து, அவரை நமஸ்கரித்தார்கள். அதனால் அம் முனிவர் மிகவும் மகிழ்ந்து, தேவர்கள் ஒவ்வொருவரையும் தனித் தனியே தன் பாரியையுடன் கூட மரியாதை செய்தார். அவர் களுடைய யோகக்ஷேமங்களையும் விசாரித்தார். பிறகு, எல்லா தேவர் களும் அம் முனிவரைப் பலவாறு வணங்கிப் பின்வருமாறு சொல்லு வாராயினர்:—"ஏ! ரிஷிபுங்கவரே! பூமியில் கற்பக விருக்ஷம்போல் உம்போன்றவர்கள் தயவுடையவர்களா யிருக்கும்போது எங்களுக்கு எது தான் கிடையாது? மனிதர்களுக்குப் புண்யதீர்த்த ஸ்நானம், பிராணிகளிடத்து அன்பு, உம்போன்ற மஹான்களுடைய தரிசனம் ஆகிய இம் மூன்றும் ஜன்மமெடுத்ததின் பயனாக ஏற்படுகின்றன. நாங் கள் இப்பொழுது உம்மிடத்துள்ள அன்பினால் பின்வருமாறு சொல் லுகிறோம்:—அதை நீர் நன்றாய்க் கவனிக்கவேண்டும். நாங்கள் கொடிய இராக்ஷஸர்களையும், அசுரர்களையும் கொன்று வெற்றி யடைந்து, மிக்க சௌக்கிய முள்ளவர்களாய் இவ்விடம் வந்திருக்கி றோம். உம்மைத் தரிசித்ததினால் இன்று அதிகமான சுகத்தை அடை கிறோம். இனி, எங்களுக்கு ஆயுதத்தினால் எவ்விதப் பிரயோஜனமு மில்லை. அதைக் காப்பாற்றுவதற்கும் சக்தியற்றவர்களா யிருக்கி றோம். எங்களுடைய ஆயுதங்களை வைக்குமிடத்தை நிச்சயம் செய்ய முடியவில்லை. தேவலோகத்தில் வைத்தால், ராக்ஷதர்கள் அறிந்து, அவைகளை அபகரித்து, பாதாளலோகம் கொண்டுபோய்ச் சேர்த்து விடுவார்கள். ஆகையால், மகாபரிசுத்தரான உமது ஆச்ரமத்திலேயே இந்த ஆயுதங்களை வைக்கின்றோம். இவ்விடத்தில் அசுரர்கள், இராக்ஷ தர்கள் இவர்களின் பயமே கிடையாது. உம்முடைய ஆக்கினையினால் இப் புண்யதேசம் ரக்ஷிக்கப்பட்டு வருகிறது. தவத்தில் உமக்கு ஒரு வரும் நிகரல்ல. உம்மிடத்தில் இந்த ஆயுதங்களை ஒப்புவித்துவிட்டு, நாங்கள் நந்தனவனத்தை யடைந்து, அப்ஸரஸ்களுடன் திவ்ய போகங்களை யனுபவிப்பதற்கு எங்களுடைய ஸ்தானங்களுக்குச் செல்லுகின்றோம். அதற்கு உத்தரவு கொடுங்கள். இந்த ஆயுதங் களைக் காப்பாற்றுவதற்கு நீரே வல்லவர்."

இந்த வாக்கியங்களைக் கேட்ட ததீசி மகரிஷி "அவ்வாறேயாகட் டும்' என்று சொன்னார். அப்பொழுது நல்ல குணவதியான அவரு டைய பத்னியான லோபாமுத்ரை, "விபரீதத்தை யுண்டுபண்ணுகிற

தேவர்களுடைய காரியத்தினால் என்ன பிரயோஜனம்?" என்று தடுத்தாள். "ஓ! நாதனே! சாஸ்திரத்தை நன்கு உணர்ந்தவர்களும், சம்சார பந்தத்தில் பற்றில்லாதவர்களும் பிறருடைய காரியத்தில் முயற்சி செய்யார்கள். அவ்வாறு செய்வதினால் இம்மையிலும், மறுமையிலும் அற்பசுகமும் கிடையாது. மேலும், தேவர்களுக்குச் சத்துருக்களான இராக்ஷஸர்கள் முதலியோர்கள் உமக்கு விரோதிகளாவார்கள். ஓ! பிராமணோத்தமரே! அந்த ஆயுதங்கள் சேதமாய்ப் போனாலும், அபகரிக்கப்பட்டாலும் தேவர்கள் கோபித்துக் கொள்வார்கள். சத்துருக்களுமாவார்கள். வேதம் அறிந்தவர்களில் முதன்மையானவரே! பிறருடைய சொத்தில் என்னுடையதென்ற மமதையை வைப்பது தகுதியல்ல. திரவிய மிருக்கும்வரைச் சிநேக மிருக்கும். அது நஷ்டமாய்ப் போய்விட்டால், விரோதம் நேரிடும். போன திரவியத்தைத் திருப்பிக் கொடுப்பதற்கு ஒருவருக்குச் சக்தியிருந்தால், அவ்வாறு நிச்சயமாய்க் கொடுத்தலே வேண்டும். சக்தியில்லாத பக்ஷத்தில் பிறருடைய காரியங்களை வார்த்தையினாலாவது, மனத்தினாலாவது, செய்கையினாலாவது சாதுக்கள் செய்யமாட்டார்கள். ஏ! அன்புள்ள நாயகரே! சாதுக்கள் பிறருடைய சொத்துக்களை எவ்விதமாயும் ஏற்றுக்கொள்ளார்கள். ஆதலால், நீர் இவ்வாயுதங்களை ஏற்றுக் கொள்ளாமல் தள்ளிவிடும்" என்றாள். தமது பத்னியின் வார்த்தையைக் கேட்டு, ததீசி முனிவர், "தேவர்களிடம் 'ஆகட்டும்' என்று சம்மதித்துப் பிறகு 'மாட்டேன்' என்று சொல்வது எனக்குத் தகுதியாகத் தோன்றவில்லை" யென்றார். இவ்வாறு சொன்ன கணவருடைய வார்த்தையைக் கேட்டு, லோபாமுத்ரையும், "மனிதர்கள் விஷயத்தில் தெய்வம் ஒன்றே ஸர்வவல்லமையு முள்ளது" என்று மனதில் நினைத்துக்கொண்டு, மௌனமா யிருந்தாள். அச் சமயத்தில் இந்திரன் முதலிய தேவர்கள் மிகவும் பிரகாசமான தங்கள் ஆயுதங்களை அம்முனிவரிடம் ஒப்புவித்துவிட்டு, அம் முனிவரை வணங்கித் தங்கள் காரியம் நிறைவேறப் பெற்றவர்களாய், அவரவர்கள் இருப்பிடம் சென்றார்கள்.

பிறகு, ததீசி மகரிஷி தன் பார்யையுடன் தவம் செய்துகொண்டிருந்தார். அவ்வாறு தேவ வருஷங்களில் ஆயிர வருஷங்கள் சென்றன. தேவர்கள் ஆயுதங்கள் விஷயமாய் நினைக்கவுமில்லை; பேசவுமில்லை. ததீசி முனிவரும் தமது மனைவியைப் பார்த்து, "ஓ! மங்கள

முள்ளவனே! இந்த ஆயுதங்களின் விஷயமாய் இராக்ஷதர்கள் முதலி யோர்கள் என்னை விரோதிக்கிறார்கள். தேவர்களும் ஆயுதங்களைக் கொண்டுபோக இஷ்டமில்லாதவர்களா யிருக்கிறார்கள். ஆயுதங் களோ இவ்விடத்திலேயே இருக்கின்றன. இவைகளை என்ன செய் தால் தகுதியா யிருக்கும்?" என்று கேட்டார். அதற்கு அவள், "நான் முன்னமேயே மிகவும் வணக்கத்துடன் சொல்லியாய் விட்டது. ஆதலால், இப்பொழுது எது யுக்தமென்பதை நீரே அறியவல்லவர்" என்றாள். அப்பால் அம் முனிவர், "கூட்டத்தில் தேவர்களைவிட மிகுந்தவர்களும், தவவலிமை, தேகபலம் இவைகளை யுடையவர்களு மாகிய அசுரர்கள் நிச்சயமாய் இவ் வாயுதங்களை அபகரித்துக் கொண்டுபோவார்கள்" என்று மதித்து, அவைகளைக் காப்பாற்றும் பொருட்டு, பின்வரும் செய்கையைச் செய்தார்:—அதாவது, புண்ய தீர்த்தங்களினால் வேத மந்திரங்களுடன் அந்த ஆயுதங்களைச் சுத்தி செய்து, எல்லா அஸ்திரங்களின் சொரூபமா யுள்ளதும், தேஜஸ் ஸுடன் கூடியதும், பரிசுத்தமா யுள்ளதுமான அந்தத் தீர்த்தத்தைப் பானம் பண்ணினார். பிறகு, வெளியே யிருந்த அந்த ஆயுதங்கள் எவ் வித வல்லமையு மற்றவைகளாய், சிலகாலத்துக் கெல்லாம் முற்றிலும் நாசத்தை யடைந்தன.

அப்பால் ஒருசமயம், தேவர்கள் ததீசி முனிவரை நோக்கி, "சத்ருக்களால் எங்களுக்கு மிகுந்த பயம் நேரிட்டிருக்கிறது. ஆத லால், உம்மிடத்தில் ஒப்பிக்கப்பட்டிருக்கிற ஆயுதங்களை எங்களுக் குக் கொடுத்தருளும்" என்று கேட்டார்கள். அப்போது அம் முனி வரும், "ஓ! தேவர்களே! அசுரர்களின் பயத்தாலும், நீங்கள் வெகு காலமாய் வராததாலும் நான் அந்த அஸ்திரங்களைச் சாப்பிட்டுவிட் டேன். எனது சரீரத்துக்குள் ளிருக்கின்றன. ஆகையால், இனிமே லாகவேண்டியதைச் சொல்லுங்கள்" என்று சொன்னார். தேவர்கள் அவரை மிகவும் வணங்கி, "அஸ்திரங்களைக் கொடுங்கள் என்று சொல் வதற்குமட்டுந்தான் எங்களாலாகும். வேறு எவ்வித மறுமொழியைச் சொல்வதற்கும் நாங்கள் சக்தர்களல்ல. ஆயுதங்க ளில்லாமல் அவ மானத்தை யடைகிறோம். சத்ருக்கள் அபிவிருத்தி அடைந்து வரு கிறார்கள். மூன்று லோகங்களி லெங்கும் நாங்கள் வசிக்க முடியாத வர்களா யிருக்கின்றோம். நீர் பிராமணர்களில் முதன்மை யானவர். தவத்துடன் கூடியவர். ஆதலால், ஆயுதங்களைக் கொடுப்பதைத்

தவிர மற்ற வார்த்தைகள் உமக்குத் தகுதியல்ல'' என்றார்கள். ததீசி முனிவர், ''ஓ! தேவர்களே! உங்களுடைய ஆயுதங்கள் என்னுடைய எலும்பிலிருக்கின்றன. எடுத்துக் கொள்ளுங்கள். அந்த விஷயத்தில் சந்தேகம் வேண்டாம்'' என்றார். தேவர்கள், ''இதனால் எங்களுக்கு என்ன பிரயோஜனம்? அஸ்திரங்கள் இல்லாததினால் நாங்கள் ஸ்திரீ களைப்போ லாயினோம்'' என்றார்கள். முனிவர், ''நான் யோக நிலை மையி லிருந்துகொண்டு, என் பிராணனைச் சரீரத்திலிருந்தும் நீக்கிக் கொள்ளுகிறேன். உங்களுடைய அஸ்திரங்களெல்லாம் என்னுடைய எலும்பாக மாறி யிருக்கின்றன. அவ் வெலும்பைக் கொண்டு உத் தமமான அஸ்திரங்களைச் செய்து கொள்ளுங்கள்'' என்று சொன் னார். இவ்வாறு சொன்ன தைரிய குணமுள்ளவரும், அக்னியைப் போல் பிரகாசிப்பவருமான அம் முனிவரைப் பார்த்துத் தேவர்கள், 'அவ்வாறே செய்யும்' என்றார்கள். அச் சமயத்தில் அம் முனிவரு டைய நன்மையைக் கோரும் அவருடைய பத்னி அங்கு இல்லை. அவளால் தடை நேரிடும் என்று தேவர்கள் பயந்து, சீக்கிரம் பிராண னைத் துறக்கும்படி அம் முனிவரை வேண்டினார்கள். உடனே அம் முனிவர் மிகுந்த சந்தோஷத்துடன் ''இச் சரீரத்தா லெனக் காக வேண்டிய தென்ன? இந்த எலும்புகளால் நீங்களெல்லோரும் சந் தோஷத்தை யடையுங்கள்'' என்று சொல்லி, நீக்குதற் கரியதான தமது ஜீவனை விட்டார். அவர் பத்மாசனத்தி லிருந்துகொண்டு, அவ ருடைய இரு கண்களும் மூக்கின் நுனியைப் பார்த்துக்கொண் டிருக் கும் நிலைமையில் அவருடைய பிராணனைச் சுழுமுனை வழியாய், பிரம சொரூபமாயும், உபாஸிக்கத் தக்கதாயுமுள்ள பிரமானந்தத்திற்குச் செலுத்தி, அங்கேயே புத்தியை நிலைநிறுத்தி, பிரமசாயுஜ்யத்தை யடைந்தார். பிறகு தேவர்கள், அவர் சரீரத்திலிருந்து ஆத்மா வில கியதை யறிந்து, விசுவகர்மாவைப் பார்த்து, ''அனேக அஸ்திரங்கள் உடனே செய்யவேண்டும்'' என்றார்கள். அப்போது விசுவகர்மாவும், ''அப் பிராமணருடைய சரீரத்தைப் பிளந்து, உத்தமமான ஆயுதங் களைச் செய்வதற்கு எனது மனது நடுங்குகின்றது'' என்று சொல்ல வும், தேவர்கள் பசுக்களை நோக்கி, பின்வருமாறு சொன்னார்கள்:— ''ஏ! பசுக்களே! உங்களுடைய முகங்களை உங்களுடைய நன்மைக் காக வச்சிரம்போல் பலமுள்ளதாகச் செய்கிறோம். ஆதலால், நீங்கள் இந்த ரிஷியின் சரீரத்தைப் பிளந்து எலும்புகளைச் சுத்தமாக்கிக்

கொடுங்கள்" என்றார்கள். உடனே, பசுக்களும் தேவர்களின் உத்தரவுப் பிரகாரம், நாக்கினால் எலும்புகளை நக்கிச் சுத்தம் செய்தன. பிறகு, விசுவகர்மா தேவர்களுக்கு வேண்டிய எல்லா ஆயுதங்களையும் செய்து முடித்தார். பசுக்கள் தேவர்கள் யாவரும் அவரவர் இடத்திற்குச் சென்றார்கள். விசுவகர்மாவும் ஆயுதங்களைச் செய்து முடித்து, தேவர்களுக்குக் கொடுத்துவிட்டு, தனது இருப்பிடம் சென்றார்.

மகா குணவதியான ரிஷிபத்னியாகிய லோபாமுத்திரை இளம் கெர்ப்பமுடையவளா யிருந்துகொண்டு ஜலம் நிறைந்த பூர்ண கும்பம், பழங்கள், புஷ்பங்கள் இலைகள் சகிதம் லோகமாதாவாகிய பார்வதியை வணங்கி, தனது கணவன், அக்னி, ஆச்ரமம் இவைகளைச் சீக்கிரம் காண விருப்பமுள்ளவளாய்ப் புறப்பட்டாள். வரும் வழியில் கழுத்தில் நின்றும் வழுவி, பூமியில் விழுந்த தனது கண்டாபரணத்தையும், தனது கைகளிலிருந்து நழுவின கடகாபரணங்களையும் பார்த்து, மிகுந்த மனவருத்தத்தை யடைந்தாள். அப்படியே அவளது வலது கண்ணும் துடித்தது. கூடிய சீக்கிரத்தில் தனக்குக் கெடுதி சம்பவிக்கப் போகிறதென்று தன் மனதில் நினைத்துக்கொண்டு வரும்பொழுது, ஆகாயத்திலிருந்து கீழே விழுந்த ஒரு கொள்ளிக் கட்டை அவளைத் தடுத்தது. உடனே, அவள் அதிவேகமாய் வந்து ஆச்ரமத்துக்குள் நுழைந்து தனது பர்த்தாவைக் காணாதவளாய்த் திடுக்கிட்டு, 'எனது கணவர் எங்கே' என்று அக்னியைக் கேட்டாள். அப்பொழுது அக்னிபகவான் தேவர்கள் வரவு அஸ்திரங்களை யாசித்தது, ரிஷியின் எலும்பினால் அஸ்திரம் செய்துகொண்டது, அவர்கள் திரும்பிச் சென்றது முதலிய எல்லா விருத்தாந்தங்களையும் விஸ்தாரமாய் அவளுக்குச் சொன்னார். அவள் அவைகளைக் கேட்டு, மிகுந்த துக்கத்துடன் பூமியில் விழுந்தாள். அக்னிபகவான் அவளை மெதுவாய்ச் சமாதானப்படுத்தினார். பிறகு அவள், "நான் தேவர்களைச் சபிப்பதற்குத் தகுதியற்றவளா யிருக்கிறேன். இனிமேல் [illegible] என்ன ஆகவேண்டியிருக்கிறது? அக்னிப் பிரவேசம் செய்கிறேன்" என்றாள். அப்பால், அப் பதிவிரதை தனது கோபத்தையும், துக்கத்தையும் அடக்கிக்கொண்டு, தனது கணவன் விஷயமாய் [illegible] தருமமுள்ள வார்த்தைகளைச் சொன்னாள்:—"[illegible]

[illegible] எல்லா [illegible] நாசத்தை யடை[illegible]

பால், அதைப்பற்றித் துக்கிப்பதில் என்ன பயன்? புண்ணியவான்களான மனிதர்கள் மிகவும் அருமையான தங்கள் பிராணன்களை தேவர்கள், பிராம்மணர்கள், பசுக்கள் இவர்கள் விஷயமாய் விட்டுவிடுகிறார்கள். சுற்றிக்கொண்டு வருகிற சம்ஸார சக்கரத்தில், தர்மத்துடன் கூடிய சரீரத்தை யடைந்து, பிரியமான ஜீவன்களை தேவர்கள், பிராம்மணர்கள் இவர்கள் நிமித்தமாய் எவர்கள் விட்டுவிடுகிறார்களோ, அவர்களே பாக்கியவான்கள். தேகத்துடன் கூடிய இப் பிராணன் எப்படியும் போகும் என்பதற்குச் சந்தேகமில்லை. இதை எவர்கள் நன்றாய் அறிந்து, பிராம்மணர்கள், தேவர்கள், பசுக்கள் இவைகளின் உபகாரத்திற்காக உயிர்களை விட்டுவிடுகிறார்களோ, அவர்களே ஈசுவரர்கள். மிகவும் வணக்கத்துடன் என்னால் தடுக்கப்பட்ட போதிலும், எனது நாயகரான ததீசி மகரிஷி தேவர்களின் ஆயுதங்களைக் காப்பாற்றுவதாய் ஏற்றுக்கொண்டார். மனுஷ்ய லோகத்துக்கு மீறினதான திருவிளையாடல்களை யுடைய தெய்வதத்தின் கருத்தை யாரால் அறிய முடியும்?'' என்று இவ்விதமாய்ச் சொல்லி, அக்னிகளை சாஸ்திரவிதிகளின்படி பூஜித்துத் தனது பர்த்தாவின் தோலை மேலே போர்த்துக்கொண்டு, தன்னுடைய வயிற்றைக் கிழித்துத் தனது கர்ப்பத்திலிருந்த சிசுவைக் கையில் எடுத்துக்கொண்டு, கங்கையையும், பூமிதேவியையும், ஆச்ரமத்தையும், அங்குள்ள மரங்களையும் நமஸ்கரித்து, "லோக பாலகர்களே! மிருகங்களே! பக்ஷிகளே! மரங்களே! கொடிகளே! நீங்கள் எல்லோரும், தாய் தந்தை பந்துக்கள் எவருமில்லாத அநாதையான இக் குழந்தையை இரக்ஷியுங்கள். யார் தாய்தந்தையற்ற குழந்தையைத் தன் குழந்தையைப் போலெண்ணிக் காப்பாற்றுகிறார்களோ, அவர்கள் பிரமா முதலிய தேவர்களாலும் வணங்கிக் கொண்டாடத் தக்கவர்கள்'' என்றிவ்வாறு சொல்லிக் கணவனை மனதில் தியானம் செய்துகொண்டு, குழந்தையை அரசமரங்களின் சமீபத்தில் வைத்து, அக்னியைப் பிரதக்ஷணம் செய்து, யாகபாத்திரங்களுடன் கூட அக்னிப்பிரவேசம் செய்தாள். உடனே தனது கணவருடன் கூட ஸ்வர்க்க லோகம் போய்ச் சேர்ந்தாள்.

அச் சமயத்தில் அவ் வனத்திலுள்ள மரங்கள், "நம்மை இதுவரையிலும் லோபாமுத்ரா தேவியும், ததீசி மஹரிஷியும் தாய் தந்தை போல் காப்பாற்றி வந்தார்கள். அவர்களை விட்டுப் பிரிந்து நாம் எவ்விதம் பிழைப்போம்?'' என்று வருத்தப்பட்டன. இந்தப் பிரகாரம் [illegible] மிருகங்களும், பக்ஷிகளும் சம்பாஷித்துக்கொண்டு துக்கப்பட்

டன். "சுவர்க்கத்தை யடைந்தவர்களா யிருக்கிற தாய் தந்தையர் விஷயத்தில் எந்தப் புத்திரர்கள் உண்மையான அன்பு பாராட்டுகிறார்களோ, அவர்களே புண்யசீலர்கள்: லோபமுத்ரை, ததீசி இவர்களைப் போல, ஒப்பற்ற தாய் தந்தையர்களும் கூடக் காப்பாற்ற மாட்டார்கள். நாமிப்பொழுது மகா பாவிகளாய் விட்டோம்" என்று மரங்கள் சொல்லிக்கொண்டன. பிறகு மரங்கள் அக் குழந்தையை வளர்த்த விருத்தாந்தங்கள் பிப்பலாத முனிவருடைய சரித்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

---

## 81. தத்தாத்ரேயர்.

---



ருதவீரியனுடைய புத்ரன் (1) அர்ஜுனன். அவன் ஹைஹய தேசத்துக்கு அரசன். அவனுடைய பிரதான நகரம் மாகிஷ்மதி. அவன் உலகங்களை யெல்லாம் தன் புஜவலிமையினால் ஒரு குடைக்கீழ் அரசாண்டு வந்தான்: அவன் க்ஷத்திரிய தர்மங்களையும், வேதத்தையும் நன்றாயறிந்து, மிகுந்த பக்தி விநயத்துடன் ஆசாரியரும், முனி சிரேஷ்டருமான 'தத்தாத்ரேயருக்கு' ஏராளமாகத் தானங்கள் செய்தான். அவரை மிகவும் பக்தியுடன் வணங்கிப் பூஜித்துவந்த நிமித்தம், அவர் அரசன் பேரில் மகிழ்வுற்று, "உனக்கு வேண்டிய மூன்று வரங்களைக் கேள், கொடுக்கிறேன்" என்றார். அதற்கு அரசன் அவரைப் பார்த்து, "நான் என்னுடைய சேனைகள் மத்தியிலிருக்கும்போதும், நான் விரும்பும் போதும், எனக்கு ஆயிரங் கைகள் உண்டாக வேண்டும். ஆனால், மற்றச் சமயங்களில் எனக்கு இரண்டு கைகள்தான் இருக்கவேண்டும். நான் நல்ல விரதங்களை யெல்லாம் அநுஷ்டித்தவனாய், என்னுடைய பராக்கிரமத்தினால் உலகம் முழுவதையும் அரசாள வேண்டும். உலகத்தைத் தர்மமாய் அடைந்து, கவனமா யாளவேண்டும். இது தவிர, நீர் என்பேரில் கிருபை செய்து நான்காவது வரமொன்று அளிக்கவேண்டும். நான் எப்பொழுதாவது தர்மம் தவறி நடக்கும் பொழுது, தர்மாத்மாக்களா யிருப்பவர்கள் என்னை எச்சரி[illegible]

(1) மஹாபாரதம்—அநுசாஸனபர்வம்.

வழியில் என்னை நடக்கும்படி உபதேசித்து, நல்ல வழிக்குக் கொண்டு வரவேண்டும்'' என்று கேட்டான். இவ்வாறு அர்ஜுன ராஜன் கேட்க, தத்தாத்ரேய முனிவர், ''நல்லது, அப்படியே ஆகுக'' என்று வரமளித்தார். அவ்வாறு அந்த வரங்களையெல்லாம் அந்த அரசன் பெற்று, சுகமாயும், கீர்த்தியாயும் வாழ்ந்து வந்தான். பிற்பாடு அர்ஜுனன் அகங்கார மடைந்ததும், பரசுராமரால் ஜயிக்கப்பட்டதும், பரசுராமருடைய சரித்திரத்தில் எழுதப்பட்டிருக்கின்றன.

மாண்டவிய (1) முனிவருடைய சாபத்தால் உயிரிழந்த பிராமணனைத் தனது கற்பின் மகிமையால் அனசூயை மறுபடியும் உயிர் பெறச் செய்தாள். அப்பொழுது, தேவர்கள் அவளுக்கு முன் தோன்றி, ''உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்'' என்று சொல்ல, அவள், ''பிரமா, விஷ்ணு, மகேச்வரர் ஆகிய மூவரும் எனக்குப் புத்திரர்களாகப் பிறக்கும்படியான வரம் வேண்டும்'' என்று கேட்க, திரிமூர்த்திகள் முதலிய தேவர்களும், ''அப்படியே யாகுக'' என்று வரமளித்தார்கள். அவ் வரத்தின் பயனால் பிரமாவினுடைய அம்சத்திலிருந்து சந்திரனும், மகாவிஷ்ணுவினுடைய அம்சத்திலிருந்து தத்தாத்ரேயரும், பரமசிவனுடைய அம்சத்திலிருந்து துர்வாச மகரிஷியும் அத்திரி மகாமுனிவருக்கும் அனசூயைக்கும் புத்திரர்களாகப் பிறந்தார்கள். இரண்டாவது புத்திரரான தத்தாத்ரேயர், இளமையில் வேதாப்பியாஸம் செய்தபிறகு, உலகத்தில் துஷ்டர்களை சம்ஹரித்தும், ஸாதுக்களை ஆதரித்தும் உலகத்தை ரக்ஷித்து வந்தார். அவர் தன் தாய் தந்தையர்களை விட்டகன்று, 'உன்மத்தர்' என்ற பெரு விரதத்தைக் கைப்பற்றிக்கொண்டு, உலகமெல்லாம் அலைந்தார். ரிஷிகளுடைய புத்திரர்களெல்லாம் அவரை எப்பொழுதும் சூழ்ந்திருந்தார்கள். ஆனால், தத்தாத்ரேயர் அவர்களை விட்டுப் பிரிய விரும்பி வெகுகாலம் ஒரு ஏரிக்குள் மூழ்கியிருந்தார். ஆகிலும், மிகுந்த அழகிய முகத்தையுடைய அம் மகாமுனிவரை அவர்கள் விட்டு அகல மனமில்லாமல், அந்த ஏரியின் கரையிலேயே வாசம் செய்து வந்தார்கள். இவ்வாறு நூறு வருஷங்கள் சென்றன. அப்பொழுதும் அம் முனிபுத்திரர்கள் அவரிடத்திலிருந்த அன்பால் ஏரிக்கரையை விட்டு அகலவே யில்லை. அதன்பேரில் தத்தாத்ரேயர் தேவ வஸ்திரம் அணிந்து, அழகிய மார்பும், இடையுமுடைய மங்கைரூபமாக

(1) மார்க்கண்டேய புராணம்.

ஸ்திரீயுடன் ஏரியின் நீரிலிருந்து வெளியே வந்தார். [illegible] ஸ்திரீ யோடு இருப்பதைக் கண்டால்வது, அம் முனிபுத்திரர்கள் தம்மைவிட் டகலுவார்கள் என்பது தத்தாத்ரேயருடைய எண்ணம். ஆயினும், அச் சிறுவர்கள் அவரை விடுவதாகத் தெரியவில்லை. பிறகு, அவர் அம் மாதுடன் சேர்ந்து மதுபானம் செய்ய ஆரம்பித்தார். அதைக் கண்டும், அம் முனிபுத்திரர்கள் அவரைவிட்டுப் போகவில்லை. இப் படி எல்லாம் செய்தபோதிலும், தத்தாத்ரேயர் ஒரு மகாத்மா என்று அவர்கள் உண்மையாய் அறிந்திருந்தார்கள். வெளிக்கு இச் செய்கை களைச் செய்தாலும், யோகத்தில் சிறந்த அம் முனிவர் தம் பத்தினி யுடன் கடுந்தவம் செய்து வந்தார். ஹேஹய தேசத்து அரசனான கார்த்தவீரியார்ச்சுனன் கார்க்க முனிவருடைய வார்த்தைகளுக்கு இணங்கி, தத்தாத்ரேயருடைய ஆச்ரமத்துக்குச் சென்று, அவரை மிகுந்த பக்தி வினயத்துடன் பூஜித்து வந்தான். அவன் அவருக்குத் தேன், கிழங்கு முதலிய ஆகாரங்கள் சேகரித்தல், ஹாரங்கள், சந்த னம், வாசனைத் தைலங்கள், பழங்கள் இவைகளைக் கொண்டுவருதல், அவர் உண்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தல், அவருக்குக் கை கால்கள் பிடித்தல் முதலிய பணிவிடைகளைச் செய்து, அவரைச் சந் தோஷிப்பித்தான். "ஸ்திரீயுட னிருப்பவனும், கள்ளுண்பதினால் அசுத்தமுடையவனும், யாதொரு சக்தியு மில்லாதவனுமாகிய என்னை வந்து வணங்கி, வேண்டுவதில் பிரயோஜனம் இல்லை. உன்னுடைய மனோபீஷ்டங்களை நிறைவேற்றக் கூடிய வேறு ஒருவரைத் தேடி யடையக் கடவாய்" என்று அம் முனிவர் சொல்ல, அர்ஜுனன் கார்க் கருடைய வார்த்தைகளை மறவாதவனாய், "ஓ! பகவானே! சகல மாயாசக்தியும் கூடிய நீர் ஏன் என்னை இவ்வாறு மயக்கச் செய்கிறீர்? நீர் யாதொரு பயமுமற்றவர். லோக மாதாவாகிய இத் தேவியையும் பாவம் எவ்வாறு அணுகும்?" என்று பதிலுரைத்தான்.

இவ்வாறு சொல்லக் கேட்ட தத்தாத்ரேய முனிவர் அவ்வாச [illegible] னிடத்துக் களிகூர்ந்து, "ஓ! அரசனே! நீ என்னுடைய [illegible] பர ரூபத்தை யறிந்தபடியால், நான் உன்னிடத்து மிகவும் [illegible] [illegible]மானேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள். [illegible] [illegible] என்னை, பிராம்மணர்களால் சொல்லப்பட்ட [illegible] [illegible]களுடனும், சிறந்த நைவேத்யங்களுடனும், இனிமை[illegible] [illegible]களுடனும், சந்தம் முதலிய வாத்யங்களின்றும் உட[illegible]

தெங்களாலும் ஆராதிக்கிறார்களோ, அவர்களுக்கு நான் பத்னிகள், குமாரர்கள், செல்வம் இவைகளை யளிக்கிறேன். என்னை அவமதிப்பவர்களுக்கு அல்பாயுள் உண்டாகும்படி செய்கிறேன். உனக்கு மங்கள முண்டாகுக. நீ என்னுடைய மகிமைகளை எடுத்துக் கானம் செய்தபடியால், நான் உன்மீது கிருபை புரிய ஆயத்தமாயிருக்கிறேன்" என்று சொன்னார். அதற்குக் கார்த்தவீர்யன் அம்முனிவரைப் பின்வருமாறு வேண்டினான்:—"ஓ! பகவானே! உமக்கு என் மீது கிருபை ஏற்பட்டிருக்கும் பக்ஷத்தில், நான் என் குடிகளை நன்றாய் ரக்ஷிக்கவும், எவ்விதத்திலும் என்னைப் பயமணுகாமலிருக்கும்படியாகவும், சிறந்த மங்களத்தை நீர் எனக்கு அருளவேண்டும். பிறருடைய வல்லமையை நான் அறியத்தக்கவனாயிருக்கவேண்டும். யுத்தத்தில் என்னை எதிர்த்துப்போர் செய்பவர் ஒருவருமிருக்கக்கூடாது. நான் ஆயிரம் கைகளும், சிறந்த கைலாகவத்தையும் அடைய விரும்புகிறேன். மலைகள், நீர், பூமி, ஆகாயம், பாதாளலோகம் இவைகளிலுள்ள எல்லா இடங்களிலும் நான் ஒரு தடையுமின்றிப் போகக்கூடிய வல்லமையுடையவனாயிருக்கவேண்டும். என்னைவிட பலவான் எவனோ, அவனால் எனக்கு மரணம் உண்டாகவேண்டும். என்னால் கொடுக்கப்படும் ஏராளமான திரவியங்களினால் என்னைத் தேடிவரும் அதிதிகள் திருப்தியை அடையட்டும். எனது ராஜ்யத்தில் என்னை நினைப்பவர்களுக்கு எவ்விதப் பொருளும் நஷ்டமாகாமலிருக்கட்டும். உம்மிடத்து ஒரே மனதான திடபக்தி எனக்குண்டாகட்டும்" என்றான். தத்தாத்ரேய முனிவர், "நீ கேட்ட வரங்களை யெல்லாம் அடைவாய். இப் பூமண்டல முழுவதையும் ஏகசக்ராதிபதியாய் அரசாளக்கடவாய்" என்று திருவாய் மலர்ந்தருளினார். பிறகு, அவனுடைய மகுடாபிஷேகத்திற்காகக் கந்தர்வர்கள், அப்சரஸ்கள், வசிஷ்டர் முதலான மகரிஷிகள், மேரு முதலிய பர்வதங்கள், கங்கை முதலிய நதிகள், ஏராளமான நீருடன் கூடிய சமுத்திரங்கள், பலாசு முதலிய மரங்கள், வாசவனை முதலாயுள்ள தேவர்கள், பட்டணங்களிலும், கிராமங்களிலுமுள்ளவர்கள் ஆகிய எல்லோரும் வந்து சேர்ந்தார்கள். உலகத்தின் க்ஷேமத்தின் பொருட்டு, தத்தாத்ரேய ரூபத்துடன் விளங்கும் ஸ்ரீமன் நாராயணர் தாமே இருந்து, அவ் வரசனுக்கு மகுடாபிஷேகம் செய்தார். இம் மகாமுனிவருடைய கிருபையால் அவ் வரசன் மிகுந்த பராக்ரமத்தையும், நாடு நகரங்கள் முதலிய எல்லாக்

செல்வங்களையும் பெற்று, ஒருவரும் தனக்கு நிகரில்லாமல் யாகங்கள், தானங்கள் செய்து, தர்மமாய் அரசாண்டு வந்தான்.

ஒருகாலத்தில் (1) தேவர்களுக்கும், தைத்யர்களுக்கும் கொடிய யுத்தம் நேர்ந்து, தேவர்கள் அசுரர்களால் முறியடித்துத் துரத்தப்பட்டார்கள். அப்பொழுது ப்ருகஸ்பதி பகவானின் ஆக்ஞையின்படி தேவர்கள் தத்தாத்ரேய முனிவரைப் பலவாறு துதித்து ஸ்தோத்திரம் செய்தார்கள். அதன்பேரில் தேவர்களை நோக்கி, தத்தாத்ரேயர், "ஓ! தேவர்களே! நீங்கள் மறுபடியும் போய் தைத்யர்களைப் போருக் கழைத்து, அவர்களை என்னுடைய பார்வைக் குள்ளாகும்படி என் முன் வரச் செய்யுங்கள். அவர்கள் என்னால் நோக்கப்பட்டால், என்னுடைய பார்வையாகிய அக்னியால் வல்லமைகள் யாவும் இழந்து நாசத்தை யடைவார்கள்" என்றார். அவ்வாறே தேவர்களும் தைத்தியர்களை மறுபடியும் போருக் கழைக்கவும், தைத்தியர்கள் கோபத்துடன் தேவர்களுடன் எதிர்த்துப் போர் புரிந்தார்கள். தேவர்கள், தைத்தியர்களுக்கு முன் நிற்க ஆற்றலில்லாதவர்களாய் வேகமாய் தத்தாத்ரேய முனிவருடைய ஆச்ரமத்துக்குச் சென்று, அங்கே அவரைச் சரணமடைந்தார்கள். தேவர்களைத் துரத்திக்கொண்டு போன தைத்யர்களும் அந்த ஆச்ரமத்துக்குட் சென்று, மிகுந்த சக்தியுடன் கூடியவரும், மகாத்மாவுமான தத்தாத்ரேயரைக் கண்டார்கள். அவருடைய இடது பக்கத்தில் சந்திரன்போன்ற முகமும், நீலோத்பலம் போன்ற கண்களும், அழகான இடையும், மார்பும் உடைய லக்ஷ்மி தேவி மதுரமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டு, அங்கங்கள் யாவும் அழகுடன் கூடியவளாய், ஒரு ஸ்திரீயிக்குரிய ஸகல லக்ஷணங்களும் பொருந்தி வீற்றிருக்கக் கண்டார்கள். தைத்தியர்கள் அவளைக் கண்டதும், அவர்களுடைய மனங்கள் காமத்தால் கலக்கமடைந்தன. அதனால் பொங்கிவரும் ஆசையை அடக்கச் சக்தியற்றவர்களாய், அவர்கள் தேவர்களை விட்டுவிட்டு, வலிமை குன்றினவர்களாய் அம் மாதை அபகரித்துக்கொண்டு போக நினைத்தார்கள்.

பாபத்தால் மூடப்பட்ட தைத்யர்களும், தானவர்களும், "இம் மூன்று உலகங்களிலும் சாராம்சமாயுள்ள இந்த ஸ்திரீரத்னத்தை நாம் அடைவோமானால், நமக்கு ஸகல மங்களங்களும் உண்டாகும். இது உறுதி" என்று சொல்லிக்கொண்டு, லக்ஷ்மி தேவியை ஒரு பல்லக்

(1) மார்க்கண்டேய புராணம்.

[illegible]ளை வைத்துக்கொண்டு, காமத்தால் பிடிக்கப்பட்டவர்களாய், தங்களுடைய இருப்பிடங்களை நோக்கிச் சென்றார்கள். பிறகு, தத்தாத்ரேயரும் புன்சிரிப்புடன் தேவர்களைப் பார்த்து, "அதிர்ஷ்ட வசத்தால் உங்களுக்கு மங்களம் உண்டாகப் போகிறது. லக்ஷ்மீதேவி எழு ஸ்தானங்களையும் விட்டு, தைத்யர்களுடைய தலையின்பேரில் போயிருப்பதால், அவள் அவர்களை விட்டு நீங்கி, வேறு மனிதனைப் போய் அடைவாள்" என்றார். தேவர்கள், "ஓ! லோகநாதரே! எந்தெந்த ஸ்தானங்களில் லக்ஷ்மி இருந்தால், மனிதர்களுக்கு நன்மைகளையும், தீமைகளையும் அளிக்கிறாள் என்பதைச் சொல்லும்" என்று கேட்டார்கள். தத்தாத்ரேயர், "லக்ஷ்மி ஒரு மனிதனுடைய பாதத்தின் மீது இருந்தால் அவனுக்கு வீட்டைக் கொடுக்கிறாள். அவனுடைய தொடையிலிருந்தால் அவனுக்கு வஸ்திரங்கள் முதலிய பலவிதத் திரவியங்களைக் கொடுக்கிறாள். மலவிஸர்ஜனம் செய்யும் இந்திரியத்திலிருந்தால் மனைவியையும், மடியிலிருந்தால் சந்தானத்தையும் கொடுக்கிறாள். மார்பிலிருந்தால் மனிதனுடைய விருப்பங்களை நிறைவேற்றுகிறாள். கழுத்திலிருந்தால் கழுத்தில் அணிவதற்குரிய ஒரு ஆபரணம், அன்னிய தேசங்களிலுள்ள பிரியமான ஸ்நேகிதர்கள், மனைவிகள் இவர்களுடைய சேர்க்கை, சாதுர்யமான வாக்கு, அழகு, இட்ட கட்டளைகளைத் தவறாமல் நிறைவேற்றிக் கொள்ளும்படியான சக்தி இவைகளை அருளுகின்றாள். பாற் கடலிலிருந்து உண்டாகிய லக்ஷ்மி ஒருவனுடைய வாயில் நுழைந்தால், அவன் ஒரு சிறந்த கவியாகிறான். ஆனால், அவள் ஒருவனுடைய தலைமீது வைக்கப்பட்டால், அவள் அவனைவிட்டு நீங்கி, வேறு எங்கேயாவது போய்விடுகின்றாள். இப்பொழுது அவள் அவர்கள் தலைமீதிருப்பதால் அவள் அவர்களை உடனே துறந்துவிடுவாள். ஆதலால், நீங்களெல்லோரும் உங்களுடைய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு, உங்கள் பகைவர்களைப் போய்த் தாக்குங்கள். அவர்களுடைய சக்திகளெல்லாம் என்னால் வெகுவாய் அபகரிக்கப் பட்டபடியால் நீங்கள் அவர்களைக் கண்டு மிகவும் அஞ்சவேண்டாம். பிறனுடைய மனைவியை அவர்கள் அபஹரித்ததனால் அவர்களுடைய தர்மங்கள் யாவும் நசித்துப் போயின. அவர்களுடைய சக்தியும் அழிந்து போயிற்று" என்றார். [illegible] தேவர்கள் எல்லோரும் சந்தோஷம் நிறைந்தவர்களாய், [illegible], லக்ஷ்மி பல்லக்கினின்றும் குதித்து, தத்தாத்ரேய மஹாமுனிவரைப் போயடைந்தாள். அதன்பேரில் தேவர்கள் தைத்யர்களை

ஜெயித்து, தத்தாத்ரேயரை வணங்கிப் போற்றி, சுவர்க்கலோகத்தை முன்போலடைந்து சுகமாய் வாழ்ந்திருந்தார்கள்.

---

## 82. தமனர்.

---

இவர் (1) ஒரு பிரமரிஷி. விதர்ப்ப தேசத்துக்கு அரசனான பீமராஜன் புஜபல பராக்கிரம முள்ளவனும், குடிகளிடத்து அன்புள்ளவனும், நற்குணங்கள் நிறைந்தவனுமா யிருந்தான். ஆனால், அவனுக்கு யாதொரு சந்ததியு மில்லை. அவன் தனக்குச் சந்ததி யுண்டாகும்பொருட்டு, திடமான மனத்தை யுடையவனாய், அநேக விரதங்களை அனுஷ்டித்து வந்தான். அச் சமயத்தில் தமன ரிஷி அரசனிடத்து வந்தார். புத்திர சந்தானம் வேண்டுமென்ற அவாவினை யுடைய அரசன் தன்னுடைய பட்டமகிஷியுடன் அந்த ரிஷியை மரியாதையாய் எதிர்கொண் டழைத்து, அவருக்கு வந்தனை வழிபாடுகள் செய்து, அவரை உபசரித்து வந்தான். தமனர் அத் தம்பதிகளிடத்து மகிழ்வுற்று, ஸ்திரீரத்னம் போன்ற ஒரு குமாரத்தியையும், உத்தமர்களும், கீர்த்தி பெற்றவர்களுமான மூன்று குமாரர்களையும் அவர்களுக்கு உண்டாகும்படி அநுக்ரஹம் செய்தார். அந்தக் குமாரத்தியின் பேர் தமயந்தி. அவளே, மகாதர்மிஷ்டரான நளமகாராஜனை நாயகனாக அடைந்து, பதிவிரதைகளிற் சிறந்தவள் எனப் புகழ் பெற்றாள்.

---

## 83. தனுவாக்ஷர்.

---

ஆதி காலத்தில் (2) வாலதி என்ற முனிவர் இருந்தார். அவர் மிகுந்த தவசக்தியை யுடையவர். அவருடைய ஒரே குழந்தை இறந்துபோன துக்கத்தினால், இறப்பில்லாத சாச்வதமான புத்திரனை யடையவேண்டுமென்று அவர் உக்ர



(1) (2) மஹாபாரதம்—வனபர்வம்.

பிரஹ தவஞ் செய்தார். தேவர்கள், அம் முனிவரிடத்துக் கிருபை யுடையவர்களா யிருந்தாலும், அவருடைய புத்திரனைத் தேவர்களைப் போல சாவற்றவனுக்கச் செய்ய மனமற்றவர்களாய், அம் முனிவரைப் பார்த்து, "எவ்விதத்திலும் இறக்கத் தக்கவனை இறப்பில்லாதவனுகச் செய்வதென்பது முடியாது. ஆயினும், உமது புத்ரனுடைய உயிர் அவனுடைய தேக அழிவைப் பொருத்திராமல், வேறு வஸ்துவின் நாசத்தைச் சார்ந்ததாக இருக்கும்" என்றார்கள். அதன் பேரில் வாலதி முனிவர், "ஓ! தேவர்களே! இப் பர்வதங்கள் ஆதிமுதல் அழிவில்லாமல் நிலையாய் இருந்து வந்திருக்கின்றன. அழிவில்லாம லிருக்கின்ற அவைகளே என் மகன் உயிரிழப்பதற்குக் கருவிக் காரணமா யிருக்கட்டும்" என்று கேட்டார். அப்படியே தேவர்களும் வரமளித்தார்கள். சில காலத்திற்குப் பிறகு, வாலதி முனிவருக்கு ஒரு குமாரன் பிறந்தான். அவனுக்கு மேதாவி என்று பெயர். அவன் மிகுந்த கோபக் குணமுடையவனு யிருந்தான். தனது பிறப்பின் சம்பந்தமாய் நிகழ்ந்த சங்கதிகளைக் கேள்விப்பட்டு, அவன் அகங்காரம் மேலிட்டவனுய் முனிவர்களை அவமதித்துக் கொண்டு வந்தான். முனிவர்களுக்கெல்லாம் இடைஞ்சல்கள் செய்துகொண்டு உலகம் முழுவதும் திரிந்துகொண் டிருந்தான். ஒருநாள் தவச் சிரேஷ்டரான "தனுஷாக்ஷர்" என்ற முனிவரைக் கண்டான். மேதாவி அவரை நிம்லித்துத் துன்பம் செய்தான். அதன்பேரில் அவர் கோபங் கொண்டு, "நீ சாம்பலாகக் கடவாய்" என்று சபித்தார். ஆனால் மேதாவி சாம்பலாகவில்லை. பிறகு 'தனுஷாக்ஷர்' மேதாவியினுடைய உயிர் போவதற்குக் காரணக் கருவியாய் உள்ள மலையை எருமைகளால் பிளக்கச் செய்தார். அம் மலை பிளந்ததும் மேதாவி தன் பிராணனை யிழந்தான். மேதாவியின் தகப்பன் தன் மகனுக்கு நேர்ந்த விதியை நினைத்து, அவனைக் கட்டிக்கொண்டு துக்கத்தால் பிரலாபித்தார். அப்பொழுது வேதங்களை யறிந்த முனிவர்கள் வாலதி முனிவர் துக்கித்துக்கொண் டிருப்பதைப் பார்த்து, "ஐயா! ஏன் வீணாய் அழுகின்றீர்? சாவுக்குள்பட்ட ஒருவன் விதியால் ஏற்பட்டிருப்பதை எவ்விதத்திலும் தடுக்கமுடியாது" என்றனர். "தனுஷாக்ஷர்" எருமைகளைக் கொண்டு மலைகளைக்கூடப் பிளக்கும்படியான சக்தியுள்ளவரா யிருந்தார். இவ்வாறு சிறிய தபஸிகள் வரங்களைப் பெற்று அகங்காரங் கொண்டு சீக்கிரத்தில் நாசத்தை யடைகின்றார்கள்.

# 84. தக்ஷர்.





க்ஷர் (1) பிரமாவினுடைய புத்ரர். அவருடைய கட்டைவிரலிலிருந்து பிறந்தார். பிரமாவினுடைய இடதுகட்டைவிரலிலிருந்து தக்ஷருடைய பார்யை உண்டானாள். தக்ஷர் அவளிடத்து ஐம்பது பெண்களைப் பெற்றார். அந்த ஐம்பது குமாரத்திகளும் குற்றமற்ற அழகிய அங்கங்களுடையவர்களாயும், தாமரை இதழ்கள் போன்ற கண்களையுடையவர்களாயுமிருந்தார்கள். தக்ஷருக்குப் புத்திரரில்லாத நிமித்தம் தன்னுடைய ஐம்பது குமாரத்திகளிடமிருந்து ஜனித்த புத்ரர்களைத் தமக்கும் அவர்களுக்கும் புத்ரர்களாயிருக்கும்படி நியமித்துக்கொண்டார். தக்ஷர் சாஸ்திர விதிகளின்படி தன்னுடைய புத்ரிகளில் பத்துப்பேரை தருமதேவதைக்கும், இருபத்தேழு குமாரத்திகளைச் சந்திரனுக்கும், பதின்மூன்று குமாரத்திகளைக் காசியபருக்கும் விவாகம் செய்து கொடுத்தார். தருமருக்குக் கொடுத்த பத்துப் புத்திரிகளின் பெயர்களாவன:—கிருதி, லக்ஷ்மி, திருதி, மேதை, புஷ்டி, ச்ரத்தை, கிரியை, புத்தி, லஜ்ஜை, மதி என்பவர்கள். சோமனுடைய இருபத்தேழு மனைவிகள்தான், அச்வினி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்கள். அவர்கள் உலகத்தில் காலவர்த்தமானங்களை நிர்ணயிப்பதற்கு உதவியாக இருந்து வருகிறார்கள். தக்ஷரிடத்திலிருந்துதான் பிரபஞ்சத்திலுள்ள சகல பிராணிகளும் சிருஷ்டிக்கப்பட்டன. ஆதலால், அவரைப் பிதாமஹர் என்றும், தக்ஷப்பிரஜாபதி என்றும் சொல்வதுண்டு. காசியபருக்குக் கொடுத்த தக்ஷருடைய பதின்மூன்று குமாரத்திகளின் பெயர்கள்:—1-அதிதி, 2-திதி, 3-தநு, 4-ஸிம்ஹிகை, 5-க்ரோதை, 6-தராயு, 7-காலை, 8-விநதை, 9-கத்ரு, 10-ப்ராதை, 11-விச்வை, 12-கபிலை, 13-முநி. இவர்கள் பதின்மூவரும் மேலே சொன்னபடி காசியபரின் மனைவிகள். இவர்களிடத்திலிருந்துதான் தேவர்கள், அசுரர்கள், தானவர்கள், கருடன் முதலிய பக்ஷிகள், நாகங்கள், கந்தர்வர்கள், அப்ஸரஸ்திரீகள் இவர்கள் உண்டானார்கள். தக்ஷர் அவருடைய மறுபிறப்பில் பிரசேதஸ் என்பவருடைய பதினொ[illegible]

(1) மஹாபாரதம்—ஆதிபர்வம்.

குமாரர். தக்ஷமுனிவர், விருணி என்ற பத்தினியைக் கலந்து, தன்னைப்போன்ற தவமகிமையுள்ள ஆயிரம் புத்திரர்களைப் பெற்றார். அந்தப் புத்திரர்கள் உத்தம கதியை அடையும்பொருட்டு, சாங்கியம் என்ற ஞானமார்க்கம் அவர்களுக்கு உபதேசிக்கப்பட்டது. ஆதலால், அவர்கள் நிவர்த்தி மார்க்கத்தி லிறங்கினவர்களாய், பிரஜோத்பத்தி யாதொன்றும் செய்யவில்லை.

ஆதிகாலத்தில் (1) தக்ஷர் ஹிமயமலைச் சாரலில் கங்காநதியின் உற்பத்தி ஸ்தானத்துக்குச் சமீபத்தில் ரிஷிகளும், ஸித்தர்களும் வசித்துக்கொண்டிருக்கும் புண்ணியக்ஷேத்திரத்தில், ஒரு பெரிய யாகத்திற்கு எத்தனம் செய்தார். நானாவித மரங்களும், கொடிகளும் நெருங்கி வளர்ந்து, அந்த இடம் கந்தர்வர்களாலும், அப்ஸரஸ்திரீகளாலும் சஞ்சரிக்கப்பட்டது. அனேக ரிஷிகளால் சூழப்பட்டு, ஜீவன்களுக்கெல்லாம் உற்பத்தி ஸ்தானமாயும், தர்மாத்மாக்களில் முதன்மையானவராயுமுள்ள தக்ஷ ரிஷியை அடுத்து, பூலோகவாசிகளும், ஆகாசவாசிகளும், தேவர்களும் பயபக்தியுடன் கைகட்டிக் காத்திருந்தார்கள். அந்த யாகத்தில் அவிர்ப்பாகம் பெறுவதற்காக தேவர்கள், தானவர்கள், கந்தர்வர்கள், பிசாசர்கள், நாகங்கள், ராக்ஷஸர்கள், ஹாஹா, ஹூஹூ என்ற கந்தர்வர்கள், தும்புரு நாரதர், விச்வாவஸு, வில்வஸேனன் முதலிய கந்தர்வர்கள், ஆதித்யர்கள், அப்ஸரஸ்கள், வஸுக்கள், ருத்ரர்கள், சாத்யர்கள், மருத்துக்கள் ஆகிய இவர்கள், இந்திரனை முதலாகக் கொண்டு, அவ்விடத்துக்கு வந்தார்கள். உஷ்ணத்தைப் பானம் செய்கிறவர்களும், ஸோமபானம் செய்கிறவர்களும், புகையைப் பானம் செய்கிறவர்களும், நெய்யைப் பானம் செய்கிறவர்களும், ரிஷிகளும், பிதுருக்களும், பிராமணர்களும் அங்கு வந்தார்கள்.

இவற்றையெல்லாம் பார்த்துத் ததீசி மகரிஷி மனவருத்தமும் கோபமுமடைந்தவராய்ச் சொன்னதாவது:—“இதில் ருத்ரதேவனைப் பூஜிக்காதபடியால், இது ஒரு யாகமுமல்ல. அல்லது, தர்மசம்மதமான சாஸ்திர கர்மமுமன்று. நீங்கள் நிச்சயமாய் மரணம் முதலிய துன்பங்களுக்கு உட்படுவீர்கள். ஐயோ! இது என்ன விபரீத காலமாயிருக்கிறது. அஞ்ஞானத்தால மயக்கமுற்றவர்களாகி, உங்களுக்கு நேரிடப்போகிற அனர்த்தத்தை அறியாமலிருக்கிறீர்கள்.

(1) மஹாபாரதம்—சாந்திபர்வம்.

இப் பெரிய யாகம் நடந்துகொண்டிருக்கும்பொழுது ஒரு பெரிய துன்பம் விளையக் காத்திருக்கிறது. அது உங்களுக்குத் தோன்ற வில்லை." இந்த வார்த்தைகளைச் சொல்லிவிட்டு, அந்த மகாயோகி தம்முடைய யோகதிருஷ்டியால், பின்னால் சம்பவிக்கப்போகிற சங் கதிகளைக் கண்டார். அவர், கைலாசபர்வதத்தின் உச்சியில் மகா தேவரும், அவருடைய பத்னியும், அவர்களுக்குப் பின் நாரதரும் உட்கார்ந்திருக்கக் கண்டார். யோகஞானத்தினால் இன்னது நடக்கும் என்பதைத் தெரிந்து மிகவும் திருப்தியானார். அந்த யாகத்துக்கு ருத்ரரை அழைத்து அவருக்கு அவிர்ப்பாகம் கொடுக்கவேண்டாம் என்ற விஷயத்தில் தேவர்களெல்லாம் ஒரே மனதுடையவர்களா யிருந்தார்கள். ததீசி மாத்திரம் அவ்விடத்திலிருக்கப் பிரியமில்லாத வராய், "மரியாதை செய்யத் தகாதவனை வணங்குவதினாலும், மரி யாதை செய்யத் தக்கவரை வணங்காதிருத்தலாலும் ஒருவன் கொலை செய்த பாவத்தை எப்பொழுதும் அடைகிறான். நான் இதுவரை அசத்தியமான வார்த்தை சொன்னதில்லை; இனிமேலும் சொல்லப் போகிறதில்லை. இங்கே தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் நான் சத்ய மான இந்த வார்த்தையைச் சொல்லுகிறேன். உலகத்திலுள்ள ஜீவன்களையெல்லாம் காப்பாற்றுகிறவரும், பிரபஞ்சங்களையெல்லாம் சிருஷ்டித்தவரும், அழிப்பவரும, ஸகலத்துக்கும் நாதனாயிருப்ப வரும், யாக அவிர்ப்பாகங்களைப் பெற்றுக்கொள்பவருமாகிய பகவான் இந்த யாகத்துக்கு சீக்கிரம் வருவார். நீங்கள் எல்லோரும் அவனைக் காண்பீர்கள்" என்றார். அதற்குத் தக்ஷர், "சூலாயுதங்களை யுடைய வர்களாயும், சடைமுடி தரித்தவர்களாயும் அநேக ருத்ரர்களை நமக் குத் தெரியும். அவர்கள் பதினொரு பேர்கள். எனக்கும் அவர்களை யெல்லாம் தெரியும். ஆனால், மகேசுவரர் என்ற பெயரையுடைய இந்த ருத்ரர் இன்னார் என்று எனக்குத் தெரியாது" என்றார். அதற் குத் ததீசி "மகேசுவரரை அழைக்கக் கூடாதென்று எல்லாருக்கும் ஒரே வித அபிப்பிராயம் இருக்கிறதென்று தெரிகிறது. ஆகிலும், மஹேச்வரனுக்கு மேலான தெய்வமாக வேறு தெய்வம் இல்லையென்று எனக்குத் தெரிகிறபடியால், நடத்தப்போகிற இந்த யாகம் நிச்சய மாய் நாசத்தை அடையும் என்று எனக்குத் தோன்றுகிறது" என் றார். தக்ஷர், "இதோ! இந்தத் தங்கப்பாத்திரத்தில் மந்திரங்களினா லும், வேதவிதிகளின் பிரகாரமும் பரிசுத்தமாக்கப்பட்ட யாக அவிர்ப் பாகம் யாகங்களுக்கெல்லாம் நாதனாயிருப்பவருக்கு உத்தேசிக்கப்

பட்டிருக்கிறது. நமக்கு ஒருவரும் விரோதியல்லாத விஷ்ணு பகவானுக்கு இந்த அவிர்ப்பாகத்தைக் கொடுப்பதாக நான் உத்தேசித்திருக்கிறேன். அவர் மிகுந்த சக்தியுள்ளவர். பிரபஞ்சத்திலுள்ள சகலத்துக்கும் நாதன். அவர்பொருட்டே யாகங்கள் செய்யப்படவேண்டும்'' என்று உத்தரம் சொன்னார்.

இங்கே இப்படி இருக்க, தன் நாதனோடு உட்கார்ந்திருந்த உமா தேவி அடியில் கண்டபடி சொல்வாளாயினாள்:—"உத்தமராகிய என்னுடைய பர்த்தா, யாகாதிகளின் அவிர்ப்பாகங்களில் அரை, அல்லது மூன்றி லொருபங்கை அடையவேண்டுமானால், அதற்காக என்னால் செய்யப்படவேண்டிய தானங்கள், விரதங்கள், தவங்கள் என்ன?'' என்றாள். துக்கத்தால் மனச் சஞ்சலத்தை அடைந்தவளும், மேலே சொன்ன வார்த்தைகளை அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்தவளுமாகிய தம்முடைய பத்னியை நோக்கி, மகாதேவர் சந்தோஷமுகத்தினராய், "ஓ! தேவியே! நீ என்னை இன்னாரென்று அறியாய். ஓ! மிருதுவான அவயவங்களை யுடையவளே! யாகங்களுக்கெல்லாம் நாதரா யிருப்பவரிடத்தில் இன்ன விதமாய்ப் பேசுவது என்ற சங்கதி உனக்குத் தெரியாது. ஓ! விசாலாக்ஷியே! ஞானமில்லாத பாபிகள் தான் என்னை அறியமாட்டார்கள். உன்னுடைய மாயா சக்தியினால் தான் இந்திராதி தேவர்களும், மூவுலகங்களும் புத்திக் கலக்கத்தை அடைந்திருக்கின்றனர். யாகங்களில் மந்திரங்களை உச்சரிப்பவர்கள் என்னை உத்தேசித்துத்தான் அவ்வாறு செய்கிறார்கள். ஸாமகானம் செய்கிறவர்கள் அவர்கள் செய்கிற ரதந்தரங்களை என்பொருட்டே செய்கிறார்கள். வேதங்களை அறிந்த பிராமணர்கள் என்னைக்குறித்தே யாகாதிகளைச் செய்கிறார்கள். யாகங்களின் அவிர்ப்பாகங்களை அத்வர்யுக்கள் எனக்குத்தான் கொடுக்கிறார்கள்'' என்று சொன்னார். உமாதேவி, "சாமான்ய சக்தியுள்ளவர்கள்கூடத் தங்கள் பத்தினிகள் முன்னிலையில் தங்களைச் சிலாகித்துப்பேசி வீண் டம்பம் செய்கிறார்கள்; இதில் சந்தேகமில்லை'' என்று சொன்னாள். பகவான் சொன்னதாவது:—"ஓ! தேவிகளுக்கெல்லாம் அரசியாயிருப்பவளே! நான் என்னைப் புகழ்ச்சியாய்ப் பேசிக்கொள்ளவில்லை. ஓ! சிறிய இடையை யுடையவளே! நான் இப்பொழுது செய்யப் போவதைப்பார். உனக்கு அப்பிரியமாயிருக்கிற இந்த யாகத்தை அழிப்பதற்காக ஒரு வீரனை சிருஷ்டிக்கிறேன் பார்'' என்ற இந்த வார்த்தைகளைத் தன் உயிருக்குயிராகிய உமாதேவியிடம் சொல்லி, மகா வல்லமையுள்ளவராகிய பகவான்

தேவர், ஒருவன் பார்த்த மாத்திரத்திலேயே மயிர்க்கூச்சம் உண்டாகும்படியான பயங்கர ரூபமுடைய ஒரு ஜீவனைத் தன் வாயிலிருந்து சிருஷ்டித்தார்.

அந்தப் புத்திரருடைய தேகத்திலிருந்து வெளியேவந்து கொழுந்துவிட்டெரியும் அக்னியினால் அவருடைய ரூபம் மிகவும் பயங்கரமாகக் காணப்பட்டது. அவருக்கு அனேக கைகள் இருந்தன. ஒவ்வொரு கையிலும் பார்ப்பவருடைய மனதை நடுங்கச் செய்யும்படியான ஒவ்வொரு விதமான ஆயுதம் இருந்தது. இவ்வாறு சிருஷ்டிக்கப்பட்ட அந்த ஜீவனானவர், கைகூப்பினவராய்ப் பகவான் முன் நின்று, "நான் செய்யவேண்டியது இன்னதென்பதற்குத் தங்களுடைய உத்தரவுகள் என்ன?" என்றார். மஹேச்வரர் தன் புத்திரரை நோக்கி, "நீ போய், தக்ஷனுடைய யாகத்தை அழித்துவா" என்று கட்டளையிட்டார். இவ்வாறு கட்டளையிடப்பட்டவராய், மகாதேவருடைய வாயிலிருந்து உண்டானவரும், ஆண்சிங்கம் போன்ற பராக்கிரமத்தை யுடையவருமான அவர், தன்னுடைய முழு சக்தியையும் காட்டாமலும், பிறருடைய உதவியன்றியும் உமாதேவியாருடைய கோபத்தைத் தீர்க்கும்பொருட்டு, தக்ஷனுடைய யாகத்தை அழிக்க விரும்பினார். கோபத்தால் தூண்டப்பட்டவளாய் மஹேசுவரி, மகாகாளி என்ற பயங்கர ரூபத்தை எடுத்துக்கொண்டு, தான் காரணமாயிருந்து ஏற்படப்போகிற அந்த நாசத்தைத் தன் கண்ணால் நேரில் பார்க்கும்பொருட்டு, மஹாதேவருடைய வாயிலிருந்து உண்டான வீரபத்திருடன் சென்றாள். வீரபத்திரர் மகாதேவருடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு, அவரை நமஸ்கரித்துவிட்டுப் புறப்பட்டார். சௌரியத்திலும், ரூபத்திலும், தேகபலத்திலும் தன்னைப் படைத்த பரமசிவனை ஒத்திருந்தார். அவர், மகாதேவருடைய கோபம் ஒரு தேகம் எடுத்து வந்ததுபோல் விளங்கினார். அளவிட முடியாத தேகபலமும், பராக்கிரமும், மனோதைரியமும் பொருந்தினவராயிருந்ததால், அவருக்கு வீரபத்திரர் என்ற பேர் ஏற்பட்டது.

பிறகு மஹாதேவர் தன்னுடைய தேகத்திலுள்ள ரோமத்துவாரங்களிலிருந்து ரௌமியர்கள் என்று சொல்லப்பட்ட பூதகணங்களை உண்டாக்கினார். அந்தப் பயங்கரமான கணங்கள் ருத்ரமூர்த்தியைப் போலிருந்த தைரியமும், பலமு முடையவர்களாய், இடியைப் போல் [illegible] யாகம் செய்துகொண்டிருந்த இடத்துக்கு

[ஆ]யிரம் கண்களை யுடையவரும், சத்ருக்களை ஜயிப்பவரும், தேவாதி தேவனுமாகிய அந்தப் பகவான் யாககுண்டத்திலிருந்து திடீரென்று கிளம்பினார். ஆயிரம் சூரியர்கள் போன்ற பிரகாசத்தை யுடையவராய், மற்றொரு சம்வர்த்தக அக்னியைப்போல், மகாதேவர் தக்ஷரைப் பார்த்து, மெதுவான புன்சிரிப்புடன், "ஓ! பிராமணோத்தம! உமக்குச் செய்யவேண்டியது யாது?" என்று கேட்டார். அந்தச் சமயத்தில் தேவகுரு உபநிஷத்துக்களிலுள்ள வேத கானங்களினால் மகாதேவரை ஸ்தோத்திரம் செய்தார். அப்பொழுது தக்ஷப்பிரஜாபதி மரியாதையுடன் கைகூப்பி, மிகவும் பயமும், மனக்கலக்கமும் அடைந்தவராய், கண்களிலும் முகங்களிலும் நீர்ததும்ப மகாதேவரைப் பார்த்து, அடியில் கண்ட வார்த்தைகளைச் சொன்னார்:—"மகாதேவருக்கு என்பேரில் கோபமில்லாதபக்ஷத்தில், நான் அவருடைய கிருபைக்குப் பாத்திரனாயிருந்தால், எனக்கு வரங்கள் தந்தருளல் வேண்டும் என்ற நோக்கம் இருந்தால், என்னால் அநேக வருஷங்களாக இந்த யாகத்திற்கென்றே யிருந்த முயற்சியின் பேரிலும், ஜாக்கிரதையின் பேரிலும் சேகரித்து வைக்கப்பட்ட சாமான்கள் இப்பொழுது எரிந்தும், உண்ணப்பட்டும், விழுங்கப்பட்டும், பானம் செய்யப்பட்டும், அழிக்கப்பட்டும், உடைக்கப்பட்டும், அசுத்தமாக்கப்பட்டும், சேதப்பட்டு மிருப்பதில், அவ்வாறு வீண்போகாமலிருக்கும்படி அநுக்கிரஹம் செய்யவேண்டும். அவைகள் எனக்குப் பிரயோஜனமாயிருக்கும்படி அருளல் வேண்டும். இதுதான் நான் கேட்கும் வரம்." பகனுடைய கண்ணைக் கிழித்தெடுத்த பரமேசுவரர் தக்ஷப்பிரஜாபதியை நோக்கி, "நீ கேட்கிறபடியே ஆகுக" என்றார். இவ்வாறு மூன்று கண்களை உடையவரும், தர்ம ரக்ஷகருமான பசுபதியானவர் அநுக்கிரகித் தருளினார்.

பவரிடத்திலிருந்து, இந்த வரத்தை அடைந்து, தக்ஷர் அவரை நமஸ்கரித்து, ரிஷபவாகனரான பகவானை அடியில் கண்டபிரகாரம் அவருடைய ஆயிரத்தெட்டுப் பேர்களையும் சொல்லி, ஸ்தோத்திரம் செய்தார். அதாவது:—"அசுரருடைய சேனைகளைச் சம்ஹாரம் செய்த தேவாதி தேவராகிய உம்மை வணங்குகிறேன். நீர் தேவேந்திரனுடைய பலத்தையும்கூட ஸ்தம்பிக்க வல்லவர்; [illegible] தானவர்களும் தேவர்களும் உம்மைத் துதிசெய்கிறார்கள். ஆயிர[illegible] நீரே. [illegible] கண்களை யுடையவரும் [illegible]

உக்ரமான கண்களை உடையவரும் நீரே. நீர் யஜுர்களுடைய அதி பதிக்கு நேசர். உம்முடைய கைகளும், கால்களும் எல்லா இடங்களை யும், எல்லா திக்குக்களையும் வியாபித்திருக்கின்றன. உம்முடைய கண்களும், சிரசும், வாயும் எலாபக்கங்களிலும் காணப்படுகின்றன. ஓ! தேவனே! உம்முடைய காதுகளும் பிரபஞ்சத்தில் எங்கும் பரவி யிருக்கின்றன. நீர் எங்கும் நிறைந்தவரா யிருக்கிறீர். நீர் வில் போன்ற காதை யுடையவர்; பெரிய காதை யுடையவர்; குடம் போன்ற காதையுடையவர். நீரே சமுத்திரத்துக்கு இருப்பிடம். உம்முடைய காதுகள், யானையினுடையவும், மாட்டினுடையவும் காதுகள் போலவும், மடங்காத உள்ளங்கை போலவும் இருக்கின் றன. உமக்கு நமஸ்காரம். உமக்கு நூறு வயிறுகள்; நூறு ரோமச் சுழிகள். உமக்கு நூறு நாக்குகள். நான் உம்மை வணங் குகிறேன். காயத்திரி மந்திரத்தை உச்சரிப்பவர்கள், அவைகளை உச்சரிப்பதனால் உம்மையே வணங்குகிறார்கள். சூரியனை ஆராதிக்கி றவர்கள் உண்மையில் உம்மையே ஆராதிக்கிறார்கள். ரிஷிகள் உம் மையே பிரமாவாகவும், இந்திரனாகவும், அளவுகடந்த ஆகாசமாகவும் நினைக்கிறார்கள். பராக்கிரமமான ரூபமுடையவரே! சமுத்திரமும், ஆகாசமும் உம்முடைய இரண்டு ரூபங்களாக இருக்கின்றன. பசுக் கள் மாட்டுக் கொட்டத்துக்குள் ஒருமித்து வசிப்பதுபோல், தேவர்க ளெல்லாம் உம்முடைய ரூபத்திலேயே அடங்கி யிருக்கிறார்கள். உம் முடைய தேகத்தில் ஸோமனையும், அக்னியையும், வருணனையும், ஆதித்யனையும், விஷ்ணுவையும், பிரமாவையும், பிருகஸ்பதியையும் நான் காண்கிறேன்.

“ஓ! உத்தமரே! நித்யமும், அநித்யமுமான எல்லா வஸ்துக்க ளுக்கும் காரணமும் காரியமும், செயலும் கருவியுமா யிருப்பது நீரே. பவர், சர்வர், ருத்ரர் என்று சொல்லப்படுகிற உம்மை நான் சரணமடைகிறேன். வரங்களை அளிப்பவராகிய உமக்குச் சரணம். எல்லா ஜீவன்களுக்கும் நாதனாயிருக்கிற உமக்குச் சரணம். எமனைக் கொன்று வீழ்த்திய உமக்குச் சரணம். மூன்று சடைமுடிகளையும், மூன்று சிரசுகளையு முடையவரும், சிறந்த திரிசூலத்தைக் கையால் பிடித்தவரும், மூன்று கண்களை யுடையவரும், அதனால் திரியம்பகர் என்றும், திரிநேத்ரர் என்றும் சொல்லப்படுகிறவரும் ஆகிய உமக்குச் சரணம். திரிபுர தகனம் செய்த உமக்குச் சரணம். சண்ட [illegible]

டர் என்று சொல்லப்படுபவரும், பிரபஞ்ச உற்பத்திக்குக் காரண மாகிய முட்டையாயும், அம்முட்டையைத் தாங்கினவராயும், சன்னி யாசி கமண்டலத்தைக் கையில் பிடித்தவராயும், எல்லா இடங்களிலும் காதுகளை உடையவராயும், தண்டி, முண்டர் என்று சொல்லப்படுகிற வராயும் ஆகிய உமக்குச் சரணம். பற்களும் மயிரும் மேல்நோக்கி யிருப்பவராயும், ஒரு பழுது மில்லாதவராயும், வெள்ளையா யிருப்பவ ராயும், பிரபஞ்சம் முற்றிலும் வியாபித்து விளங்குபவராயும், சிவப்பு நிறமுள்ளவராயும், செம்பு நிறமுள்ளவராயும், நீலமான கண்டத்தை யுடையவராயும் உள்ள உமக்குச் சரணம். ஒப்பில்லாத ரூபமுடை யவராயும், பயங்கர ரூபமுடையவராயும், மிகுந்த மங்களமுடைய வராயும் ஆகிய உமக்குச் சரணம். சூரியனையும், சூரியர்களை மாலை யாகக் கழுத்தில் அணிந்தவராயும், சூரியனை அடையாளமாக உடைய துடைகளையும், புஜங்களையும் உடையவராயும் ஆகிய உமக்குச் சர ணம். பூதபிசாசங்களுக்கு நாதனாயிருப்பவரும், ரிஷபம் போன்ற கழுத்தையுடையவரும், வில்லைக் கையில் ஏந்தியவரும், சத்துருக்களை நாசம் செய்பவரும், தண்டமே ரூபமாக இருப்பவரும், மரங்களின் இலைகளையும், கந்தைகளையும் உடுத்தியிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். வயிற்றில் தங்கமுடையவரும், தங்கக் கவசத்தைப் போர்த் தியிருப்பவரும், தங்கக் கிரீடத்தை அணிந்தவரும், உலகத்திலுள்ள ஸ்வர்ணத்திற் கெல்லாம் அதிபதியா யிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம்.

1 "ஸ்தோத்திரம் செய்யப்பட்டிருப்பவரும், ஸ்தோத்திரம் செய்ய த்தக்கவரும், எப்பொழுதும் ஸ்தோத்திரம் செய்யப்பட்டுவருபவரும், பிரபஞ்சத்திலுள்ள சகல வஸ்துக்களா யிருப்பவரும், எல்லா வஸ் துக்களையும் தமக்குள் அடக்கிக் கொள்பவரும், எல்லா வஸ்துக்களி லும் விளங்கும் ஆத்மாவா யிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். யாகங்களில் ஹோத்திரியா யிருப்பவரும், யாகங்களில் உச்சரிக்கப் படும் வேதமந்திரங்களா யிருப்பவரும், வெள்ளைக்கொடிகளையும் துவஜங்களையுமுடையவரும் ஆகிய உமக்குச் சரணம். இந்தப் பிர பஞ்சத்திற்கு நாபியா யிருப்பவரும், ஆதியில் பஞ்சபூதங்களின் ரூபமாய் இருந்து, உலகத்துக்குக் காரியமாயும் காரணமாயு மிருப்ப வரும், மூடுகின்றவைகட் கெல்லாம் மூடுகின்றவரா யிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். கிருசாசர் என்று சொல்லப்படுகிறவரும்,

மெல்லிய அவயவங்களை உடையவரும், மெல்லிய உருவம் உடைய வரும் ஆகிய உமக்குச் சரணம். எப்பொழுதும் மகிழ்ச்சியுள்ள வரும், கலக்கமான சப்தங்களின் ரூபமாயிருப்பவருமாகிய உமக் குச் சரணம். பூமியில் படுத்துக்கொள்ளப் போகிறவரும், முன்ன மேயே படுத்துக்கொண்டவரும், நேராக நிற்பவரும் ஆகிய உமக்கு சரணம். நிலையாய் நிற்பவரும், ஓடிக்கொண்டிருப்பவரும், வழுக் கத் தலையை உடையவரும், சடைமுடி தரித்தவரும் ஆகிய உமக் குச் சரணம். நடனம் செய்வதில் பிரியமுடையவரும், வாயை மிருதங்கம்போல வைத்துக்கொண்டு, காற்றால் பருத்த கன்னத்தை அடித்துச் சப்தம் செய்பவருமாகிய உமக்குச் சரணம். தடாகங் களில் உற்பத்தியாகும் தாமரைகளிடத்து ஆசையுள்ளவரும், வாய் மூலமாயும், வீணை முதலிய வாத்தியங்களினாலும் கானம் செய்பவ ரும் ஆகிய உமக்குச் சரணம். எல்லா ஜீவன்களுக்கும் முதலில் உற்பத்தியானவரும், ஜீவன்களுக்கெல்லாம் முதன்மையானவரும், 'வலன்' என்ற அசுரனைச் சம்ஹரித்தவரும் ஆகிய உமக்குச் சரணம். காலத்தைக் கடந்தவரும், கல்பமே ரூபமாக இருப்பவரும், பெரிது, சிறிது ஆகிய சகல சம்ஹாரத்திற்கும் கர்த்தாவாயிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். பயங்கரமாயும், மிருதங்கம் அடிப்பது போன்ற சப்தத்தோடு சிரிப்பவரும், பயங்கரமான விரதங்களை அனுஷ்டிப்பவ ருமாகிய உமக்குச் சரணம். மூர்க்கரும், பத்துக்கைகள் உடைய வரும் ஆகிய உமக்குச் சரணம். எலும்புகளைக் கையில் உடைய வரும், மயானத்தில் எரிந்து கிடக்கிற சாம்பல்களிடத்துப் பிரியமு டையவரும் ஆகிய உமக்குச் சரணம். அசுத்தமான வாயும், கத்தி யைப் போன்ற நாக்கும், பெரிய பற்களும் உடையவராகிய உமக் குச் சரணம். பக்குவம் செய்ததும், செய்யாததுமான இறைச்சி களில் விருப்பமுள்ளவரும், சுரைக்காய் வீணையை மிகவும் அரு மையாய் மதிப்பவருமாகிய உமக்குச் சரணம்.

"மழைபெய்யும்படி செய்பவரும், தர்மம் தழைத்தோங்கும் விஷயத்தில் ஆதரவாயிருப்பவரும், தானே நந்திரூபமாயிருப்பவ ரும், தர்மஸ்வரூபியாயிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். காற்று முதலிய சக்திகளைப்போல் எப்பொழுதும் சஞ்சாரம் செய்துகொண் டிருப்பவரும், எல்லா வஸ்துக்களையும் கடத்துபவரும், காலமாகிய பாத்திரத்தில் ஜீவன்களெல்லாம் அனுபவங்களாகிய பக்குவங்களை

அடையும்படி செய்பவரும் ஆகிய உமக்குச் சரணம். ஜீவன்களுக்கெல்லாம் முதன்மையானவரும், மேலானவரும், வரங்களைக் கொடுப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். ஹாரங்களிலெல்லாம் சிறந்ததையும், எல்லாவற்றிலும் மேலான வாசனைகளையும், எல்லாவற்றிலும் ஸௌக்கியமான ஆடைகளையு முடையவரும், மேலான ஜீவன்களுக்குச் சிறந்த வரங்களைக் கொடுப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். பற்றுள்ளவரும், பற்றுக்களிலிருந்து நீங்கினவரும், யோகத்தியானத்தின் உருவத்தை உடையவரும், அக்ஷமாலையை அணிந்திருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். யாவற்றுக்கும் மூலகாரணமாகச் சம்பந்தப்பட்டிருப்பவரும், அவைகளின் காரியங்களில் சம்பந்தமில்லாதவரும், பிரகாசம், நிழல் இவைகளின் ரூபமாயிருப்பவரும், பிறரால் விச்வசிக்கப்படுகிறவரும், மிகவும் பயங்கரமா யிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். மங்களமாயிருப்பவரும், சாந்தியுடன் இருப்பவரும், எல்லாவற்றிற்கும் மேலான மங்களத்தை உடையவரும் ஆகிய உமக்குச் சரணம். ஒரு கால், பல கண்கள், ஒரே சிரசு, உக்கிரம், சொல்ப நைவேத்யங்களினாலேயே சந்தோஷம், தர்மத்தில் பிரியம் ஆகிய இவைகளை உடைய உமக்குச் சரணம். பிரபஞ்சத்துக்கு விச்வகர்மாவா யிருப்பவரும், சாத்வீக குணத்தையே பொருந்தியிருக்கிறவரும் ஆகிய உமக்குச் சரணம். சத்துருவை நடுங்கச் செய்கிற மணியை உடையவரும், மணி ஓசைப்படுகிற சப்தரூபமா யிருப்பவரும், காதால் கேட்கப்படாதபொழுது சப்தரூபமாக இருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். ஆயிரம் மணிதர்கள் ஒன்று சேர்ந்து சப்திப்பதுபோல் இருப்பவரும், மணிகளை மாலையாகத் தரித்துக்கொள்ளப் பிரியமுடையவரும், பிராணவாயுக்களின் சப்தம்போல் இருப்பவரும், எல்லாவித வாத்தியங்களுக்கும், த்ரவ பதார்த்தங்கள் கொதிக்கும்பொழு துண்டாகிற கலப்புச் சப்தத்துக்கும் ரூபமாயிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம்.

"மிகவும் சாந்தமூர்த்தியாயும், மலையில் வளர்ந்திருக்கும் மரங்களின் நிழலடியிலேயே தமக்கு வாஸஸ்தானம் உடையவராயுமுள்ள உமக்குச் சரணம். எல்லாப் பிராணிகளுடைய ஹிருதயத்தினுள் [illegible] இருப்புமுடையவரும், பாபங்களையெல்லாம் போக்குகிறவரும், யாகங்களில் ஹோமகுண்டத்தில் ஆஹுதி செய்யப்படும் [illegible]களின் ரூபமாயிருப்பவரும் நீரே. [illegible] ரூபமாயிருப்பவரும், [illegible]

செய்பவரும், யாகவெல்லையைச் சாபமுள்ள பிராமணராயிருப்பவரும், மந்திரங்களின் மூலமாக நெய் ஆகுதி செய்யப்படுகிற யாககுண்டத்தின் அக்னியாயிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். யாகரித்விஜர்களின் ரூபமாயிருப்பவரும், இந்திரியங்களை ஜயித்தவரும், சத்வரஜோ குணங்களோடு கூடியவரும் ஆகிய உமக்குச் சரணம். நதிகளின் கரைகளின் ரூபமாயிருப்பவரும், அந் நதிகளாயிருப்பவரும், நதிகளுக்கெல்லாம் நாயகனாகிய சமுத்திரமா யிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். ஆகாரங்களை அளிக்கிறவரும், ஆகாரங்களுக்கெல்லாம் காரணபூதரா யிருப்பவரும், தாமே அன்னத்தை யுண்பவருடன் ஒன்றாயிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம்.

"ஆயிரம் சிரசுகளும், ஆயிரம் கால்களும், கைகளில் ஏந்தியிருக்கிற ஆயிரம் திரிசூலங்களும், ஆயிரம் கண்களும் உடையவராகிய உமக்குச் சரணம். உதிக்கும் இளஞ்சூர்யனைப் போன்ற ரூபமுடையவரும், சிசுவைப் போன்ற ரூபமுடையவரும், குழந்தைகள் போன்ற உருவமுடைய அன்பர்களை ரக்ஷிப்பவரும், குழந்தைகளினுடைய விளையாட்டுக் கருவிகளின் ரூபமாயிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். வயது முதிர்ந்தவரும், ஆசையுள்ளவரும், ஏற்கனவே மனத்தமோற்றம் அடைந்தவரும், இனியும் அடையக்கூடியவரும் ஆகிய உமக்குச் சரணம். கங்காநதியினுடைய வேகத்தினால் தம்முடைய சடைமுடியில் வருடு உடையவரும், முஞ்சப்புற்கள் போன்ற மயிர்முடிச்சுகளை உடையவரும் ஆகிய உமக்குச் சரணம். யஜனம், யாஜனம், அத்யயனம், அத்யாபனம், தானம், பிரதிக்கிரகம் ஆகிய இந்த ஆறு செய்கைகளால் மிகவும் திருப்தியடைபவரும், யஜனம், அத்யயனம், தானம் ஆகிய இம் முக்கர்மங்களைச் செய்ய ஊக்கமுடையவரும் ஆகிய உமக்குச் சரணம். ஆச்ரம தர்மங்களை ஏற்படுத்தியிருக்கும் உமக்குச் சரணம். கானங்களால் துதிசெய்வதற்கு யோக்கியராயிருப்பவரும், துக்கரூபியாய் இருப்பவரும், ஆழ்ந்ததும், விலக்கமுமான நாதரூபமா யிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். வெள்ளை, செம்பு, கருப்பு, சிவப்பு ஆகிய நிறங்களுள்ள கண்களை உடையவராகிய உமக்குச் சரணம். பிராண வாயுக்களை ஜயித்தவரும், ஆயுதங்கள் ரூபமாயிருப்பவரும், எல்லா வஸ்துக்களையும் அழிப்பவரும், மிகவும் மெலிந்த தேகத்தை உடையவரும் ஆகிய உமக்குச் சரணம். தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய இந்நான்கு

புருஷார்த்தங்களைப் பற்றி எப்பொழுதும் ஸம்பாஷிக்கும் உமக்குச் சரணம். ஸாங்கியமா யிருப்பவரும், ஸாங்கியர்களில் முக்கியராய் இருப்பவரும், ஸாங்கிய யோகத்தை ஏற்படுத்தினவரும் ஆகிய உமக்குச் சரணம். தம்முடைய சஞ்சாரங்களுக்காக ரதத்தை உடையவரும், பஞ்சபூதங்களின் வழியாகத் தம்மிஷ்டம் போல் தூரமாய்த் தடையின்றிச் சஞ்சரிக்க வல்லவராயிருப்பதால் ரதமில்லாதவராயு மிருக்கிற உமக்குச் சரணம். நான்கு ரஸ்தாக்கள் சேருகிற இடத்தை ரதமாக உடையவரும், கரிய மான்தோலைப் போர்த்தியிருப்பவரும், நாகத்தை எக்ஞோபவீதமாக உடையவரும் ஆகிய உமக்குச் சரணம். எல்லோராலும் விரும்பப்படுவதால், ஈசானர் என்று சொல்லப்படுபவரும், இடியைப்போல் உறுதியான தேஹத்தை உடையவரும், பச்சைச் சடைமுடிகளை உடையவரும் ஆகிய உமக்குச் சரணம். மூன்று கண்களை யுடையவரும், அம்பிகாபதியும், ஸகுணப்பிரம்மமும், நிர்குணப்பிரம்மமுமா யிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். காமம், காமத்தை உண்டுபண்ணுதல், காமத்தைத் தகித்தல், திருப்தியை உடையவர்கள், திருப்தியில்லாதவர்கள் ஆகிய இவர்களைப் பகுத்தறியும் வல்லமை ஆகிய இவைகளை உடைய உமக்குச் சரணம்.

"எல்லா வஸ்துக்களா யிருப்பவரும், எல்லா வஸ்துக்களைக் கொடுப்பவரும், எல்லா வஸ்துக்களை அழிப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். மாலைக்காலத்தில் ஆகாசத்தில் பலவர்ணங்களாகத் தோன்றும் உமக்குச் சரணம். மிகுந்த பலத்தையும், பராக்கிரமமான புஜத்தையும் உடையவரும், ஸர்வ வல்லமையும், மிக்க தேஜஸும் உள்ள புருஷருமான உமக்குச் சரணம். பலமான கரிய மேகக்கூட்டங்கள் போன்றவரும், ஆதியும் அந்தமு மில்லாத ரூபத்தை உடையவரும் ஆகிய உமக்குச் சரணம். மிக்க வளர்ச்சியுள்ள புஷ்டியான தேக முடையவரும், இளைத்துப்போன அங்கங்களை உடையவரும், தலையில் சடைமுடியை யுடையவரும், மரவுரிகளையும், மிருகங்களின் தோல்களையும் ஆடையாக அணிந்திருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். ஆயிரம் சூரியர்களைப் போன்ற பிரகாசத்தை யுடையவரும், எப்பொழுதும் தவம் செய்துகொண்டிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம். ஜ்வரவேகமாய்த் தோற்றுபவரும், ஆயிரம் சுழிகள் உள்ள கங்காநதியில் நனைக்கப்பட்ட சடையை உடையவரும் ஆகிய உமக்குச் சரணம். சந்திரனையும், யுகங்களையும், மேகங்களையும் அடிக்கடி சுழலச் செய்கிறவராகிய உமக்குச் சரணம். ஆகாரமா யிருப்ப

வரும், அந்த ஆகாரத்தைச் சாப்பிடுகிறவரும், சாப்பாட்டைக் கொடுக்கிறவரும், ஆகாரத்தை யுண்டுபண்ணுகிறவரும், ஆகாரத்தை விருத்திசெய்கிறவரும் ஆகிய இவையெல்லாம் நீரே. ஆகாரத்தைச் சமைப்பவரும், சமைத்த அன்னத்தைச் சாப்பிடுகிறவரும், வாயுவும், அக்கினியுமா யிருப்பவரும் ஆகிய உமக்குச் சரணம்.

"சகல தேவர்களுடைய அதிபதிகளுக்கும் நாதனாயிருப்பவரே! கர்ப்பத்திலிருந்துண்டானவை, முட்டையிலிருந்துண்டானவை, அழுக்குகளிலிருந்துண்டானவை, தாதுக்கள் ஆகிய இந் நான்கு ஜீவவர்க்கங்களும் நீரே. பிரபஞ்சத்திலுள்ள அசைகின்றனவும், அசையாதனவுமாகிய பொருள்களைப் படைத்தவர் நீரே. அவைகளை அழிப்பவரும் நீரே. பிரமத்தை அறிந்தவர்களுக்குள் சிரேஷ்டரே! பிரமஞானம் உள்ளவர்கள் உம்மையே பிரஹ்மமென்று மதிக்கிறார்கள். பிரமத்தை உச்சரிப்பவர்கள் உம்மையே மனமுற்பத்திக்கே காரணமானவர் என்றும், ஆகாசம், வாயு, வெளிச்சம் ஆகிய மூன்றுக்கும் நீரே ஆதாரம் என்றும் சொல்வார்கள். ரிக்வேதமும், ஸாமவேதமும், 'ஓம்' என்ற பிரணவமும் நீரே. தெய்வங்களுக்கெல்லாம் சிறந்தவரே! ஸாம வேதத்தை அடிக்கடி கானம் செய்கின்ற பிரமஞானிகள், "ஹாயி-ஹாயி" என்றும், "ஹூவா-ஹாயி" என்றும், "ஹூவா-ஹோயி" என்றும் பதங்களை உச்சரிக்கும்பொழுது, உம்மையே எப்பொழுதும் கானம் செய்கிறார்கள். ரிக்குக்களில் சொல்லப்பட்ட யஜுர்வேத மயமாகவும், ரிக்வேத மயமாகவும், ஹோமாக்னியில் செய்யப்படுகின்ற ஆஹூதி மயமாகவும் இருப்பவர் நீரே. வேதங்களிலும், உபநிஷத்துக்களிலும் உள்ள கானங்கள் உம்மையே ஸ்தோத்திரம் செய்கின்றன.

"பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள், சூத்ரர்கள், இவர்களின் கலப்பினாலுண்டாகும் இதர ஜாதிகள் ஆகிய இவர்களெல்லாம் நீரே. ஆகாசத்தில் தோன்றும் மேகக்கூட்டங்களும் நீரே. மின்னலும் நீரே. இடியினது முழக்கமும் நீரே. வருஷமும் நீரே. ருதுக்களும், அயனங்களும் நீரே. மாசங்களும் நீரே. பக்ஷங்களும் நீரே. யுகமும் நீரே. க்ஷணப்பொழுதும் நீரே. நக்ஷத்திரங்களும் நீரே. கிரகங்களும் நீரே. கலைகளும் நீரே. எல்லா மரங்களின் உச்சியும் நீரே. மலைகளினுடைய சிகரங்களும், சிகரங்களுக்கெல்லாம் உயர்ந்த சிகரங்களும் நீரே. மிருகங்களுக்குள் புலியும் நீரே. பக்ஷிக

ளுக்குள் கருடனும் நீரே. நாகங்களுக்குள் அனந்தனும் நீரே. சமுத்திரங்களிலெல்லாம் திருப்பாற்கடலும் நீரே. அஸ்திர சஸ்திரங்களைப் பிரயோகிப்பதற்குக் கருவியாயிருக்கிற வில்லும் நீரே. விரதங்களில் ஸத்திய விரதமா யிருப்பதும் நீரே. வெறுப்பும் நீரே. விருப்பும் நீரே. பாசபந்தமும் நீரே. புத்திக் கலக்கமும் நீரே. க்ஷமையும் நீரே. க்ஷமையில்லாம லிருப்பதும் நீரே. முயற்சியும் நீரே. பொறுமையும் நீரே. ஆசையும் நீரே. காமமும் நீரே. கோபமும் நீரே. ஜயமும் நீரே. தோல்வியும் நீரே. கதாயுதத்தைக் கையில் தாங்கியிருப்பவரும் நீரே. அம்பும் நீரே. வில்லைக் கையில் ஏந்தியிருப்பவரும் நீரே. கைகளில் "கட்வாங்கம்" என்ற ஆயுதம், "ஜர்ஜரம்" என்ற வாத்யம் இவைகளைத் தாங்கியிருப்பவரும் நீரே. வெட்டுகிறவரும், துளைக்கிறவரும் அடிக்கிறவரும் நீரே. எல்லா ஜீவன்களையும் ஏவுகிறவரும், அவைகளுக்குத் துன்பத்தையும், துக்கத்தையும் உண்டாக்குபவரும் நீரே. பத்துகுணங்கள் நிறைந்ததர்மமும் நீரே. நானுவிதப்பொருளும் ஆதாயமும் நீரே. இன்பமும் நீரே. கங்கையும்நீரே. சமுத்திரங்களும் நீரே. நதிகளும் நீரே. தடாகங்களும் நீரே. ஏரிகளும் நீரே. மெல்லிய கொடிகளும், பருத்தகொடிகளுள்ள செடிகளும், நானுவிதப்புற்களும், பூண்டுகளும் நீரே. மிருகங்களும் பக்ஷிகளும் நீரே. எல்லா வஸ்துக்களுக்கும், கருமங்களுக்கும் மூலப்பொருளா யிருப்பவர் நீரே. பழங்களும், புஷ்பங்களும் உண்டாவதற்கு ஹிதமான காலமும் நீரே. வேதங்களின் ஆதியும், அந்தமும் நீரே. காயத்திரியும் நீரே. ஓங்காரமும் நீரே.

"நீர் பச்சைநிறமா யிருக்கிறீர். சிவப்புநிறமா யிருக்கிறீர். நீலவர்ணமா யிருக்கிறீர். கருப்புநிறமா யிருக்கிறீர். ரத்தநிறமா யிருக்கிறீர். சூர்யனைப்போன்ற நிறமா யிருக்கிறீர். செம்பு நிறமா யிருக்கிறீர். பழுப்புநிறமா யிருக்கிறீர். கருப்பு, மஞ்சள், பச்சை கலந்த நிறமா யிருக்கிறீர். நிறமற்றவராயு மிருக்கிறீர். சிறந்த வர்ண நிறமா யிருக்கிறீர். நீரே நிறங்களை யெல்லாம் சிருஷ்டித்தவராயு மிருக்கிறீர்.

"உமக்கு ஒருவரும் நிகரில்லாதவரா யிருக்கிறீர். தங்கத்தின் பேரும் நீரே. தங்கத்தில் பிரியமுள்ளவரும் நீரே. இந்திரனும் நீரே. யமனும்நீரே, வரங்களை அளிப்பவரும் நீரே. தனபதியாகிய குபேரனும் நீரே. அக்கினியும் நீரே. கிரகணமும் நீரே. சித்திரபானு என்ற அக்கினியும் நீரே. ராகுவும் நீரே. சூரியனும் நீரே. நெய்யாகுதி செய்

யப்படும் யாககுண்டமும் நீரே. நெய்யை ஆஹூதி செய்பவரும் நீரே. யாரை யுத்தேசித்து நெய்யாஹூதி செய்யப்படுகிறதோ, அவரும் நீரே. ஆஹூதி செய்யப்படும் நெய்யும் நீரே. எல்லோருக்கும் ஸர்வ வல்லமையுள்ள நாதனும் நீரே. திருசுபர்ணர் என்று சொல்லப் படும் பிராமண வகுப்பினரும் நீரே. எல்லா வேதங்களும் நீரே. யஜுர்வேதத்திலுள்ள சதருத்ரியம் என்று சொல்லப்படும் பாகங்களும் நீரே. பரிசுத்தங்களுக்கெல்லாம் பரிசுத்தமா யிருப்பவர் நீரே. மங்களகரமான வஸ்துக்களுக் கெல்லாம் மங்களமாய் விளங்குபவரும் நீரே. ஜடமா யிருக்கும் வஸ்துவை ஜீவனுகச் செய்ய வல்லவர் நீரே. மனுஷ்ரூபமாக விளங்கும் 'சித்' என்ற அம்சத்தோடும் கூடி இருப்பவரும் நீரே. நிர்க்குணப் பிரமமாகிய நீர், ஸகுணப் பிரம ரூபத்தை வகித்து, அந்த ரூபத்தை அழிவடையும்படி செய்கிறீர். ஸகுண ரூபத்தை வகிக்காத காலத்தில் எப்பொழுதும் அழிவில்லாதவருமாகிய பரமாத்மாவாய் இருக்கிறீர். நீர் குணங்களை வகிக்கும்போது உம்முடைய ஸகுண நிலைமை மட்டும் அழிவை அடைகிறது. நீர் நித்தியர். ஜீவனுடைய அறுகுணமான தேகரூபத்துக்குச் சம்பந்தப்பட்ட மட்டில் தான் நீர் அழிவிற்கும், பிறப்பிற்கும் கட்டுப்பட்டவர் ஆகிறீர்.

''பிராணவாயுவும் நீரே. சத்துவ குணமும் நீரே. ராஜஸ குணமும் நீரே. தாமஸ குணமும் நீரே. நீர் எவ்விதக் குற்றமு மற்றவர். பிராண, அபான, வியான, உதான, சமான என்ற வாயுக்களும் நீரே. கண்ணைத் திறக்கிறவரும் நீரே. மூடுகிறவரும் நீரே. தும்முகிறதும் கொட்டாவி விடுகிறதும் நீரே. உள்நோக்கமாயுள்ள சிவந்த கண்களையுடையவர் நீர். நீர் பெரிய வாயையும், பெரிய வயிற்றையும் உடையவர். உம்முடைய தேகத்திலிருக்கிற மயிர்கள் ஊசிகள் போன்றவைகள். உம்முடைய தாடி பச்சைநிறம். உம்முடைய ரோமங்கள் மேல்நோக்கின விதமாய் இருக்கின்றன. நீர் மகாவேகத்துக்கும் மேலான வேகமாய் இருக்கிறீர். வாய்க்கீதம், வாத்தியக்கீதம் ஆகிய இவைகளின் சாஸ்திரங்களை நன்றாய் அறிந்தவர். அவைகளைக் கேட்பதில் மிக்கப் பிரியமுடையவர். ஜலத்தில் சஞ்சரிக்கின்ற மீனும் நீரே. வலையில் அகப்படுகிற மீனும் நீரே. நீர் நிரந்தரர். லீலா விநோதப் பிரியர். சகல வாதங்கள், சண்டைகள் இவைகளெல்லாம் நீரே. நல்ல காலமும் நீரே. பொல்லாத காலமும் நீரே.

பக்குவமில்லாத காலமும் நீரே. மீறிப்போன காலமும் நீரே. கொல்லுதலும் நீரே. கொல்லுகின்ற வாளாயுதமும் நீரே. கொல்லப்படுவதும் நீரே. விரோதியாயிருப்பதும், அவ்விரோதிகளுக்கு உபபலமாயிருப்பதும் நீரே. விரோதியையும், உபபலங்களையும் ஸம்ஹரிப்பதும் நீரே. மேகங்கள் கூடுகிற காலமும் நீரே. பெரிய பற்களை உடையவரும் நீரே. சம்வர்த்தகம், வலாஹகம் என்ற ஊழிக் காலத்து மேகங்களும் நீரே. ஜோதிரூபமாகக் காணப்படுபவரும் நீரே. நீர் மாயையோடு கூடியிருப்பதால் உம்முடைய மகிமை பிறரால் அறியப்படாமல் மறைந்து விளங்குகிறீர். ஜீவன்கள் அவரவர்களுடைய வினைப்பயன்களை அனுபவிக்கும்படி செய்பவரும் நீரே. நீர் உம்முடைய கையில் மணி வைத்துக்கொண்டிருக்கிறீர். இப் பிரபஞ்சத்திலுள்ள அசையும் பொருள்களையும், அசையாப் பொருள்களையும் விளையாட்டுக் கருவிகளைப் போல் திருவிளையாட்டுச் செய்கிறீர். காரணங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கிறீர். பிரணவ ரூபமான பிரமமா யிருக்கிறீர். ஸ்வாஹாவாயிருப்பதும் நீரே. தண்டபாணியாயிருப்பதும் நீரே. வழுக்கைத்தலையுடனிருப்பவரும் நீரே. மனம், வாக்கு, காயம் ஆகிய இவைகள் மூன்றையும் அடக்கி ஆளவல்லவர் நீரே. நான்கு யுகங்களும் நீரே. நான்கு வேதங்களும் நீரே. யாகாக்னிகள் நான்குக்கும் உற்பத்திஸ்தானமா யிருப்பதும் நீரே. நான்கு ஆச்ரமங்களுக்கும் உரிய கருமங்களையெல்லாம் நடத்துபவரும் நீரே. நான்கு வர்ணங்களையும் ஏற்படுத்துகிறவரும் நீரே. நீர் சூதாட்டத்தில் எப்பொழுதும் பிரியமுள்ளவர். நீர் கபடநாடகர். நானாவித பூதகணங்களுக்கும், அவர்களுடைய அதிபதிகளுக்கும் நாதனாயிருப்பவர் நீரே. நீர் சிவப்பு மாலைகளால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறீர். சிவப்பு ஆடைகளை உடுத்தியிருக்கிறீர். நீர் மலைச்சாரலில் நித்திரை செய்கிறீர். நீர் சிவப்பு வர்ணத்தில் பிரியமுள்ளவர்.

"தச்சனாயிருப்பவரும் நீரே. சிற்பிகளில் முதன்மையானவரும் நீரே. சகலவித கலைகளும் உம்மிடத்திலிருந்தே உற்பத்தியாயிருக்கின்றன. பகனுடைய கண்களைக் கிழித்தவர் நீரே. நீர் உக்ரமுள்ளவர். பூஷாவினுடைய பற்களை உதிர்த்தவர் நீரே. ஸ்வாஹாவும் நீரே. ஸ்வதாவும் நீரே. வஷட்டும் நீரே. ஸ்தோத்திர ரூபமாயிருப்பவரும் நீரே. பக்தர்களெல்லோரும் நமஸ்காரம், நமஸ்காரம்

என்று சொல்லும் வார்த்தைகள் நீரே. உம்முடைய அநுஷ்டானங் களும், தபோமகிமைகளும் பிறரால் அறியப்படா. பிரணவமும் நீரே. அனந்தமாயிரம் நக்ஷத்திரங்களால் பிரகாசிக்கும் ஆகாசமும் நீரே. தாதாவும் நீரே. விதாதாவும் நீரே. ஸந்தாதாவும் நீரே. மூலப்ரகிருதி ரூபமாயிருக்கிற நீரே. எல்லா வஸ்துக்களுக்கும் அடைக்கல ஸ்தானமாயிருக்கிறீர். நீர் எல்லா அடைக்கலங்களுக் கும் பிரத்யேகரா யிருக்கிறீர். நீர் பிரமத்தை யறிந்தவர். நீரே தபஸ். நீரே ஸத்யம். பிரமசர்யத்துக்கு ஆத்மஸ்தானமாயிருப்பதும் நீரே. சுபாவரூபமாயிருப்பதும், சுபாவத் தன்மையுடையவரும் நீரே. எல்லா ஜீவன்களுக்கும் ஆத்மாவாயிருப்பவரும் நீரே. எல் லா ஜீவன்களையும் படைத்தவர் நீரே. ஒன்றினும் கட்டுப்படாத பரமாத்மா நீரே. இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் இவை களின் உற்பத்திக்காரணமாயிருப்பதும் நீரே. பூமியும் நீரே. ஆகா சமும் நீரே. ஸ்வர்க்கமும்நீரே. நீர் நித்யர். நீர் பற்றுக்களை யகற் றினவர். மேலான தெய்வமும் நீரே. நீர் ஸகலத்தையும் பயின்றவர். நீர் ஒன்றும் பயிலாதவர். நீர் ஆமையுள்ளவர். நீர் ஆமையில்லாதவர். அகங்காரிகளைத் தண்டிப்பவரும் நீரே. நீரே சாந்திரமாசம். கல்பங் களும் நீரே. ஸம்ஹாரமும் நீரே. சிருஷ்டியும் நீரே. ஆசையும் நீரே. சுக்லமும் நீரே. சூக்ஷ்மமாயிருப்பதும் ஸ்தூலமாயிருப்பதும் நீரே. கர்ணிகார புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட மாலைகளில் நீர் பிரீதியு ள்ளவர். நீர் நந்தி போன்ற முகமுடையவர். பயங்கரமான முக முடையவர். அழகான முகமுடையவர். நீர் அசுத்தமான முக முடையவர். நீர் முகமில்லாதவர். நீர் நான்குமுகமுள்ளவர். நீர் அனேக முகங்களை உடையவர். நீர் யுத்தத்தில் நிற்கும்பொழுது அக்னிமுகத்தினர். நீரே நாராயணர்.

"ஒரு பக்ஷியானது பூமியிலிருந்து ஆகாரத்தை யடைந்து, பூமியை யே சேர்ந்ததாக இருந்தபோதிலும், பூமியுடன் எவ்வாறு சம்பந்த மற்று இருக்கிறதோ, அந்தப் பக்ஷியைப் போல் நீர் எல்லா வஸ்துக் களிலும் பற்றற்றவர். பராக்கிரமசாலிகளான ஸர்ப்பங்களுக் கெல் லாம் சிரேஷ்டனாயிருக்கிற அனந்தனும் நீரே.நீர் பருமனுக்கும் பரும னான விராட்புருஷர். அதர்மத்தை அழிப்பவர் நீரே. மகாபார்சு வரும் நீரே.சண்டதாரமும் நீரே. மூலகணங்களுக்கு நாதனாயிருப்ப வர் நீரே. பசுக்களை ரக்ஷித்தவர் நீரே. ரிஷபங்களுக்கெல்லாம் சிறந்தவ

ராகிய நந்திதேவரே உமக்கு வாகனம். மூன்று உலகங்களை ரக்ஷிப்பவ ரும் நீரே. கோவிந்தனும் நீரே. இந்திரியங்களை நடத்துகிறவர் நீரே. இந்திரியங்களால் அறியமுடியாதவரும் நீரே. ஜீவன்களுக்கெல்லாம் சிரேஷ்டமானவர் நீரே. அசையும் பொருளும் நீரே. அசையாப் பொருளும் நீரே. நீர் பயப்படாதவர். பயரூபமாயிருப்பவர் நீரே. ஒருவராலும் எதிர்க்கப்பட முடியாதவர் நீரே. எல்லா விஷயங்களை யும் அழிக்கிறவர் நீரே. ஒருவரும் எதிர்க்க முடியாத வலிமையுடை யவர் நீரே. ஒருவரும ஜயிக்க முடியாத வலிமை யுடையவரும் நீரே. எவ்வித பயத்தாலும் நடுக்கமடை யாதவர் நீரே. ஒருவரா லும் அளவிடப்படாதவர் நீரே. ஒருவராலும் ஜயிக்கப்படாத வர் நீரே. ஜயமும் நீரே. வேகமாகச் சஞ்சாரம் செய்பவர் நீரே. சந்திரன் நீரே. பிரபஞ்சத்தை யெல்லாம் ஸம்ஹா ரம் செய்யும் எமன் நீரே. சீதளம், உஷ்ணம், பசி, துர்ப்பலம்' வியாதி ஆகிய இவைகளைச் சலிக்காமல் சகிக்க வல்லவர் நீரே. மனது அடைகிற ஸகல துன்பங்களும் நீரே. எல்லாத் தேகவியாதிகளும் நீரே. எல்லா வியாதிகளையும் தீர்ப்பவர் நீரே. நீர் சொல்தப்படுத் தும் வியாதிகளும் நீரே. மான் ரூபமாகத் தப்பியோடி என் யாகத் தை அழித்தவர் நீரே. வியாதிகள் வருதலும், அவைகள் போதலும் நீரே.

"நீர் உயர்ந்த கிரீடத்தை உடையவர். நீர் தாமரை இதழ்களைப் போன்ற கண்களை யுடையவர். ஏராளமான தாமரைகள் நிறைந்த தோட்டத்தின் மத்தியில் உள்ள இருப்பிடம் நீர். சன்னியாசி தண் டைக் கையில் ஏந்தியவர் நீர். மூன்று வேதங்களையும் மூன்று கண் களாக உடையவர் நீரே. கடுமையான தண்டனைகளை விதிப்பவர் நீரே. பிரபஞ்ச உற்பத்திக்குக் காரணமாகிய முட்டையை அழித்த வர் நீரே. விஷத்தையும், அக்னியையும் பானம் செய்தவர் நீரே. ஸோமபானம் செய்தவர் நீரே. மருந்துக்களுக் கெல்லாம் நாதனு யிருப்பவர் நீரே. அமிர்தபானம் செய்பவர் நீரே. பிரபஞ்சத்துக் கெல்லாம் கர்த்தா நீரே. மகிமையுடன் ஜொலிப்பவர் நீரே. ஜோதி ஸ்வரூபங்களுக் கெல்லாம் சிறந்தவர் நீரே. விஷத்திலிருந்தும் இறப் பிலிருந்தும் ரக்ஷிப்பவர் நீரே. பாலையும், ஸோமரஸத்தையும் பானம் செய்பவர் நீரே. ஸ்வர்க்கத்திலிருந்து விழுந்தவர்களை ரக்ஷிப்பவர்களில் சிரேஷ்டர் நீரே. தேவர்களுக்கெல்லாம் முதலாயிருக்கிற பிரமதேவ

ரை ரக்ஷிப்பவர் நீரே. தங்கமே உம்முடைய ரேதஸு. ஆணாயிருப்பவரும் நீரே. பெண்ணாயிருப்பவரும் நீரே. ஆண்பெண் அல்லாதவராயுமிருப்பவர் நீரே. சிசுவும் நீரே. வாலிபனும் நீரே. பற்கள் விழுந்த கிழவனும் நீரே. நாகங்களுக்கெல்லாம் சிறந்தவர் நீரே; இந்திரனும் நீரே. பிரபஞ்சத்தை ஸம்ஹரிப்பவரும் நீரே. அதைச்சிருஷ்டித்தவரும் நீரே. பிரஜாபதியும் நீரே. பிரஜாபதிகளால் துதிக்கப்படுபவரும் நீரே. பிரபஞ்சத்துக்கு ஆதாரமாயிருப்பதும் நீரே. இந்தப் பிரபஞ்சமே உம்முடைய ரூபமாயிருக்கிறது. சர்வ வல்லமையுடன் கூடியவரும் நீரே. நீர் எல்லாத் திக்குகளிலும் நோக்குகின்ற முகங்களை யுடையவர். சூரிய சந்திரர்களே உம்முடைய இரண்டு கண்கள். பிரமதேவனே உம்முடைய மனஸு. நீரே ஸமுத்திரம். உம்முடைய வாக்கே சரஸ்வதி தேவி. அக்னியும் காற்றுமே உம்முடைய சக்தி. பகலும் இரவும் நீரே. கண்ணைத் திறத்தல், மூடுதல் முதலிய எல்லாச் செய்கைகளும் நீரே.

"பிரமாவாவது, கோவிந்தனாவது, மகரிஷிகளாவது உம்முடைய மகிமையை அறியமாட்டார்கள். உம்மால் எடுக்கப்பட்டிருக்கிற அந்தச் சூக்ஷ்ம ரூபங்களை எங்களால் பார்க்க முடியவில்லை. தகப்பன் தன்னிடத்து ஜனித்த மகனை ரக்ஷிப்பதுபோல், ஓ! பகவானே! என்னைக் காத்து ரக்ஷியும். ஓ! பரிசுத்தனே ! நான் உம்மை வணங்குகின்றேன். ஓ ! சர்வோத்தமரே ! உம்முடைய பக்தர்களிடத்து நீர் பரிபூர்ண கிருபையுள்ளவர். நான் எப்பொழுதும் உம்மிடத்துப் பக்தியோடு கூடினவன். சகல பற்றுக்களும் அற்றவராய், பிறரால் காண்புதற்கரிய ரூபத்தோடும், தம்முடைய வல்லமையினாலும், ஞானத்தினாலும் சகல ஜீவன்களுக்கும் மேம்பட்டவராயிருக்கும் நீரே என்னை ரக்ஷிக்கக் கடவீர். இந்திரியங்களை அடக்கினவர்களும், ஸத்வகுணம் நிறைந்தவர்களும், தங்களுடைய சுவாசங்களை வழிப்படுத்தி இருப்பவர்களும், நித்திரையை வென்றவர்களும் ஆகிய இவர்களால் பிரகாசமான ஜோதிரூபமாய்ப் பார்க்கப்படுபவருமாகிய அந்த யோகியாகிய பரமாத்மாவை நான் வணங்குகிறேன். தலையில் சடைமுடி தாங்கினவரும், கையில் யதி தண்டத்தை ஏந்தியவரும், நீண்ட வயிற்றை யுடையவரும், முதுகுடன் கட்டிய கமண்டலத்தை உடையவரும், பிரமனுக்கு ஆத்மாவா யிருப்பவரும் ஆகிய உமக்கு நமஸ்காரம். நீரின் சத்தாயிருப்பவரும், தமது ரோமத்தில் மேகங்களை யுடைய

வரும், தமது தேகத்தின் என்புக் கூட்டுக்களில் நதிகளையுடையவரும், தம்முடைய வயிற்றில் நான்கு சமுத்திரங்களை யுடையவரும், ஆகிய உம்மை நமஸ்கரிக்கின்றேன். யுகாந்த காலத்தில் எல்லா ஜீவன்களை யும் ஸம்ஹாரம் செய்து, பிரபஞ்சத்தை நிரப்பியிருக்கும் ஜலத்தின் பேரில் நித்திரை செய்வதற்காகப் பள்ளிகொள்பவராகிய உம்மைச் சரணமடைகிறேன். ராகுவினுடைய வாயில் பிரவேசித்து, ராக்காலத் தில் ஸோமபானம் பண்ணினவரும், சுவர்பானு என்ற ரூபத்தை வகித்து, சூரியனை விழுங்கினவரும் ஆகிய நீர் என்னை ரக்ஷிக்கக் கட வீர். கேவலம் சிசுக்களைப் போன்றவர்களும், பிரம்மனுடைய சிருஷ் டிக்குப் பிறகு, உம்மிடத்திருந்து உண்டானவர்களும் ஆகிய தேவர் கள், யாகங்களின் ஹவிர்ப்பாகங்களை அவரவர்களுக் கேற்பட்டபடி அடைந்து அநுபவித்து வருகிறார்கள். 'ஸ்வாஹா', 'ஸ்வதா' என்ற மந்திரங்களுடன் கொடுக்கப்பட்ட ஹவிர்ப்பாகங்களை அவர்கள் சுக மாயடைந்து, அவைகளினால் ஆனந்தத்தை அடையட்டும். அவர்களை நான் நமஸ்கரிக்கிறேன். கட்டைவிரல் பிரமாண முள்ளவர்களும், தேகங்களில் எல்லாம் வசிப்பவர்களும் ஆகிய தேவர்கள் எப்பொழு தும் என்னை ரக்ஷித்துச் சந்தோஷிப்பிப்பார்களாக.

"ஜீவாத்மாக்களின் தேகங்களில் எப்பொழுது மிருந்துகொண்டு, தாங்கள் துக்கத்தினால் பாதிக்கப்படாதவர்களாய், அந்த ஜீவாத்மாக் களை மட்டும் துக்கத்தால் சுதறச்செய்வோர்களும், தங்களுக்குச் சந் தோஷம் என்பது இல்லாமல், அந்த ஜீவாத்மாக்களைச் சந்தோஷிக்கச் செய்கிறவர்களும் ஆகிய அந்த தேவர்களை நான் ஸதா வணங்கு கிறேன். நதிகளிலும், சமுத்திரங்களிலும், குன்றுகளிலும், பர்வதங் களிலும், மலைக்குகைகளிலும், மரங்களிலும், வேர்களிலும், மாட் டுக் கொட்டங்களிலும், அடைய முடியாத வனாந்திரங்களிலும், பாதைகள் பிரியுமிடங்களிலும், பாதைகளிலும், மைதான வெளி களிலும், நதிகள், தடாகங்கள், சமுத்திரங்கள் இவைகளின் கரை களிலும், யானைக் கொட்டாரங்களிலும், குதிரை லாயங்களிலும், ரதசாலைகளிலும், பாழடைந்த தோட்டங்களிலும், வீடுகளிலும், ஆகியாயுள்ள பஞ்சபூதங்களிலும், சகல திக்குக்களிலும் வசிக்கும் அந்த ருத்ர தேவதைகளை நான் எப்பொழுதும் நமஸ்கரிக்கின்றேன். சூரியசந்திரர்களுக் கிடையிலுள்ள இடத்திலும், சூரியசந்திரர்களு டைய கிரணங்களிலும் வசிப்பவர்களையும், பாதாளலோகங்களில்

வசிப்பவர்களையும், பரமாத்மாவை அடைவதற்காகச் சகல பற்றுக்களையும் துறத்தல் முதலிய உயர்ந்த மார்க்கங்களை அனுஷ்டிப்பவர்களையும் ஆகிய இவர்களை நான் பலமுறையும் வணங்குகிறேன். எண்ணிறந்தவர்களும், அளவிட முடியாதவர்களும், ரூபமில்லாதவர்களும், அனந்தமான குணங்களை யுடையவர்களுமான அந்த ருத்ரர்களை நான் எப்பொழுதும் வணங்குகிறேன். ஓ! ருத்ரமூர்த்தியே! நீரே எல்லா ஜீவன்களைப் படைத்தவரா யிருத்தலாலும், ஓ! ஹரனே! நீரே எல்லா ஜீவன்களுக்கும் நாதனாயிருத்தலாலும், நீரே எல்லா ஜீவன்களிடத்துமுள்ள ஆத்மாவா யிருத்தலாலும், இன்று யாகத்துக்கு நான் உம்மை அழைக்கவில்லை. எல்லா யாகங்களிலும் ஏராளமான தானவஸ்துக்களைக் கொண்டு துதிக்கப்படுகிறவர் நீரே யாகையாலும், எல்லா வஸ்துக்களைப் படைத்தவர் நீரேயாகையாலும் நான் உம்மை யாகத்துக்கு அழைக்கவில்லை. அல்லது, ஒருவாறு உம்முடைய அதிருஷ்டமான மாயா லீலையினால் என்னுடைய புத்தி மயங்கினவனாகி, உம்மை அழைக்கத் தவறிவிட்டேன் போலும். ஓ! பவமூர்த்தியே! உமக்கு மங்கள முண்டாகுக. ரஜோகுணம் பொருந்திய என்பேரில் கருணை புரிவீராக. என் மனது, புத்தி, சித்தம் ஆகிய இவைகளெல்லாம் உம்மிடத்தே வசிக்கின்றன.''

இவ்விதமாகச் செய்த ஸ்தோத்திரங்களை யெல்லாம் பசுபதியான மகாதேவர் கேட்டு, தக்ஷருக்கு இனிமேல் துன்பங்கள் செய்யவேண்டுமென்ற எண்ணத்தை விடுத்தார். தக்ஷர்பேரில் திருப்தியடைந்தவராய், பரம்பொருளாகிய பகவான் அவரை நோக்கிச் சொன்னதாவது:—''சிறந்த விரதங்களை அனுஷ்டிக்கின்ற ஓ! தக்ஷரே! உம்முடைய இந்த ஸ்தோத்திரங்களினால் நான் மிகவும் சந்தோஷத்தை அடைந்தேன். நீர் இனிமேல் என்னை ஜாஸ்தியாகத் துதிக்கவேண்டியதில்லை. நீர் என்னுடைய நேசத்தை யடைவீராக. ஓ! தக்ஷப்பிரஜாபதியே! உம்மால் ஆரம்பிக்கப்பட்டு முடிவுபெறாமல் போன இந்த யாகத்தின் நிமித்தமாக ஆயிரம் அசுவமேத யாகங்கள், நூறு வாஜபேயங்கள் இவைகளுடைய பலன்களை என் கிருபையினால் நீர் அடையக்கடவீர்.'' நன்றாய்ச் சம்பாஷிப்பதில் ஒருவரும் நிகரில்லாத சமர்த்தரான மகாதேவர், மறுபடியும் தக்ஷரை நோக்கி, அவருடைய மனம் குளிரும்படியான அடியில் கண்ட வார்த்தைகளைச் சொன்னார்:—''ஓ! தக்ஷரே! நீர் இந்த உலகத்திலுள்ள எல்லா ஜீவன்

களிலும் முதன்மையானவரா யிருப்பீராக. உம்முடைய யாகத்துக்கு என்னல் நேர்ந்த தீங்குகளைப் பற்றி, நீர் கொஞ்சமேனும் வருத்தமுறுதல் கூடாது. முந்தினகல்பங்களிலும் கூட நான் உம்முடைய யாகத்தை அழிக்கும்படி நேர்ந்ததென்று எனக்குத் தெரிகிறது. நல்ல விரதசீலரே! உமக்கு இனியும் வேண்டிய வரங்களைத் தருகிறேன். உம்முடைய முகத்தில் வியாபித்திருக்கிற துக்கத்தை ஒழித்து, நான் சொல்வதைக் கவனமாய்க் கேளும். காரணகாரியங்களைப் பற்றி விவகாரங்களினல் தேவர்களும் தானவர்களும் ஆறு அங்கங்களையுடைய வேதங்களிலிருந்தும், சாங்கிய யோக சாஸ்திரங்களிலிருந்தும் அனேக வருஷங்களாக மிகவும் கடுமையான தவங்கள் செய்துவருவதற்கு ஆதாரமாயிருந்த ஒரு அநுஷ்டானக் கொள்கையை ஆராய்ந்து எடுத்திருக்கிறார்கள். நான் தெரிந்தெடுத்திருக்கிற மதமோ ஒப்பற்றது. எல்லாவிதத்திலும் நன்மையைத் தரத்தக்கது. எல்லா ஆச்ரமங்களிலிருப்பவரும் அதைச் செளகரியமாக அனுஷ்டிக்கலாம். அதனல் மோக்ஷம் கிடைக்கும். அது அனேக வருஷங்களுக்குப் பிறகு கிடைத்தாலும் கிடைக்கும். அல்லது, இந்திரியங்களை அடக்கினவர்களால் அவர்களுடைய பக்குவப் பிரகாரம் கூடிய சீக்கிரத்திலும் கிடைக்கும். அது மிகவும் ரகஸ்யமானது. அறிவில்லாதவர்கள் அதை அங்கீகரிக்கத் தக்கதில்லை என்று நினைக்கிறார்கள். அது நான்கு வர்ணங்களிலிருப்பவர்களுக்கும், நான்கு ஆச்ரமத்திலிருப்பவர்களுக்கும், ஏற்பட்டிருக்கும் விதிகளுக்கு மாறுபாடானது. அந்த விதிகளைச் சில விஷயங்களில் மட்டும் ஒத்திருக்கின்றது. சரியான விவகாரஞானம் உள்ளவர்களே அதன் சிலாக்கியத்தை அறிவார்கள். எல்லாவித ஆச்ரமங்களையும் கடந்தவர்கள்தான் அதை அனுசரிக்க யோக்யதை உள்ளவர்கள். ஆதிகாலத்தில் பாசுபதம் என்ற இந்த மதமானது என்னல் தெரிந்தெடுக்கப்பட்டது. அந்த மதத்தின் கோட்பாடுகளைச் சரியாக அநுஸரிப்பதனல் ஒருவன் மிகுந்த நன்மைகளை அடையலாம். அந்த நன்மைகளை நீயுமடையக் கடவாய். உன்னுடைய மனச்சஞ்சலத்தை ஒழித்துவிடு'' என்று இந்த வார்த்தைகளைச் சொல்லி விட்டு, மகாதேவரானவர் தம்முடைய பத்னியாகிய உமாதேவியோடும், தம்முடைய பூதகணங்கள் முதலிய பரிவாரங்களோடும் அளவிடமுடியாத சக்தியுடைய தக்ஷருடைய எதிரிலிருந்து மறைந்து போயினர்.

ஆதியில் தக்ஷரால் சொல்லப்பட்ட இந்த ஸ்தோத்திர கானத்தைப் பாராயணம் செய்கிறவனும், அல்லது பிறர் பாராயணம் செய்யக்கேட்பவனும், அற்ப துன்பத்தையும் கூட அடையமாட்டான்; தீர்க்காயுசைப் பெறுவான். சிவன் எப்படி தேவர்களுக்கெல்லாம் சிரேஷ்டராயிருக்கிறாரோ, அப்படி சுருதிக்கு ஒத்ததான இந்த ஸ்தோத்திரமும் கானங்களுக்கெல்லாம் முதன்மையானதாக இருக்கிறது. கீர்த்தி, ராஜ்யம், சுகம், போகம், செல்வம், கல்வி இவைகளை விரும்புவோர்கள் இந்த ஸ்தோத்திரத்தினுடைய பாராயணத்தைப் பக்திசிரத்தையுடன் சிரவணம் செய்யவேண்டும். வியாதியால் அவஸ்தைப்படுகிறவனும், வலியினால் துன்பப்படுகிறவனும், துக்க சாகரத்தில் மூழ்கியிருப்பவனும், திருடர்களாலாவது, பயத்தினாலாவது பீடிக்கப்படுகிறவனும், தான் குற்றம் செய்ததின் பொருட்டு ராஜாவினுடைய கோபத்துக்குட்பட்டிருப்பவனும் இந்தஸ்தோத்திரத்தைப் பாராயணம் செய்வதனாலும், அல்லது பாராயணம் செய்யக் கேட்பதனாலும், எல்லாவிதப் பயங்களிலிருந்தும் விடுபட்டவனாகிறான். இந்த ஸ்தோத்திர கானத்தைச் சிரவணம் செய்வதனாலாவது, அல்லது பாராயணம் செய்வதனாலாவது ஒருவன் இந்த மனுஷ சரீரத்துடன் இருக்கும்பொழுதே மகாதேவருடைய பரிவாரங்களாகிய பக்தகணங்களுக்குச் சமதியான பதவியை அடைகிறான். இந்த ஸ்தோத்திரத்தின் மகிமையினால் ஒருவன் சக்தியையும், கீர்த்தியையும் அடைகிறான். எல்லாப் பாபங்களிலிருந்தும் பரிசுத்தனாகிறான். இந்த கானமானது எங்கே சொல்லப்படுகிறதோ, அவனுடைய வீட்டில் ராக்ஷதர்கள், பிசாசர்கள், பூதங்கள், விநாயகர்கள் ஆகிய இவர்கள் எவ்வித இடைஞ்சல்களும், துன்பங்களும் செய்கிறதில்லை. எந்த ஸ்திரீயானவள் பிரமசரிய விரதத்தை அனுஷ்டித்துக்கொண்டு, பக்திசிரத்தையுடன் இந்த ஸ்தோத்திர கானத்தைக் கேட்கிறாளோ, அவள் தன் பிதாவினுடைய குடும்பத்திலும், தன் பர்த்தாவினுடைய குடும்பத்திலும் ஒரு தெய்வம்போல் நன்கு மதிக்கப்படுகிறாள். இந்த ஸ்தோத்திரம் முழுவதையும் பதிந்த கவனத்தோடு எவன் கேட்கிறானோ, அல்லது சொல்லுகிறானோ, அவனுடைய முயற்சிகளெல்லாம் அனுகூலத்தைப் பெறுகின்றன. இந்த கானத்தைப் பாராயணம் செய்வதனால் ஒருவன், தன் மனதில் எண்ணிய எல்லா இச்சைகளும், தன் வார்த்தைகளால் சொல்லிக் கேட்ட எல்லா விருப்பங்களும்பலனையடையும்படியான பாக்யத்தை அடைகிறான்.

எவனொருவன் இந்திரியங்களையெல்லாம் அடக்கி, சாஸ்திர விதிகளின் பிரகாரம் மகாதேவர், விநாயகர், குகர், உமாதேவியார், நந்தி முதலிய தேவர்களுக்கு நிவேதனங்கள் செய்து, அதற்குப் பிறகு, சரியான முறைப்படிக்கும், பக்தியுடனும் அவர்களுடைய பேர்களை பஜனை செய்கிறானோ, அவன் எல்லா போக வஸ்துக்களையும், எல்லா போகபாக்கியங்களையும், அவன் விரும்பிய சகல வஸ்துக்களையும் அடைகிறான். அவன் இவ்வுலகத்தை விட்டுப் பிரியும் பொழுது, சுவர்க்கத்தை அடைகிறான். மிருகங்கள், பக்ஷிகளாகிய தாழ்ந்த ஜென்மங்களில் மறுபடியும் ஜெனிக்கிறதில்லை.

தக்ஷருடைய (1) இருபத்தேழு குமாரத்திகளும் சந்திரனுக்கு மனைவிகளானார்களென்றும், அவர்கள் இருபத்தேழு நக்ஷத்திரங்களாக விளங்குகிறார்களென்றும் மேலே சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த இருபத்தேழு பேர்களும் சமமான அழகும், யோக்கிதைகளுமுடையவர்களாயிருந்தபோதிலும், சந்திரன் மற்றவர்களைக் காட்டிலும் ரோகணி என்பவளிடத்தில் மிகுந்த காதல் பாராட்டி வந்தான். அவனுடைய மற்ற மனைவிகள் பொறாமைகொண்டவர்களாய், சந்திரனை விட்டுத் தங்களுடைய தகப்பனாரிடத்துக்குப் போய், தங்கள் பர்த்தாவினுடைய பக்ஷபாதமான நடத்தையைப் பற்றி அடியில் கண்டபடி தெரிவித்தார்கள்:—"ஓ! தர்மசீலரே! நாங்கள் எல்லோரும் ஒரேவிதமான அழகு வாய்ந்தவர்களாயிருந்தாலும், எங்கள் பர்த்தாவாகிய ஸோமன் எங்கள் சகோதரியாகிய ரோகணியிடத்து மட்டும் பூரணமான ஆசை வைத்தவராயிருக்கிறார்." இதைக் கேட்ட தக்ஷர், கோபமடைந்து, தன் மருமகனாகிய சந்திரனுக்கு "க்ஷயரோகம உண்டாகக் கடவது" என்று சாபமிட்டார். அச் சாபத்தினால் சந்திரனை க்ஷயரோகம் பிடித்துக்கொண்டு, அவனுடைய தேகத்தை மிகவும் வருத்திற்று. இவ் வியாதியினால் பீடிக்கப்பட்டவனாய், சந்திரன் தக்ஷரிடத்து வந்தான். தக்ஷர் அவனைப் பார்த்து, "நீ உன் மனைவிகளிடத்துப் பக்ஷபாதமின்றி நடந்துகொள்ளாததால் நான் உன்னைச் சபித்துவிட்டேன்" என்று சொல்லி, அப்பால் சந்திரனிடத்துக் கிருபை வைத்தவராய், அவனை நோக்கி, "உன்னைப் பற்றியிருக்கிற க்ஷயரோகத்தினால் உன்னுடைய தேகமானது இளைத்துக் கொண்டு வருகிறது. மேற்குச் சமுத்திரத்தில் 'ஹிரண்ய சரஸ்'

(1) மஹாபாரதம்—சாந்திபர்வம்.

என்ற புண்ணிய தீர்த்தம் இருக்கிறது. நீ அந்தப் புண்ணிய தீர்த்தத்திற்குப் போய், ஸ்நானம் செய்யக் கூடவாய்" என்றார். அப்படியே சந்திரன் அவ்விடத்திற்குச் சென்று, அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தான். ஸ்நானம் செய்து, பாபத்தினின்றும் விலகி, சுத்தியை அடைந்தான். அந்தத் தீர்த்தம் சோமனால் பிரகாசிக்கப்பட்டபடியால், அதற்கு அன்று 'முதல் பிரபாஸ தீர்த்தம்' என்று பேருண்டாயிற்று. ஆகிலும், ஆதிகாலத்தில் தக்ஷரால் அவனுக்கு ஏற்பட்ட சாபத்தின் பலத்தினால் சந்திரன் இப்பொழுதும் கூட பௌர்ணமை தினத்திலிருந்து அமாவாசை தினம் வரை க்ஷீணித்துக் கொண்டே வருகிறான். மறுபடியும், அமாவாசையிலிருந்து பௌர்ணமை தினம் வரை ரூபத்திலும், பிரகாசத்திலும் விருத்தியடைந்து கொண்டே வருகிறான். அதனால்தான் சந்திரனுடைய தேகத்தில் சில கறுப்புப் புள்ளிகள் காணப்படுகின்றன. அந்தக் காலமுதல் அந்தக் கறுப்புப் புள்ளிகள் ஒரு முயல் ரூபமாகத் தோற்றப்படுகின்றன.

மேற்சொல்லப்பட்ட தக்ஷயாகத்துக்கு உமாதேவி, தான் போக வேண்டுமெனப் பரமசிவனை வேண்டியதற்கு, அவர், நாமிருவருமழைக்கப்படாத அந்த யாகத்துக்குப் போகக் கூடாதென மறுத்தும், அன்னவள் மன்றாடுதலுக் கிணங்கி, அவளைப் போகும்படி அனுமதி கொடுத்தனர். அவ்வாறு தேவி அங்கே செல்ல, மற்றக் குமாரத்திகள், மருகர்களைப் போல், பரமசிவனும், தன் மகளான உமாதேவியும் தன்னை வழிபடவில்லையென்ற வருத்தத்தினால் தக்ஷர் உமாதேவியை நல்வரவு கூறி யுபசரிக்காமல், அவமதித்துப் பேசினார். அதனால் அவள் மிக்க வருத்தமும், கோபமுமடைந்து, தனது பர்த்தாவிடம் வந்து, நிகழ்ந்த சங்கதிகள் யாவையும் தெரிவிக்க, அதனால் மஹேச்வரர் கோபமுற்று, மேற்கூறியபடி தக்ஷருடைய யாகத்தை யழித்தனர். அன்றியும், வீரபத்திரரால் தக்ஷர் கொல்லப்பட்டு, பிறகு பரமசிவனருளால் உயிர் பெற்றார். இது ஸ்காந்தத்தின் விருத்தாந்தச் சுருக்கம் மேற்கூறியபடி தன் பிதாவால் அவமானமடைந்த நிமித்தம், உமாதேவி மிகுந்த வியாகூலமடைந்து, அக்னிப் பிரவேசஞ் செய்து பிராணனை விட்டதாயும், அப்பால் தக்ஷர் வீரபத்திரரால் கொல்லப்பட்டு, பிறகு மஹேசுவரருடைய அருளால் உயிர் பெற்றதாயும் மற்றோர் விருத்தாந்தமுமுண்டு. இது பாகவதத்திலுள்ளது.

இம்மாறுபாடல்கள் வெவ்வேறு கல்பங்களில் நிகழ்ந்த சங்கதிகளெனக் கொள்க.

இவரால் ஒரு ஸ்மிருதி இயற்றப்பட்டது.

---

## 85. தால்ப்யபகர்

---



தால்ப்யபக ரிஷி மிகுந்த தவசக்தியுள்ளவர். தான் (1) செய்த கடுமையான தவத்தினால் அவர் தன் தேகத்தைத் துரும்புபோல் இளைக்கச் செய்தார். புண்ணிய சீலரான அந்த ரிஷி கோபத்தால் தூண்டப்பட்டவராய், தம்முடைய தவ சக்தியினால் திருதராஷ்டிர ராஜனுடைய இராஜ்யத்தையே அக்கினிக்கு ஆஹுதி செய்தார்.

ஆதிகாலத்தில் நைமிசாரண்யத்தில் வசித்த மஹரிஷிகள் பன்னிரண்டு வருஷகாலமாக நடந்தேறிவந்த ஓர் பெரிய யாகத்தைச் செய்தார்கள். அந்த யாகம் நடந்து கொண்டிருக்கும் மத்தியில் விசுவஜித் என்ற ஒரு யாகம் முடிவு பெற்றது. அதற்குப் பிறகு, அந்த ரிஷிகளெல்லோரும் பாஞ்சால தேசத்தை நோக்கிச் சென்றார்கள். அங்கே சென்று, தாங்கள் செய்துமுடித்த யாகத்துக்குத் தக்ஷிணை கொடுப்பதற்காக, புஷ்டியும், வியாதியற்றதுமான இருபத்தோரு பசுங்கன்றுகளைத் தங்களுக்குக் கொடுக்கும்படி கேட்டார்கள். ஆகிலும் தால்ப்யபகர் அந்த ரிஷிகளையெல்லாம் அழைத்து, "என்னிடத்திலிருக்கும் பிராணிகளை உங்களுக்குள் பிரித்துக்கொள்ளுங்கள். இவைகளை உங்களுக்குக் கொடுத்துவிட்டு, நான் ஒரு பெரிய அரசனை அடைந்து, சில பசுக்களைப் பெற்றுக்கொள்ளுகிறேன்" என்றார். அவ்வாறு ரிஷிகளிடம் சொல்லிவிட்டுத் தபோநிதியாகிய தால்ப்யபகர், திருதராஷ்டிரனுடைய இருப்பிடத்துக்குச் சென்றார். தனக்குச் சில பசுக்களைக் கொடுக்கும்படி அரசனைக் கேட்டார். ஆகி

(1) மஹாபாரதம்—சல்லியபர்வம்.

னும், அந்த ராஜ உத்தமன், யாதொரு காரணமன்னியில் தன்னு டைய பசுக்களில் சில திடீரென்று இறந்துபோனபடியால் அந்த ரிஷி யை நோக்கிக் கோபத்தோடு பின்வருமாறு சொன்னான்:— "ஓ! பிராமணப்பதரே! உனக்கு இஷ்டமிருந்தால் இறந்துபோன இந்த ஜீவன்களை எடுத்துப் போ" என்றான். "இந்த வார்த்தைகளைக் கேட்டு, ஞாயவிதிகளை அறிந்த அந்த ரிஷி, இந்தச் சபையில் அர சன் என்னைப் பார்த்துச் சொல்லும் வார்த்தைகள் மிகவும் குரூரமா யிருக்கின்றன" என்று மனதில் சிந்தித்து, கோபம் பொங்கினவராய்த் திருதராஷ்டிர ராஜனை நாசம் செய்து விடவேண்டும் என்று தீர்மானி த்துக் கொண்டார். அந்த ரிஷி, இறந்துபோன மிருகங்களுடைய சதைகளை வெட்டி எடுத்து, சால்வதி தீர்த்தக் கரையில் ஒரு யாகா க்னி ஏற்படுத்தி, திருதராஷ்டிரனுடைய ராஜ்யம் அழிந்து போவத ற்கு ஒரு ஆஹுதியாக அந்த மாமிசங்களை அக்னியில் ஹோமம் செய் தார். அந்த மாமிசங்களைக் கொண்டு அந்த ரிஷி திருதராஷ்டிரனு டைய ராஜ்யத்தையே அக்னிக்கு இரையாகச் செய்தார்.

சாஸ்திர விதிகளின்படி செய்த அந்த பயங்கரமான யாகம் ஆரம் பிக்கையிலேயே திருதராஷ்டிரனுடைய ராஜ்யமானது கொஞ்சம் கொஞ்சமாய் க்ஷீணிக்க ஆரம்பித்தது. ஒரு பெரிய வனத்தை மனு ஷர்கள் கோடாலிகளால் வெட்டிப் பாழாக்குவது போல், ராஜ்யத் தை அந்த யாகத்தீயானது க்ஷீணிக்கச் செய்துகொண்டே வந்தது. அநேகவிதமான கேடுகள் சம்பவித்தபடியால், ராஜ்யமானது க்ஷேமத் தையும், காந்தியையும் இழந்துகொண்டே வந்தது. இவ்வாறு தன் ராஜ்யம் துயரப்படுவதைக் கண்ட அரசன் மிகவும் விசாரமடைந்த வனாய்ச் சிந்தை மேலிட்டு, பிராமணர்களிடம் யோஜித்து, எவ்வித மாய்த் தன் ராஜ்யத்தில் ஏற்பட்ட கஷ்டங்கள் விலகும் என்று விசாரி த்தான். ஆனால், அது ஒன்றும் பயன்படாமல் ராஜ்யம் முன்போல் கேவலத்தை அடைந்துகொண்டே வந்தது. அதனால் அரசனும், பிராமணர்களும் துக்கசாகரத்தில் மூழ்கினார்கள். ராஜ்யத்தை ரக்ஷிக் கும் வகை யாதொன்றும் அறியாதவனாய், அரசன், தன் மந்திரிகளை அழைத்து, இந்தக் கஷ்டத்தை நிவர்த்திக்க என்ன உபாயம் என்று கேட்டதில், அவர்கள் இறந்த பசுக்கள் சம்பந்தமாக அவன் செய்த குற்றத்தை அவனுக்குத் தெரிவித்தார்கள். அவர்கள் சொன்னதா வது:—"வகமுனி, இறந்துபோன அந்த மிருகங்களின் மாமிசங் களைக் கொண்டு, உம்முடைய ராஜ்யத்தையே அக்னிக்குப்பலியாகக்

கொடுக்கிறார். அந்தக் காரணத்தினால் இந்த ராஜ்யம் நசித்துக் கொண்டு வருகிறது. அந்த ரிஷி செய்யும் வைதிகக் கருமங்களினால் தான் இப்பெரிய பொல்லாங்கு [illegible]ந்திருக்கின்றது. ஆதலால், ஓ! அரசனே! சரஸ்வதி நதிக்கரையில் விளங்கும் அந்த ரிஷியைக் கண்டு, அவரைச் சாந்தப்படுத்துவீராக.''

அவ்வாறே அரசன் அந்த ரிஷியிருக்கும் சரஸ்வதி நதிக்கரைக்குச் சென்று, அவர் பாதங்களில் விழுந்து, அவரை வணங்கிக் கை கூப்பிச் சொன்னதாவது:—''நான் உம்மை வெகுவாய் வணங்கிக் கேட்டுக் கொள்ளுகிறேன். என் குற்றத்தை மன்னித்துக் கொள்ள வேண்டும். நான் அறிவில்லாத மூடன். ஆசைவலையில் சிக்கிய பாக்கிய ஹீனன். உம்மையே தஞ்சமாக அடைந்தேன். நீரே எனக்கு ரக்ஷகர். நீர் என்பேரில் கருணைபுரியவேண்டும்.'' இவ்வாறு துக்கத்தால் புலம்பும் அந்த அரசனிடத்து ரிஷி இரக்கமுள்ளவராய், அவன் ராஜ்யத்தைத் துன்பங்களினின்றும் விலக்கி யருளினார். அவர், அரசன்பேரில் இருந்த கோபத்தை ஒழித்து, அவனிடத்தில் திருப்தி யுடையவரானார். ராஜ்யத்தைச் சங்கடங்களினின்றும் விலக்கும் பொருட்டு, அவர் மறுபடியும் அக்னியில் ஹோமம் பண்ணினார். அப்படிச் செய்து, ராஜ்யத்தில் உண்டான துர்ப்பிக்ஷத்தை ஒழித்து, அரசனிடத்து அநேக பசுக்களைத் தானமாகப் பெற்று, சந்தோஷ சித்தராய், முன்போல் நைமிசாரண்யத்தைப் போய் அடைந்தார். திருதராஷ்டிர மகாராஜனும் களிப்புற்றவனாய், க்ஷேமம் நிறைந்த தன் ராஜ்யத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.



Printed at the T. V. C. Press, Madras.